# "செந்தமிழ்" ஏழாந்தொகுதியின் உள்ளுறை.

## உள்ளுறை.

## உள்ளுறை.



### "செந்தமிழ்" ஏழாந்தொகுதியில் வெளிவந்த நூல்கள்.

[முடிந்தவை.]



[முடியாதவை.]

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-எ] கீலக௵ கார்த்திகை மீ [பகுதி-க.

## மூன்று தமிழ்க்குடிகள்.

### க. கூத்தச்சாக்கையர்

சேரன் செங்குட்டுவன் பத்தினிக் கடவுளாகிய கண்ணகியைப் பிரதிஷ்டித்தல் வேண்டி, வடநாடுசென்று இமயத்தினின்றுங் கொணர்வித்த சிலையினைத் தான் போரில்வென்ற ஆரியவரசர்முடிமேலேற்றிக் கங்கையில் நீர்ப்படைசெய்து கொணர்ந்து, தன்னரசிருக்கையாகிய வஞ்சிமாடம் புகுந்தனனெனவும், அங்கே அவன் தன்மனைவியாகிய வேண்மாளோடு மகிழ்ச்சியுடன் ஓலக்கமண்டபஞ் செல்லும்போது, இடையிலுள்ள நாடகவரங்கத்து நிகழ்த்தப்பெற்ற அழகிய கூத்தொன்றைக் கண்டு களித்தனனெனவும், அந்நடனம் கூத்தச்சாக்கையன் என்பவனால் நிகழ்த்தப்பட்டதெனவும் சிலப்பதிகாரம் நடுகற்காதையிற் கூறப்பட்டுளது: அது வருமாறு:—

"ஆங்கவ டன்னுட னணிமணி யரங்கம்
வீங்குநீர் ஞால மாள்வோ னேறித்
திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
பரிதரு செங்கையிற் படுபறை யார்ப்பவும்
செங்க ணாயிரந் திருக்குறிப் பருளவும்
செஞ்சடை சென்று திசைமுக மலம்பவும்
பாடகம் பதையாது சூடகந் துளங்காது
மேகலை யொலியாது மென்முலை யசையாது
வார்குழை யாடாது மணிக்குழ லவிழாது
உமையவ ளொருதிற னாக வோங்கிய

இமையவ னாடிய கொட்டிச் சேதம்
பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
கூத்தச் சாக்கைய னாடலின் மகிழ்ந்தவ
னேத்தி நீங்க விருநில மாள்வோன்
வேத்தியன் மண்டப மேவிய பின்னர்." (௬௫-௭௧.)

எனக் கண்டுகொள்க. இவ்வடிகளிற் சொல்லப்பட்ட ஆடல் கொட்டிச் சேதம் என்பது. இது கொட்டி எனவும் கொடுகொட்டி எனவும் வழங்கும்; இது, திரிபுரந் தீமடுத்தெரியக்கண்டு, ஜயாநந்தத்தால் சிவபெருமான் உமையவளுடன் ஆடியதென்பர். இதனை,

"கொட்டி யாடற் கேற்ற மொட்டிய
உமையவ ளொருபா லாக வொருபால்
இமையா நாட்டத் திறைவ னாகி
அமையா வுட்கும் வியப்பும் விழைவும்
பொலிவும் பொருந்த நோக்கிய தொக்க
அவுண ரின்னுயி ரிழப்ப வக்களம்
பொலிய வாடின னென்ப மற்றதன்
விருத்தங் காத்தற் பொருளொடு கூடிப்
பொருத்த வரூஉம் பொருந்திய பாடல்
திருத்தகு மரபிற் றெய்வத் துதிப்பே."

என்பதனானுணர்க. (பாலைக்கலி-௧) இவ்வாடல் தமிழிற் கூறப்பட்ட

கடையமயி ராணிமரக் கால்விந்தை கந்தன்
குடைதுடிமா லல்லியமற் கும்பம்—சுடர்விழியாற்
பட்டமதன் பேடுதிருப் பாவையரன் பாண்டரங்கம்
கொட்டியிவை காண்பதினோர் கூத்து

என்னும் பதினொரு புறநாடகங்களில் ஒன்றெனக் கூறுவர். மேற்கூறிய சிலப்பதிகார அடிகளால், இக்கொட்டிச் சேதம் சிவனாரானல் ஆடப்பட்ட விதம் இத்தன்மையதென்பது நன்குவிளங்கும்.

இனி, இந்நாடகத்தைச் செங்குட்டுவற்கு நடித்துக்காட்டியவன் கூத்தச்சாக்கையன் என்றும், அவனாடலைக்கண்டு அரசன் மகிழ்ந்து சென்றனனென்றும் மேற்காட்டிய அடிகள் குறிக்கின்றன. சாக்கையரென்பவர், முற்காலத்தில் அரசர்க்கு அந்தரங்க கருமத்தலைவராயி

ருந்தவரென்பதும் (Private Secretary) அவர் வள்ளுவராவர் என்பதும் "வள்ளுவன் சாக்கை யெனும் பெயர் மன்னர்க் குள்படு கருமத் தலைவர்க் கொன்றும்" என்வரும் திவாகரத்தாற் பெறப்படுகின்றன. இக்கூத்தச்சாக்கையர் என்பவர் அச்சாக்கையரில் ஒரு பிரிவினராய் அரசரை நடனத்தால் மகிழ்விப்பவராதல் வேண்டும். இச்சாக்கையர் அப்பெயருடனும், அத்தொழிலுடனும் இன்றும் உள்ளனரென்பதும், அவரது வழக்கவொழுக்கங்களும் "மலையாளமும் அதில் வாழ்நருழ்" (Malabar and its folk) என்னுந்தலைப்பெயருடன்-T. K. கோபால பணிக்கரவர்களால் ஆங்கிலத்தில் வெளியிடப் பெற்ற நூலின் 184, 185-ம பக்கங்களிற் காணப்பட்டபோது அதிசயந்தந்தமையால்; அதில் எழுதியுள்ளவற்றைக் கீழேதருகின்றேன்.

"சாக்கையர்கூத்தென்பது அநாதிகாலமாக நடைபெறும் ஒரு புராதன ஏற்பாடாகும். சாக்கையர் ஒரு விநோதமான குலத்தைச் சார்ந்தவர். அவர் பிராமணப்பெற்றோர்களுக்கு பேஷ்டாகாலஸம்ஸர்க்கத்தில் பிறந்த சந்ததியார் என்று சொல்லப்படுகின்றனர். அதனால் அவர் தாழ்பிறப்பினராவர்.

"உற்சவகாலங்களிலும் மற்றக்காலங்களிலும், ஆலயங்கட்குச் சம்பந்தமானதும் கூத்துககென்றேற்பட்டதுமான உட்புறக்கட்டிடங்களிற் சாக்கையர்கூத்து நடத்தப்படுகிறது. கூத்தன் கால்களிலுங்கைகளிலும் சதங்கைகட்டிக்கொண்டும், இடையைச்சுற்றி நகைப்புண்டாக்கத்தக்கதும் திருந்தாமடிப்புக்களுடன் கூடியதுமான விநோதவுடையொன்றைத் தரித்துக்கொண்டும் தேகமுழுதும் விபூதிபூசியவனாய் வெறுந்தலையுடன் தன்கூத்தைத் தொடங்குவன். சாக்கையர் பெண்கள் "நங்கையர்" என்று சொல்லப்படுவர். சாக்கையர் ஆடும்போது அந்த நங்கையரிலொருவர் எப்போதும கூடவிருத்தல் வழக்கம். அவர், சுலோகங்கள் கூறி அவற்றின் அர்த்ததாற்பரியங்களை விளக்கிக்கொண்டு வருங்காலையில், நம்பியார் என்றழைக்கப்படுமொருவனால் இடையிடையே தம்பட்டம் அடிக்கப்படுவதுண்டு. புராண சுலோகங்களைச் சொல்லி அவற்றின் அர்த்ததாற்பரியங்களை விளக்குவதே இக்கூத்தற்குரிய விசேடம். அதனை விநோதமாகவும் மிக நுணுக்கமாகவும நடித்துககாட்டுவன்.

"சாக்கையர், மக்களியல்புகளையும் உலகவியல்புகளையும் பற்றிக் குணதோஷ ஆராய்ச்சிசெய்வதில் பிரமிக்கத்தக்க வல்லமையுடையர். கூத்துக்காண்பவரில் முக்கியமானவர்கள் மிக அதிசயிக்கும்படி சுலோகதாற்பரியங்களை உபயோகிப்பதிலும், அம்முழுக்கூட்டத்தையும கொக்கரிப்புடன் குதூகலமடையச் செய்வதிலும் வேண்டியவளவு சாமர்த்திய முடையவர்கள். சாக்கையர் கூத்தாடுங்கால் அவர் நிகழ்த்தும் பரிகாசாதிகளால் எவருஞ் சினங்கொள்வதில்லை. அவர்களை நோக்கிப் பிறர் அவமரியாதையாய் உரத்துச்சிரிப்பதுமில்லை. இது தொன்றுதொட்டுவரும ஒருமரியாதை. இம்மரியாதையில் ஏதேனுஞ் சிறிது குறைவு நேரிடுமாயின், அதுவே, அவர்கள் கூத்தை நிறுத்திவிடப் போதியதாகும். கோயில் தர்மகர்த்தர்களால் இன்னோர் சந்தேகமின்றி சம்மானிக்கப் பட்டுவருகின்றனர்." எனக் கண்டுகொள்க.

இவற்றால், சாக்கையர் என்போர் தமிழ்நாட்டிலுள்ள பழையகுடியினரென்பதும், கூத்து நிகழ்த்துவதில் தொன்றுதொட்ட பெருமையுடையரென்பதும, நன்குவிளங்கும். சிலப்பதிகாரத்தில் "இமையவனாடிய கொட்டிச் சேதம், பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க், கூத்தச் சாக்கைய னாடலின்" என்னும் விஷயம் மேற்குறித்த மலைநாட்டு வழக்கத்தோடு பெரிதும் பொருந்துமாறு நோக்கிக்கொள்க.

இவ்வாறே, வேறுசில தமிழ்க்குடிகளின் வழக்கவொழுக்கங்களாகப் பழைய நூல்களுட் கண்டனவற்றிற்சிலவும், இன்றும் அப்பக்கத்தே வழங்கிவருகின்றன என்று அறியப்படுகிறது. "வேலன்றைஇய வெறியயர் களனும்" "வேலன்-நீடமை விளைந்த தேக்கட்டேறல், குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து, தொண்டகச் சிறுபறைக் குரவை யயர" "வெறியயர் வெங்களத்து வேன்மகன்" என வேலனியல்பும், அவனயரும் வெறியாட்டும் நூல்களிற் கேட்கப்படுதல்போலவே, அக்குணங்குறிகளுடன் இன்றும் அவர் மலைநாட்டில் உள்ளனர். அவ்வாறே பாணரென்னும் வகுப்பினரும், இவர், அந்நாட்டில் நடைபெறும் கற்கடகமாதத்து விசேட நாள்களில், அதிகாலையிலே இனியகீதங்களால் "துயிலுணர்த்தல்" என்னும் வினையை இன்றும் நடத்திவருகின்றனரென்பர். இவையன்றிச் சோதிடர் கணிசன் எனவும், செய்யுள்கள் துள்ளலெனவும், மருத

நிலமக்கள் செருமக்களெனவும், திருஷ்டிபடுதல் கருங்கண்ணிடலெ னவும், தையற்காரர் துன்னல்வினைஞரெனவும் இவ்வாறே எண்ணி றந்த பழந்தமிழ்ச் சொற்கள் மிகுதியாக அப்பிரதேசத்துக் கேட்க ப்படுகின்றன. இன்னும் இவைபோன்ற அரியதமிழ்ச்செய்திகளை, மலைநாட்டு ஒழுக்க வழக்கங்களில் மிகுதியும் பயின்றுவருஞ் செந் தமிழ்மக்கள் அறிவிப்பராயின், பெரிதும் இன்பம் விளக்குமென்பது திண்ணம்.

## ௨. ஓயர் அல்லது ஓவியர்.

புறநானூற்றில், கஎசு-ம் பாடலாலும், சிறுபாணாற்றுப்படை யாலும் புகழப்பட்ட நல்லியக்கோடன் என்னும் வள்ளற்றலைவன், ஏறுமாநாடுடையானென்றும், எயிற்பட்டினம் மாவிலங்கை யென் னும் ஊர்கட்குத் தலைவனென்றும், ஓயர் அல்லது ஓவியர் குலத்தா னென்றும் கூறப்படுகின்றான். இவற்றுள் இவனது குடிப் பெயரா கிய ஓயர் அல்லது ஓவியர் என்பது, இப்பிரதேசத்தில் வழங்குதல் தெரியவில்லையாயினும், வட ஆர்க்காடு ஜில்லாவில் "ஓயர்" எனப் பட்ட ஒரு வேட்டுவ ஜாதியார் உளரென்றும், அப்பக்கத்துள்ள பாளையக்காரரிற் பலர் இவ்வகுப்பைச் சார்ந்தவரே யென்றும் "வட ஆர்க்காட்டுமான்யூல்" தெரிவிக்கிறது. இங்ஙனம் ஓயர் வேட்டுவசா தியார் என்று சொல்லப்படுவதற்கேற்ப, சிறுபாணாற்றுள் நல்லியக் கோடனைக் "குறிஞ்சிக்கோமான்" என வழங்குதலும் கவனிக்கத் தக்கதாகும்.

## ௩. முத்தரசர்.

நாலடியாரில், "பெருமுத் தரையர் பெரிதுவந் தீயுங்-கருனைச் சோறார்வர் கயவர்" எனவும், "நல் கூர்ந்தக் கண்ணும் பெருமுத்தரை யரே, செல்வரைச் சென்றிரவா தார்" எனவும் வருவனவற்றால், முத் தரையர் என்ற வகுப்பார் தமிழ்நாட்டிற் கொடையுஞ் செல்வமுங் கொண்டுவிளங்கியவரென்பது தெரியும். செந்தமிழ் ௬-ம் தொகுதி, முதற்பகுதியில, ஸ்ரீமாந் கோபிநாதராயரவர்கள் (M.A.) எழுதிய "சில பழைய பாடல்களும் அவற்றின் காலமும்" என்ற விஷயத்துக் கண் டபாவனைகளாலும், இம் முத்தரையவமிசம் பாண்டிநாட்டைவென் று ஆண்டுவந்த செய்தி நன்குவிளங்குகின்றது. இப்பெயருடைய ஒரு

பெருவகுப்பாரும் வட ஆர்க்காட்டுப்பிரதேசத்தில் மிகுதியாகவுள்ளனர் என்று அறியப்படுகிறது. அங்கே அநேகவூர்கட்குத் "தலையாரி" களாயுள்ளவர் இவ்வகுப்பினரே. சித்தூர்ப் பாளயக்காரரிற் பெரும்பாலார் இக்கூட்டத்தவரே யென்றும், இவர் முற்காலத்தில் சிற்றரசர்களாயிருந்தனரென வரலாறுகூறுவரென்றும் ஷை மான்யுல் கூறும். இதனால், முன்னாளில் பாண்டிநாட்டையாண்ட இவர் அப்பக்கத்திருந்துவந்தவராதல் வேண்டுமென்று கருத இடமுண்டாகின்றது.

பத்திராசிரியர்.

---

## பர்மாவிற் கண்ட ஒருதமிழ்ச் சாஸனம்.

1903-ம் ஆண்டில் பர்மா தேசத்துப் பாகான் (Pagan) என்ற நகர்க்கு ஒருமைல் தூரத்துள்ள மைன்-பாகன் (Main-Pagan) ஆலயத்துக் கல்லில் அமைந்த சாஸனமொன்று, ஷை பாகான் பட்டணத்திற் கண்டெடுக்கப் பட்டவிஷயம் "எபிகிராபிகா இண்டிகா" (Epigraphica Indica) என்ற பத்திரிகையின் ஏழாந்தொகுதி ஏழாம்பாகத்து ௧௯௭-ம் பக்கத்தில், டாக்டர்-ஹுல்ஷ் துரையவர்களால் வெளியிடப்பட்டுளது. இச்சாஸனத்தில், பாகானகரம் புக்கம் அல்லது அரிமர்த்தனபுரம் என்று காணப்படுகிறது. கல்பாணி சாஸனங்களிலும், இந்நகரம், புக்கம் (Pugama) அல்லது அரிமர்த்தனபுரமென்று காணப்படுமென்பர். இச்சிலாசாஸனம், மலைநாட்டினின்று சென்ற தமிழரொருவரால் அங்குள்ள விஷ்ணுகோயிலுக்குத் தர்மஞ்செய்த செய்தியைக் குறிக்கின்றது. அத்தர்மஞ்செய்தவர் பெயர் இராயிரன் மக்ஞன ஸ்ரீ குலசேகரநம்பி என்பது. இச்சாஸனமுகப்பில், ஸ்ரீ குலசேகரப்பெருமாள் அருளிச்செய்த முகுந்தமாலையின் ரு-வது சுலோகமான "நாஸ்தாதர்மே" என்பது வரையப்பட்டுள்ளது இச்சாஸன எழுத்தைக் கொண்டு, அது கி. பி. 13-ம் நூற்றாண்டில் வரையப்பட்டதாகல் வேண்டுமென்று டாக்டர்-ஹுல்ஷ் துரையவர்கள் ஊகிக்கின்றனர். அச்சாஸனம் வருமாறு:—

சாஸநம்.

"[illegible]"

"ஸ்வஸ்திஸ்ரீ. திருச்செல்வம் பெருக. புக்கமான அரிவட்டணபுரத்து நானாதேசி விண்ணகராழ்வார் கோயில் திருமண்டபஞ்செய்து திருக்கதவமிட்டு இந்த மண்டபத்துக்கு நின்றெரிகைக்கு நிலைவிளக்கொன்றும் இட்டேன். மலைமண்டலநாட்டு மகோதையார்ப் *பட்டணத்து இராயிரன் சிறியனான சி. குலசேகரநம்பியேன். இது சிரி. இதன்மம் பலமண்டலத்தான்"—என்பது.

இவ்விஷயம், முற்காலத்தே தமிழ்மக்கள் அந்நியதேசங்கட்குச் சென்று புகழொடுவாழ்ந்த செய்திக்குத் தக்க சான்றாகும். மணிமேகலையால், பழையதமிழ்மக்கள் சாவகம் (Java) முதலிய தீபாந்தரங்களுடன் பெருந்தொடர்புடையவர்களாயிருந்தமை போலவே, அதன்பிற்காலத்தும் நிகழ்ந்து வந்ததென்பது இதனால் விளங்குகின்றது.

———

பத்திராசிரியர்.

# கரிவாயு.

———

"ஜனவிநோதினி."

சென்ற நூற்றாண்டின் முதலிலே சீமையில் ஜான் கிளேடன் என்பவன் லாங்காஷயர் என்னும் மாகாணத்தில் ஓர் அகழி இருக்கக் கண்டான். அதில் தண்ணீர் - பிராந்தியென்னும் சாராயம் போலப் பொங்கிக்கொண்டு இருந்ததாகவும், வழிப்போக்கர் அநேகர் அதன்மேல் வைத்து அதன் சூட்டினால் போஜன பதார்த்தங்களைக் கூடச் சமைத்துக் கொண்டதாகவும் அவன் சொல்லியிருக்கிறான்.

---

* சேரநாட்டின் தலைநகராக விளங்கிய கொடுங்கோளூர்க்கு "மகோதை" என்னும் மறுபெயருண்டென்று பெரியபுராணத்துக் கழற்றறிவார் சரிதத்துக் காணப்படுகின்றது. இப்போது, கொடுங்கோளூர் (Cranganore) கொச்சி ஸம்ஸ்தானத்துள்ள ஒரு சிறிய கடற்றுறைப்பட்டினமாயுள்ளது.

அந்தத் தண்ணீர் அப்படி இருப்பதற்குக் காரணம் என்னவென்று அதைக்கண்டறியும் பொருட்டு, கிளேடன் அந்த அகழியில் குறுக்கே அணையிட்டு அங்கிருந்த நீரையெல்லாம் இறைத்து அதன்கீழ்ப் பூமியை வெட்டச்செய்தான். அரைகஜம் ஆழம் வெட்டிப் பார்த்தபோது அதன் கீழெல்லாம் முற்றும் கரியாயிருந்தது. அந்தப் பள்ளத்திற்குள் ஒருவிளக்கைக் கொளுத்திக்கொண்டு போகையில் அதற்குள் இருந்த வாயுவில் தீப்பற்றிக்கொள்ள அப்படியேவிடாமல் எரிய ஆரம்பித்தது. அதுகண்டு அவன் அப்படியே எரியத்தக்க வாயுவும் அதன் அடியில் இருக்கின்ற கரியும் ஏதோ ஒருவகையில் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டிருக்கின்றன என்று தெரிந்து, அதன் உண்மையைக் கண்டறியும்பொருட்டு அந்தக் கரிகளில் கொஞ்சம் எடுத்து ஒரு பாத்திரத்தில் இட்டு எரித்து வடிக்கப்பார்த்தான். முதலில் அதினின்றும் ஒருவகைக் கட்டியான பொருள்வடிந்ததாயினும் பிறகு கருப்பான தைலம் உண்டாகிக் கடைசியில் ஒருவகை ஆவியெழுந்தது. அந்த ஆவியை எவ்விதத்திலும் இறுகச்செய்ய அவனால் கூடவில்லை. அந்த ஆவி தாரையாய்க் கிளம்பும்போது எரிகிற ஒரு விளக்கை அதன்மேற் படும்படி பிடிக்க, அவ்வாவி உடனே பற்றிக்கொண்டு வெகு வேகமாய் எரிய ஆரம்பித்தது.

பின்பு அந்த ஆவியில் ஏதாவது கொஞ்சம் சேகரித்துவைத்துக் கொள்ளக்கூடுமாவென்று கண்டறியும்பொருட்டு கிளேடன் புகை கிளம்பும் பாத்திரத்தின்மேல் சரியாகப் புகைபோக்கியொன்று அமைத்து, அதன் நுனியில் உள்ளே ஒன்றுமில்லாத ஒரு தோற்பையைப் பொருத்தினான். அந்த ஆவி அதனுள் ஏறஏற அந்தப் பை அதனால் நிறைந்து உப்பிப்போயிற்று. இவ்விதமாய் அதன் ஆவியெல்லாம் அந்தப்பைக்குள் சேர்ந்தபிறகு, மறுபடி அதை இறுகச்செய்யும்படி பலவகையாலும் முயன்றான். ஆயினும் அந்த முயற்சிமட்டும் ஒன்றும் கைகூடிவரவில்லை.

பின்பு அதைப்பற்றி அவன் சொல்லியதாவது:-'ஸ்நேகிதர்களையும் மற்றவர்களையும் விநோதப்படுத்தவேண்டும் என்று நான் அடிக்கடி அந்த ஆவியடங்கிய பைகளில் ஒன்றை எடுத்து அதில் ஊசியால் சிறிய துவாரம் ஒன்று செய்து அந்தத் துவாரத்தின்வழியாய் அத

னுள் தீப்பற்றும்படி அதை ஒரு விளக்குக்கு நேராகப் பிடிப்பேன். உடனே அதனுள் இருக்கும் ஆவி பற்றிக்கொண்டு அது எல்லாம் ஆகுமளவும் அப்படியே ஓயாமல் எரிந்து கொண்டிருக்கும். அதைக் கண்டவர்களெல்லாம் அதிசயப்படுவார்கள். ஏனெனில், சதாரணமான வாயு அடைந்த பைகளுக்கும் இதற்கும் யாதொருவிசேஷமும் இல்லையே; அப்படியிருக்க இதில்மாத்திரம் தீப்பற்றி எரிவதற்கு ஹேதுவென்னவென்று அனைவரும் அதிசயிப்பார்கள். இவ்விதமாய்ச் சாதாரணமான வாயு அடர்ந்த பைகளுக்கும் இந்தப் பைக்கும் உள்ள பேதம் எவர்க்கும் தெரியாமலே இருந்தது” என்று சொல்லியிருக்கிறான்.

இவ்விதமாகக் கரிவாயு கண்டுபிடிக்கப்பட்டது. இப்படி ஆதியில் கிளேடன் தன் இஷ்டர்களை விநோதப்படுத்தும்படி இரண்டொரு பைகளைக் கரிவாயுவால் நிரப்புவதற்குச் செய்த வியாபாரந்தான், இப்போது இங்கிலாந்து முதலிய தேசங்களில் விசேஷமாய்த் தீபாலங்காரங்கள் செய்யவும் அடுப்பெரிக்கவும் சாதனமான அளவற்ற கருவிகள் செய்வதற்கு உபயோகமாகின்றது.

இவ்விதமாக முதலிற் கரிவாயு கண்டுபிடித்து இப்போது நூற்றெழுபத்துமூன்று வருஷமாகின்றது. அது கண்டுபிடித்து ஐம்பது அறுபது வருஷத்திற்குப் பிறகுதான் அது தீபாலங்காரம் செய்வதற்கு ஏற்ற கருவியாக வெங்கும் வழங்கலாயிற்று. அருமையாய்க் கண்டுபிடிக்கப்பட்ட இந்தப்பொருளை உபயோகத்திற்குக் கொண்டுவர அத்தனைகாலம் தாமதித்தற்குப்பல காரணங்கள் சொல்லுகின்றனர். கிளேடன் கண்டுபிடித்த விஷயத்தின்மேல் பலபரிசோதனைகள் செய்தார்களாயினும், அவையெல்லாம் தத்துவத்தைப்பற்றியவையாகவே இருந்தன. கிளேடனாயினும் அவன் காலத்திலிருந்த மற்றவர்களாயினும் புதிதாய்க் கண்டுபிடிக்கப்பட்ட அந்த வாயுவைத் தீபாலங்காரஞ்செய்ய உபயோகப்படுத்தக்கூடுமென்று எண்ணம் கொண்டதாகக் கூடத் தோன்றவில்லை. 1792-ஆம் வருஷத்திலேதான் முதலில் அப்படி உபயோகிக்கலாயிற்று. அந்த வருஷத்தில் ஆப்போது காரன்வால் மாகாணத்தில் வாசஞ்செய்துகொண்டிருந்த ஸ்காத்லாந்து தேசத்தவரான உவில்லியம் மர்டாக்கு என்பவர் அதை உபயோகப்படுத்தினு

ரெனக் கரிவாயு தீபாலங்கார சரித்திரத்தில்பிரசித்தமாயிருக்கின்றது. அதனால் கிளேடன் கண்டுபிடித்த உண்மையை உபயோகத்திற்குக் கொண்டுவந்ததனாலாகிய பெருமை அவருடையதாகவே இருக்கின்றது. அந்த மர்டாக்கு தாமே செய்துகொண்ட ஒருகருவியாலுண்டாக்கிய கரிவாயுவால் முதலில் தன் வீட்டுக்கும் உத்தியோகசாலைக்கும் தீபாலங்காரம்செய்தார். பிறகு இரண்டு மூன்று வருஷம் கழித்து அவர் ஸ்காத்துலாந்துக்குப்போய் அங்கே காரன்வாரில் செய்நவிதமாகவே கரிவாயு உண்டுபண்ணி அதை விளக்கேற்ற உபயோகப்படுத்தினார். இவ்விதமாக, விசேஷமாகப் பரவாமலிருந்தாலும், கரிவாயு தீபாலங்காரத்துக்கு ஏற்ற கருவியென நன்றாக நிரூபிக்கலாயிற்று ஆயினும் 1798-௵த்திலேதான் இங்கிலாந்து முதலிய இடங்களில் அதற்குமுன் வழங்கிவந்த எண்ணெய் விளக்கு முதலியவைகளுக்குப் பிரதி வர்த்தக வியாபாரங்களிலும் கரிவாயுவிளக்கு வழங்கலாயிற்று. ஆனால் அப்போது அருமையாயிருந்ததேயொழிய அதிகமில்லை.

1805-௵த்தில் யந்திரசாலைமுதலிய இடங்களில் வாயுவும் வழங்கலாயிற்று. 1809-௵த்தில் சீமையிலே சிலர் கூடி "கரிவாயு விளக்குச் சங்கம்" என ஒருசங்கம் சேருவதற்குச் சாஸனம் அளிக்கும்படி பார்லிமெண்டு சபைக்கு விண்ணப்பம் செய்துகொள்ள, மறுவருஷத்தில் அப்படியே செய்துகொள்ளும்படி உத்தரவாயிற்று. புதிதாய் ஏற்பட்ட அந்தச் சங்கத்தார்க்குப் பார்லிமெண்டு சபையார் உத்தரவு கிடைத்தாலும்,ஜனங்களால் பலவிரோதங்கள் உண்டாயின. காற்றைப்பிடித்துக் கடத்தில் அடைப்பது என்பது போலக் காற்றினால் தீபாலங்காரம் செய்கிறதென்பது ஆகாயத்தில் கோட்டை கட்டுவதுபோலும் என்று சொல்லிப் பலர் இகழ்ந்தார்கள். ஒன்றும் தெரியாதவர்கள் மாத்திரமேயல்ல: கல்வி அறிந்த பண்டிதர்களும் பலர் இகழ்ந்தார்கள்.

ஒரு பண்டிதர் இந்தக் கரிவாயு அடங்கும் கருவியை செயின்டு பால்ஸ் என்னும் ஆலயத்தின் கோபுரத்தளவு பெரிதாகச் செய்ய நினைத்திருக்கிறார்களோ என்று இகழ்ந்தார். ஆயினும் அந்தச் செய்தியைக் கேள்விப்பட்ட ஒருசிற்பிமட்டும் அதைப்பற்றி நல்ல அபிப்பிராயப்பட்டு, இப்போது இது யாவரும் இகழத்தக்கதாயிருந்தா

னும் சீக்கிரமே நாமெல்லாம் ஆச்சரியப்படும்படியான ஸ்திதிக்கு வரும்; இந்தக் கரிவாயுகொள்ளும் கருவி ஸெண்டுபால்ஸ் என்னும் ஆலயத்தின் கோபுரத்தளவேயல்ல, இன்னும் பெரிதாகவும் இருக்க நாம் காணப்போகிறோம் என்றார். ஆயினும் அக்காலத்தில் அவர் அப்படிச் சொன்னதை, அதிவாதமாகப் புகழ்ந்துபேசுவதாக நினைத்தார்கள். கடைசியில் அது வாஸ்தவமென்றே நிரூபிக்கலாயிற்று. ஸெண்டுபால்ஸ் என்னும் ஆலயத்துக் கோபுரத்தின் குறுக்கு அளவு 145 அடி. இப்போது 200 அடி குறுக்களவுள்ள கரிவாயுக்கூடு கூட ஒன்று இருக்கிறது.

இவ்வளவு விரோதங்கள் இருந்தும் அவற்றையெல்லாம் எதிர்த்துக்கொண்டு புதிதாக ஏற்பட்ட கரிவாயுச் சங்கத்தார் இதற்கு இடையிலே போய்க் கரிவாயு தேடிக்கொண்டுவந்து, எப்படியாவது ஜனங்கள் அதை நம்பி அங்கீகரித்தாற்போதுமென்று பல வீடுகளுக்கும் வர்த்தகசாலைகளுக்கும் அநேகம் கரிவாயுக்கூடுகள் இனாமாய்க் கொடுத்தார்கள். இப்படியே இரண்டு வருஷகாலம் நடந்துவரவே, அதற்கு இருந்த இடையூறுகளெல்லாம் மெல்லமெல்ல ஒவ்வொன்றாய் அநேகமாக வெல்லப்பட்டன. ஆயின் அதற்கு இருந்த இடையூறுகள் அற்பசொற்பங்கள் அல்ல; முதலாவது, ஒருகாரணமுமின்றி அதைப்பற்றி அனைவர்க்கும் திடமான தப்பெண்ணம் ஒன்று உண்டாயிருந்தது. சாதாரணமான ஜனங்களுக்குமாத்திரமேயன்று; சாஸ்திர விஷயங்களில் நன்றாய்த் தேர்ந்த பண்டிதர்களுக்கும் பிடிவாதம் இருந்தது. இரண்டாவது, சரக்குகளுக்காக உத்தரவாதம் செய்கிற சங்கத்தார் (Insurance companies) பலவிதமாய் ஆக்ஷேபித்தார்கள். ஆயின் அவற்றுள் ஒன்று மிகவும் அற்பமானது. அந்தக் காற்று எரியும் கருவி தற்செயலாய் ஒருவேளை வெடித்துப்போமானால் அதனால் என்னகெடுதி விளையுமோ என்னும் ஆக்ஷேபத்துக்குச் சமாதானமாக, அதற்கே உரித்தாய் மிகவும் உறுதியான ஒருவகை எரிகருவி அமைக்கும்படி ஏற்படுத்தலாயிற்று. ஆயினும் அதைப் பின்பு ஒருபோதும் உபயோகப்படுத்தவில்லை.

சரக்கு உத்தரவாத சங்கத்தார் செய்த ஆக்ஷேபத்தை அநுசரித்துத் துரைத்தனத்தாரும் அவ்விஷயத்தில் தலையிட்டுக்கொண்டா

ர்கள். அவர்கள் ஆக்ஷேபிக்கின்றபடி எவர்க்கும் தெரியாமல் இந்த வாயுதீபத்தில் ஏதாவது ஒரு கெடுதி இருக்கின்றதோ என்னவோ வெனத் துரைத்தனத்தாரும் சந்தேகங்கொண்டு, அதற்காகச் சில கனவான்களை நியமித்து, அந்தக் கரிவாயு தீபசங்கத்தார் வேலைசெய்யும் இடத்துக்குச் சென்று அவர்கள் வேலை செய்யும் முறைகளை நுட்பமாய்க் கண்டுபிடித்துத் தெரிவிக்கும்படி அனுப்பினார்கள். அதன்காரியம் எப்படியாயிற்றெனில், கரிவாயுகொள்ளும் கருவி சிறிதாகவே செய்யவேண்டுமென்றும், செய்தபிறகு மிகவும் உறுதியான கட்டிடத்துக்குள்ளேயே அவற்றை வைத்திருக்கவேண்டுமென்றும் அந்தச் சங்கத்தாரை நிர்ப்பந்திக்கும்படியாக அதைப்போய்ப் பார்த்தவர்கள் துரைத்தனத்தாருக்கு அறிக்கைசெய்தார்கள்.

கரிவாயுகொள்ளும் கருவி மிகச் சிறியவைகளாகவே செய்யவேண்டுமென்று அவர்கள் அறிக்கைசெய்ததற்கு யாதுநிமித்தமெனில், ஒருவேளை அந்தக் கருவிகள் வெடிக்கும்; அவை மிகப் பெரியவையாயிருக்குமாயின் அப்போது அவற்றால் அதிக அபாயம் நேரிடுமென்பதேயாம். அதன் உண்மை யென்னவெனில், அந்தக் கரிவாயுப்பைக்குள் ஒரு விளக்கை வைப்போமானால், அது அந்தவாயுவையும் பற்றவிடாமல் தானும் உடனே அணைந்துபோம்; ஏனெனில் வெளியிலுள்ள சாதாரணமான வாயுவினுடைய சம்பந்தம் இல்லாவிட்டால் அந்தவாயுவில் தீ பற்றவே பற்றாது. அப்படியிருக்க வெடிக்குமென்கிற வார்த்தைக்கு இடம் ஏது? கரிவாயுப் பைகளில் அடங்கியிருப்பது மற்றொன்றோடும் கலவாத சுத்தமான கரிவாயுவேயொழிய, வெடிக்கும் தன்மையையுடைய கரிவாயு, வெளியிலுள்ள சாதாரணமானவாயு இவைகளின் கலப்பன்று. ஆதலால் ஒருபோதும் அது சிறிதும்வெடிக்கத்தக்கதன்று. ஆயினும் அந்த ஆதிகாலத்தில் கரிவாயுவின் தன்மை இப்படிப்பட்டதென்று இப்போது தெரிந்திருப்பது போலச் செம்மையாய்த் தெரியாதாகலின், அதைப்போய்ப்பார்த்து வந்தவர்கள் அது வெடிக்கத்தக்கதென்று அறிவித்ததை நாம் அவர்கள்மேல் ஒரு குற்றமாக நினைப்பது நியாயமன்று. கரிவாயுப் பைகளை மிகவும் உறுதியான ஒரு கட்டிடத்துக்குள்ளேயே அமைத்து வைக்கவேண்டுமென்று சொன்ன மற்றொரு ஆக்ஷேபமாத்திரம் முற்றும் பிழையானது, ஏனெனில், கரிவாயுப் பைகள் வெடிக்கும் தன்

மையற்றவையாயின் அந்தக்கட்டிடங்கள் அவசியமேயில்லை. உள்ளவையாயின், அப்போது அந்தக் கட்டடம் அது வெடிக்காமலிருப்பதற்குச் சிறிதும் ஆதாரமாகாதிருப்பதோடுகூட, வெடிப்பதனாலாகும் கெடுதியைப் பத்துப்பங்கு அதிகமாய்ச் செய்விக்கும். இதைப்பற்றிக்கரிவாயுச் சங்கத்தார் எவ்வளவு நியாயங்கள் எடுத்துச்சொல்லி மறுமொழிகூறியும் ஒன்றும் பயன்படாமற் போனதினால் தீராப் பொறியாய், சிறிதும் உபயோகமில்லாததும், மிகுந்த செலவுசெய்து முடிக்கத்தக்கதுமான கட்டிடங்களை அவர்கள் கட்டும்படியாக நேரிட்டது.

ஆயினும் அப்போதுமவர்களுடைய சங்கடம்நீங்கவில்லை, எல்லாம்சமாதானமாக நடந்துவருங்காலத்தில், 1814ஆு ஜூன்மீ இந்தப்புதிய விளக்குகளால் யாவரும் களிக்கும்படி தீபாலங்காரமகோற்சவம் நடத்தவேண்டுமென்று ஆலோசிக்கலாயிற்று. அதற்காகத் துரைத்தனத்தாருடைய உத்தரவின்படி ஸெண்டு ஜேமஸ் பார்க்கு என்னுமிடத்தில் மரத்தினால் மிகப்பெரிதான ஒரு கட்டிடங்கட்டி அதற்குள் பதினாயிரத்துக்கும் அதிகமான கரிவாயு விளக்குக்கூடுகள் அமைத்து அவையெல்லாவற்றிற்கும் ஒன்றிலிருந்துமற்றொன்றுக்கு நெருப்புப்பற்றிக்கொள்ளும்படி விசித்திரமான ஓர் ஏற்பாடுசெய்தார்கள். அதன்படியே முதலில் ஒரு விளக்குக் கூட்டிலே விளக்கொளியைக் காட்ட, இந்தப்பதினாயிரம் விளக்குகளும் உடனே பற்றிக்கொண்டு ஏறக்குறைய எண்பது அடி உயரமுள்ள அந்தக்கட்டிடம் முழுதும் மிகப் பெரியதோர் சோதிமண்டலம்போலத் தோன்றியது. அதனழகைக் கண்டு அனைவரும் அதிசயித்தார்கள். இப்படி முதனாள் இராத்திரி தீபாலங்காரமகோற்சவம் எவ்விதமான கெடுதியுமின்றிச் செம்மையாகவே நடந்தேறிற்றாயினும், மறுநாள் இராத்திரி அதன் விசாரணைத்தலைவர்களுள் ஒருவன், அதன் சிற்பத்தலைவன் சொன்ன புத்தியைக் கேளாமல், தீபாலங்காரம் நடப்பதற்குமுன் அந்தக்கட்டிடத்துக்குள்சில வாணவேடிக்கைகள்நடத்தும்படிஉத்தரவு செய்தான். அதனால் கரிவாயுதீபங்கள் பற்றுவதற்கு முன்னமே அந்த மரக்கட்டிடம் முழுதும் பற்றிக்கொண்டு எரிந்து போயிற்று. ஆயினும் கரிவாயுவினாலேயே அந்தக்கட்டிடம் பற்றியெரிந்துபோனதாக எங்கும் பிரசித்தமாக அதையே எவரும் நம்பினார்கள். இது

இப்படிக் கொஞ்சம் தலையெடுத்த கரிவாயு தீபாலங்காரத்துக்கு மற்றொரு தடையாக நேரிட்டு அதை விருத்தியாகவொட்டாமல் மறுத்தது. ஆனாலும் அதனோடு அது அடங்கிப்போகவில்லை. மறுவருஷத்தில் அதற்குக் கொஞ்சம் ஆதாரம் உண்டாகி இரண்டொரு சபாமண்டபங்களுக்குக் கரிவாயுவால் தீபாலங்காரம் செய்யப்பட்டது. அது தொடங்கி கரிவாயுதீபம் மேன்மேலும் விருத்தியடைந்து இரண்டொரு வருஷத்தில் வீதிகளிலும் எண்ணெய் விளக்குகளுக்குப் பிரதியாக வழங்கும்படியாயிற்று.

இப்போது கரிவாயுதீபம் முழுதும் விசேஷமாய்ப் பரவவில்லையாயினும் நன்றாகநிலைபெற்றிருக்கின்றது. லண்டன்நகரத்தின் தெருக்களிலே முன்னிருந்த எண்ணெய் விளக்குக்கள் போய் அவற்றிற்குப் பிரதியாக இதுவே கொஞ்சங்கொஞ்சமாகப்பரவலாயிற்று; அநேகவிடங்களில் சபாமண்டபங்களுக்கு அலங்காரம் செய்வதற்கு மிகவும் ஏற்ற கருவியாயிற்று; அதற்குப் பிறகு மேன்மேலும் விசேஷமாய்ப் பரவிப் பிரசித்தமான பலவிடங்களிலும் வழங்கலாயிற்று. பலவிடங்களிலும் கரிவாயுச்செய்ய ஆரம்பித்தார்கள். இப்படியாகக் கடைசியில் கரிவாயு ஜனங்களுக்கு மிகவும் நயமும் பத்திரமும் தெளிவும் அதிக காந்தியுமுள்ள ஓர் விளக்கெரிகருவியாய் எங்கும் பிரசித்தமாயிற்று.

இப்போது எவர்க்கும் உபயோகமான இந்தக் கரிவாயுவை உற்பத்திசெய்யும் வழியை யோசித்தால், அதன்முக்கியமான வியாபாரமானது, ஆதியில் கிளேட்டன், தன் சினேகிதர் களிக்கச்செய்ய வாயுவிளக்கு ஏற்றும்படி கொஞ்சம் கரியை ஒரு மூடிய பாத்திரத்தில் எரித்து ஆவியாக்கிய மாதிரியாயிருக்கிறதேயொழிய வேறன்று. அம்மாதிரியாகத்தான் இப்போதுந் தினந்தோறும் அநேகமாயிரம் பாரம் கரியை எரித்து ஆவியாக்குகிறார்கள்.

கரிவாயு உற்பத்திசெய்ய முக்கியமாய் வேண்டியவியாபாரங்கள் இரண்டு. அவற்றுள் முதலாவது கரியைக் காய்ச்சிவடிப்பது. இரண்டாவது அதைச்சுத்திசெய்வது.

முதலாவதான கரியைக் காய்ச்சி வடிக்கிற செய்கை எப்படியெனில், அதற்கென்று செய்த மிகப்பெரிதான இருப்புச்சால் அல்லது

களிமண் பாத்திரத்தில் கரிகளைப்போட்டுக் காய்ச்சவேண்டும். வெளியிலே கரியைக் காய்ச்சுவோமானால் அதிகமாய்ச்சூடும் ஒளியும் உண்டாகிக் கரியெல்லாம் எரிந்து சாம்பலாய்ப் போமென்பது நமக்கெல்லாம் நன்றாய்த் தெரியுமே. அதேவிதமாய்க் கரியைக் கொளுத்திக் கரிவாயு உற்பத்திசெய்ய முடியாது. கரியை வெளியே கொளுத்தாமல், இருப்புப்பாத்திரமோ மட்பாத்திரமோ, காற்று உள்ளே புகாமல் முழுதும் நன்றாய் மூடப்பட்ட ஒரு பெரிய பாத்திரத்தில் இட்டு எரித்தால், பற்றியெரியத்தக்கதான கரிவாயு விசேஷமாய் உற்பத்தியாகும். இப்படிக் கரியைப் பாத்திரத்திலிட்டு எரிப்பதுதான் கரிவாயு உற்பத்திசெய்யும் வியாபாரங்களுள் முதலாவது. இதற்குக் கரியைக் காய்ச்சி வடிப்பது என்று பெயர்.

இதைத்தெளிவாகக் காட்டச் சுலபமான திருஷ்டாந்தமொன்று உண்டு. களிமண்ணால் செய்த ஒரு சிறு புகைச்சுருட்டுக்குழாயின் மத்தியில் சிறு சிறு கரிக்கட்டிகளைப் போட்டு அதில்வெளிக்காற்றுப் படாதபடி மேலே மூடிவிட்டு நெருப்பைப்போட்டு எரித்தால் சிறிதுநேரத்தில் அதினின்றும் புகைகிளம்பி வாயு வடியத்துவக்கும். பிறகு அந்த வாயுவில் படும்படி விளக்கைக் காட்டினால் அது பற்றிக்கொண்டு அந்தக்குழாய்க்குள் கரியிருக்கிறவரையில் எரிந்து கொண்டிருக்கும்.

இப்படிச் சிறுகக்காணும் திருஷ்டாந்தப்படியேதான் பெருகப் பெரியபாத்திரங்களில் அநேகமாயிரம் பாரம் கரிகளைப்போட்டுக் கரிவாயு வடிக்கப்படுகின்றது. அஃதெப்படியெனில், செங்கல்லினால் அதற்கேற்றபடி வேண்டுமென்ற அமைத்த ஓர் உலைக்கூடத்தில் ஒரு பெரிய பாத்திரத்தையிட்டு அதற்குத் தகுந்தளவு சூடேற்றி வடிப்பார்கள். அந்தப் பாத்திரம் சுமார் எட்டு அடி நீளமும் ஒன்றரை அடி அகலமுமுள்ளதாய் ஒருமுனை நன்றாய்மூடப்பட்டு மற்றொரு முனையில் திறந்திருக்கும் ஒரு குழாய். திறந்திருக்கும் பக்கத்தில் சரியாய்ப் பொருந்திய கதவொன்றிருக்கிறது. அதனால் அதை அடைத்து வைப்பார்கள். அம்முனையையடுத்து அந்தக் குழாயின் மேற்புறத்தில் ஒருதுவாரமுண்டு. பாத்திரத்திலுண்டாகும் ஆவி வெளியெழுந்துபோம்படி அந்தத் துவாரத்தில் ஒரு சிறு குழாய் பொருத்தப்

படிருக்கின்றது. பெரியபாத்திரத்தை உலைக்களத்தில் இட்டு நன்றாய்க் காய்ச்சி அதற்குள் நிரம்பக் கரியை உடைத்துப்போட்டுக் கதவை மூடிவிட்டால், அந்தக் கரியெல்லாம் எரிந்து ஆவியாக் கிளம்ப ஆரம்பிக்கும். அந்த ஆவிக்கு அப்புறம்போக வேறுவழி கிடையாதாதலால், அதன் மேற்புறத்திலுள்ள குழாயின்வழியாய் எழுந்து அக்குழாயின் மற்றொரு நுனியோடு பொருந்திய ஒரு பெரிய பாத்திரத்தில்சேரும். இப்போது அந்த வாயு சுத்தமானதல்ல. பிறகு அதை வேறு பல கருவிகளிற் செலுத்தி வெவ்வேறு வகையாய்ச் சுத்திசெய்து கடைசியில் கரிவாயுப் பையில்கொண்டு அடைத்து உபயோகத்திற்கு வைத்துக்கொள்வார்கள்.

சாதாரணமாய்ச் செய்யப்படுகிறபடி கரிவாயு ஓர் இயற்கைப் பொருளல்ல; நாலைந்து பொருள்கள் சேர்ந்து உண்டான செயற்கைப் பொருள். அவற்றுள் முக்கிய உபயோகமானவை இரண்டு: அவை ஜலவாயுவும் (Hydrogen) கட்டை, கரி இவற்றின் சுவரூபமான கரிப்பொருளும் (Carbon) ஆம். இவ்விரண்டுபொருளும் ஒன்றுக்கொன்று முற்றும் வேறானவை. தனித்தனி ஒன்றும்நன்றாய் எரியத் தகுந்ததன்று; ஆயினும் இவ்விரண்டும் சேர்வதனால் அந்த விசித்திரமான குணம் உண்டாகின்றது.

கரிவாயுவில் சேர்ந்த இவ்விரண்டு பொருளும் தனித்தனி செய்கிற செய்கை என்னவென்று பார்ப்போம். ஜலவாயு எளிதில் நெருப்புப் பற்றத்தக்க பொருள்; ஆயினும் அதன் ஜ்வாலை அத்தனை பிரகாசமாயிருப்பதில்லை. ஆதலால் அதுமாத்திரம் தனியே தீபாலங்காரங்களுக்கு உபயோகமானதன்று. கரிப்பொருள் அதைப்போலச் சீக்கிரத்தில் தீப்பற்றத்தக்கதல்ல; ஆயினும் தகுமளவு காய்ச்சிச் சூடேற்றினால், பிறகு அது பற்றிக்கொண்டு அதிகபிரகாசமாய் எரியும். கரிவாயு எரியும்பொழுது இவ்விரண்டு செய்கையும் நடந்தேறுகின்றனவென்றே நாம் உணரவேண்டும். ஜலவாயு சீக்கிரம் தீப்பற்றுகிற பொருளாதலின் உடனே அதில் தீ அண்டிக்கொள்ள, அதின் உஷ்ணத்தினால் கரிப்பொருளுக்கு நன்றாய்ச் சூடேறி அதுவும் பற்றிக்கொண்டு மிகப்பிரகாசமான ஒளி கொடுக்கின்றது.

கரிவாயு எரியும்பொழுது அதனால் உண்டாகும் பிரகாசத்தின் அளவு அந்தந்த வாயுவின் தன்மைக்கேற்றபடி வெவ்வேறளவாயிரு

க்கும். இவ்வாயுவின் தன்மை அதை உண்டாக்குவதற்குரிய செய்கையின் வித்தியாசத்தால் சிறிதளவு வேற்றுமைப்படுமாயினும், அதற்கு முதற்பொருளான கரியின் தன்மைக்கேற்றபடி வெகுவாக வேற்றுமைப்படும். இவ்விதமாக இங்கிலாந்துக் கரியினுலேயே முக்கியமாய்ச் செய்யப்படுகின்ற லண்டன் நகரத்து வாயுவானது பதினைந்து கொழுப்புவர்த்திக்குச் சரியான வெளிச்சம் தருகின்றது. ஸ்காத்லாந்திலுள்ள மிகச் சிறந்த கரியினால் செய்யப்படுகின்ற எடிம்பரோ நகரத்துக் கரிவாயுவோ, லண்டன் நகரத்துக் கரிவாயுவைப்போல இரட்டிப்பான ஒளி கொடுக்கின்றது; அதாவது முப்பது கொழுப்புவர்த்திக்குச் சரியான ஒளி தருகின்றது. இதை வெகு நுட்பமாய்ப் பரீக்ஷித்துக் கண்டறிந்திருக்கிறார்கள்.

இந்தக்கரிவாயுவின்உபயோகங்களையோசிக்கையில், தீபாலங்காரத்துக்கு ஏற்ற கருவியாய் இது செய்கிற உதவி மிகவும் அதிகமாயிருக்கின்றது. இந்த வாயு உடனே காரியத்துக்கு உபயோகப்படுவதும் மிகவும் அனுகூலமானதுமாயிருப்பதோடுகூட, செம்மையாய் உபயோகித்தால் அபாயமற்றதுமாயிருக்கிறது. நன்றாய் யோசித்துப் பார்த்தால் இப்போது நமக்குத் தெரிந்தவரையில் இவ்வளவு நயமான சிறந்த தீபக்கருவி இந்தக் கரிவாயுவைத்தவிரவேறில்லை.

இஃது இப்படியிருக்க, இதினும் சிறந்த மின்னொளி-விளக்கு (Electric light) இப்போது உண்டாயிருக்கக் கண்டிருக்கிறோம்; 1879ஆம்வருஷத்தில்,இனி இந்தக்கரிவாயுவுக்குப் பிரதியாக மின்னொளியே தீபாலங்காரக் கருவியாக வழங்கலாகுமென்ற ஓர் அறிக்கையைக் கேட்டு லண்டன் நகரத்திலுள்ள சிலகரிவாயுச் சங்கங்களின்கையொப்பக்காரர்கள் மிகவும் அச்சமுற்றார்கள்; ஆயினும் அந்த அறிக்கை சரியானதல்ல. இதுவரை அம்மின்னொளிவிளக்கு நயமாய் அகப்பட்டுக்கொண்டிருக்கிறவரையில் கரிவாயுவை மின்னொளி அதிகரிக்காதென்று உறுதியாய்ச்சொல்லலாம். மின்னொளியே இப்படியாகும்போது அதிகமாய் ஒளிகொடுக்கும் விஷயத்தில் கரிவாயுவுக்குப் போட்டியாக வரத்தக்கது வேறென்ன இருக்கிறது.

சௌக்கியத்தைப்பற்றி யோசித்தாலோ,அந்த விஷயத்திலும்கரிவாயுவுக்கு எதிர் ஒன்றுமில்லை. அடைப்புமூடியை வாங்கி அதற்குள்

ஒரு திரியைக்கொளுத்திக் காட்டுவதைப்பார்க்கிலும் சுலபமானது வேறென்ன? இந்தவருத்தங்கூட இல்லாமல் சுலபமாய்த்தீபமேற்றும்படி இப்போது புதிதாய் ஒருவகை மூடி கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றது. அதனால் அந்தக் கருவியைத் திருப்பினால் உள்ளேயிருக்கின்ற வாயு வெளி வர வழியுண்டாவதுமன்றி அவ்வாயுவில் ஒளிபற்றும்படியாகவும் ஆகின்றது.

அபாயம் உண்டாகாதிருக்கும் விஷயத்தைப்பற்றி யோசித்தாலும், வாயுசம்பந்தமாய் எரியத்தக்க பொருள்களுள் இதற்குச்சரியானது ஒன்றுமில்லை. ஒவ்வொரு தருணங்களில் கரிவாயுதீபம் வெடித்து மிகுந்த அபாயமுண்டானதாய்க்கேள்விப்பட்டது மெய்யே; ஆயினும் அப்படிப்பட்ட அபாயம் முக்கியமாய் அஜாக்கிரதையால் வருவதேயன்றி வேறல்ல. வெடிப்பதற்கு முதற்கருவியான சாதாரண வாயுவோடு கலந்தாலன்றி, கரிவாயு தானே ஒருபோதும் வெடிக்காது. மேலும் கரிவாயுப்பைகள் வைத்திருக்கு மிடத்தில் எங்கேயாவது அதன் நாற்றம் சிறிதளவு வீசக்கண்டால், உடனே அந்தப் பைகளையெல்லாம் ஓர் அளவாக வைத்து, சிறிதளவு வெளிப்பட்டு நாற்றம் வீசின வாயு அப்புறம் ஓடிப்போம்படி அவ்விடத்தில்விளக்கேற்றுவதற்கு முன்னமே அங்குள்ள சாளரங்கள் கதவுகள் யாவையும் திறந்துவிடவேண்டும். அப்படியே ஜாக்கிரதையாக நடந்துவந்தால் கரிவாயு வெடிப்பதற்கு யாதொரு நிமித்தமும் இராது. முன்ஜாக்கிரதையாய் இந்தச் சொற்பகாரியம் செய்வதைவிட்டு, வாயு வெளிப்பட்டதென்று தெரிந்தவுடனே அநேகர் கைவிளக்கேற்றிக்கொண்டு மிகவும் அபாயத்திற்கேதுவாய் வெடிக்கத்தக்கதான கலப்புவாயு ஒதுங்கியிருக்கும் இடத்திற்குப் போகிறார்கள். அப்படிச் செய்தால் அதனால் கெடுதி விளைவதற்குக் கேட்பானேன்!

இப்படிக் கரிவாயு வெளிச்சத்திற்கு ஆதாரமானபொருளாய் உபயோகப்படுவது மாத்திரமேயன்று; வைத்தியர் முதலிய சாஸ்திர விஷயமான காரியங்கள் செய்யப்படுகின்ற சாலைகளில் ரஸாயனத் தொழில் முதலிய காரியங்களுக்கு எரிக்கும் கருவியாகவும், அதிகமாய் உபயோகிக்கப்படும். இன்னும் இதரமான தொழிலாளிகளும் இவ்வாயுவை அடுப்பெரிப்பதற்கு ஏற்றகருவியாக மிகவும்கொண்டாடுகிறார்கள்; சமயலுக்காக அடுப்பெரிக்கவும் அடிக்கடி உபயோகிப்

பதுண்டு. விறகுக்குப் பிரதியாய் உபயோகிக்கும்போது புகை தூசி முதலியவை ஒன்றுமில்லாதிருப்பதாலும், மிகத் தெளிவாய் எரிவதாலும் இக்காரியங்களுக்கெல்லாம் கரிவாயு கொண்டாடி ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. மேலும் எந்த நிமிஷத்தில் வேண்டுமோ அந்த நிமிஷத்தில் ஏற்றி எரித்துக்கொள்ளவும் வேண்டாத நிமிஷத்தில் திடீரென்று அணைத்துவிடவும் இது அத்தனை சுவாதீனமான பொருளாயிருப்பதனாலும், இவ்வாயுவுக்கு இத்தனை சிறப்பு உண்டாகின்றது.

கரிவாயு இப்படி வெளிச்சம் உஷ்ணம் இவ்விரண்டுக்கும் ஏற்ற கருவியாயிருப்பதுமாத்திரமேயல்ல; ஒரு பொருளை அசைத்தோட்டுவதற்கு வேண்டிய திறமையுடையதாயும் இருக்கின்றது. நீராவியந்திரங்களில் நடந்தேறுவதுபோல, வாயுயந்திரத்தின் மூலமாய்நாம் இதைக்கண்டறியலாம். இந்தக்கரிவாயுவுக்கு அப்படிப்பட்ட வல்லமை எப்படி உண்டென்பீர்களோ? இந்தவாயுவும் சாதாரணவாயுவும் ஒன்றாய்க்கலந்து அதிக பலம் பொருந்தி வெடிக்கின்றதல்லவா? அப்படி வெடிப்பதற்கு ஏதுவான வலிமையே யந்திரங்களை ஓட்டி வண்டிகளை இழுக்கவும் உபயோகப்படுகின்றது. கரிவாயுவாலாகிய யந்திரத்துக்கு நெருப்பும் தேவையில்லை, நீர்கொதிக்கும் கொப்பரையும் தேவையில்லை, புகையும் தேவையில்லை.

இவ்விதமாகக் கரிவாயு உண்டாவதற்குச் செய்யும்வியாபாரத்தினால், அதனோடுகூடவே இன்னம் இரண்டு மூன்று மிகவும் உபயோகமான பொருள்கள் உண்டாகின்றன. அவற்றுள் முக்கியமானவை சுட்டகரியும், நவச்சாரமும் (Ammonia), தார் என்கிற கீல் எண்ணெயுமாம். சுட்டகரியாவது, வாயுவெல்லாம் எழுந்துபோன பின்பு அடியில் மிகுந்திருப்பது; அது விசேஷமாய் அடுப்பெரிக்க உபயோகப்படுகிறது. நவச்சாரமென்பது வாயு எழும்போது இடையே உண்டாவது; அதுமிகவும் விலைபெற்றது. தார் என்பது மிகவும் முக்கியமானது. ஆதியில் அதை மிகவும் கெட்டபொருளென்றும் தொட்டால் கை அழுக்காகுமென்றும் நல்ல பொருள்களையெல்லாம் அழித்துவிடுகிறதென்றும் எண்ணியிருந்தார்கள். ஆயினும் பின்மேலும் ஆராய்ச்சிசெய்ததில், அது மனிதர்களுக்குப் பலவிதத்திலும் உபயோகமான பொருளெனக் கண்டறியலாயிற்று. இத

ளுல் பலவகை வர்ணங்களும் உண்டாக்கப்படுகின்றன; மேலும் இது வீட்டுப் பொருள்கள் கெட்டுப்போகாதிருப்பதற்காக மேற்பூச்சுப் பூசுவது கெட்ட நாற்றங்களை நீக்குவதற்காக அங்கங்கே தடவுவது முதலாகப் பலவிதத்திலும் உபயோகப்படுகின்றது.

இவ்வகையாகக் கரிவாயு விசேஷமாயப பிராணிகளுக்கு உபயோகப்படுவதுமல்லாமல், தன்னோடுகூட இப்படிப்பட்ட பல பொருள்களையும் உண்டாக்கி உலகத்துக்கு மிகவும் நன்மைவிளைவிக்கின்றது.

---

## கம்பநாடர் அருளிட
# இராமாவதாரவுரை.

நாடிய பொருள்கை கூடு ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழியு மாக்கும் வேரியங் கமலை நோக்கு
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையிராமன் றோள்வலி கூறு வோர்க்கே.

(இதனுரை) நாடியபொருள் - நாடப்பட்டனவாகிய கல்விப் பொருளும் செல்வப்பொருளும்; இவ்விரண்டனையுமே பொருளெ ன்பதனைற் கருதினரென்பது மேலிவற்றின் பயனாக ஞானமும் புகழுமுண்டாம் என்றதனை னுய்த்துணரலாகும். கல்விப்பொருளான் ஞானமும் செல்வப்பொருளாற் புகழுமுண்டாம் என்க. பொருளைப் பெற்றுப் புகழெய்தாமலும், கல்வியைப்பெற்று ஞானமெய்தாமலும் வாளாகழியும் உயிர்கள் பலவாதலின் அவற்றை வேறுகூறி ஞர்; "ஓங்குபுகழ் செய்யான்.........பொருள் காத்திருப்பான்" (நாலடி) "கற்றிவர் ஞானமின்றேற் காமத்தைக் கடக்கலாமோ" (இராமாவதாரம்) எனவருதலா னுணர்க. கைகூடும் என்பது கால் சீத்தல் போல்வதோர்சொல். "திருவேறு தெள்ளிய ராதலும் வேறு" என்று கூறப்பட்ட இருவேறு நல்வினைப்பயன்களும் ஒருங்கே கைகூடும் என்றதாம். உண்டாம் என்றது, வித்தினின்று முளையுண்டாம் என்பதுபோல, அக்கைகூடிய பொருள்களினின்று இவைதோன்றலுணர்த்தி நின்றது. "ஞானிக்குமப்பயனில்லையேற் சிறுக நினை

வதோர் நினைவுண்டாம் பின்னும் வீடில்லை." (திருவாய்மொழி) எனப் பெரியார் பணித்தலான் மூன்னோதிய ஞானத்தானும் எய்தலாகாமையின் 'வீடியல் வழியுமாக்கும்' என வேறே கூறினர். மற்று "ஞானத்தால் வீடெனவே நாட்டு" என்பதுபோன்று வருவனவெல்லாம் பத்திவிசிட்ட ஞானத்தையே குறித்தனவாகும். "அன்பே தகளியா........ஞானச்சுடர் விளக்கேற்றினேன்" எனவும், "ஞானநற்சுடர்கொளீஇ........அன்பினன்றியாழியானை யாவர்காணவல்லரே" எனவும் "இனியார் ஞானங்களா லெடுக்க லெழாத வெந்தாய்" எனவும்வருந் திருவாக்குகளா னிதனுண்மை யுணர்க. "பத்தி, ஞானத்தினுஞ் சிறந்தது" என்னுமதம்பற்றி "வீடியல் வழி" என்று பத்தியையே ஞானத்தின் மேற்பயனுகக் கூறினர். வீடியல்வழி-வீட்டிற்கியலுநெறி; "பத்திநெறி" என்பது வழக்கு. வேரியங்கமலைநோக்கு வீடியல் வழியுமாக்கும் என்க. "வேரிமாறாத பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே" "அதுவுமவனதின்னருளே" எனவருந் திருவாக்குகளையுட்கொண்டு கமலைநோக்கு அப்பத்திமையை யுண்டாக்குமென்றார். பிறசான்றோரும், அருட்சத்திநோக்கந் தம்பால் வீழ்தலையே தெய்வ வழிபாட்டிற்குக் காரணமாகக்கூறுப. "அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்பது அவர்க்கு மேற்கோள். இவ்விராமாயணம் பத்திசாத்திரமாதலான் அப்பத்தியையே முடிவு பெறுகவுரைத்தார். "படிகொண்ட கீர்த்தி யிராமாயணமெனும் பத்திவெள்ளம்" என்பது அமுதனார் திருவாக்கு. வேரி-தேன். நீடியவரக்கர் - அழிவில்லாத அரக்கர்; "நீடுவாழ்வார்" என்புழிப் பரிமேலழகருரைத்தவாறுணர்க. அரக்கருஞ் சேனையு நீறுபட்டழிய வாகைசூடிய சிலை - வென்றிமாலை சூடிய வில். "நீறுபட்டழிய" என்றது, * "நீறுபடவிலங்கை செற்றநேரே" என்ற தெய்வச்சடகோபர் திருவாக்கினையுட்கொண்டு கூறியதாம். "மசரதமனையவர் வரமும் வாழ்வுமோர், நிசரத கணைகளா னீறு செய்யாந், தசரதன் மதலையா வருதும்" என்று வரமளித்ததனையு நோக்குக. "தென்னிலங்கையெரியெழச் செற்றவில்லியை" என்று அப்பெரியார் பணித்தலான் நீறுபட்ட வாறுணர்ந்து கொள்க. சீராமமூர்த்தி திருச்சரத்

* ௭. ௪. ௭. திருவாய்மொழி.

தைச் "சுடுசரம்" * எனப்பலவிடத்துங் கூறுதலுங்காண்க. அரக்கரை வேறல் முழுமுதற்கோர் பொருளன்றாதலின் வாகைசூடியது சிலையே யென்றார். சிலையிராமன்—பரசுராமன், அலராமன் இவரின் வேறு பிரித்துணரவைத்தது. "இராமன் றோள்வலி கூறுவோர்க்கு" என்றது "தென்னிலங்கை செற்றாய் திறல்போற்றி" என்ற திருவாக்கினையுட்கொண்டு கூறியதாம். "கற்பாரிராமபிரானையல்லான் மற்றுங்கற்பரோ" எனவும், "நிற்கின்ற செல்வம் வேண்டி நெறிநின்ற வுயிர்களெல்லாங், கற்கின்றதிவன்றன்னாமம்" எனவும் வருதலாற் "கூறுவோர்க்கே" என்ற சொன்னோக்குணர்ந்து கொள்க.

கூறுவோர்க்கே கைகூடும், உண்டாம், கயலை நோக்கு ஆக்கும் எனவுரைக்க. ௧

## பாயிரம்.

உலகம் யாவையுந் தாமுள வாக்கலு
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
வலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணாங்களே.

(இ - ரை.) உலகம் என்றது புவனமும், சனமும். யாவையும் என்றது உலகினுள்ள உயிர்கட்குத் தாரகபோடகபோக்கியங்களான மற்றெல்லாமும் எ - று. உயிர்கட்கு வேண்டிய தநுகரண புவனபோகமெனப்பட்ட நான்கனுள் ஈண்டுலகமென்றது புவனமேயாகவைத்து, யாவையுமென்றது அஃதொழிந்த மற்றைய மூன்றுமாம் எனினும், உலகம் என்பது காணப்பட்டதெனக்கொண்டு§ யாவையும் என்பது நூற்றொகைகளாற் கேட்கப்பட்டனவுமாம் எனினும் அமையும். கேட்கப்பட்டன சத்தியலோகாதிகள். தாமுளவாக்கல் - தாமேசிருட்டித்தல். தாம் என்றது உபாதான நிமித்தசககாரிகாரணங்கள் தம்மின் வேறல்லாமையுணர நின்றது. "மன்னுயிரெல்லாந் தானே வருவித்து வளர்க்குமாயன்" எனமேலும் இக்கருத்தே பற்றிவந்தது காண்க. (இராம. வீடணனடைக்கலம். ௧௧௪:)

* தாடகை வதை.

§ "லோக்கு தர்சனே" என்பவாகலின், உலகம் காணப்பட்டதெனப் பொருள் தரும்.

நிலைபெறுத்தல் - நிற்றலைப் பெறுவித்தல். இம்முத்தொழிலும் நீங்கலாவிளையாட்டு. அலகிலா விளையாட்டு - கணக்கில்லாத விளையாட்டு. உயிர்த்தொகைகளும் அவற்றின் கருமப்பகுதிகளும் அளக்கலாகாமையின் அவைபற்றி நிகழும் விளையாட்டும் கணக்கின்றாம் என்பது: முதற்காரணமுந் தாமேயாகவும் படைப்பளிப்பழிப்பா மோர்துன்புறுதலிலர் என்பார் விளையாட்டென்றார். உயிர்த்தொகைகள் ஒரோவொன்றாக வீடுபெற்றேகின் இறுதியில் ஒருகால் விளையாட்டுக்குயிர்களேயில்லையாங்கொல் என்னுஞ் சங்கையைப் பரிகரித்தற்கு நீங்கலாவிளையாட்டென்றார், உயிர்ப்பகுதி ஒன்றொன்றாக எண்ணப்படினும் அதன்பெருந்தொகுதி எண்ணப்படாதென வறிக. இது காலம் என்பது, நிமிஷங் கலை காட்டை முகூர்த்தம் யாமம் பகல் இரவுநாள் திங்கள் ஆண்டூழி எனப் பலபகுதிகளாக எண்ணப்படினும், அதன் பெருந்தொகுதி முடிவுபெறாது நெடிதுசேறல்போலக் கொள்க. இதனை அநந்தாரியரியற்றிய வேதாந்தவாதாவளி என்னும் வடநூலுட் கண்டுகொள்க. இம்முத்தொழில் விளையாட்டுடையாரே தலைவரென்றது பிரமசூத்திரத்துள் வியாசபகவான் "இவற்றினுடைய தோற்றம் முதலியன எதனிடத்தினின்று நிகழ்வனவோ அது பிரமம்" எனக்கூறிய சூத்திரக்கருத்தைத் தழீஇயுரைத்ததாம். இராமாநுசரும் அச்சாரீரகபாடியமுகத்து "எல்லாவுலகங்களுடையவும் படைப்பளிப்பழிப்பு முதலிய விளையாட்டுடையான்" என இம்முத்தொழிலை முந்துறவுரைப்பது காண்க. தலைவர் - முதல்வர். இது பிரணவப்பொருளையுட்கொண்டு போந்த பாட்டாதலின், இத்துணையும் அகாரப்பொருளை விளங்க வைத்துரைத்ததாம். ஈண்டு அவ்வகரத்திற்கும் பொருளாகிய தலைமைப்பண்புபற்றித் தலைவர் எனப்பெயராடலையுநோக்குக. இதனை "அகாரார்த்தோ விஷ்ணுர் ஜகதுதயரக்ஷாப்ரளயக்ருத் மகாரார்த்தோ ஜீவஸ்ததுபகரணம் வைஷ்ணவமிதம் । உகாரோऽநந்யார்ஹம் நியமயதி ஸம்பந்தமநயோ: த்ரயீஸாரஸ்த்ர்யாத்மா ப்ரணவ இமமர்த்தம் ஸமதிசத்" என்னும் பட்டருளிச்செயலாலுணர்க. இதன்கண் உலகின்படைப்பளிப்பழிப்பினைப் புரிகின்றவனை இறைவன் † அகரப்பொருள் என உரைத்தது காண்க. இனி, "அன்னவர்க்கே

---

† விஷ்ணு வியாபனசீலத்தாற் போந்த பெயர்; இறைவன்—எப்பொருளினுந் தங்குவோன். இறுத்தல்—தங்குதல்.

சரண்" என்பது, ஆன்மாக்கள் தமக்கேனும் அசித்துக்கேனும் உரியவல்லவென்று உகாரப்பொருள் கொள்ளவைத்தது. உகாரம், "அகாரப்பொருளான இறைவனுக்கன்றி வேறொருவர்க் குயிர்கள் உரியவல்லாமை நியமிப்பது" என்றதற்கு இயையவந்தது கண்டுகொள்க. உகாரம் அவதாரணப்பொருள் குறித்துவரும். இனி, 'நாங்கள்' என்றது மகாரப்பொருளைக்கொண்டு கூறியது; மகாரப்பொருள் ஜீவன் என்றுரைத்தவாறு நோக்கிக்கொள்க. இவ்வாறு, அ-உ-ம என்னும் மூன்றெழுத்துக்களின் பொருள்களை முறையேகொண்டு கூறியவாறறிக. "அன்னவர்க்கு" என்றது, அகாரத்திலேறிக் கழிந்த சதுர்த்தியை விரித்துரைத்ததாம். "அன்னவர்க்கே சரணங்களே" என்பது, "உனக்கே நாமாட்செய்வோம்" என்னுங் கோதையார் திருவாக்கின் கருத்தையே தழீஇ நிற்பது. இதனாற் சரணங்களே என்ற பாடம் தவறுதலுணர்ந்து கொள்க.

இனித்தலைவர்க்கே நாங்கள் சரண் என்னாமல் தலைவரன்னவர்க்கே நாங்கள் சரணென்றது, தலைவர்க்கும் அவரொடொரு நீர்மையராகிய திருமகளார் முதலிய பாகவதர்க்கும் நாங்கள் சரண் எனினுமமையும். நாஙகள் சரணென்றது நாங்கள் சரண்புக்கேம் எ - று.

சிற்குணத்தர் தெரிவரு நன்னிலை
யெற்குணர்த்தரி தெண்ணிய மூன்றனுண்
முற்குணத் தவரேமுத லோரவர்
நற்குணக் கடலாடுத லன்றரோ.

(இ - ரை) சிற்குணத்தர் - அறிவே தங்குணமாகவுடையார். அவராலுந் தெரிவு அரிய முதல்வர் நன்னிலையினை. ஆன்ம சொரூப குணங்கள் தாஸியமும் ஞானமும் என இரண்டென்ப. ஈசுவரன், ஆன்மா, அசித்து எனத் தத்துவ மூன்று. இவற்றுள், ஆன்மாவுக்கு ஈச்வரனை நோக்கித் தாஸியமும் அசித்தைநோக்கி ஞானமும் சொரூப குணங்களாகத் தெளியப்படும். இவற்றுள் தாஸியமொழித்து ஞானமே தங்குணமாக்கொண்டாராற் றெரிதற்கரிதென்பது. எற்குணர்த்தரிது - அவ்விரண்டிலொன்று மில்லாத எனக்கு பிறருணருமாறுணர்த்தவரிதேயாம். இனிச் சித்தென்றது, ஆன்மா எனக்கொண்டு சிற்குணத்தர் என்றது ஆன்மசொரூப குணமாகிய தாஸிய ஞா

ணங்களையுடையர் என்றுரைத்து தெரிவரு நன்னிலையென்றது அவ ராற்றெரிய வருகின்ற முதல்வர் நன்னிலை எனினும் பொருந்தும். இப்பொருளில் தாவிய ஞானங்களையுடையார்க்குத்தெரிய முதல்வர் தாமே வருகின்றார் என்பதுதோன்ற வருநன்னிலை என்றார்: ஆந் மாக்கள் தம்முயற்சியாற் சென்றுபெறுதலில்லை யென்பதும் ஆந்மகு ணங்களான அதிகாரிவிசேடணங்கள் நன்குடையார்க்கு இறைவர் வந்தருளலே யுளதென்பதும் இவ்வாசிரியர்க்குடன்பாடென வறிக. நன்னிலையினை வடநூலார் ஸம்ஸ்தாநம் என்ப. "யான்கண்ட நல்லது வே" எனப் பெரியார் பணித்ததனையு நோக்கிக்கொள்க. மூன்று குணத்துண் முற்பட்ட சத்துவகுணத்தவரே முதல்வர் என்றதனைச் சீபாகவதத்துட் பிருகுமுனி சென்ற வத்தியாயத்துட்கண்டு தெளிக. ஏகாரந்தேற்றம்; பிரிநிலையுமாம். அவருடைய நற்குணங்களாகிய கடலுட்டிளைத்தலே நன்மையுடைத்து எ - று. கடலாடுதலே நன் றென்பாரை நோக்கி நற்குணக்கடலாடுதலே நன்றென்றார். நற்கு ணம் என்றது இயற்கைப்பொருளை யிற்றெனக்கிளந்தது, அவர்க் குத் தீக்குணமேயின்மையான். குணங்களைக்கடலென்றார், அளக்க லாகாப்பெருமையானும் திளைத்தார் பாவங்கழுவுதலானும். அரோ- அசை.

பின் முத்தொழில் விளையாட்டுடையார் தலைவர் என்றார், ஈண் டு அம்முத்தொழில் புரியத் "தானுஞ் சிவனும் பிரமனுமாகிப் பணைத் த தனிமுதல்" சத்துவகுணத்தவரே என்று விளக்கினார்.

ஆதி யந்த மரியென யாவையு
மோதினா ரலகில்லன வுள்ளன
வேத மென்பன மெய்ந்நெறி நன்மையன்
பாத மல்லது பற்றலர் பற்றிலார்.

(இ - ரை) யாவையும் ஓதினார் ஆதியும் அந்தமும் அரியென்று சொல்லுதற்குச்சான்றாக அலகில்லனவாய் வேதமென்ப உள்ளன இது வழக்கொடு முந்துநூல் கண்டுரைத்தது. "ஆதியந்த மனந்த மற்புத மானவானவர் தம்பிரான்" என்பது பெருமாள்திருமொழி. மெய்ந்நெறி நன்மையன் - மெய்ப்பொருளாய் அதனை எய்தற்குரிய நெறியாய் அந்நெறிச்சென்றதனை யெய்தினார்பெறு நன்மையாயுள்ள

அவன் என்றவாறு. இது சொல்லுவான் குறிப்பாற் சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்று முற்கூறப்பட்ட அரியைச்சுட்டியது. இத னைத் "தானேறனையானுளன் சீவகசாமியென்பான், வானேற நீண்ட புகழான் சரிதம்மிதனை" என்னுஞ் சிந்தாமணிப்பதிகத்துப் புகழான் என்னும்பெயர் சொல்லுவான் குறிப்பான் அவன் என்னுஞ்சுட்டுப் பெயர் மாத்திரையாயிற்று; "நாணிநின்றோள்" என்றும், "அணங் கருங்கடவுளன்னோள்" என்றும், அகத்திற் (களிற்றியானை நிரை யுட்) கூறினாற்போல" எனவுரைத்ததனானுணர்க. இதனையே "ஒரு பொருளிருசொற்பிரிவிலவரையார்" என்னுந் தொல்காப்பிய வெச் சவியற் சூத்திரவுரைக்கண் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் கூறியவாறு நோக்கித்தெளிக. மெய்ந்நெறி நன்மையன் என்பது உபாயோபேயங்கள் அவனேயாதல் விளக்கி நின்றது. பற்றிலார்- அகப்பற்றும் புறப்பற்றுமில்லாதார். அவன் பாதமல்லது பற்றல ரென்க. அவன் பாதங்களைப் பற்றினாரே பற்றிலாரெனினுமமையும். மேல் தலைவர் எனவும் முதலோர் எனவுங் குறித்தமுழுமுதல் அரி யென்று பெயர்விளங்க வைத்தவாறு. இவை மூன்றுங் கடவுள் வாழ்த்து.

ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு
பூசை முற்றவு நக்குபு புக்கென
வாசை பற்றி யறையலுற் றேன்மற்றிவ்
வேசில் கொற்றத் திராமன் கதையரோ.

(இ - ள்) இதுமுத லாறுபாடல்களான் அவையடக்குரைக் கின்றார். "அவையடக் கியலே யரிறபத் தெரியின், வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென், றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன் றே" என்பதோத்தாகலின். சிராமகதையினை ஒலிபெற்றுயர்ந்த பாற்கடலாகவும், தம்மை அதனைப்பருகற் காசையுற்றதோர் பூசை யாகவும் கொண்டார். நக்குபு - நக்க; "அறைகாய்பறு நீர்ப்பைஞ் சுனை" என்புழிக் காய்பு - காய என அகப்பாட்டுரைகாரர் கூறியத னையும் "ஓங்கு நிலைவாயிற் றூங்குபு தகைத்த' என்புழித் தூங்குபு என்பதனைத் தூங்க எனத்திரித்துக்காலவழுவமைதியெனக் கொள்க" எனப் பதிற்றுப்பத்துரைகாரர் கூறியதனையும் நோக்கிக்கொள்க. நக் கல் - உண்வினை நால்வகையுளொன்று. "ஆசைபற்றி யறையலுற்

றேன்'' என்பது சிராமகதைக்கட் டமக்குள்ள பேராசையே அதனைப் பாடற்குக் காரணமெனக் குறித்தவாறு; "அன்பெனுநறவமாந்தி... ...மொழியலுற்றேன்" என மேலுங்கூறுவது காண்க. இதனால் இந்நூல்,ஒருவர் பாடுவிக்கப் பாடியதன்மையுணர்க. ஏசில் கொற்றம் - பழிப்பில்லாதவென்றி; "ஒன்றுற்றக்கா லூராண்மை மற்றத னெஃகு" என்றபடி தன்னைப்பகைத்தார்க்கு முபகாரியாதலையே கருதுந் தோலாத தனிவீரனுதலா லிங்ஙனம் கூறினர். காசில் கொற்றத்திராமன் எனவும் பாடமுண்டு. புக்காலென என்பது புக்கென எனவந்தது. மற்று, அரோ அசைகள்.

உயர்பாற்கடல் - எல்லாக்கடலினும் உயர்ந்த பாற்கடல். எல்லாநூற்கடலினும் இராமகதையாகிய பாற்கடலே உயர்ந்தது எ-று. ஓசைபெறுதல் - புகழ்பெறுதல். "படிகொண்ட கீர்த்தி யிராமாயணம்" என்ப. பாற்கடலுற்று என்றார், ஒருபூசையா னதனை யுறுதற் கேயரிதாதலான்.

நொய்தி னொய்யசொ னூற்கலுற் றேனெனை
வைத வவவின் மராமர மேழ்துளை
யெய்த வெய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே.

(இ - ரை) நொய்தினு நொய்யசொற்களான் நூலிழைக்கலுற்றேன், இஃதென்னையென்று தம்மறியாமை நோக்கி வியந்தவாறு. மராமரமேழுந் துளையெய்த அம்பினையெய்தவனுக்குப் பொருந்திய பெருங்கதையை ஒருவேடனை வைத வசவினாற்செய்த செம்மையாகிய தவத்தையுமுடைய வான்மீகிமுனிவன் சொற்கள் நிலைபெற்றுள்ள நாட்டிலே நொய்யசொற்களானூற்கலுற்றேன், இஃதென்னை. என்க. வான்மீகிமுனிவன் ஏதிலனை வைத வசவானு மிராமகதையியற்ற வல்லான் என அவனது புலமைப்பேராற்றலுணர்த்தியவாறு.

இனி "வைதெனக்கொல்லும் விற்கைமானிடர்" (இலங்கைகாண்படலம். க.) எனவருதலான் பெரியோர் வைத வசவைப்போல் மராமரம் ஏழ்துளையெய்த அம்பெய்தவற்கு எனவுரைப்பினுமமையும். பெரியோர் வைதவசவு ஒருவனை ஏழ்தலைமுறை புரைபடுத்தும் என்பதுகொண்டு இவ்வாறு கூறினாராகக் கொள்ளினும் பொருந்தும்.

வையமென்னை யிகழவு மாசெனக்
கெய்தவும் மிஃதியம்புவ தியாதெனிற்
பொய்யில் கேள்விப் புலமையி னோர்புகன்
றெய்வ மாக்கதை மாட்சி தெரிக்கவே.

(இ - ரை) வையமிகழ்தல், நொய்தினெய்ய சொல்லானூற்றது கண்டாகும். மாசெய்தல், அங்ஙனம்நூற்றதன்கணுள்ள சொல்லானந்தம் பொருளானந்தம் இவற்றாலாகும். ஆனந்தக்குற்றமுள்ள பாடலைப்புனையப்பெற்றவன் மானிடனாயின் அவனுக்கே கேடுபயக்கும். அக்குற்றமுள்ளபாடல் தெய்வத்தின் மேற்றாயின் அதன்கட்குற்றம் அதனையியற்றியோற்கே கேடுதரும்.* சுவரின்மோதவெறிந்த பந்து எறிந்தானையே எதிர்த்து மோதல்போலவும், நிலத்தைக்கையான் அறையின் அவ்வறைந்த கைக்கே அவ்வறைதலானோவெய்தல்போலவுமிதனைக்கொள்க. இவ்விகழ்ச்சியும் மாசும் எய்தாநிற்க இஃதியம்புவதியாதுகாரணத்தானெனின், புலமையினோர்புகன்றெய்வமாக்கதை மாட்சிதெரிக்கவென்க—என்க. தீதுள்வழியன்றே நலத்தன்மை இருட்டறையில்விளக்குப்போல நன்று விளங்குவதென்க. பொய்யில் கேள்விப்புலமையினோர்புகல் - பொய்த்தலில்லாத சுருதியானெய்திய ஞானமுடையாராற் சொல்லப்பட்ட. தெய்வமாக்கதை- தெய்வத்தன்மை பொருந்திய பெருங்கதை. கதைக்குத் தெய்வத்தன்மையாவது தன்னையோதியார்க்கு எல்லா நற்பயன்களுமளிக்குமாற்றலுடைமை. தெய்வமாக்கதை - தெய்வத்தைப்பற்றிய பெருங்கதை எனினுமமையும். "செய்தவன் சொன்னின்றதேயத்தே" என வான்மீகராமாயணத்தைக் கூறினார், ஆதிகாவியமாதலான். ஈண்டுப் பொய்யில் கேள்விப்புலமையினோர் புகறெய்வமாக்கதை" என்று வியாசபோதாயனர் அருளிய இராமகதையைக் கூறினார். மேல் "வடநூன்முனிவரும் புகன்றது" எனக்கூறுதலான் இதனையுணர்க.

துறையடுத்த விருத்தத் தொகைக்கவிக்
குறையடுத்த செவிகளுக் கோதில்யாழ்
நறையடுத்த வசுணநன் மாச் செவிப்
பறையடுத்தது போலுமென் பாவரோ.

* "தொகைக்குற்றம் பாட்டுறிற்செல் வம்போ நோயாஞ் சுற்றமறு மரணமுறுஞ் சோருங்காலுஞ், சகத்தவர்க்கீ தன்றியே தேவர்க் காகிற் றப்பாதிப் பலன்கவிதை சாற்றினோர்க்கே" என்ப. (சிதம்பரப்பாட்டியல், மரபியல், உ0.)

(இ - ரை) அகப்பொருள் புறப்பொருட்டுறையொடு பொருந்திய விருத்தத்தொடர்நிலைச்செய்யுள்கட்கு உறையாக அடுத்த செவிகட்கு என் பாவை ஓதின், யாழிற்பிறந்த தேன்போன்ற இசையினைப்பொருந்திய அசுணமாவினுடைய செவியிற் பறை யொலித்தது போலும் என்க. உறை - போர்வை. துறை - தமிழின்றுறை எனினுமமையும். "முத்தமிழ்த்துறை" என இவரே கூறுதல் காண்க. தாழிசை துறை விருத்தம் இவற்றினிடையது எனினுமமையும். அந்தாதித்தொடர் நிலையினை அந்தாதித்தொகை என்பதுபோல தொடர் நிலைச்செய்யுளைத் தொகைக்கவி என்றார். உறை - உறையுளுமாம். அசுணம் இசையறிவதோர் விலங்கு என்றார் நச்சினார்க்கினியர். பேராசிரியர் மெய்ப்பாட்டியலுரைக்கண், அச்சப்பொருளாவன "வள்ளெயிற் றரிமா வாள்வரி வேங்கை, முள்ளெயிற் றரவே முழங்கழற் செந்தீ, யீற்று மதமா வேக பாதங், கூற்றங் கோண்மாக் குன்றுறை யசுணம்." என்று சொல்லப்பட்டாற் போல்வன" எனக்கூறுதலின், இது நீங்கிழைக்கும் வலியுடையதென்றும் அதுபற்றி அஞ்சத்தக்கதென்றும் மலையின்கண் உறைவதென்று முணரப்படும். அகப்பாட்டினுப், "இருங்கல் விடரளை யசுண மோர்க்கும்" என வருதல்காண்க. இஃதியாழிசைக்கின்புற்றுப் பறையொலிக்குயிர்விடுமென்ப. இதனை, "மறையிற்றன் யாழ்கேட்ட மானை யருளா, தறைகொன்று மற்றத னுருயிரெஞ்சப் பறையறைந்தாங்கு" என்னு நெய்தற்கலியானுணர்க. நற்றிணையினும் "அசுணங்கொல்பவர் கைபோனன்று மின்பமுந் துன்பமு முடைத்தே தோழிநங்களவே" என வந்தது; இன்பம் யாழிசைத்தலானும் துன்பம் பறையொலித்தலானும் என்க. பறைபடுத்தல் - பறை கேட்டல். "பறைபடுத்து" என்றார் வெண்பாமாலையினும் (பெருந்திணை. ரு.) பறையடுத்தது, பறையடித்தது எனவும் பாடம். நறை - உவமையாகுபெயரான் இசை. நன்மா, இசையறியுமருமையான். கவியாற்செய்யப்படுஞ் செய்யுளையுங் கவியென்றல் தமிழ் வழக்கு. (தொடரும்.)

ரா. இராகவையங்கார்.

# தலமுறையாராய்ச்சி.

(சுா-ந் தொகுதி-429-ம் பக்கத்தொடர்.)

பேர் (பெரிய) - எயில் (மதிலையுடைய) தலம்: திருப்பேரெயில். இது பேரையூர் என வழங்குகிறது.

பை (பசிய) - நீலி (அவுரி) தலவிருக்ஷமாகவுள்ள தலம், திருப்பைஞ்நீலி இது திருப்பைஞ்ஞீலி என்றாயது.

அரசனுடைய தண்டலாளராயிருந்த ஓர் சிவனடியார் தண்டல் திரவியத்தைக்கொண்டு ஆலயத்திருப்பணி செய்ததை அரசனறிந்து அவரையழைப்பிக்க அவர் அரசனது தண்டனைக்குப் பயந்து உயிர் துறக்க அரசன் அவருடைய சரீரத்தை திருமங்கலக்குடிக்கப்பாற் கொண்டுபோகும்படி செய்ய அந்தச்சரீரம் திருவியலூருக்கு வந்தவுடன் அச்சிவனடியாரது பத்தினியார் பிரார்த்தனைக்கிரங்கி திருமங்கலக்குடியம்மையார் மங்களநாயகியார் திருவருளால் அவ்வடியார் உயிர்த்தெழுந்து அப்பத்தினியாருக்கு மங்கலம் கொடுத்தருளிய தலம்: திருமங்கலக்குடி.

வைசியர் குலத்திற்பிறந்த நங்கை நாத்திகளிருவரும் ஒருங்கே கருப்பமடைந்து வாழ்க்கையில் பிறக்குங் குழந்தைகளை ஒருவர்க்கொருவர் சம்பந்தஞ்செய்து கொள்ளுகிறதென்று உறுதிசெய்து கொள்ளப் பின் ஒருத்தி பெற்றது ஆமையாகவிருந்ததால் மற்றவள் தன் பெண்ணைக்கொடாதிருக்க அந்த ஆமை சிவபெருமானைப் பூசித்து ஆமையுரு நீங்கி மானிடவுருப்பெற்றுக் குறித்தபெண்ணைத் திருமணம் செய்துகொள்ளப்பெற்ற தலம்: திருமணஞ்சேரி.

மண்ணியாற்றின் கரையிலுள்ள தலம் திருமண்ணிப்படிக்கரை. இத்தலத்திற்கு, இலுப்பை தலவிருக்ஷமாகலால் இலுப்பைப்பட்டு என வழங்குகின்றது.

பார்வதியார் மயில் உருவாயிருந்து சிவபெருமானைப்பூசித்துத் திருமணஞ்செய்து கொண்டதலங்கள்: திருமைலாடுதுறை (மாயூரம்) திருமைலாப்பூர் (திருமைலம்.)

மயேந்திரன் (இந்திரன்) பூசித்துப்பேறுபெற்ற தலம்: திருமயேந்திரப்பள்ளி. இதனை "சந்திரன் கதிரவன் தருபுகழயனொடும் - இந்திரன் வழிபடவிருந்தவெம்மிறைவன்" என இத்தலத்தேவாரத் திருப்பதிகத்திலமைக்கப் பெற்றமைகாண்க.

மருகல் (கல்வாழை) தலவிருக்ஷமாயுள்ள தலம் திருமருகல்.

முன்னொருகாலத்து மார்க்கண்டேயர்க்காகச் சிவபெருமான் தனது மழுவையனுப்பி நிருத்தனதரிசனம் கட்டளையிட்டருளிய தலம்: திருமழுவாடி. மழுவாடி எனவே வழங்குகின்றது. வடமொழிநாமம்: பரசுநிருத்தன க்ஷேத்திரம். தேவாரத்திருப்பதிகங்களில் திருமழபாடி எனக்காணப்பெறுகின்றது.

வேதம் (மறை) பூசைசெய்த தலங்கள்: திருமறைக்காடு (வேதாரணியம) திருவேதிகுடி.

மாணி (பிரமசாரி) வடிவங்கொண்ட வாமனமூர்த்தி மாவலிச்சக்கரவர்த்தியிடம் ஏற்றதோஷம் நீங்கப் போற்றியதலம்: திருமாணிகுழி; இதனை, "நித்தநியமத் தொழிலனாகி நெடுமால் குறளனாகிமிகவும் - சித்தமதொருக்கி வழிபாடுசெய்கின்ற சிவலோகனிடமாம்" என இத்தலத்தேவாரப் பதிகத்தில் அமைக்கப்பெற்றமை காண்க.

மா தலவிருக்ஷமாகக் கொண்டதலம்: திருமாந்துறை (ஆம்ரவனம்.)

திருமால் பூசைசெய்து பேறுபெற்ற தலம்: திருமாற்பேறு.

முது (பழமையாகிய) - குன்றம் (மலை) திருமுதுகுன்றம் (விருத்தாசலம்.)

முருகன் பூசித்த பூண்டி: திருமுருகன்பூண்டி.

முல்லை வனமாகக்கொண்ட தலங்கள்: வடதிருமுல்லைவாயில், தென்திருமுல்லைவாயில்.

வக்கரன் என்னுமசுரன் பூசித்துப் பேறுபெற்ற தலம்: திருவக்கரை.

தேவேந்திரன் கொண்டுவந்த காவிரி நீத்தம், நாகராஜன் பிலத்தினின்றெழுந்த துவாரத்தின் வழியாய் வலஞ்சுழித்துச் சென்ற தலம்: திருவலஞ்சுழி.

அந்நீத்தம் வலஞ்சுழித்து மேலெழுந்த தலம் திருவலம்புரம். இத்தலத்தின் சிவலிங்கப்பெருமான் திருமுடியில் பள்ளம் காணப் பெறுவதால் பெரும்பள்ள மெனவழங்கப் பெறுகின்றது.

வலி (வலியான்கரிக்குருவி) வலம் வரப்பெற்றதலம்: திருவலி வலம்.

வல்லாள மகாராஜன் பூசித்ததலம்: திருவல்லம்.

வன்னி (அக்கினிதேவன்) பூசித்ததலம்: திருவன்னியூர்.

ஒரு நாககன்னிகை மிருவாஞ்சையோடு பூசித்து சிவபெருமானைத்தழுவித் திருவுருவிற்கலந்த தலம்: திருவாஞ்சியம்.

ஆரிய தேயத்தரசன் இரத்தினத்தை விரும்பி க்ஷேத்திரங்கள் தோறும் பூசித்துவருகையில் இரத்தினகிரியில் சிவபெருமான் ஒரு தொட்டியைக்காட்டி இதைக்காவிரி நீரால் நிறைக்கின் இரத்தினங்கிடைக்குமென்று அசரீரியாகத் திருவாய்மலர்ந்தருள விரம்பிரம்ப் பிரயாசையோடு எத்தனைகுடங்கள் கொண்டுவந்து நிறைத்தாலும் நிறையாதிருக்கக்கண்ட அரசன் கோபங்கொண்டு வாளையோங்கிச் சிவபெருமான் திருமுடியில் வீசினன்; அந்தவாளைப்போக்கி இரத்தினத்தைக்காட்டியருளிய தலம்: திருவாட்போக்கி. (இரத்தனகிரி.)

மகாவிஷ்ணு தனது வாளொளியையுடைய மாணிக்கத்தை வைத்துப்பூசித்த புத்தூர்: திருவாளொளிப்புத்தூர். இது வாள்கொளிப்புத்தூர் எனப்பதிகங்களில் காணப்பெறுகிறது. அர்ச்சுனன் வாளாயுதத்தைப் பூசித்ததாகவும் ஐதிகம்.

பல்லாயிரமாண்டு தன்தேகமெல்லாம் மரமுளைத்துப்புற்று மூடியிருக்கத் தவம்செய்ததால் பெயர்வாய்க்கப்பெற்ற வான்மீகமுனிவர் சிவலிங்கார்ச்சனைப்பேற்றை மார்க்கண்டேயராலுணர்ந்து பூசிக்கப்பெற்றதலம்: திருவான்மியூர்.

விஜயன் (அர்ச்சுனன்) பூசித்து பாசுபதாஸ்திரம் பெற்ற தலம்: திருவிஜயமங்கை. "இதனை "பாண்டுவின் மகன் பார்த்தன் பணிசெய்து - வேண்டு நல்வரங்கொள் விசயமங்கை" என இத்தலத்தேவாரப்பதிகத்திலமையப்பெற்றமை காண்க.

விஜயன் (அர்ச்சுனன்) பூசித்து பாசுபதாஸ்திரம் பெற்றதலம்: திருவியலூர். (திருவிஜயனூர்) கஜம் கயம் என்றாற்போல் விஜயன் வியயன் என்றாகி வியயன் - ஊர் = வியயனூர் என்பது திருவியலூர் என மருவியது. இதனை,

"வசைவிற்கொடு வருவேடுவ னவனாய்நிலை யறிவான்
றிசையுற்றவர் காணச்செரு மலைவானிலை யவனை
யசையப் பொருதசையாவண மவனுக்குயர் படைகள்
விசையற்கருள் செய்தானிடம் விரிநீர் வியலூரே."

என இத்தலத்தேவாரப் பாசுரத்திலமையப் பெற்றமை காண்க.

திரிபுரசங்காரத்திற்காகச் சிவபெருமான் இரதத்தைச் செலுத்திக்கொண்டு வருகையில் விற்கோலத்தோடு தங்கப்பெற்றதலம்: திருவிற்கோலம். இத்தலத்தில் இரதத்தினது கூவரம் (ஏர்க்கால்) முறியப் பெற்றதலம்: திருக்கூவரம். கூவரம் என்பது கூவம் எனமருவித். பதிகங்களில் கூகம் எனக்காணப்பெறுகின்றது.

வீழி வனமாகப் பெற்றதலம்: திருவீழிமிழலை (தேஜனிவனம்.)

விழல் தலவிருக்ஷமாகக்கொண்ட நகர்: திருவிழனகர். இது விளநகர் என மருவியது.

விழல் தலவிருக்ஷமாகக் கொண்டமர்ந்த தலம்: திருவிழலமர். இது திருவிளமர் எனமருவியது.

வெஞ்சாமா சூரன் பூசித்த கூடல்: திருவெஞ்சமாக்கூடல்.

சுவேதன் பூசித்து யமதண்டனை நீங்கப் பெற்றதலம் (சுவேதவனம்) திருவெண்காடு.

தேவர்கள் வண்டு ரூபமாய்ப் பூசித்ததலம்: திருவண்டுதுறை; இது திருவெண்டுறை யெனப்பதிகங்களில் காணப்பெறுகின்றது. திருவண்டுறை யென்றே வழங்கப்பெறுகின்றது. இத்தலவாலயத்தின் கருப்பக்கிரகத்தில் இன்றும் வண்டுகள் ரீங்காரம் செய்வது போல் ஒலிகேட்கின்றது. இதனைச் சிறப்ப அமைவு எனவுங்கூறுப.

மூங்கிலினடியிற் சிவபெருமான் தோன்றியருளிய தலம்: திருவேணுக்களம். (மூங்கில்வனம்.) இது திருவேட்களமென மருவிப் பதிகங்களில் காணப்பெறுவதன்றி வழங்கவும் பெறுகின்றது.

விஜயனுக்கு அனுக்கிரகஞ்செய்ய வேடரூபமாய்ச்சென்ற தலம் திருவேடக்குடி. இது திருவேட்டக்குடி என்றாயது.

ஸ்ரீராஜகுமாரனுக்குச் சிவபெருமான் திருமணவேள்வி செய்தருளிய தலம்: திருவேள்விக்குடி.

வேதங்கள் வேல் விருக்ஷங்களாகவிருந்து பூசித்ததலம் திருவேற்காடு.

பூதேவி பூசித்த வில்வ வனம்: திருவைகாவூர் பூமி=வை-(வில்வக்) கா - ஊர்=திருவைகாவூர்.

ஓர் சிவபக்தர் சிவனடியாருக்கு அன்போடு அன்னதானம் செய்து வருகையில் சிவபெருமான் சென்று அன்னங்கேட்க அடியார் எந்தவூர் என்று வினவினர். சிவபெருமான் ஆர்க்கூர் என்று மறைந்து, ஆலயமும் சிவலிங்கப்பெருமானுமாய்த் தோன்றியருளிய தலம்: திருஆர்க்கூர்த்தான் தோன்றிமாடம். ஆர்க்கூர் என்பது ஆக்கூர் எனமருவியது.

திருவாரூரின் கண்ணுள்ள அரனதாலயம்: திருவாரூர் அரநெறி.

வெள்ளையானை பூசைசெய்து பயம் இல்லையாகச் செய்துகொண்டதலம்: திருஇலம்பயங்கோட்டூர்.

அகத்தியமுனிவர் ஆலயம் திருக்காப்பானபின் அர்த்தயாமத்தில் ஈ ரூபமாகச்சென்று பூசித்த இமயமலைச் சிகரங்களிலொன்றாகிய (பொன்) வேங்கைமலை: ஈவேங்கைமலை: இது திருஈங்கோய் மலை யென மருவிப்பதிகங்களில் காணப்பெறுகின்றது. திருவேங்கைமலை யெனவழங்கப் பெறுகின்றது.

பிரமதேவன் தவஞ்செய்து பிரளயநீத்தத்தை தவாக்கினியால் ஒற்றித்திரளும்படி செய்ததலம்: திருவொற்றியூர்.

அங்குலன் என்னும்வேடனைப் புலிதுரத்தப் பயந்தோடி வில்வமரத்திலேறிக்கொள்ள புலியும் மரத்தின் கீழிருக்க விடியுமளவும் வில்வத்தைப்பறித்துச் சிவலிங்கத்தின்பேரில் துயிலாதிருக்கப்போட்டுகொண்டிருந்தான். அதனையர்ச்சனையாகவேற்று அவ்வேடனுக்கு மதனைக் கண்ணுற்றிருந்த புலிக்கும் பிரணவ உபதேசஞ்செய்து

சிவபதமருளிய தலம்: திருவோமாம்புலியூர். (பிரணவ வியாக்கிர புரம்.)

கா (பிரமன்) - அஞ்சி (பூசித்த) புரம்: காஞ்சிபுரம் - இது கச்சியென மருவியது. அம்பாளுக்கு நதியால் (நடுக்கம்) கம்பத்தையுண்டாக்கியதால் கம்பன். ஏகன் உவமையில்லாதவன். கா - அஞ்சி - ஏகன் - கம்பன் = கச்சியேகம்பன் என்று மருவி யத்தலத்திற்குத் திருக்கச்சியேகமபம் என்றாயது. இத்தலத்திலுள்ள (விநாயகர்) அனேகதம் பூசித்த தலம்: திருக்கச்சியனேகதங்காவதம். (பதம் - வதம் என்றாயது. பதம் - இடம்.) இத்தலத்திலுள்ள (கோயில்) நெறிக் (காரைவனம்) காரைக்காடு: திருக்கச்சிநெறிக்காரைக்காடு. இத்தலத்தின் (மேற்கேயுள்ள) மேல் (கோயில்) தளி: திருக்கச்சி மேற்றளி.

கடம்பு தலவிருக்ஷமாயுள்ள தலம்: திருக்கடம்பூர்.

தேவர்கள் அமிர்தகடம் வைத்துப்பூசித்த தலம்: திருக்கடவூர். இதனையடுத்துள்ள, பிரமனைச்சங்கரித்த மயானம்: திருக்கடவூர்மயானம்.

விஷ்ணுமூர்த்தி கலிக்காவதாரத்தில் பூசித்ததலம் திருக்கலிக்காமூர்.

கொடிகளையணிந்த மாடங்களையுடைய சேம் (செவ்விய) குன்றின்மேலுள்ள ஊர்: திருக்கொடிமாடச்செங்குன்றூர். இது திருச்செங்கோடு என வழங்குகின்றது.

இலங்கையில் கோண (கோடி) த்தி[illegible]ள்ளமலை: திருக்கோணமலை.

குவளை தலவிருக்ஷமாதலின் திருக்குவளை. திருக்குவளையெனவே வழங்குகின்றது. குவளை கோள் என்றாய் - இல் - இ = கோளிலி என்று மருவியது போலும். இலி இடமாகவுடையது. கோளிலி எனப்பதிகங்களில் காணப்பெறுகின்றது.

பிரமதேவன் உலகசிருட்டிக்காக சர்வமூலதிரவியங்களைப் பெய்துவைக்கக்கடம்செய்ய வேண்டியதற்காக சேறு (மண்) எடுத்த தலம் திருச்சேறை.

தலை (முதன்மையாகிய) ஆல் தலவிருக்ஷமான தலம்: திருத்தலையாலங்காடு.

தேவர்கள் பூசித்த தலம்: தேவன்குடி.

தேவகுரு பூசித்த தலம்: திருத்தேவூர்.

காவிரியும் பவானியும் நணு (நண்ணுமிடம்) திருநணு. பவானி கூடல் என வழங்கப்பெறுகின்றது.

நீலி (பார்வதியார்) பூசித்த தலம் திருநீலிக்குடி. தென்னீலிக்குடி என்பது தென்னலகுடியென வழங்கப்பெறுகின்றது. பாரத்வாசர் பூசித்து - பலி (பூசையை) - தாயம் - (உரிமையாய்) ஏற்றுக் கொண்டதால்=திருபலிதாயம் என்றும் (பாரத்வாசம்) கரிக்குருவி - வலியான் பூசித்ததாயம். திருவலிதாயம் என்றும் வந்தன. பலிதாயம் - வலிதாயம் என்றாயிற்று.

பாசு (மூங்கில்) இல் (இடமாகக்) கொண்ட ஆச்சிராமம்: திருப்பாச்சிலாச்சிராமம். கொல்லிமழவன் பெண்ணுக்கு முயலகன் வியாதியை வாசி செய்ததலமாகலான் திருவாசி என வழங்கப்பெறுகின்றது.

சக்கரவாகப்புள் பூசித்தமங்கை: திருப்புள்ளமங்கை.

பாரிஜாதப்பூவின் வனம்: திருப்புவனம்.

வேள் (சுப்பிரமணியர்) பூசித்த மாடக்கோயில்: திருப்பெருவேளூர். மாடக்கோயில் பெருங்கோயில் எனக்காணப்பெறுகின்றது.

வாயுவும் ஆதிசேடனும் சபதங்கொண்டு வாயு தன் வலியால் பெயர்த்தெறிந்த மேருக் கோடுமுடிகளிலொன்று கொங்குநாட்டிற் காவிரிமேல்கரையில் விழப்பெற்றதலம் கோடுமுடி. பின் பாண்டிதேயத்து அங்கவீனனான அரசகுமாரனிங்கு வந்து தவமியற்றிக் குறையுறுப்பை நிறையப்பெற்றுக் கொண்டதால் பாண்டியுங்கூடி வரப்பெற்றதால்: திருப்பாண்டிக்கொடுமுடி.

திரிகூடதலங்களில் திரிதியதிரிகூடம்: திருப்பள்ளியின் முக்கூடல்.

காமதேனு முன்னொருகாலத்தில் பிரமன் அயர்ந்து நித்திரை செய்தபோது பூசித்து உலகசிருஷ்டிசெய்த தலமாகலின் கருவூர் என்றும். ஆ - காமதேனு பூசித்த நிலை ஆநிலை யென்றும் இரண்டுஞ் சேர திருக்கருவூர் ஆநிலை என்றும் வந்தன.

பெண்ணையாற்றின் துறையிலுள்ள ஊர் திருத்துறையூர்.

சோ (அழகிய) மதிலையுடைய புரம் = திருச்சோபுரம்.

முண்டகன் (பிரமன்) பூசித்து பிரமகத்திநீங்கப்பெற்ற தலம் - முண்டகனீச்சுரம்: திருமுண்டீச்சுரம என்றாயிற்று. அவிநாசிக்குத் திருப்புக்கொளியூர் என்றொரு நாமம் உண்டு. பிரமன் முதலியோர் ஒரு காலத்துச் சிவபெருமானிடம் புக்கு ஒளித்துக்கொண்டதலமாகலின், திருப்புக்கொளியூர். அவிநாசி சிவனதுபுரம்; திருச்சிவபுரம.

(இன்னும் வரும.)

---

உ

கடவுள் துணை.

# நாட்டியசாத்திரம்.

---

## முதலாவது அத்தியாயம்.

(நாட்டியோற்பத்தி.)

### காப்பு.

மன்னு மடகேச்சுரன் பூமன்றன் பாத மலரிணைகள்
சென்னி நிலப்படத் தாழ்ந்துசொல் வன்சிற கார்ந்தவெள்ளை
அன்னமெ னும்புள்ளூ வாகனத் தோன்முன் னமாய்ந்துரைத்த
நன்னா மருத்திடு நாட்டிய நூலினை நன்குறவே.

தவத்திற்சிறந்தவரும், வேதாத்தியயனத்தி லிடைவிடாது செல்லுஞ்சிந்தையையுடையவரும், நாட்டியசாத்திரத்தை நன்குணர்ந்தவருமாகிய பரதமுனிவர் ஒருநாள் செபதபங்கள் முடித்துத்தமது குமாரர்கள் புடைசூழவிருக்குஞ்சமையத்தில் பஞ்சேந்திரியங்களையு மனதையு மடக்கித் தம்வசப்படுத்தும் வலிமையடைத்த மகாத்துமாக்களாகிய ஆத்திரேயர்முதலிய முனிபுங்கவர்கள் அவரையடைந்து வணங்கி "ஓஸ்வாமி! தேவரீரால் வேதார்த்தங்களையடக்கிச்செய்யப்பட்டதாகிய நாட்டியவேதத்தின் உற்பத்தியாது?

அதுயார்பொருட்டுச் செய்யப்பட்டது? அதன் அங்கங்களியாவை? அதன்பிரயோசனம்யாது? அதன்பிரயோகமெவ்வகைத்து? என்ற விவற்றினுண்மையை யெங்கட்குக் கூறியருளல் வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்கள். அம்முனிவர்களது வசனத்தைக் கேட்டவராகிய பரதமுனிவரும் நாட்டியவேதத்தினுற்பத்தியை யவர்களுக்குக்கூறுபவராகி யவர்களைப்பார்த்து "ஓமுனிசிரேட்டர்களே! நீவிர் சுசியுடையவர்களும் மனதையடக்கியவர்களுமாதலி னுங்களுக்கு அப்பிரமதேவரால் நியமிக்கப்பட்டதாகிய நாட்டியவேதத்தைச் சுருக்கமாகச் சொல்லுகின்றேன்'' என்று சொல்லத்தொடங்கினர்.

முன்னொருகாலத்துச் சுவாயம்பு மனுவந்தரத்துக் கிருதயுக முடிந்து வைவைச்சுதமனுவின்காலந்தொடங்கிய திரேதாயுகாரம்பத்தில் சுகமுந் துக்கமும் பொருந்தியதாயவுலகத்தில் அழுக்காறுங் கோபமுமே நிறைந்துங், கிராமியதர்மங்க ளெல்லாங் காமம் லோபம் இவைகளின் வசப்பட்டனவாயும், லோகபாலர்களாய அரசர்களால் நிலைநிறுத்தப்பெற்ற சம்புத்திவானது தேவர்தானவர் கந்தருவர் இயக்கர் அரக்கர் நாகர்முதலியவர்களின் கீழ்ப்பட்டதாகவும் ஆயின. அதனைக்கண்ட இந்திரன்முதலியதேவர்கள் பிரமதேவரை யடைந்து வணங்கி "ஓஸ்வாமி! கண்ணுக்குஞ்செவிக்கு மின்பத்தைத்தருவதாகிய ஓர் பொழுதுபோக்காகும் விளையாட்டில் விருப்புற்றேம். அது வும் வேதங்களுக்குமாறுபடாததாயுந் தாழ்ந்த வருணத்தவராகிய சூத்திரர்களாற் கேட்டற்கருகமானதுமாயிருத்தல்வேண்டும். ஆதலின்வேறாக இந்த ஐந்தாம் வேதத்தை எல்லாவருணத்தார்க்குமுரியதாகச் செய்தருளல்வேண்டும்'' என்றுபிரார்த்தித்தார்கள். பிரமதேவரும் "அங்ஙனமேயாகுக'' எனக்கூறி யிந்திராதியர்க்கு விடைகொடுத்தனுப்பி,பின்புதாம் யோகத்திலமர்ந்து நான்குவேதங்களையு மனதிலெண்ணினர். வேதங்களைச் சிந்தனைசெய்தவராகிய அப்பிரமா அறம் பொருளின்பங்களின் வழிப்பட்டதுங் கீர்த்தியைத்தருவதும் இதோபதேசங்களடங்கியதுஞ் சுருக்கமானதும் உலகத்துச்செயற்பாலனவாகியகருமங்களை யெடுத்துக்காட்டுவதுமாகிய நாட்டியமென்னும் பெயர்பெறும் ஐந்தாம்வேதத்தைச்செய்வே னெனச்சங்கற்பித்துக் கொண்டு இருக்கு வேதத்தினின்று பாட்டுக்களையுஞ் சாம வேதத்தி லிருந்துஇசையையும், யஜுர் வேதத்தினின்று அபிநயங்களையு மற்

றைய அதர்வ வேதத்தினின்று ரசங்களையுங்கிரகித்து இருக்காதி நானகையு மங்கங்களாக்கொண்ட நாட்டியவேதத்தைச் செய்தருளினர். அங்ஙனம் வேதோபவேதங்களின் பொருளையனுசரித்து அவைகள் நிலைபெறற்குக்காரணமாகத் தாமியற்றிய நாட்டிய சாத்திரத்தினை நாரதமுனிவருக்குபதேசித்தனர். அவ்வண்ணமுபதேசிக்கப்பெற்றவராகிய நாரதமுனிவர் மீட்டும்வணங்கி "ஸ்வாமி; தேவரீரால் நாட்டிய சாத்திரத்தை அனுக்கிரகிக்கப் பெற்றேனாயினும் அதனைப் பிரயோகிக்குமுறையாது? , அதற்கியான்யாதுசெய்வேன்" என்று பிரார்த்தித்தார். பிரமதேவரும் "ஓநாரதனே! இப்போது வருவதாகிய இந்திரனது விழாக்கொண்டாட்டத்தில் இந்நாட்டிய சாத்திரம் பிரயோகத்தில் வருவதாக" எனஅருளிச்செய்தார். அதன்பின்பு, ஓமுனிசிரேட்டர்களே! தேவர்களு மசுரர்களுநெருங்கியுள்ள அவ்வுற்சவத்தில் ஆசிபூர்வமாகிய நாந்தியைமுதலிற்படித்து, பின்புதேவாசுரயுத்தத்தை அதற்குரிய வொலிக்குறிப்புகளெல்லாந் தோன்ற நடித்துக் காட்டினேம. அதனால் அச்சபையில் வந்திருந்த பிரமாமுதலிய தேவர்களெல்லாமெங்கள் செய்கையின் மிகச்சந்தோஷித்தவர்களாகி எனக்குமென்புதல்வர்க்கு மொவ்வொருவரு மொவ்வோர்சம்மானஞ்செய்தார்கள்.

இங்ஙனம் அசுரவதையை (நாட்டியத்திற்) பிரயோகிக்கஆரம்பித்தபொழுது அங்குநெருங்கியவர்களாகிய அசுரர்களெல்லாங் கோபமுற்று "இவ்விதநாட்டியத்திலெங்கட்கிச்சையின்று. இதுவெங்கட்குவேண்டியதன்றெ" னஉரைத்து அனேகவிக்கினங்களைச் செய்வாராயினர். அவ்வசுரருடன் வந்தவர்களாகிய மாயங்களில் வல்லுநர்கள் நிருத்தஞ்செய்வோரின் வாக்குச்செயல் எண்ணமாகியவற்றைத் தம்பித்துவிட்டார்கள். இங்ஙனஞ் சூத்திரதாரனுடைய செய்ல்குறைந்ததைத் தேவராசன் பார்த்து நாட்டியப்பிரயோகத்திற் பழுதுற்றதெதனாலெனத் தியானத்தாலுற்று நோக்கியபொழுது அச்சபையானது விக்கினங்களாற் சூழப்பட்டதாயுஞ்சூத்திரதாரன் அறிவுநட்டமடைந்து சடபுத்தியுடையனாகிய நிருத்தநிலைக்கண்டு மகாகோபங்கொண்டெழுந்து அங்குநாட்டியிருந்த தன்கொடியைப் பறித்தெடுத்து அரங்கத்துவந்திருந்த அசுரர்களையெல்லாமடித்து அவர்கள்தேகங்களை முரித்தான். அசுரர்களுமவர் செய்தவிக்கினங்களு நீங்

யபின் இந்திரன் தேவர்களைப்பார்த்து "ஓதேவர்களே! உங்கட்குக் கிடைத்த இவ்வாயுத மிகத்திவ்வியமானது. இதனாலசுரர்கள் தேக மொடிந்து மெலிவடைந்தமையின் இதற்குச்சர்ச்சரமெனும் பெருண்டாக. இதுவேயெல்லோருக்குங் காவலாயிருக்குக" எனக்கூறி மீளவு நாட்டியத்தை யாரம்பிக்கும்படிஏவுதலும் நிருத்தர்கள் நீங்காதெஞ்சி நின்றவிக்கினங்களுக்கு மிகவுமஞ்சிநிற்றலையும் அசுரர்களும் விக்கினஞ்செய்தற்காகக் கொண்டு நிற்குமுறுதிப் பாட்டையும்யான்பார்த்து புத்திரர்சகிதம் பிரமதேவரிடஞ்சென்று வணங்கி "ஹேபகவந்! இந்நாட்டியத்தினை யழிவுசெய்தற்கனேக இடையூறுகளுண்டாயின. அதனை யவைகளினின்று நன்குரக்ஷிக்குமுறையை எங்கட்குக்கட்டளையிட்டருளவேண்டு" மெனவேண்டினேன். உடனே பிரமதேவரும் விசுவகர்மாவையழைத்து அழகிய ஓர் நாட்டியத்தை யியற்றுமாறு ஆஞ்ஞாபித்தலும் அவனும்விரைந்து சிறிதுகாலத்துள் சகல இலக்கணங்களோடு கூடியதும, விசாலமுள்ளதுமான ஓர் நல்நாட்டிய கிருகத்தை நிருமித்துப் பிரமதேவரிடத்துச்சென்று வணங்கித் தானியற்றிய நாட்டியசாலையைப்பார்க்க எழுந்தருளவேண்டுமெனப் பிரார்த்தித்தான். அப்பொழுது பரமேட்டியும் இந்திரன் முதலியதேவர்கள் புடைசூழஎழுந்துசென்று நாட்டியமண்டபத்தினைப் பார்த்து மகிழ்ந்து நின்றதேவர்களைநோக்கி "அம்மண்டபத்தை ஒவ்வொருவருந் தங்கடங்கள் அமிசங்களைக்கொண்டு காவல்செய்தல் வேண்டும்" எனக்கட்டளையிட்டனர். அவர்களுமங்ஙனமே செய்திருந்தார்கள். ௬

இப்படியே யெல்லோருங்காவல்பூண்டிருக்கும் பொழுது தேவர்கள் பிதாமகனைவணங்கிக்கூறுவார்கள் "ஓஸ்வாமி! விக்கினஞ்செய்பவர்களாருமிவ்வசுரரிடத்து முதலிற்சாமோபாயத்தையும், பின்தானோபாயமும், அதன்பின்பேதத்தையும் அதற்கப்புறமே தண்டோபாயத்தையுங் கைக்கொள்ளல்வேண்டும்." இதனைக்கேட்டுச் சதுமுகன் அசுரர்களைநோக்கி "ஓ அசுரர்களே! நீவிர் இந்நாட்டியத்தை விநாசப்படுத்தும்படிநிற்றல் என்னை" எனவினவினர். பிரமாவின்வசனத்தைக்கேட்ட விருபாக்கனென்னுமசுரன்சொல்வான் "ஓ சகலலோகபிதாவே! தேவர்கள்பொருட்டாகத்தேவரீர் இந்நாட்டியத்தையியற்றினீர். அவர்களின் வேண்டுகோளுக்கிசைந்து எங்களையுநீக்கிவிட்டீர்.

முன்னர்த்தேவரிடத்தே தோன்றியஎங்களுக்கும் அத்தேவர்களுக்கு ப்போலச் செய்தருளல்வேண்டும். இதுவேஎங்கள்குறை" எனக்கூறிய விருபாக்கன்வார்த்தையைக்கேட்டுப் பிரமாகூறுவார் "ஓஅசுரர்களே! நீங்கள் கோபித்தல்வேண்டாம். நீங்கள்கொண்ட மனத்துன்பத்தைவிடுங்கள்; உங்கட்குந்தேவர்கட்குமிடையிலுள்ள சுபாசுபகுண வேறுபாட்டுக்கிசைய இந்நாட்டியவேதஞ் செய்யப்பட்டது. இதில் உங்கட்குந் தேவர்க்கும் ஒரேயிடத்திலேயே ரமிப்பு எங்ஙனமுண்டாகும்·இந்நாட்டியமானது மூன்றுலகிலுமுள்ளாரது மனோவிகாரங்களையுமுள்ளடக்கியது. சிலவிடத்துப்புகழ்ச்சியுஞ் சிலவிடத்து விளையாட்டுஞ் சிலவிடத்துக்கீதமுஞ் சிலவிடத்துக்காமமுஞ் சிலவிடத்துயுத்தமுதலியனவும் அதிகரித்திருக்கும். தருமவழிநிற்போர்க்குத் தருமத்தையு மின்பத்தைத்தேடுபவர்க் கின்பத்தையுந் துட்டர்களுக்குநிக்கிரகமும் மதம்பிடித்தவர்க்கு அடக்கத்தையும் இளையோர்க்குஉற்சாகத்தையுந் துக்கத்திற் பீடிக்கப்பட்டார்க்கு... தைரியத்தையும் ...வித்... ன்களுக்குச் சாமர்த்தியத்தையும் எல்லோர்க்குஞ் சீவனசத்தியையுங்கொடுக்கும்படியாக நாநாவித ரசங்களையுடையதாயும் பலவிதநிலைகளையும் உலகத்துப்பலவேறு செயல்களையும் குறிப்பிற்காட்டுவதாகவும் இந்நாட்டியவேதஞ் செய்யப்பட்டது. அதுவுமன்றி உலகத்துள்ள உத்தமர் மத்திமர் அதமர் என்னுமூவகையினர் செய்கையைக் காட்டுவதாயும் இதமானநீதிகளைக் கூறுவதாயுந் தைரியம் பலம் வினோதமுதலியவைகளைச்செய்வதாயுந் துக்கமுடையோர்க்குஞ் சமர்த்தர்க்குஞ் சோகப்பட்டோர்க்கு மெலிந்தவர்க்குங் காலங்களில் விச்சிராந்தியை (ஆறுதல்) த்தருவதாகவுமுள்ளது. அதுமட்டோ! தருமகுணங் கீர்த்தி ஆயுசு புத்தி விருத்திமுதலியனவு மிதனாலுண்டாம். இந்நாட்டியத்துக்காணப்படாதனவாகிய கேள்விசெய்கைவித்தைகலையோகமுதலியன அவ்வவைக்குரிய சிறப்பினைப்பொருந்தா. ஆகையால் அசுரர்களே! யானியற்றிய இந்நாட்டியமிங்குச்செய்தல் கூடாதென நீவிர்தேவர்களோடு கோபித்தல்வேண்டாம். இந்நாட்டியமானது தேவர்களுமசுரர்களுந் தங்களிராச்சியத்தை யாளுமுறையையும் உலகத்துக்குச் சுபாவமாயுள்ளசுகதுக்கங்களை அபிநயமூலமாகக் காட்டுவதாம். மேலுமிது வேதபுராண இதிகாசங்களின் பொருள்களைக்கற்பித்து உலகத்துக்கு வினோதவியாசத்தாற்காட்டும்" என்று

கூறித்தேவர்களைப்பார்த்து "அரங்கபூமிக்குவேண்டிய மந்திரமோமமிவைகளைச்செய்யாது அதற்குள்பிரவேசித்தல் கூடாது. எவன் அரங்கபூமிக்கு வேண்டியபூசையைச் செய்யாதுவிடுகிறானோ அவன் எவ்வளவு பெருமையுடையனாயினும் தாழ்வினையடைவான்" என்றிவ்வாறு அருளியவ்வரங்கத்துக்குரியபூசையைச் செய்யுமாறு எனக்குக் கட்டளையிட்டனர்.

நாட்டியோற்பத்தி அத்தியாய முற்றிற்று.

தி. சதாசிவஐயர்,
யாழ்ப்பாணம்.

---

# புராதன இந்தியா.

[பங்களூர்-ஸ்ரீமாந் S. கிருஷ்ணசாமி ஐயங்காரவர்கள், M. A. எழுதியது.]

(கூ-ம் தொகுதி கக-ம் பகுதி 525-ம் பக்கத்தொடர்ச்சி.)

சுங்கணவ வமசத்தியர் காலம் இத்தேயத்து ஸம்ஸ்கிருத பாஷைக்குப் பிரத்தியுஜ்ஜீவந காலமாய் விளங்கியதுமன்றி, விக்கிரமாதித்தியன் இக்காலத்தில் வதிந்தானென்னுங் கர்ணபரம்பரைக்கு ஆஸ்பதங் கொடுப்பதாகவுமிருக்கிறது. இக்காலமே புட்கலகம் பெற்ற காலமாயிருந்தது. ஆசியராஜாங்கம், ஸிலியூகஸ் (selucus) வழிவந்தோர் காலத்திலேயே யுற்றதாழ்வு, மத்திய ஆசியதேயங்களினாரப்பெற்று இந்தியாவினுமறிவுறுத்தப்பட்டது. ஆசியவிஜயயாத்திரை செய்து ரோமகதேயத்தாரோடு தானே விளைவித்துக்கொண்ட பெரும் போரில் ஆண்டிலிகஸ் (Antiochus) என்பான் சீரழிவு பெற்றான். இவனைத்தொடர்ந்தாண்டோர் நாளில் ஆஸ்ரகிஸ் (Arsakes) என்பானால் பார்த்தியாவும், (Parthia) தன் அரசப்பிரதிநிதியினாலேயே பாக்டிரியா (Bactria) வும், ஆகிய இவ்விரண்டு மண்டலங்களுந் தனித்தேசங்களாய் நிலைகொண்டன. பாக்டிரிய பிரதிநிதி ஸிந்துநதிக்கரைவரை படையெடுத்து வந்து, தன்மகனாலேயே கொலையுண்டான். இவனுக்குப்பின் வந்தோனாய மீனண்டர் என்பவன் தான் புஷ்யமித்

திர ஆதிபத்யத்தை யெதிர்த்து, யூஎச்சி (Yuechi) என்பவர்களாலுந்தப்பட்டு சகர்கள் குழப்புத்தால், பின்திரும்பிப் போவானாயினன். இச்சகர்கள் தான் இந்தியதேசம் புகுந்து பஞ்சநதத்திலும் ஸிந்துகீழ்த்தேயங்களிலும், பார்த்திய மித்திரடேட்டிஸ் (Mithridates) என்னு மரசனுக்குட்பட்ட சில ராஜ்யங்களில் நிலைபெற்றார்கள். இச்சகர்களை பின்னுந் தப்பிச் சகஸ்தானமென்னுமிடத்தில் கடைசியாய் நிலைகொண்டார்கள். இப்பெருவிளைவில் மாளவதேயத்தாரையொருவன் புகழ்வாய்ந்து, காளிதாஸன் முதலாய கவிகட்குப் பெருவள்ளலாய் நின்று, நன்றியறியும் நன்மக்களால் இத்தேயத்தை யுய்வித்தோனென்று பெயர்வாய்ந்திருத்தல் கூடும். ஆயினும் க்ஷேத்திரபர் என்று பேர்வாய்ந்த சில சகஜனங்கள், ஸிந்துநதியின் வலபுறம் நிலைபெற்று தக்ஷிலாசரித்திரத்தில் நடைபெற்றோராவர்.

பஞ்சநதத்தில் நிலைபெற்ற சகரர்கள் யூஎட்சியர் குழுவொன்றால் ஒட்டப்பட்டார்கள். சுமார் கி. பி. 50-௵த்தின் பிறகு யூஎட்சியரே அங்கு நிலைகொண்டதனால் இந்தியதேயம் ஒருபால் ரோமர்களோடும் மற்றொருபால் சீனதேயத்தாரோடும் அயற்பட்டது. காந்தார அரசவுரிமையில் நிலைபெற்றவனும் யூஎட்சி வமிசத்தில் மூன்றாவனுமான காணிஷ்கன் என்போன் சிறிதுசிறிதாய் இவ்வரசர் ஆதிக்கமன்றி இருமருங்கும் சமுத்திரம்பெற்ற தக்ஷிணத்தையெல்லா முள்ளடக்கிக்கொண்டான். அசோகனுக்குப்பின்னாள் அதிராஜ்யமானது அடைந்த கீழ்மைக்கு இவ்வாந்திரர்களும் இயன்றமட்டும் முயன்றவர்களாய் கி. மு. இரண்டாம் நூற்றாண்டின் இடையே மகதத்தின்மேற் படைசெலுத்திய கலிங்ககாரவேலனுக் குதவிபுரிந்தார்கள். கண்வர்கள் கவிழவே ஆந்திரர்கள், மீனாண்டர் செலுத்திவந்த யவனர்களினின்றும் கலைகளாலும், நதிகளாலும் இருபாலும் காப்படைந்தவர்களாய், வடக்கே புரண்டு மகதத்தை யாக்கிரமத்துக்கொண்டனர். மேற்கூறிய செய்திகள் பலவும் நிகழ்ந்த காலமெல்லாம் உள்நாட்டாந்தரர்கள் சிறிதும் இடர்ப்படாதவர்களாய் நின்று, பார்த்தியவரசாதீனத்தராய சகக்ஷேத்திரபர்களை மாத்திரம் ஓங்கவொண்ணாமற் செய்வதில் முயற்சியுடையராயிருந்தனர். இம்முயற்சிகட்கிணங்க கீழ்ப்புறமிருந்த அமராவதிக்கண்மைத்தான கடகத்தினின்றும் வேறொரு ராஜதானியைக் கோதாவிரிக்கரை பைதானில் நிருமித்து வதிந்தனர்.

இரண்டாம் விலிவாயகுரனேமுதலாய மிருந்தர ஆட்சியாளர்கள் இச்சகர்களோடு போர்செய்து வெற்றிபெற்றவர்களானார்கள். இவ்விலிவாயகுரனே மலையத்துவரைக்கும் பரவிக்கிடந்த க்ஷேத்திரபர் பெருமையைக்குறைத்தான். இவன் மகனுமிச்செய்தியிலேயே முயன்றனன். இன்னுமிரண்டு தலைமுறைக்குப் பிற்பட்டு கனிஷ்டகவம்சத்திய க்ஷணர்கள் முடிவுபெற்றகாலத்திலேயே ஆந்திரரும் அழிவடைந்தனர்.

ஆந்திரராஜ்யத்துக்கிசான்யத்தில் பார்த்தியரேயென்று கொள்ளப்பெற்ற பல்லவர், இக்காலத்திற்றான் தோன்றுகிறார்கள். இவர்களுக்கு சம்பந்தப்பட்ட பிராசீனலேகங்கள் காஞ்சிக்கு வெகுவாய் வடபாற்பட்ட விடங்களினின்று தான் வெளிவந்திருக்கின்றன. ஏனென்றால் காஞ்சி பல்லவராஜதானியானது சிறிதுகாலம் பிற்பட்டுத்தான். பல்லவர்களின்னும் ராஜ்ய நீதிகளில் மேன்மைபெற்றோராகவில்லை.

இப்பல்லவநாட்டுக்குத் தென்பால் அனேக சிற்றரசுகளுமதற்குத் தென்பால் மூவேந்தர்களும் நிலைபெற்றிருந்தனர். இவர்களுக்குத் தென்பாற்கிடந்தது ஈழம். சேரசோழ, பாண்டியராய மூவேந்தர்களும், ஆரியப்படைதந்து வெற்றிபெற்றகூற்று, ஆந்தரர்களுக்கொருகாலுதவிசெய்திருத்தல் கூடுமென்பதை வற்புறுத்தும். இவர்கட்குச்சிறிது பின்வந்து, கொடுங்கலூரினின்றும் கேரளமாண்ட செங்குட்டுவன் சிலவாரியமன்னரைக் கங்கையம்பேர்யாற்றுக் கரையிடம் வென்றதாகத் தமிழ்க்கவிஞர் சொல்லியுள்ளார். இம்மூவேந்தரும் ஒருவரோடொருவர் முரண்பட்டவராக, சரித்திர சாதனங்களேற்பட்ட காலத்துச் சோழவரசே மேலிட்டதாகத் தெரியவருகிறது. இம்மேன்மை சோழரினின்றும், சேரருக்கு கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் சென்றது. இதுகாறும் எமக்குதவிய சாதனங்களையெல்லாங் கொண்டுற்றுநோக்கின் இக்காலத்திற்றான் தமிழும், மற்றப் பிராகிருத பாஷைகளுஞ் சிறப்புற்றோங்கிய காலமெனத் தெளிவுறப் பெறும். பிராகிருதங்களிலொன்றாகிய பைசாசிபாஷையிற்றான் ஆந்தரர்காலத்தில் பிரகத் கதை (பெருங்கதை) யெழுதப்பட்டுத் தமிழிலும் மொழிபெயர்க்கப்பட்டது.

எம்மாற் பகுக்கப்பட்ட இந்தியதேய மூன்று பாகங்களிலும் ஒருமிக்க கி. பி. மூன்றும் நூற்றாண்டின் நிகழ்ச்சிச் சாதனங்களின்மை பரிதபிக்கத்தகுந்த விஷயமேயாகும். மறுபடியும் உற்று நோக்ககிடைக்குங்காலத்தில், தெற்கே பல்லவர்களுயர்ந்தோங்கியவர்களாயும், நடுவில் சளுக்கியர்களும், வடக்கில் குப்தர்களும் தோன்றுகிறார்கள். இடையே கிடந்த இவ்வநாயகத்துவத்துக்குப் பின்வருமாறு காரணங்கூறவியலும். பார்த்தியதேயத்து ஆர்ஸக்கியராஜவம்சமழிய, பாரஸீக ஸர்ஸேனியர்கள் நிலைபெற்று, சகஸ்தானத்திய சகர்களை நெருக்கவே அவர்களகன்று சிந்துக்கரையிலும், அதற்குத் தென்பாற்பட்ட குஜராத் தேயத்திலும் குடியேறிய தம்மினத்தாருடன் கூடினார்கள். இக்குடியேற்றம் மேற்குமாகாணங்களையெல்லாம் குழம்பச்செய்திருத்தல் வேண்டும். இவ்விடமிருந்து சகர்கள் மாளவதேயத்துட் புகுந்ததுடன், தக்ஷிணத்திலும் புகுவது அரிதன்று. இதுதான் தக்ஷிணராஜ்ய முடிவுக்குக்காரணம். இம்மாதிரியாகவே சகர்கள் பஞ்சநதம் புகவே கூஷணவம்சமும் நிலைகுலைந்தது. இந்நிலைமையில் இச்சகப் பெருவெள்ளத்தைத் தடைப்படுத்த எங்கு எதிர்நோக்கவியல்போ அங்கேயேதான் குப்தர்கள் தோன்றினார்கள். தக்ஷிணத்திலும் விஜ்ஜயபுரத்தில் சளுக்கியர்கள் தோன்றியங்கிருந்து வடபாலகன்றார்கள். இக்குழப்பத்தினின்றுமே நெல்லூர் ஜில்லாப்பிராந்தியத்தில் அயற்றேயத்திய பல்லவர்களும் தோன்றியிருத்தல் கூடும்.

இத்தேயத்தில் பல்லவர்போர்முனையே குடிகளின் எதிர்ப்புக்குக் காரணமாயிருத்தல்வேண்டும். இவ்வெதிர்ப்பைத் தொடுத்தமைத்தவனே இப்பூசலினின்றும் மேன்மையடைந்து வெளிநின்றவனாவன். தென்னிந்தியாவிலுயர்ந்தோங்கிய சேரர்கள், சோழபாண்டியர்களால் ஒருகாலத்திலே தகர்க்கப்பெற்று, மூவர்களும் ஒருங்கு வலியழிந்தனர். இவ்வாறு ஒரு பேராட்சியுடைந்து அனேக சிற்றரசுகளாய் மாறுபட்டு, புதிதாய் உதித்துயர்வுபெறும் பல்லவர்க்கிரையாய்நின்றன. ஆகையினால் கி. பி. நான்காம் நூற்றாண்டுமுதல் புராதன நிகழ்ச்சிகள் விளங்கப்பெறுங்கால் தக்ஷிணத்துக்கும் இந்துஸ்தானுக்குமிடையே சகரர்கள் ஆட்படித்தாற்போல் நின்றனர். இந்நாடுகளில் க்ஷேத்திரபர் என்று பெயர்வாய்ந்த இச்சகர்கள் தக்ஷி

ன ஆந்தரர்களை யழியச்செய்து விக்கிரமாதித்தனுட்சிக்குட் கிடந்த மாளவதேசத்தையும் உஜ்ஜயினியையும் ஆக்கிரமித்து நிலைபெற்றார்கள். கிரிஸ்தாப்த முதலிங்கேயே நிலைகொண்டுநின்று, வெகுமுயற்சியால் முடிவிலாந்தரர்களை வென்று, க்ஷத்திரபவரசர்களில் மிச்சிறந்து விளங்கிய ருத்திரதாமன் ஆட்சியில் பேரரசாக நிலைபெற்றனர். இவ்வரசன் காலத்திய சாஸனங்களிலொன்று அக்காலத்திய நிகழ்ச்சிகளுக்கு அற்புத விளக்கமாய் நிலவியது. படைகள் இங்குமங்கும் போய்க்கொண்டேநின்றன; அரசவம்சங்களுயர்ந்தோங்கியும் தாழ்ந்தழிந்தும் போயின; ஆயினும் அமைதிபெற்ற வேளாண்மை, கைத்தொழில்களோ இடையூறின்றி நடைபெற்றுவந்தன. அசோகராஜன் காலத்தில் கட்டப்பட்டு, வெள்ளமேலீட்டாற் பிளவுண்ட ஏரியொன்றைப் பழுதுபார்த்துச் சீர்திருத்திய விஷயத்தைப்பற்றியதிச்சாஸனம். அயற்றேயத்தானுயினும் ருத்திரதாமன் இதன் திருத்தத்துக்கேற்பாடு செய்ததுதவிர, தேயவழக்கம்போல் நேர்மையாய் நிலைபெறுவதற்காகத் தகுந்த நிபந்தனைகளுஞ் செய்தான். இப்படியாட்சி நிருவாஹம், விவேகம்வாய்ந்து தொடர்ச்சி பெறுமற் போயிருக்குமேயாயின், ஒன்றன்மேலொன்றாய் வந்த போர்யாத்திரைகளினின்றுமித்தேயத்திற்கு விளைந்திருக்கும் கேடுகள் வெகுமடங்கதிகமாயிருந்திருத்தல் வேண்டுமென்பது திண்ணம்.

மாளவதேயத்தெதிரிடைநின்ற நாட்டிற்றான் இக்காலத்து விளங்கிய பெரிய அரசவம்சம் தோன்றியது. குப்தனென்னுமியற்பெயரோ, பட்டப்பெயரோவாய்ந்த ஆந்திரவதிராஜ்யத்துக்குட்பட்ட ஒருவன், பிரயாகைக்குக் கொஞ்சம் தென்மேற்காயுள்ள கோசாம்பியைச்சுற்றிய ஒரு சிறு நாட்டதிகாரியிருந்தனன்—போலும். இவனுமிவன் மகனும் அங்கே வதிந்திறந்தனர். இவன் பேரனைச் சந்திரகுப்தனென்பான் ஓர் அரசவம்சத்துக்கு மூலபுருஷனாய் நின்றான். இவன் வைசாலிய அரசவம்சத்துப் பெண்ணொருத்தியை மணந்து இதனால் பெற்ற பிரபாவத்தாலும் வல்லாண்மையாலும், பூர்விக மகதராஜ்யம் முழுமையுமாட்சிபெற்று நின்றான். மத்திய இந்திய க்ஷத்திரபர்களை முன்னிடவொண்ணுமற் செய்ததன்றி இச்சகர்கள் வன்மையை வேரொடுகளைந்தான். இவ்வாறு வெற்றியடையவே தன்பேர்கொண்ட சகமொன்றை நிலைபெறச்செய்து,

தன்னாட்சிக்காலமுழுமையும் மகதம் மௌரியகாலத்தியவிரிவுபெற விடாமுயற்சிசெய்து வருவோனாயினன். இதில் சித்திபெற்றவனாய்த் தன்னாட்சி நிர்வாகத்திற் றன்மகனாகிய ஸமுத்திரகுப்தனையும் சேர்த்துக்கொண்டு மகதாதிபத்யத்தை நிலைநிறுத்திப் போந்தான்.

இச்சமுத்திரகுப்தனோவெனின், வெற்றியாளனாய் விளங்கியதோடுங்கூட ஆட்சிநிர்வாகத்திலும் திறமைபெற்று நின்றோனாயினன். தவிர, தகப்பன் மகனிருவரும் சிற்பகலைகளிலும் சாமர்த்தியம் வாய்ந்தவர்கள். சமுத்திரகுப்தனை "ரூபகிருத்" என்றுவர்ணிப்பார்கள். இப்பதம் சாதாரணமாய் சில்பியென்று பொருள்பட்டபோதிலும், நாடககர்த்தனென்று வித்வான்கள் கருத்துக்கொண்டுள்ளார். தன்னாட்சி முதலிலேயே இந்தியதேயத்தையெல்லாம் ஒரு குடைக்கீழ்ப்படுத்தும் அபிப்பிராயமேயுட்கொண்டு, இதை நிறைவுபெறச் செய்யத் தன்னாலியலுமென்னும் தைரியத்தினின்று முண்டாய ஆவலோடும் முயல்வோனாயினன். தன் தகப்பன் மேற்குசமுத்திரம் வரையும் கொண்டுபோய் நிறுத்திய அதிராஜ்யத்தைத்தான் கீழ்எல்லையில் காமரூபம், தவகம், ஸமதடம் என்னு மூன்று சுவதந்திர உடம்பாடுடைய அரசுகளைநிறுத்திப், பஞ்சப்பஞ்சநதம் நீங்கிய இந்துஸ்தானமுழுமையும் ஆட்படுத்திக்கொண்டான். இது முடிவுபெறவே விஜயயாத்திரைசெய்வான் தென்புலம் புறப்பட்டான். பாடலிபுத்திரத்தினின்றும் புறப்பட்டு, கீழ்க்கடற்கரையோரம் மகாநதி பொழிதரும் நாடெல்லாங்கடந்து, பல்லவர் நிலைபெற்ற தென்காஞ்சி வரைக்குஞ் சென்று, வடமேற்காகத்திரும்பி மாராட்டியத்தையும் கான்தேசத்தையுங் கடந்து தன்ராஜ்யம்புகுந்தான். தானிவ்வாறு புகுந்து சென்றபதினொரு அரசாட்சியினின்றும் அரசக்கடமை பெற்று, அவ்வரசர்களை அவருரிமையிலேயே நிலைபெறச்செய்து போந்தான். பிறகு தன்னரசுபெற்ற மாளவ, ராஜஸ்தான, பஞ்சநத ஜனக்கூறுகளோடும் திருப்திகரமான உடம்படிக்கைகள் பெற்று, நேபாள தேயத்தையும், அமலையடிக் குழுவினரையும் இவ்வேற்பாட்டிற்கிணங்கச் செய்தான். இதுவேயன்றி, காந்தார, காபூல் குஷண அரசர்களோடும், ஆக்ஸஸ் (Oxers) நதிக்கரையிலாண்ட குஷண அதிசனோடுங்கூட சந்திபெற்றவனாயிருந்தனன். அன்றியும் தெற்கே ஈழத்திய மேகவர்ணனிடமிருந்து, கயையில் பௌத்தமடங்கட்ட உத்தர

வுபெற வந்த ராயபாரத்தையுமங்கீகரித்தனன். இவ்வளவு பேராற்றலடைந்து, தன் பெருஞ்செய்கைகளையெல்லாம், சிறந்த ஸம்ஸ்கிருத கவிகளிலமைதிபெறச்செய்து, அல்லாஹாபாத்திலமைந்து கிடந்த, அசோககம்பத்தில் வரைவித்து நிறுத்தினன். சமுத்திரகுப்தன் வீண்பெருமை எமக்கு இன்றியமையாப்பேருபகாரமாய் நின்றது. இவன்றோன்றலாய சந்திரகுப்த விக்கிரமாதித்தனும், தந்தையைப் போலவே நீண்டவாட்சிபெற்று, இருதலைமுறையாய் வந்த ஏகாதிபத்தியத்தைக் குறைவிடாமல் நிறுத்தி, பண்டிதரால் காளிதாஸன்முதலானோர்கட்கு வேளாண்மைபூண்ட விக்கிரமாதித்தியனிவனேயென்று கொள்ளவியலுமாறு சிறப்புற்று விளங்கினன். பௌத்தமதமிடர்ப்படுத்தப்பெறுவிடினும், குப்தர்கள் நிலைபெறவே, பிராமணமதமும் ஸம்ஸ்கிருதகலையும் மிகச்செழிப்புற்றோங்கி நின்றன.

ஈழுத்திய பௌத்தராய ராயபாரி, நம்பத்தகுந்தவனேயாயின், பௌத்தமதம் வெகுதாழ்ந்த நிலையில் நின்றதாகத்தோன்றும். ஆயினும் சற்றுப் பிற்பட்டு இத்தேயம்புகுந்து தக்ஷசிலையினின்றும் கங்காமுகம் வரை பிரயாணஞ்செய்த பாஹியன் (Fa Hian) என்னும் சீனயாத்திரிகன் மாறுபட்ட கொள்கையுள்ளோனவன். இவ்விஷயமான இந்தயாத்திரிகன் அபிப்பிராயங்களெல்லாம் வேறுவிஷயங்களினிடைப்பட்டுக் கிடப்பதால் விசேஷமாய் நம்பவேண்டியவாயிருக்கின்றன. இது சரியேயாயின் பௌத்தமதம் அவ்வளவு தாழ்வுற்றுக் கிடந்ததாகத் தோன்றவில்லை. குப்த ஆட்சி முழுதும் புகழத்தக்கதாகவே நின்றதாய்த்தோன்றும்; அன்றியும் உயிர்வாங்குங் குற்றங்கள் குறைவுபட்டிருந்ததால், தண்டநீதி தயைபெற்றதாயிருந்தது. தவிர, அரசாட்சியில் பிரஜைகளையிடர்ப்படுத்தும் அம்சங்கள் சிறிதுமிருந்ததாகத் தோன்றவில்லை. குடிகளோவெனில் அதிகமான சுவதந்திரத்தையும், விசேஷமான ஐசுவரியத்தையும் பெற்றுவாழ்ந்தவர்களாய் நின்றார்கள். மார்க்கங்களெல்லாம் பிரயாணிகட்குச்சிறிதுமிடுக்கணின்றிப் பாதுகாக்கப்பெற்றிருந்தனவாதலால், பௌத்தனாயிருந்த போதிலும் தன் நீண்டயாத்திரையெல்லாம் சிறிதுமிடர்ப்படாமல் பாஹியனுக்கு யாத்திரைசெய்வது சுலபமாயிருந்தது. குப்தர்கள் வைஷ்ணவர்களாயிருந்தபோதிலும், பிற இந்திய ஆட்சியாளர்

களைப்போலவே எல்லாமதத்தோர்க்கும் ஒருவாறே வள்ளன்மை பூண்டோராயினர். வேற்றுமத ஸஹனம் குணமேயாகுக, குற்றமேயாகுக. மிகவலிவாய்ந்த இந்தவரசவம்சமேோவெனின் இவ்விஷயத்தில் வெகுபொறுமைவாய்ந்து நின்றது. பாஹியன் ஸம்ஸ்கிருதம் கற்பதில் சிலவாண்டுகளுழைத்து பௌத்தர்களால் வெகுமதிப்புப்பெற்ற அனேக ஸம்ஸ்கிருதநூல்களைப் பெற்றனன்.

இச்சந்திரகுப்த விக்கிரமாதித்தியன் காலத்திற்குன் உலகவுழற்ச்சிக்குக் காரணமான ஹூணர்கள் ஒரேகாலத்தில் ரோமக ஏகாதிபத்திய எல்லைத்தேயங்கள் ஒருபாலும், குப்த சக்கிராதிபத்திய எல்லையொருபாலுமாக மேல்விழ்ந்து தாக்கினர். குமாரகுப்தன்காலத்தில் இவர்களாலாய வழிவெல்லாம் சீர்திருத்தம்பெற இவன் மகன் காந்தகுப்தனென்பான் இவர்களைப்பின்னோட்டினன். மறுபடியுமிவர்கள் மேலிடவே குமாரகுப்தன் பின்வாங்கவேண்டியதாயிற்று. தொரமாணன் என்னு அரசனோடு ஹூணர்கள் மாளவத்தில்நிலைகொண்டார்கள். இவர்கள் வழியேநின்ற சகவரசான காந்தாரமும் இவர்களாலிக்காலத்திலேயே யழிவுபெற்றது. இப்படி நிகழ்ந்த இடையூறே காரணமாய்ப் கி. பி. 770-ஆண்டில் மஹம்மதியராலழிவுண்ட வல்லபியரசவம்சம் குஜராத் பிராந்தியத்தில் சேனாபதி பட்டாரகனால் சுவாதீனமான வரசாகநிலைபெற்றது. பிரிவுபெற்றுநின்ற மாளவ ஆட்சியாளனான யசோதர்மனும், மகதத்துள்ளேயே வொடுங்கப்பட்டிருந்த பாலாதித்திய சக்கிரவர்த்தியும் ஒன்றுகூடி தொரமாணன் மகனாகிய பூதமோவென்னும் மிஹிரகுளனைத்தோல்வியடைவித்தார்கள். இம்மிஹிரகுளன் சிறைப்படவே பாலாதித்தியனுதாரத்தன்மையால் மீட்சியடைந்து, பிற்காலமெல்லாம் பழிவாய்ந்து நிற்கும் கொடுங்கோலனாய்க் கோயில்களையும பௌத்தவிஹாரங்களையுமழித்து, கொடுமையையே யொருதலையாக வளர்த்துவந்தான். ஹூணர்களடிக்கடி தாக்கவே குப்தவதிராஜ்யம் முடிவுபெற்றது. குப்தசரிதத்தை முடிக்குமுன், பெரிய அதிராஜ்யத்தை நிருமித்து, சுயேச்சைபாகவதிகாரஞ் செலுத்தியவர்களே யாயினும், ஆன்ற வறிவோடும் முதிர்ந்தவுதாரத்தோடுமாண்டுவந்த விப்பேரரசவம்சத்தின் ஜீவகாருண்யம் வாய்ந்த பெருஞ்செய்கையொன்றின் விஷயமாய்ப் பாஹ

யன்யாத்திரைக்கோசத்தினின்று மிங்கெடுத்துக்காண்பிப்பது அவர்கட்குச் செய்பவேண்டிய கடப்பாடாயிருக்கிறது. உயிர்களிடம் பெருங்கருணை பூண்ட அசோகனால் நிலைநிறுத்தப்பட்டபடியே, இவர்கள் காலத்திலும் கல்வியும் செல்வமும் வாய்ந்த பெருமக்களால் வைத்திய சாலைகள் நிருமிக்கப்பெற்று நின்றன. 'நல்கூர்வுற்று, ஆதரிப்பாரின்றி வெகுவிதமான நோய்களாலுழன்ற எல்லா ஜனங்களுமிங்கு வருகிறார்கள். இவர்கள் நன்றாயாதரவுபெற்று, வைத்தியன்பார்க்க அவர்கள் வேண்டியவாறு ஆகாரமும் ஔஷதமும் பெறுகிறார்கள். இவ்வாறு சுகமாய்த்தங்கி ஆரோக்கியமடைந்தவுடனே புறப்பட்டுப் போகச்செலவு பெறுவார்கள்." இம்மேற்கோள்விஷயமாய் வேறு சொல்லவேண்டியது அவசியமில்லை. குப்தவழிவு கி. பி. ஆறாம்நூற்றாண்டின் முடிவிலே நிகழ்ந்ததாகும்.

(இன்னும் வரும்.)

---

உ

# பெரியபுராண அரும்பதவிளக்கம்.

(முற்றொடர்ச்சி.)

[பழைய ஏட்டினின்று எடுத்தெழுதப்பட்டவை.]

(உ௦எ) திருநாவுக்கரசு நாயனாரானவர் தம்மனத்துள்ள தடுமாற்றத்தைச் சிவனுடைய திருவருளாலறிந்தருளிக் குற்றத்தை நீக்குவார்; "என்று கொலோ" மென்றுபாடி நீக்குவார் என்க.

(உ௫௫) வரன்றல் - கொழித்தல்.

(உ௬உ) தவறுகாலந்தீர்ந்து. மூலம்-முதன்மை.

(உ௬அ) திருக்கடைக்காப்பிலே மதிக்கப்படுகின்ற நீர் "இரக்கமொன்றிலீரெம் பெருமானிரே" என்றுபாடி வணங்குதலும்.

(உஎ௫) பேழ்கணித்தல் - நித்திரையின்றிக்கண்மூடல்.

(உ௮0) பிழைசெய்து காலமறியாது திறப்பித்தேனுக்கல்லது, பக்கத்தேதாம் மறைந்தால் கதவத்தைத் தொண்டானது உறைக்கப் பாடி அடைப்பித்த.

(உ௮எ) உடம்பழுக்கைப் பெருக்கியுழலும் மூதேவிகளாகிய அமணர்கள், கொடுந்தொழிலைச்செய்யும மாயையில் மிகவல்லவர், அவர்முன் எனக்குச்செய்த கொடுந்தொழிலும் பல.

(உ௮௯) போகும்படி துணிந்து நீரங்கேபோதல் கூடாது. அந்தச் சமணர்களுடைய தீயமாயை.

(௩உஉ) கடு-சிவ்லிங்கம். கருவார் பிறவிக்கு மூலகாரணமான என்று கோடலுமாம்.

(௩உ௯) சந்திரனும் ஆத்தியும் நெருங்க.

(௩௪௯) காமசாரிகள் - நினைத்துழிச்சஞ்சரிப்போர்.

(௩ரு0) கூரியசூல வேலையுடைய. ஆர் - கூர்மை. கைம்மருங்கு - சமீபம்.

(௩ருந) கதிர்கோளும் - சூரியனை மறைக்கும்.

(௩ருஉ) அங்குமுற்றி - அவ்விடத்தைத்தாண்டி. மத்தியமதேசம் - நடுநாடு.

(௩ருசு) உஷ்ணகிரணத்தையுடைய பகற்காலத்தில் அக்காட்டில் சூரியகிரணம் பக்கத்தே பரந்து எவ்விடங்களினும் மிக்கபிளப்பினால் நாகலோகத்திற் புகுந்தெரிகின்றன. பொலிந்த அக்கினியைப்போல வருத்தும் பாலையிலுள்ள கருவேல்கிழலையடைந்த பக்கமானது புகுகின்றபகற்காலத்திற் சூரியனுடைய கிரணங்கள் போலும்.

(௩ரு௮) மணிபந்து - மணிக்கட்டு.

(௩எஎ) தடங்கொண்டு - தடத்தின் வடிவுகொண்டு.

(௩எ௯) நடு இடை ஆடி - நடுவிடத்தினின்றங்குமிங்கும்போய். நடுவிடையாடி - சிவனெனினுமமையும்.

(௩௮க) சுவாமியை முன்னேகண்டுகொண்டவராய் அவர்கொடுத்த பொதிசோறுண்ண அளவிறந்த அன்புபெற்றவரும்.

(௩அஎ) நடமாளிகை - திருத்தமண்டபம்.

(௩௯௪) அன்பர் சூழும் மிக்கநெருக்கில் அவர்காணுமேவணங்கியருளி.

(௪0௫) பாண்டிமாதேவியாருடைய திருமேனியைத்தீண்ட.

(௪௧௫) அறை கூவுந்திருப்பதிகம் - சரக்கறைத் திருப்பதிகம்.

(௪௧அ) புல்லையும் கல்லையும் பொன்னையும் மணியையும் சொல்லளவில் வேறுபாடறிந்தாரன்றிப் பொருளை ஒன்றாக நினைத்த.

(௪௧௯) தானநிறைந்த சுருதிகளில் ததுந்த அலங்காரத்தன்மையையுடைய சங்கீதமாய அமுதைப் பரப்பும் கொவ்வைக்கனி போலும் வாயிலொளிபரப்பி.

(௪௨0) கற்பக விருக்ஷத்தினழகிய தளிர்போலும் கால்கள் துடக்குப் போகிய அழகிய சாரி செய்தாட, செங்காந்தள் போன்ற விரல்களினபிநயங்களோடு கைகளசைய.

(௪௨௩) உம்மால் - விளைகளே! உங்களால்.

(௪௨௬) பொருந்திய அந்தக்கரணமெல்லாம் ஒருப்பட்டுச்சுவாமியைத் தியானிக்கும உறுதிப்பாட்டால் தம்முடைய திருவடியின் கீழாகிய தமியேனை.

## குலச்சிறை நாயனார் புராணம்.

---

(௧) நிலையான கொடையினையுடையாரது மணமேற்குடி நிலையான பழைய புகழையுடைய நல்லபாண்டிநாட்டில் செந்நெல் நிறைந்த வயலிற் பொருந்திய இனிய கரும்பினயலே நிலையான கமுகுகளையுடைய மருதநாடு சூழ்ந்தது.

(௨) பெருநம்பியென்று விதந்தோதிய. திண்மைவைப்பு - திடபத்தி.

(௩) காரணம்—மோக்ஷத்திற்குக் காரணம்.

(௪) தத்த மொழுக்கங்களையுடைய அந்தணர் முதலிய நாற்குலத்தாராயினும், அக்குல நெறியில் நீங்கிய சங்கரசாதியாராயினும.

(௭) பஞ்சாக்கரத்தை வணக்கத்தோடு நாவாலுச்சரிப்பவர். சிவனுடைய பாதங்களை.

(௰) புல், நயத்து, அருகு, அந்தர்—எளிய கொள்கையுடைய அருகராகிய சமணரை.

(௧௧) திறத்திலெதைபபோற்றினேன்.

## பெருமிழலைக் குறும்பநாயனார் புராணம்.

---

(௧) மாமரங்களும், நெருங்கிய குலைகளையுடைய தெங்குகளும், பலாமரங்களும், கமுகமரங்களும் சூழ்ந்திருக்கும்படித்தாய் வீதிகடோறும் விபூதியினொளிபரம்ப விளங்குபதியானது, நீதிவழுவா ஒழுக்கத்தையுடையராய் விளங்கும்படியால் நெடிய பூமியில் மேலேவிளங்கும் பழமையையுடையதாகிய மிழலைநாட்டிலுள்ள பெருமிழலையூரும்.

(௨) எதிரேற்று—குறையிரந்து. எதிர்கொண்டு அவரதுவரவை ஏற்று என்றலுமாம். முன்னமுணர்ந்து - குறிப்பையறிந்து.

(௩) விதியால் வணங்கி - சுவாமியை விதிப்படி வணங்கி.

(௫) கடப்பாட்டினல் - அறியாத உபயபாதங்களின் கீழ்ப் பிழைக்கும் பொருட்டுச்சேர்வதற்கு மார்க்கமிதுவேயென்று அன்போடு செய்துவந்தார்.

(௬) முதல்வரது பஞ்சாக்ஷரத்தையே உரிமையும் பொருளும் [illegible]ாயப்பக் கொண்டு செபித்தார்.

(௮) திருவஞ்சைக்களத்து வீற்றிருக்குஞ் சிவபிரானை வணங்கிச் சுந்தரமூர்த்திநாயனார் தேவாரங்களைப்பாடச் சிவனுடைய திருவருளாற் கயிலையில் அச்சுந்தரமூர்த்திநாயனாருக்கெய்தவரும் பெருவாழ்வை ஞானத்திற்றெளியும்படி இவ்விடத்திருந்தே அறிந்தார்.

(௰) அந்தக்கரணங்கள் நான்குமொன்றுபட்டு, நல்ல அறிவே மேற்பட்டு ஆதாரமாயிருக்கும பிரமநாடிவழியாகக் கருத்தைப்போகவிட, கபாலநடுவிற் பொருந்தும்படி முன்செய்தயோகாப்பியாசத்தால் வேதரகசியமான பிரமரந்திரம் திறப்ப அநாதிமுதல்வரது திருவடி

களை அடைபவராகிய சுந்தரமூர்த்திநாயனாருக்குமுன்னே தாங் கயிலையையடைந்தார்.

(கக) சாயன் மகளிர் - சாயலையுடைய மகளிர்.

## காரைக்காலம்மையார் புராணம்

---

(க) வளைந்தசங்குகளை திரைசுமந்தெறிய; அதனாற் பெருகிய கழிகளையுடைய நெய்தனிலத்தில் அச்சங்குகள் உலவுகின்றவளம் பெருகும் அழகிய காரைக்கால்.

(ச) பருவத்திலேயே சிவனுடைய பாதங்களுக்கு அடிமை பழகிவருகின்ற உரிமைபெறத் தணிவில்லாதபெரிய மனக்காதலானது ததும்ப வருகின்ற மொழிகளைப்பயின்றார்.

(ரு) பாராட்டோடு வளர்கின்றவராய்ச் சிவபெருமானிடத்தே நிறைந்த அன்போடு அழகின் கொழுந்தெழுவதைப்போல வளர்வார்.

(சு) விளையாட்டாய்ப் பழகுபவைகளினெல்லாம் வளர்கின்ற சந்திரனை அணிந்த சடையையுடைய தேவநாயகரது திருவார்த்தைகளிற் பொருந்த வருவனவற்றைப் பழகி.

(எ) சாமுத்திரிகாலக்ஷண நூலுடையார் நல்லனவெனக்கூறும் அழகுநிரம்பி; மகட்பேசல் - விவாகம் பேசல்.

(கஎ) முறை—இன்றியமையாப்பொருள்.

(உஅ) ஒழுக்கம் பொருந்திய கற்புவழியால் நாயகனுடைய வார்த்தையை மறுபாமை மெய்வழியன்று எனச் சொல்லமாட்டாராய் நடுங்குவார்.

(நுக) செய்வான் போகிக்கொணர்வேனென்று கூற வணிகமாக்கள் மரக்கலஞ் செய்வித்தார்கள்.

(நுச) மரக்கலத்தைமுடித்து அதற்குவேண்டிய மாலுமிமுதலிய தொழில் செய்வாரோடு; சலந்தருகடவுள்—வருணன்.

(நுரு) கன்னிநாடு—பாண்டிநாடு. பட்டினம் - நகரம்.

(கஅ) அளவிறந்தபல பொருளை ஆக்குகின்ற உவமையில்லாத பெரியநிதிகளையெல்லாம் ஒருவழியிற் பெருகும்படிவைத்து.

(கக) மனைவியாரது உரிமையைத் தான்முழுதும் நீங்க நினைந்து அவரைத் தெய்வத்தொழுகுலமென்று கருதிச்செயற்பாலதாகிய கடனைச்செய்து அவர்பெயரைப் புதல்விக்கிட்டான்.

(ஈக) காமருசுபூணியவிழ்த்து - அழகியதிரைச்சீலையிட்டு.

(ஈஅ) இவர்மானுடரல்லர், நல்ல பெரிய தெய்வமாதலை.

(ரு0) உவனிலைத்த நினைப்பிதுவாயிருக்கின்றது. இனி இவனுககாகத் தாங்கிய அழகுபொருந்திய மாமிசக்கூட்டத்தை உதறிவிட்டு.

(ருக) நல்வழியிலறிவுமிக வேண்டினதைப் பெறுவாராயினார். அவர் சரீரத்தமைந்திருந்த அழுக்குள்ளமாமிசம் யாவையும் உதறிவிட்டு எலும்புடம்பாய்.

(ருஉ) கணங்களெல்லாங் குணலையிட்டன - பூதங்களெல்லாங் குணலைக்கூத்தாடின.

(ருக) அற்புதத்திருவந்தாதியைப்பாடி. (எங்ஙனம் பாடி) "பொற்புடைச்செய்யபாத புண்டரீகங்கள்போற்றி, நற்கணத்தினிலொன் றானேனென்று" பாடி.

(ருச) இரட்டை மாலையந்தாதி—திருவிரட்டை மணிமாலையந்தாதி. அருளானது முன்கூர்வழிப்படும் வழியால் வந்தார்.

(ருரு) கண்டோர் வியந்து பயந்து பக்கத்தை அகன்றோடுவார்கள். தமது வேடத்தன்மையை உள்ளவாறுகூற அம்மையார் கேட்டு, சிவபெருமானென்னையறிவாராயின், என்னுண்மையை அறியாத எண்டிசையிலுள்ளார்க்கு யானெவ்வுருவாயிருந்தாலென்னையென்பார்.

(ருஎ) திருக்கண்ணோக்குக்கு அவரேறுதல் காணப்பட்டது என்றுங் கூறுதலுமாம்.

(ருஅ) எம்பெருமானே ஓர் எலும்புடம்பு தலையால் நடந்திங்கேறும். அதனன்பு என்னையென்று வினவ;

(௬௧) தருமத்தையுடையவரே! இன்னும் தேவரீர் தாண்டவஞ் செய்தருளும் போது அடியேன் மகிழ்ந்து பாடித் தேவரீருடைய பாதங்களின் கீழிருத்தல் வேண்டுமென்றார்.

(௬௪) "கொங்கைதிரங்கி" என்றெடுத்து, தங்குகின்ற மூலத்தைக் காணாத சிவபெருமானை அம்மை "மூத்ததிருப்பதிகம்" பாடி.

(௬௫) "எட்டியிலவமீகை" என எடுத்து, "முழவங்கொட்டக் குழகனுடுமே" எனப்பாடினார்.

## அப்பூதியடிகணாயனார் புராணம்.

---

(௧) திருநாவுக்கரசு நாயனாருடைய பாதங்களையடைந்தவர். அவரையறிதற்கு முன்னமே அழகுதக்க ஆசைமிகக்கலந்த அன்பையுடையராயுள்ளவர்.

(௨) வீட்டிலுள்ள அளவு கருவிகளும், தராசுகளும், புதல்வர்களும், பசுவோடு எருமைகளும், ஏனையுள்ளன எல்லாவற்றிற்கும், திருநாவுக்கரசின் நாமத்தைச்சொல்லுமவ்வொழுக்கத்தையுடையவர்.

(௫) அளவிறந்த சனஞ்செல்லுதலொழியாத வழிக்கரையிலே திருவையுடையாருள்ளம் போலத் தண்ணளியையுடைத்தாய் வேனிற் காலத்திற் பொருந்திய துன்பத்தை நீக்கி, நூலறிவையுடையோர் நிறைந்த நீர்த்தடாகத்தையும் போலக் குளிர்ச்சிமிகும் பரப்பையுடைத்தாயுள்ள வளம்பொருந்திய நிழலைத்தருகின்ற தண்ணீர்ப்பந்தரை வந்தடைந்தார்.

(௬) எழுந்த நளிவந்த வாசிசர் இளந்தென்றலின் குளிர்ச்சியையுடைய பந்தரோடு அமுதம்போன்ற தண்ணீரையும் பார்த்து உளம் வியப்புறவருவார் திருநாவுக்கரசெனும் பெயரை அழகுபெற எவ்விடத்தும் வரைந்திருப்பதனைக் கண்டார்.

(௧0) புன்முடிவிருந்த தவத்தைச் செய்தேன்றீபாலுள், பொழிகின்ற கருணையைவிரும்பும் வடிவையுடையீரே தேவரீரெழுந்தருளியது என்னையென்றார்.

(கக) ஒருமலையை வில்லாகவுடையவரை.

(கஉ) நிலைகுலைந்த மனத்தையுடையராய், நல்வார்த்தையைச் சொன்னீரல்லீர்.

(கச) நம்மையாளாகவுடைய சிவனது பாதங்களின் கீழ்விரும்பிய திருத்தொண்டாலே இப்பிறப்பினும் பிழைக்கலாமென்று என் போல்வார் நற்தெளியச் செப்பத்தைச்செய்கின்ற திருநாவுக்கரசுநாயனாருடைய பெயரையானெழுத, வெம்மையான மொழியையான்கேட்கக் கூறினீரெனச்சொல்லி.

(கரு) பிறதுறையினின்றேற - சமணசமயத்தினின்றேற.

(கசு) இல்லவர் - மனைவியார்.

(உஉ) என்செய்தான் - புதல்வனென் செய்தான்.

(உக) புகழ்ச்சிபெற்ற கோமய நீரினாலே பூமியைப்பொலியும்படி தடவி ஒளிபொருந்திய வெள்ளிய சுதையால் கோலமிட்டு.

(சஉ) பெருமையுடைய திருமேனியில் விபூதியை யணிந்த சிவனை அப்பூதியடிகளுடைய அடிமையைச்சிறப்பித்து விரும்புகின்ற பாமாலையை வேய்ந்த இந்தப்பெருமையை யடைந்தமேலோர் எல்லையில்லாத அன்பால் எஞ்ஞான்றும் திருநாவுக்கரசு நாயனாருடைய பாதங்களைச்செப்புகின்ற இலாபத்தைக்கைக்கொண்டார்.

## திருநீலநக்கநாயனார் புராணம்.

---

(ங) வாய்ப்புவாய்ந்த மங்கலமறையவர் மூதற்பதியானது சாத்தமங்கையென்றுலகெலா நிகழ்வுறுந்தகைத்து.

(உ) பெண்கள் வாய்த்தகற்போடு நான்கென்றுசொல்ல அக்கற்பைவளர்ப்பார்கள்.

(கக) தன்னிலையினின்று முன்னேவழுவிட ஓர்சிலம்பிபொன் மேருச்சிலையினார் திருமேனிமேல் வீழ்ந்தது.

(கஉ) இளங்குழந்தையில் விழுஞ்சிலம்பி ஒழிந்துநீங்க ஊதி முன்னரே துமிப்பவர்போல. துமித்தல் - உமிழ்தல்.

(உரு) முன் பார்வதியாரோடு சிவபெருமானெழுந்தருளுமாறு அழுதவாறழைத்திட அழுதவரென்றது திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரை.

(௩௧) தாங்கு நூலவர் - திருநீலநக்கநாயனார். திருநீலகண்டப் பெரும்பாணர் பக்கத்தே மனைவியாருடன் சுவாமியினைதருளாற்பள்ளி கொண்டார். பாங்கு - அழகு என்பர் நுமுள்ளர்.

(௩௩) புதிய செந்தமிழிலே பழமறைப்பொருளாகிய தேவாரத்தை அருளிச்செய்த.

(௩அ) தரப்படுந்தொழிலையுடைய அந்தணர் வாழ்கின்ற சாத்தமங்கையிலே, இருபிறப்பினையுடைய அந்தணராகிய நமிநந்தி.

## நமிநந்தியடிகணாயனார் புராணம்.

---

(உ) மணிமறுகு மருங்கு - அழகியவீதியின் பக்கத்தே; மாலை பயிலுந்தோரணங்கள் பயிலும் - வரிசைபொருந்திய தோரணங்கள் பொருந்தும். மாடங்களிற் கடனீரைப்பருகும் மேகங்கள்படியும், சோலையிற் குளிர்ந்த இருள்பெருகும், அரும்புகளில் ஊறுஞ் சுரும்பு பயிலும், வேதவொலி இருகாலைகளிலும் பொருந்தும். செழித்தநீர் வளஞ்செறிந்த வயல்களில் செங்கழுநீர் பொருந்தும்.

(௯) பகற்கால நீங்குமாலை. விளக்குறுநெய் - விளக்கிற்குஉறு நெய்.

(௧0) ஒருபொருளே பொய்யும் மெய்யுமாமென்னும்- ஒருகடவுள் இல்லை உண்டு என்னும்.

(௧௯) நற்றொண்டாக - நல்லதொண்டு நிகழ.

(௨0) வென்றிவிடையாரும், சடையாருமாகிய வீதிவிடங்கப் பெருமாள் எந்நாளுந் திருவாரூரை ஆளுமியல்பின் முறைமைத்திரு விளையாடல் பொருந்திய உற்சவத்தையும், பங்குனிஉத்திரமாகியதிருநாளினுயர்ந்த திருவிழாவையும், சோழராசா விண்ணப்பஞ்செய்தபடியே செய்தருளும் நிலையைப்பெற்றார்.

(௨௨) எழுச்சி - திருவெழுச்சி உற்சவம். விண்ணவர்தங் காவலாளர் ஓலக்கம் - சிவனுடைய கொலுவை.

(௨௩) காலம் பொருந்தச்சேவைசெய்து.

திருச்சிற்றம்பலம்.

முதற்காண்டம் திருநின்ற சருக்கத்தோடு முற்றிற்று.

(தொடரும்.)

ஜி. சதாசிவப்பிள்ளை.

---

# கடவுளுக்கு ஆத்மாவைக்கொண்டு காட்டுகிற

# பத்து உதாரணங்கள்.

உலகத்துளியங்குகின்ற எண்ணிறந்த ஜீவகோடிகளுள் மக்கட் பிறப்பினர் மாத்திரமே நன்மைதீமையின்னவெனப் பகுத்தறியும் பேராற்றலுடையவராய்ச் சிறப்புற்ற ஆடூஉ மகடூஉ வென இயற்கையிருவகுப்பினராய் விளங்குகின்றனர். பெருமாண்புக்குரிய மக்கட்பிறப்பினர்களியற்கை இருவகுப்பினராயினும் சாதி மதம் என்பனபற்றி யொருவருக்கொருவர் அபிப்பிராய பேதங்களால் தனித் தனிமாறுபட்ட வொவ்வொருசாதித்தலைவர்களையும், சமயகுரவர்களையும் பற்றுக்கோடாகக்கொண்டு அவர்களின் கோட்பாட்டுக்கிணங்கவெவ்வேறு ஜாதிகளாகவும் சமயத்தவர்களாகவும் பலவகுப்பினராய்க்காணப்படுகின்றனர். பற்பல ஜாதிமதங்களைத் தழுவிநடக்கும் பலவகுப்பினருஞ் சமமதமாகப் பொதுக்கொள்கைகள் பலவற்றையுங் கைக்கொண்டொழுகுகின்றனர். அவற்றுள் தெய்வமுண்டு என்பதே எம்மதத்தோருஞ் சம்மதமாக ஏகோபித்துக் கைக்கொண்டொழுகும் பிரதமக்கொள்கை. ஒரோவிடங்களில் காணப்படுகிற ஆண்மை பெண்மைகளிற்சேராத அலிகளும், தெய்வமில்லையென்று சாதிக்கு நாஸ்திகர்களு மக்கட்பிறப்பினராயினும் (அன்ஞ்திரு கல்மஉனும்) "அருகியது இல்லாததைபோல்" என்னும் அறபுமுதுமொழிக்கிணங்க அவர்களைத் தவிர்த்துக் கடவுள் உண்டென்று நம்புமக்கள் வகுப்பினரே யீண்டு ஆராயத்தக்கவர். கடவுளைக்கண்ணாரக் காண்கின்றோரொருவரு மெக்காலத்து மெவ்விடத்துமில்லையாயினுந் தத்தம்மதி நன்மையால் யூகித்தறிந்த மூதறிஞர் பலர் அரும்பயனையிபற்றிய வழிநூல்களுக்கிணங்கத் தமது அபிப்பிராயங்களையமைத்துக் கடவுள் உண்டென விசுவசித்தும் பல மதஸ்தர்களும்—கடவுளுக்குரிய இலக்கணமுதலிய சில்வேறு கருமங்களிலொருவரையொருவர் மறுப்பாராயினும்—அநேக காரியங்களில் ஒற்றுமையுடையவராவர். அறபுபாஷையி லியற்றப்பட்ட நூல்களில் உண்மை, ஏகம், பூர்வீகம், நித்யம், தன்னிற்றானிற்றல், ஒப்பின்மை, ஜீவனோடிருத்தல், அறிவுடைத்தாதல், வல்லமையுடைத்தாதல், நாடு

தல், பார்க்குதல், கேட்குதல், பேசுதல் ஆகிய பதின்மூன்றுங் கடவுளுக்கின்றியமையா இலட்சணமெனவும், இல்லாமை, ஆணை, புதிதாயிருத்தல், அழிவு, ஒப்பு, பிறராளவில்தேவை, சாவு, மடமை, நாடாமை ஏலாமை, கேளாதிருத்தல் பார்க்காதிருத்தல், பேசாதிருத்தல் ஆகிய பதின்மூன்றுங் கடவுளுக்கறவேயில்லாத விலட்சணமெனவும், முத்தொழில் புரிதல், நேர்காட்டல், காட்டாதிருத்தன் முதலியபலவுங் கடவுளுக்கிருப்பது மில்லாதிருப்பதுஞ் சரியான விலட்சணமெனவுங் காணப்படுகின்றன. அவைகள் பெரிதும் பல மதஸ்தர்களுக்கு மேற்கற்பாலனவென்பதை யடியிற் காட்டப்படுங் கடவுள் வாழ்த்துச் செய்யுட்களே வலியுறுத்துகின்றன.

திருவுருவாயுணருருவாயறிவினொடுதெளிவிடத்துஞ்சிந்தியாத
அருவுருவாயகம்புறமுந்தன்னியலாயளவின்றியடங்காவின்பத்
தொருவுருவாயின்மையினிலுண்மைதனைத்தோற்றுவிக்குமொளியாயாவு
மருவுருவாய்வளர்காவன்முதலவனைப்பணிந்துள்ளிவாழ்த்துவாமே. ()

சிறந்தமெய்ப்பொருளையழிவிலாமணியைத்தெரிந்துமுக்காலமுமுணர்ந்து
துறந்தவரிதயாசனத்திருந்தவனைத் தொடரின்பதுன்பயற்றவனைப்
பிறந்தபல்லுயிரின்மனத்தளவுறைந்துபிறப்பிறப்பென்றிலாதவனை
மறந்தவர்சுவர்க்கப்பதியையுமறந்துமண்ணினின்மதிமறந்தவரே. ()

சீறுப்புராணம்.

முன்னுமாமுதலுமாகி முடிவிலாதனைத்திலுள்ளும்
பின்னுமாவிகற்பமற்றுப்பிரிவுமாய்ப்பிரிவிலாது
மன்னுமா நியதியாகிவழியொடுங்காவல் பூண்டு
நின்னுமாய்நின்றவுண்மைத்தன்மையைப்புகழ்தல்செய்வாம்.

புதூஹுஷ்ஷாம் புராணம்.

அங்கிங்கெனாதபடி யெங்கும்ப்ரகாசமா யானந்தபூர்த்தியாகி, அருளொடுநிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே யகிலாண்டகோடி யெல்லாந், தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த் தழைத்ததெது மனவாக்கினிற், றட்டாமனின்றதெது சமயகோடிகளெலாந்தன்றெய்வ நின்றெய்வமென், றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவுநின்றதெது எங்கணும் பெருவழக்கா, யேகினுமல்லவொருசித்தாகி யின்பமாயென்றைக்கு முள்ளதெதுவே, கங்குல் பகலறநின்ற வெல்லையுளதென்பதெது கருத்திற்கிசைந்ததுவே, கண்டனவெலாமோனவுரு வெளியதாகவே கருதியஞ்சலி செய்குவாம்.

தாயுமானவர்.

தனக்குவமையில்லாதான்றாள் சேர்ந்தார்க்கல்லால்
மனக்கவலை மாற்றலரிது. திருக்குறள்.

உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெறுத்தலு நீக்கலு நீங்கலா
அலகி லாவிளையாட்டுடையாரவர்
தலைவரன்னவர்க்கே சரணாங்களே. இராமாயணம்.

சீரியவுலகம்யாவுஞ்செய்தளித்தழிப்பதல்லா
னேரியவெதிரொப்பின்றி நீத்ததோர் கடவுடீய
வேரியகமலபர்தம் வினையறப்பணிந்துபோற்றி.
ஆரியவளன்றன்காதையறமுதல்விளக்கஞ் செய்வாம் தேம்பாவணி

மெய்ப்பொருள் பகாப்பொருள் வேத முதற்பொருள்
அப்பொருளகத்தணிந் தறைகுவல் பொருளே. தொன்னூல்

ஒப்பின்மை கடவுளுக்கின்றியமையாத விலட்சணங்களிலொன்றாயிருக்கிறபடியால் கடவுளுக்கு ஒன்றையு மொப்புச் சொல்லல் கூடாது.

மகாஞானியாகிய "இமாம் சிராசி" அவர்கள் "மனிதனைக்கடவுள், தனது உண்மைக்குமிலட்சணங்களுக்கும் செயல்களுக்குமுதாரணமாகப் படைத்தான்; கடவுளுக்கு ஒன்றையுமொப்புச் சொல்லக்கூடாதுபோனாலு முதாரணமாய்ச் சொல்லக்கூடும். மனிதனுடையவுண்மை மற்ற உயிருள்ளவுயிரில்லாத சிருஷ்டிகளிபர்வற்றிலும் வேறு விதமாக்கினான்; கடவுளின் சொந்த விலட்சணங்களாகிய ஜீவன், அறிவு, நாட்டம், சக்தி, கேள்வி, பார்வை, பேச்சு ஆகிய விலட்சணங்களையுங் கொடுத்துத் தனதுண்மைக்கு உதாரணஞ்சொல்லக்கூடிய நாயமைத்தான்" என்று சொல்லியிருக்கிறார்கள். இதற்கிணங்க அநேக மகான்கள் கடவுளுக்கு ஆத்மாவைக்கொண்டே உதாரணங்காட்டியுள்ளார்கள். ஆங்காங்குள்ள அவற்றைப்பத்துஉதாரணங்களாகத் தொகுத்து ஈண்டுத் தருகின்றேன்.

அவற்றுள் முதலாவது—நமது சரீரவியக்கம் ஆத்மாவின்றியமையாது. ஒவ்வோர் அவயவங்களையும பற்பல செய்கைகளின் பேரில் ஆத்மாவே நடத்துகிறது. ஆத்மா நமது கட்புலனுக்குக் கதுவப்படாது போனாலும் ஆத்மாவே சரீரவியக்கத்துக்குக் காரணமென்பதூஉம், அஃதில்லாவிடத்துச் சரீரஞ்சவமென மறுபெயர் புனையப்ப

டுமென்பதூஉம் நமதறிவுக்குத்தெளிவாய்ப் புலப்படுகின்றது போல் உலகவியக்கங் கடவுளின்றி யமையாது; ஒவ்வோர் அண்டங்களை யும் பற்பல கிரியைகளின்பேரில் கடவுளே நடத்துகிறான், கடவுள் நமது கட்புலனுக்குக்கதுவப்படாது போனாலும் அவனே வுலக வியக்கத்துக்குக் காரணனென்பதூஉம், அவனன்றியோரணுவுமசை யாதென்பதூஉம், நமதறிவுக்குத் தெளிவாய்ப் புலப்படுகின்றன.

இரண்டாவது - சரீரத்திலுள்ள சகல அவயவங்களையுநடத்து வது ஒரேயாத்மா வென்பதற் கணுவளவுமைய்மே யில்லாதது போல, உலகங்களையெல்லாம் நடத்துகிறவ னொரேகடவுளென்ப திற் சந்தேகமேயில்லை.

மூன்றாவது.—சரீரத்தினடக்குஞ் சகலகாரியங்களையு மாத்மா அறியாதிருத்தல் கூடாததுபோல உலகத்தினடக்குங் காரியங்கள னைத்தையுங் கடவுளறியாதிருத்தல் கூடாது.

நான்காவது.—சரீரத்தைக்கொண்டு செய்கிற சகலகிரியைகளும் ஆத்மாவினுட்டத்தைக் கொண்டே நடந்து வருகின்றனபோல் உல கத்தில் நடக்கிற செய்கைகளனைத்துங் கடவுளினுட்டத்தைக்கொண் டே நடத்தப்படுகின்றன.

ஐந்தாவது.—சரீரத்தில் எந்தவிடத்திலாத்மாத் தங்கியிருக்கிற தென்று நமக்குத் தெரியாதிருக்கிறது; அது அப்படி ஓர் இடத்திற் றங்கியிருக்கிறதும்ல்ல. அதுபோலவே, கடவு ளின்னதலத்திலிருக் கிறானென்று நமக்குத் தெரியாதிருக்கிறது. அவனப்படி யொருதலத் திற் றங்குகிறவனுமல்லன். தலமவனிலேயமைந்திருக்கிறது.

ஆறாவது.—சரீரத்திற்கு ஆத்மா சகலவஸ்துக்களிலும் சமீபித் திருக்கிறது போலவே சகலவஸ்துக்களுக்குங் கடவுண்மிகவுஞ் சமீ பித்திருக்கிறான்.

ஏழாவது.—சரீரமுண்டாகுமுன்னு மழிந்தபின்னு மாத்மா அழிவில்லாதிருக்கிறது போலவே, உலகத்தோற்றத்திற்குமுன்னு முலகமழிந்தபின்னுங் கடவுணித்தியமாயிருக்கிறான்.

எட்டாவது.—ஆத்மாவைச் சரீரத்தோடுகூடியவிடத்துங் கூ டாதவிடத்து மெந்தவஸ்துக்களுக்கு மொப்பிடக் கூடாததுபோல

உலகங்களுண்டானவழியு மில்லாதவிடத்துங் கடவுளை யெந்தப்பொருளுக்குமொப்பிடக்கூடாது.

ஒன்பதாவது — ஆத்மாவைப் பஞ்சேந்திரியங்களாலெட்டக் கூடாததுபோலவே கடவுளைப்பஞ்சேந்திரியங்களா லெட்டக்கூடாது.

பத்தாவது.—ஆத்மா சரீரத்திலிருப்பது நமதறிவுக்குப் புலப்பட்டிருந்தாலு மின்னதன்மையதென் று நிதானிக்கக்கூடாதிருப்பது போல, கடவுளிருக்கிறானென்பது நமது அறிவுக்குத் தெரிந்திருந்தாலு மின்னதன்மையனென்று நிதானிக்கவே கூடாது.

கீழக்கரை, 2—12—1908. } செ. மு செய்யிது முகம்மது.

---

உ

திருச்சிற்றம்பலம்.

## மன்மதன் வில் முதலியன.

மன்மதனது வில் கரும்புவில், பூவில, இரும்புவில் என மூன்றும்.

1. கரும்புவில்—வெண்கரும்புவில் என்பதனை அழகர்கலம்பகம் ௭௧-ஆவகவியில், "காமனார் வெள்ளைக்கருப்புவில்லே கீற்றுமதி" எனக்கூறியிருத்தலாற் காண்க.

2. அவனுக்குப்புட்ப வில்லுண்டென்பதனை நாமலிங்கானுசாஸநம் என்னும் அமரத்தில் முதற்காண்டத்தில் உ௬-வது சுலோகத்தில், "புஷ்பதந்வா" என்றதனாற்காண்க. மதுரைக்கலம்பகம் ௧௧-வதுகவியில் "அலரிநீள்சிலை குனித்து" எனக்கூறலாலும் அறியலாம்.

3. மறைசையந்தாதி ௭-ஆவது கவியில், அவன் வில்லினைக் காமகாண்டம் எனப்பெயர் கூறினர்; அக்காமகாண்டம் புட்பவில், என்பதனைக் கந்தபுராணம் காமதகனப்படலம் ௬௨-ஆவது கவியில், "கயக்கணின்றபூவின்மிக்ககாமகாண்டம்" எனக்கூறியிருத்தலாற் காண்க.

4. அவனுக்கு இருப்பு வில்லுண்டென்பதனைக் கந்தபுராணங் காமதகனப் படலம் ௨௬-ஆவதுகவியில், "இயக்கமானபாரவில்"

எனக் கூறியிருத்தலாற் காண்க. அவ்விருப்புவில் யுத்தநேரிடுங்காற் சத்துருவைச் செயிப்பதற்குக் கொள்ளும் வில் எனவுங்கொள்ளல் வேண்டும். அவன் சத்துருவைச் செயிப்பவனென்பதனைச் 'சம்பராரி' என்னும் பெயருண்மையாற்காண்க. சம்பரனென்னும் இராட்சதனைச் செயித்தவனென்பது பொருள்.

5. பூவில், கருப்புவில், இருப்புவில், இம்மூன்றிலே தேவர் மேலெய்வது பூவில், மாநுடர்மேலெய்வது கருப்புவில், இராக்கதர் மேலெய்வது இருப்புவில் எனக்கொள்க. இவற்றை, "கதியுடைத் தேவர்மேற் பூவின்மாநுடரின்மேற் கருப்புவிலிராக்கதரின்மேற் காமுறுமிருப்புவில்" என ஆசிரியநிகண்டு பூதற்பெருகுதி கூ-ஆவது கவியிற் கூறியிருத்தலாற் காண்க.

6. இனி, இன்ன இன்ன பூவை வில்லாகக்கொண்டானென்பதனைப் பின்வருங் கவியிற்காண்க.

"வாகைக்கு நாண்வெட்டிவேர் பாணஞ்சூதமொய்வண்டுகன்ன
லாகைக் கசோகமெமரைவட மாந்தளிராம் வில்கநுகித்
தோகைப்பூ மட்டைமலைவிற் கந்நூல் வடஞ்சொற்குவளை
யோகைக்குவளை விற்குப்பிச்சி நாண்முல்லை யோதினரே."

ஏகசுவி ஸ்ரீவைகுண்டம் குமாரகுருபரக் கவிராசர்வர்கள் பல கவித்திரட்டுச் சுவடியிற் காணப்பட்டது.

வாகைப்பூ வில். வெட்டிவேர் நாண். சூதப்பூ பாணம்.

கன்னல் வில். வண்டு நாண். அசோகம்பூ பாணம்.

கமுகம் பூவின் மட்டை வில். மாந்தளிர் நாண். தாமரைப்பூ பாணம்.

தாமரைப்பூவில். தாமரைநூல் நாண். நீலப்பூபாணம்.

நீலப்பூவில். பிச்சிப்பூநாண். முல்லைப்பூபாணம் எனப்பொருள் கொள்க.

இதனால், வில்லைந்து, நாணைந்து, பாணமைந்து என்க.

இவ்வில்லைந்தில் நான்கு பூவில் - ஒன்று கன்னலவில். இவ்வுரையும் அக்கவியினகீழ் எழுதப்பட்டது.

சூதம - மா, வ இரண்டும - பாணம். மரை இரண்டும் - தாமரைப்பூ. வடம் இரண்டும் - நாண்.

இங்ஙனம்,

சேற்றூர். ரா. சுப்பிரமணியக்கவிராயர்.

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-எ] கீலக௵ மார்கழி மீ [பகுதி-உ.

## மதுரைக்காஞ்சியாராய்ச்சி.

### அகத்தியனாரும், பாண்டியனும்.

மதுரைக் காஞ்சியிலே, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் - நெடுஞ்செழியன்—

"தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற்
றொன்முது கடவுட் பின்னர் மேய
வரைத்தா ழருவிப் பொருப்பிற் பொருந"

என மாங்குடிமருதனாரால் அழைக்கப்படுகின்றான். இவ்வடிகட்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர்—"இராவணனைத் தமிழ்நாட்டையாளாத படி போக்கின, கிட்டுதற்கரிய வலிமையினையுடைய, பொதியமலையிலிருக்கும் கடவுளாகிய பழமைமுதிர்ந்த அகத்தியன் பின்னே எண்ணப்பட்டுச் சான்றோனாயிருத்தற்கு மேவின ஒப்பற்றவனே!" என உரையும், "இராவணன் தென்றிசையாண்டமைபற்றித் தென்னவனென்றார்...... இராவணனைகுதல் பாயிரச்சூத்திரத்து உரையாசிரியர் கூறிய உரையானுணர்க......, இதனால், அகத்தியனுடன் தலைச்சங்கத்துப் பாண்டியனிருந்து தமிழாராய்ந்த சிறப்புக்கூறினார்" என்பன முதலிய சில விசேடங்களும் எழுதிச் சென்றனர்.

இக்கூறியவற்றுள்ளே, அகத்தியர்இராவணனைத்தமிழ்நாடாளாதபடி போக்கினர் என்பது, தொல்காப்பியப பாயிரத்திலும் "பொதியின்கணிருந்து இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்து ஆண்டுவாராமை விலக்கி" என அவ்வுரையாளரால் வற்புறுத்துக் கூறப்பட்டு

ளது. ஆயின், இங்ஙனம், அகத்தியர் இராவணனைப்பிணித்தவரலாறு வேறு நூன்மூலம் இப்போது விளங்கக்கூடவில்லை. எனினும், தஞ்சைவாணன் கோவையில், "இசைக்குருகப்படுசிலைப்பாவை பதமிவையே பண்டுபாடுகவே" (௩௪௫) எனவரும் அடிகளும், அவற்றின் விசேடவுரையிலே சொக்கப்பநாவலர், "இராவணனைப்பிணிக்கக் குறுமுனிபாடுமிசைக் குருகப்பட்ட பொதியமலை" எனவெழுதிய குறிப்பும் வருதலோடு, சோணசைலமாலை ௨௫-ஆம் பாடலில் "இனிய பைந்தமிழின் பொதியமால் வரைபோ லிசைக்குரு காதிம மலையின்-தனையயின் றிஞ்சொற் குருகுறுஞ் சோண சைலனே கைலைநாயகனே" எனச் சிவப்பிரகாசமுனிவருங் கூறுதலால், தென்றிசையை வென்றுண்டுவந்த இராவணன் பொதியத்துத் தங்கியிருக்கும் போது, அவனைப் பிணித்துத் தென்னாட்டைவிட் டகற்றவேண்டி அகத்தியமுனிவர் கந்தருவகானத்தைப்பாட அப்பாடற்குப் பொதியமுருகி அவனைச்சூழ்ந்து தன்னுள் அகப்படுத்திக்கொண்டது—என்றிதுபோன்றதொரு கதை வழங்கியதாகல் வேண்டுமென்று புலப்படுகின்றது. "இராவணனைருதல் பாயிரச்சூத்திரத்து உரையாசிரியர் கூறிய உரையானுணர்க" என நச்சினார்க்கினியர் எழுதியது எழுத்ததிகார இளம்பூரணப்பிரதிகளிற் காணப்படாமையால் அதனாலும் இக்கதை விளங்கவிடமில்லை.

இனி, "தொன்முது கடவுட் பின்னர் மேய......பொருப்பிற் பொருந" என்னுந் தொடர், தலைச்சங்கத்திலே ஆசிரியர் அகத்தியனாருடன் பாண்டியனிருந்து தமிழாராய்ந்த சிறப்புப்பற்றிக் கூறப்பட்டதென்பது நச்சினார்க்கினியர் கருத்து. இஃது இறையனார்களவியலுரை முதலியவற்றிற் கண்ட வரலாறுகளுடன் ஒத்ததாம். இங்ஙனமன்றி, இராவணனைத் தமிழ்நாட்டை விட்டகற்றிய அகத்தியர் அந்நாட்டைப்பின்பு பாண்டியனுக்கு அளித்தமையாலும் அப்பாண்டியற்குத் தமிழறிவுறுத்த ஆசிரியரானமையாலும் "தொன்முது கடவுட் பின்னர் மேய" எனப்பாண்டியன் விசேடிக்கப்பட்டானென்றலும் பொருந்தும். இவ்வரலாறுகள், சமீபத்து வெளிவந்த வேள்விகுடிச் சாஸனத்தில் "அகஸ்தியரால் பட்டாபிஷேகஞ் செய்யப்பட்ட பாண்டியவமிசம்" என்றும், "பாண்டியவமிசத்துக்கு ஆதியில் ஆசாரியஸ்தானம் வகித்தவர் அகஸ்தியர்" என்றும் காணப்படுவதாக, ஸ்ரீ

மத்-கோபிநாதராயரவர்கள் எழுதலால் தெரியலாகும். (செந்தமிழ் தொகுதி-சு; பக்-சா௯௪.) இவற்றுள், பாண்டியனுக்கு ஆசிரியர் அகத்தியனார் என்பது, இறையனார் களவியலுரை மேற்கோட்செய்யுளில் (அக) "அரைதரு மேகலை யன்னமன் னையன் றகத்தியன்வாய்-உரைதரு தீந்தமிழ் கேட்டோ னுசிதன்" எனவருதலாலும் உணரப்படும். இனி, இரகுவமிசத்தில், "ஜனஸ்தானத்தில் போருண்டாமென்று சந்தேகித்தவனும், செருக்குடையவனுமாகிய இராவணன், பிறரடைதற்கரிய பிரமசிரம் என்ற அஸ்திரத்தை ஈசனிடமிருந்து பாண்டியன் பெற்றிருப்பது தெரிந்து, அவனுடன் சந்திசெய்துகொண்டு இந்திரலோகத்தை வெல்லப்போனான்" என்று, ஸ்ரீகாளிதாஸர் இராவணன் தமிழ்நாட்டிற் பிரவேசியாதிருந்தமைக்கு வேறுவரலாறு கூறுவர்.

இனி, "தென்னவற்பெயரிய" என்னுந்தொடர்மொழிக்கு "இராவணனைத் (தமிழ்நாட்டையாளாதபடி) போக்கின" என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். இங்ஙனம் தென்னவன் - இராவணன்என அவர் எழுதியதற்கு முன்னூற் பிரமாணமுமுளது; என்னை? "தென்னவன் மலையெடுக்கச் சேயிழை நடுங்கக்கண்டு, மன்னவன் விரலாலூன்ற" என்னுந் திருநாவுக்கரசுநாயனாரது திருக்கச்சிமேற்றளிப் பதிகத்து, இராவணன் தென்னவனெனத் தெளிவாகக் கூறப்படுதலாலென்க. பிறர் இத்தொடர்க்கு "கூற்றுவனையுதைத்த கடவுள்" என்று பொருள்கூறினர். [ஆசிரியர் நச்சினார்க்கினியர், பிறரின்வேறுபடத் தாங்கூறும் உரைகளை, முன்னூற்பிரமாணமொன்றைப் பற்றியே எழுதும் வழக்கமுடையரென்பதற்கு அநேக பிரமாணங் காட்டலாம். அந்தணர் என்ற சொற்கு, "அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்—செந்தண்மை பூண்டொழுகலான்" என்பதனாலும், அதற்குப்பரிமேலழகர் கூறுமாற்றானும் "அழகியதட்பத்தினையுடையார்' என்பதே நேர்பொருளாகவும், நச்சினார்க்கினியர்'அந்தத்தை அணவுவார் அந்தணர்: என்றது, வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பார்" எனக் கலித்தொகையினும் திருமுருகாற்றுப்படையினும் வேறுரைகண்டனர். இப்பொருள் சிறிது வலிந்து கொண்டதாகப் பார்ப்பவர்க்குத் தோற்றினும், அவர்க்கு இஃது "அந்தண்மை பூண்ட அருமறையந்தத்துச் சிந்தைசெயந்தணர்" என்னுந் திருமந்திர அடிகளினின்று உதித்ததாமேயன்றித் தம்

மனோதர்மத்தா லன்றாகும். இத்திருமூலர் வாக்கினுள், அந்தணர் என்ற சொற்கு அழகிய தட்பத்தினையுடையாரென்னும் பொருளோடு,"வேதாந்தத்தை நோக்குவார்" என்றபொருளும் கூறப்படுதல் காண்க இன்னும், "வினையினீங்கி" என்னும் மரபியற்சூத்திரத்தில், இறையனார் களவியற்குரைசெய்தவரைப்பற்றி எழுதுமிடத்து "அவர் புலவுத்துறந்த நோன்புடையராகலாற் பொய்கூறாராகலானும்" எனக் கூறினர். இக்கருத்து "புலவூண் டுறந்து பொய்யா விரதத்து, அவல நீத்தறிந் தடக்கிய கொள்கை" என்னும் சிலப்பதிகாரவடிகளினின்று (பக்-உகூஉ.) உதித்ததேயாம். இன்னும், இவ்விஷயத்துக்குப்பல பிரமாணங்களுள.]

இங்ஙனம், தலைச்சங்கத்தலைவராய்ப் பாண்டியனோடு வீற்றிருந்து தமிழாராய்ந்தும், அவ்வரசற்கு நாடுங் கல்வியும் நன்களித்தும் போந்தமை பற்றியே, மாங்குடிமருதனார் என்னும் நல்லிசைப்புலவர், "தொன்முது கடவுட் பின்னர் மேய, வரைத்தா ழருவிப் பொருப்பிற் பொருந" எனப் பாண்டியனைக் கூறினாராதல் கண்டுகொள்க. சிலப்பதிகாரம், வேட்டுவவரியிறுதியில்,

"மறைமுது முதல்வன் பின்னர் மேய
பொறையுயர் பொதியிற் பொருப்பன்."

என இளங்கோவடிகளும் இங்ஙனமே பாண்டியனை விசேடித்துக்கூறினார். ஆயின், இவ்வடிகட்கு, "மறைமுதல்வன் - மாதேவன். இவன் பின்னர் - அகத்தியனாகிய கடவுள்" என அந்நூல் அரும்பதவுரையாசிரியர் பொருளெழுதியுள்ளார். [இங்கே இவர் அகத்தியனாகிய கடவுள் என்றெழுதியதன் நோக்கம், "தொன்முதுகடவுட் பின்னர்" என்ற மதுரைக்காஞ்சியடியைப்பற்றிய தாகல்வேண்டும்] நச்சினார்க்கினியர், இவ்வரும்பதவுரையாசிரியர் உரையை உட்கொண்டே, முதலிற்குறித்த மதுரைக்காஞ்சியடிகளின் விசேடவுரையில், "கூற்றுவனையுதைத்த கடவுளென் று இறைவனாக்கி, அவன்பின்னரென்றது அகத்தியனை என்று பொருள்கூறின், இறைவனுக்குத் தம்பியென்றல் சாலாமையானும், அப்பொருடருங்காலத்து—"முன்னவன் பின்னவன்" (திருச்சிற்) முன்னோன் பின்னோன் என்றல்லது அச்சொல் நில்லாமையானும், அது பொருந்தாது. "முன்னரே சாநாண் முனிதக்க

மூப்புள—பின்னரும் பீடழிக்கு நோயுள" (நாலடி) எனவும் பிறண்டும் முன்னர்பின்னரென்பன இடமுணர்த்திபே நிற்குமெனஅறிக" என்றிவ்வாறு, சிவபிரானுக்குப் பின்னவன் குறுமுனி என்னுமுரையிலுள்ள சொற்பொருட்குற்றங்களைக்கண்டு மறுத்தனர். இனி அடியார்க்குநல்லாரோ, "மறைமுது முதல்வன் பின்னர்....பொருப்பன்" என்பதற்கு—முதியமறையை உண்டாக்கிய பிரமன்பின்னோனாகிய குறுமுனி பொருந்திய...பொருப்பனாகிய பாண்டியன்—எனப் பிரமனுக்குப் பின்னோன அகத்தியன் என்றுரையிட்டார். இவ்வுரையும், பின்னரென்னுஞ் சொல்வழக்கைப்பற்றிய நச்சினார்க்கினியர் மறுப்புக்குள்ளாதல் காண்க. இவ்வாறு, நச்சினார்க்கினியரால் நன்குமறுக்கப்பட்ட கொள்கைகள் எவையோ, அவற்றையே அரும்பதவுரையாளரும் அடியார்க்குநல்லாரும் எழுதிச் செல்லுதலால், அவ்விருவரும் நச்சினார்க்கினியர்க்கு முற்பட்டவரென்பது புலப்படுகின்றது. அன்றியும், அவ்விருவரும் தம்முரைக்குக் கூறப்பட்ட குற்றங்களை அறிந்தவராயின், அவற்றுக்கு ஏற்றசமாதானங்கூறுது போகாரென்பது திண்ணமாம். அங்ஙனமொன்றும் எழுதப்படாமையுங் காண்க. மஹாமஹோபாத்யாயர்-ப்ரம்மஸ்ரீ. சாமிநாதையரவர்களும் இக்கருத்துக் கொண்டே, "நச்சினார்க்கினியரால் மறுக்கப்படுவனவற்றுட்சில இவருடைய கொள்கையாகவிருத்தல்பற்றி, இவருடைய காலம் நச்சினார்க்கினியருடைய காலத்துக்கு முந்தியிருக்கலாமென்பது பெறப்படுகின்றது." என்று சிலப்பதிகாரப்பதிப்பில் அடியார்க்குநல்லார்வரலாறு கூறுமிடத்து எழுதியிருத்தலுங் காண்க. இவற்றால், மதுரைக்காஞ்சியினுஞ் சிலப்பதிகாரத்தும், முறையே, "தொன்முது கடவுட்பின்னர் மேய......பொருநன்" "மறைமுது முதல்வன் பின்னர்மேய......பொருப்பன்" எனப் பாண்டியன் ஒன்றுபோல விசேடிக்கப்படுதற்கு—அரும்பதவுரையாசிரியர் அடியார்க்குநல்லார் கூற்றுப்படி மாதேவன், பிரமன் இவரில் ஒருவன்பின்னோன் அகத்தியன் என்பதினும், நச்சினார்க்கினியர் கூற்றுப்படி அகத்தியன் பின்னோன்பாண்டியன் என்றலே பெரிதும் பொருந்துமாறு நோக்கிக் கொள்க.

பத்திராசிரியர்.

# அறிவு விளக்கம்.

முயலுகை, தவிர்கை, உண்டி, உரை முதலிய வழக்குகளெல்லா வற்றிற்கும் கருவியாய் உயிர்ப்பொருட்கண் ஒற்றுமையுற்றிருக்குங் குணமே அறிவு எனப்படும். அறிதலுடைமையால் அறிவு என்பர். அவ்வறிவும் மெய்யறிவு என்றும், பொய்யறிவு என்றும் இருவகைப் படும். யாதாயினும் ஒரு பொருளை உணரப்புகுங்கால் அப்பொருளுக்குரிய தன்மையிலே வேறுபடாமல் உறைத்து நின்று அதனை அறியும் அறிவே மெய்யறிவாகும். அதுவும் காண்டலால் அறியும் அறிவு, கருதலாலறியும் அறிவு, உரையாலறியும் அறிவு, ஒப்பினாலறியும் அறிவு, இனமொழியாலறியும் அறிவு, ஒழிபினாலறியும் அறிவு, இன்மையினாலறியும் அறிவு, வழிவழியாலறியும் அறிவு முதலியன வாகப் பலவகைப்படும்.

காண்டலறிவு, கருதலறிவு, உரையறிவு என்னும் மூன்றும் மற்றையறிவுகளை உள்ளுறுத்தி நிற்றலாற் பொருளுணர்ச்சிக்கு அமையுமெனல் அமைவுடையதாகும். புலன்களைப் பொறிகள் நேரே தொடர்ந்தறியும்அறிவு காண்டல் அறிவாகும். குறிகளைப் பொறிகள் நேரே தொடர்ந்து அவற்றின் வழிநின்று ஆராய்ந்து மறைபொருளை அறியும் அறிவு கருதலறிவாகும். ஆராய்ச்சியின் பயன் மாசுதவிர்தல். வழக்கு, அறிவிப்பு முதலிய வலியுடைய சொற்களாலே பொருளை நினைத்தறியும் அறிவு உரையறிவாகும்.

மெய், வாய், கண், மூக்குச், செவி எனப் பொறிகள் ஐவகைப் படலாற் காண்டலறிவும் ஐவகைப்படும். அறியக்கருதல், அறிவிக்கக் கருதல், காண்டலாற் கருதல், கருத்தாற்கருதல், உரையாற்கருதல் முதலியனவாகக் கருதலறிவும் பலவகைப்படும். செஞ்சொல்லாலறிதல், ஆக்கச்சொல்லாலறிதல், குறிப்புச்சொல்லாலறிதல், தொடர்ச்சொல்லாலறிதல் முதலியனவாகச் சொல்லாலறியும் அறிவும் பலவகைப்படும். இவற்றுள்ளே காண்டலறிவு எதிரே தோன்றும் பொருள்களையும், மற்றையிரண்டும் கரந்துறை பொருள்களையும் அறிந்து கொள்ளற்குக் கருவியாகும்.

பலபொருள் பயக்குஞ் சொல்லாற பொருளுணருங்கால் சேர்வு, பிரிவு, வெறுப்பு, நட்பு, பால், இடம், காலம் முதலிய தொடர்புபற்றி அறிக. செஞ்சொல்லாவது வழக்கு முதலிய வலியால் நேரே பொருள் பயக்குஞ்சொல். ஆக்கச்சொல்லாற் பொருளுணருங்கால் வழக்கும் பயனும் நோக்கி அறிக. குறிப்புச்சொற்களாற் பொருளுணருங்காற் சொல்வலியும், பொருள்வலியும் நோக்கி அறிக. பகை, நட்பு, புணர்ச்சி முதலிய காரணம்பற்றிப் படிறர்பாலிருந்து வருஞ் சொற்களையும், ஒரு பயனும் பயவாதனவாய் மயக்கமுடையார் பாலிருந்து வருஞ்சொற்களையுங் கொள்ளற்க. அவை மெய்யறிவுபயவா. மெய்யறிவு பயப்பன வாய்மை கூறுவோர்வாய்ச்சொற்கள்.

பொறிகளும், பொறிகளின் சார்பும், குறிகளும், குறிகளின் சார்பும், உரைகளும், உரைகளின் சார்பும் கறையுறுமாயின்; அவற்றால் மெய்யறிவு ஒருகாலுங் கைகூடாது.

இனிப் பொய்யறிவாவது ஒரு பொருளை உணருங்கால் அப்பொருட்கணில்லதாந் தன்மையை உள்ளதெனக்கொண்டு வேறுபட நின்றறியும் அறிவேயாம். அதற்குக் கறைபடுதல் காரணமாகும். அப்பொய்யறிவும ஐயவறிவு, திரிவறிவு, ஆராய்ச்சியறிவு என மூன்று வகைப்படும்.

ஐயவறிவாவது பலதலையாய்த்தோன்றும் அறிவு. அது பொதுத்தன்மை, சிறப்புத்தன்மை, பகைத்தன்மை என்னும் மூன்றுங் காரணமாகத் தோன்றும். "அரவோ? கயிறோ?" என்பது அரவு, கயிறு என்னும் இரண்டின்கண்ணுமுள்ள வடிவு, வளைவு முதலிய பொதுத்தன்மை காரணமாகத்தோன்றிய ஐயவறிவு. "உலகம் அழிவில்லதோ?" என்பது உலகம் என்பதின் மாத்திரமுள்ள சிறப்புத்தன்மை காரணமாகத்தோன்றிய ஐயவறிவு. ஒரு நெறியில் இருவர் மாறுபட்டுழி "எவர் நெறி தவறற்றது?" என்பது பகைத்தன்மை காரணமாகத் தோன்றிய ஐயவறிவு.

திரிவறிவாவது ஒன்றை மற்றொன்றாக அறியும் அறிவாகும். அது வடிவத்தைப் பொதுவே அறிதலும், சிறப்புவடிவம் தோன்றாமையும், ஒருபாகம் நினைத்தலும், சமீபத்திற்றொன்றாமையும் பிறவுந்

காரணமாகத் தோன்றும். கயிற்றினை அரவெனத்துணிதற்கு இஃது அரவு என்னும் பொதுவறிவும், அரவினுடைய தலை, வால் முதலிய சிறப்புருவம் தோன்றாமையும், அரவுருவமான ஒருபாகதினைவும் பிறவுங்காரணமாயின.

ஆராய்ச்சியறிவாவது ஒன்றிலொன்றினையேற்றி உடனிகழ்ச்சியாராய்தலாலே தோன்றும் அறிவு. "பனியில்லையாயிற் குளிருமில்லை" என்பது போல்வது. அது குறைந்திருப்பதின் பிறழ்வினாற் பிறழ்தலும் கூடும். ஆதலின் அதுவும் பொய்யறிவாகும்.

இங்ஙனமே மெய், பொய் என்னும் இருவகையறிவும் அறியப்படும்.

இங்ஙனம்,

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

---

ஸ்ரீ:

கம்பநாட்டார் அருளிய

# இராமாவதாரவுரை.

(முற்றொடர்ச்சி.)

முத்தமிழ்த்துறையின்முறைபோகிய
உத்தமக்கவிகட்கொன்றுணர்த்துவென்
பித்தர்சொன்னவும்பேதையர்சொன்னவும்
பத்தர்சொன்னவும்பன்னப்பெறுபவோ.

(இ - ள்) மூன்றுதமிழின்றுறைவாய் முறையே நடந்த மிக்க மேம்பாடுடைய புலவர்கட்கு. "ஒண்டீந்தமிழின்றுறைவாய் நடந்தனையோ" என்றார்பிறரும். தரத்தின் மிக்கது தமம். அதனினுமிக்கது உத்தமம். உத்தமக்கவி - தமிழ்நூன்முடிபு. பித்தர் "எம்பிரானுக்கெழுமையும் பித்தனே" என்றவாறு, அவன் பொருட்டு மையலாதலைக்கொண்டவர். பேதையர் - "பேதையேன் பேதையேனே" என்றவாறு அவன் மாட்டு உள்ளமொடுங்குதலால், அவனையும் உலகியலையும் அறியாதவர். பத்தர் - எல்லாமவனென்றன்பு செய்வோர். இவருரைத்தன குணங்குற்றமாராயப்பெறுவனவில்லை

என்பது. யானும் சீராமமூர்த்தியின் பொருட்டு மையல் தலைக்கொண்டு உலகியலறியாமலவன்பாலன்பாற் சிலசொல்வேனென்பது கருத்து. இப்பாட்டுட் கம்பர் தம்மைச் சீராமபத்தர் என்றுய்த் துணரவைத்தனர். இனி, மையல் தலைக்கொண்டவர், அறியார், பத்தர்—இவர் சொன்னவை ஆராயத்தக்கனவல்ல எனினுமமையும். ஒன்று சிறிதுமாம்; "நாணெனவொன்றோ வறியலம்" என்புழிப்போல. (திருக்குறள் - கஉருஎ) பன்னப்பெறுபவில்லை யென்ப துணர்த்துவென் என்க. "பன்னலம் பஞ்சி" (சிந். மண். களங) என்பதுபோலப் பன்னல் - எஃகுதல்; அது, தங்கூரிய மதியின்வைத்துக் குணங்குற்றம் ஆராய்தற்காயிற்று. "பன்னிச்சொலலாமோ" (ஷைமுத்தி-உ00) என்றாற்போலப் பன்னல் ஆராய்தலுமாமெனினுமமையும். ஓ - எதிர்மறை. துறையின்முறை - துறையினையுடைய நூல் என்பாருமுளர்; மேல்முறையினூலுணர்ந்தார் என்பவாதலாலது சிறப்பின்று.

அறையுமாடரங்கும்மடப்பிள்ளைக
டறையிற்கீறிடிற்றச்சருங்காய்வரோ
விறையுஞானமிலாதவென்புன்கவி
முறையினூலுணர்ந்தாருமுனிவரோ.

(இ - ரை) இஃது, உணர்ந்தாருமுனிவரோ என்ற வினாவிற்குத் தச்சருங்காய்வரோ என எடுத்துக்காட்டுவமை முகத்தான் வினாவெதிர்பெய்து செப்புநிகழ்த்தியவாறு. இருவேறுதொடர்கள் உவமைவாசகமின்றி ஒன்றற்கொன்றுவமையாய்வரினஃது எடுத்துக்காட்டுவமை. "அகரமுதல" "நிலத்தியல்பான்," என்னுந் திருக்குறள்கள்போலவும், "காகத்திருகண்ணிற்கொன்றேமணி கலந்தாரிருவர்" என்ற திருக்கோவைப்பாடம்போலவும் வருவனவற்றுட்காண்க. வினாவே செப்பாதல் "வினாவுஞ்செப்பே வினாவெதிர்வரினே." என்னுங்கிளவியாக்கவிதியாற் கொள்க. பேரிடத்தைச் சிலசிலவிடங்களாக அறுத்தலால் அறை. மடப்பிள்ளைகள்—பேதைச்சிறார்; அவரவர் நாட்கும் பெயர்க்கும் பொருந்த அளவுகண் டறைகள் எடுத்தலும் ஆடரங்குக்கு விதித்த கோலுயரம் கோலகலம் கோனீளங்கண்டியற்றலும் அறியாத சிறுவர்கள். சிலப்பதிகாரவரங்கேற்று காதைக்கண், "எண்ணிய நூலோ ரியல்பின் வழாஅது" என்பது முதலாக அரங்கினமைதி

கூறியவடிகளான் இதனையுணர்க. தறை - வன்னிலம். தறுதல் - வலி தாயிறுகுதல். வன்கண் தறுகண், ஒருபொருட் கிளவியாதல், "செந் தொடை பிழையா வன்க ணாடவர்" என்னும் புறப்பாட்டுரையானு மறிக. தச்சரும் - சிற்பாசிரியரும். காய்வரோ முனிவரோ— எதிர்மறை வினாக்கள்: காய்பவர் தச்சராகார் என்றும், முனி பவர் முறையா னூலுணர்ந்தவராகார் என்றும் வேறுபொருளும் பயத்தல் நோக்கிக்கொள்க. இஃது அவைக்கட் டாமடங்குமாற்றான் அவையினைத் தாமடக்கி நின்றவாறு. இதுவே, அவையடக்கியற்குப் பொருளாக்கொண்டார் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் (தொல். செய்-கக௨). முறைபோகிய வுத்தமக்கவி என்றாற்போல ஈண்டும் முறையினா னூலுணர்ந்தார் என்றார். ஞானமிறையுமிலாத என்க. இறை யுங் கேள்வி என்வும் பாடம். புன்கவி - சொல்லானும் பொருளானும் தெளிவில்லாத கவி. "புன்கவியெனத்தெளிவின்றி" (நகரம்) என்பத னானறிக.

தேவ பாடையி னிக்கதை செய்தவர்
மூவ ரானவர் தம்முளு முந்திய
நாவி னாருரை யின்படி நான்றமிழ்ப்
பாவி னாலிதுணர்த்திய பண்பரோ.

(இ - ரை) தேவபாடையினிக்கதை செய்தவராகிய மூவருரை யின் படியும், அங்ஙனஞ்செய்தவரானவர்தம்முளும் முந்திய நாவி னாருரையின்படியும் நான் தமிழ்ப்பாக்களான் இக்காப்பியமுணர்த்திய பண்பு எ - று. இது நூல்வழி கூறிற்று. பொதுவாக மூவருரை யினையும் அவருட்சிறப்பாக முந்திய நாவினாருரையினையுமே வழிக் கொண்டுணர்த்திய பண்பு எ - று. இவர் வான்மீகத்தோடு வேறுபடு மிடனெல்லாம் மற்றையோருரையினை வழிக்கொள்கின்றாரென்று உணர்க. படி, பிரதியின் சிதைவு. தேவபாடை - தேவரும் வழங்கு மொழி; மக்களும் வழங்குவதேனும் சிறப்புப்பற்றிக் கூறப்பட்டது: அந்தணர் நூல் என்பதுபோல; ஆரியச்சொல், எல்லாத்தேயத்துக் கும் விண்ணுலகமுதலியவற்றுக்கும் பொது என்பர்.

(தொடரும்.)      இங்ஙனம்,
ரா. இராகவையங்கார்.

---

# தருக்க சூத்திரம்.

பொருள்குணங் கருமம் பொதுச்சிறப் பொற்றுமை
யின்மை யுடன்பொரு ளேழெனமொழிப. (க)

மண்புன லனல்கால் வெளிபொழு தாசை
யான்மா மனதோ டொன்பதும் பொருளே. (உ)

வடிவஞ் சுவையிரு நாற்ற மூறெண்
ணளவு வேற்றுமை புணர்ச்சி பிரிவு
முன்மை பின்மை திண்மை நெகிழ்ச்சி
சிக்கென லோசை யுணர்ச்சி யின்பந்
துன்பம் விருப்பம் வெறுப்பு முயற்சி
யறமறம் வாதனையொடு குணமறு நான்கே. (ங)

எழும்பல் விழுதல் வளைத னிமிர்த
னடத்த லுடனே கருமமை வகைத்தே. (ச)

பொதுமை மேல்கீ ழெனவிரு வகையே. (ரு)

மன்னிய பொருளின் கண்ணவா யவற்றின்
வேற்றுமை தெரிப்பன பலவாஞ் சிறப்பே. (சா)

ஒற்றுமை யாப்பஃ தொன்றே யென்க. (எ)

முன்னின்மை பின்னின்மை முற்று மின்மை
யொன்றிடுென் றின்மையென் றின்மை நான்கே. (அ)

மண்ணீ ரனல்கான் முறையே நாற்றந்
தட்பம் வெட்ப மூற்ற மாகி
மெய்ப்பொரு ளழிபொருண் மேவு மென்க. (கூ)

அணுக்கண் மெய்ப்பொருள் காரிய மழிபொருள்
பிருதிவி நித்திய வநித்திய வணம்பெறும்
நிலையணுப் பொருணிலை யில்லது காரியம். (கo)

அதுவே:—

உடல்பொறி விடய மூவகைப் படுமே

நம்மனோர் யாக்கை மண்கூற் றுடம்பு
நாற்றங் கவர்வது நாசியி னுணியே
மண்கல் முதலிய விடய மாகும். (கக)

நீரிறை வரைப்பிற் கட்டுநீ ருடம்பு
சுவைத்திறங் கவர்வது நாவி னுணியே
கடல்யா றாதி விடய மாகும். (கஉ)

கதிரோன் வரைப்பிற் கட்டன லுடம்பே
யுருவங் கவர்வது கருமணி விழியே
மண்விண் வயிறு காநால் விடயம். (கங)

வளியிறை வரைப்பிற் கட்டுகா லுடம்பே
யூற்றங் கவர்வது மீந்தோ லெங்க
விடய மாமுத லசைதற் கேதுவே
பிராண னுடலகத் தியங்குங் காற்றே. (கச)

விசும்பே காலந் திசையோ டான்மா
மனமிவை யைந்து நித்தியப் பொருளே. (கரு)

ஓசைப் பண்பிற் றாகா யம்மே. (கசு)

இறப்புமுதல் வழக்கிற் கேதுக் காலம். (கஎ)

கிழக்குமுதல் வழக்கிற் கேதுத் திசையே. (கஅ)

அறிவுப் பண்பிற் றான்மா வெங்க
விறையே யீசன்முற் றறிவனோர் முதலே
யுயிர்தா னுடலொறு வெவ்வே றாகும். (ககூ)

மனமணு வடிவாய் வருமின் பாதி
யறிதற் கின்றி யமையாக் கருவி
யாகிப் பலவா யழிவின் றாறுமே. (உ0)

குறிப்பு:—இச்சூத்திரங்கள் அகத்தியரியற்றின என்பர். இவ்வளவே இப்போதகப்படுவன. இவை, சில பழைய அச்சுப்பிரதிகளில் அருகிக்காணப்படுவனவாதலின், செந்தமிழபிமானிகளின் பொருட்டுப் பதிப்பிக்கலாயிற்று—ப—ர்.

௨

# அறிவின் உபயோகம்.

நமக்குக்கிடைத்த சக்திகளை நாம் எப்படி உபயோகிக்கிறோமோ, அதற்குத்தக்கபடியே நமக்குக் கௌரவமுண்டாகும். தனக்குக்கிடைத்த புத்திசாமர்த்தியம் ஒன்றாயினும் அதை ஒருவன் சரியாகப் பிரயோகிப்பானானால், பலவிதமான புத்திசாமர்த்தியமுள்ளவனைப்பார்க்க அதிகமாய்ப் பெருமைபெறுவதற் குரியவனாவான். திரண்ட ஸ்திதி ஒருவனுக்குப் பிதிரார்ச்சிதமாய்க் கிடைத்தால் அதில் எப்படி ஒரு மேன்மையுமில்லையோ அப்படியே சிறந்த புத்திசாமர்த்தியங்கள் இயற்கையாய் அமைந்திருப்பதிலும் ஒரு மேன்மையுமில்லை. அந்தப் புத்திசாமர்த்தியங்களை எப்படி உபயோகிக்கிறோமோ அந்தப் பூஸ்திதியை எவ்விதமாய்ப் பண்படுத்துகிறோமோ அதைக்கொண்டுதான் அவற்றின் மேன்மையை அறியவேண்டும். ஓர் உபயோகமுமின்றிக் கல்விப்பொருட் பெருஞ்செல்வத்தை மனது விசேஷமாய்த் தேடிவைத்துக் கொண்டிருக்கலாம். அவ்வறிவு, நன்மைக்கும் விவேகத்திற்கும் துணையாகி நல்லொழுக்கத்திற் புகாதிருக்குமாயின், இருந்தும் இல்லாததுபோலவே. அறிவானது இவ்வுலகில் வழங்கும் அற்பமான அக்கிரமங்களுக்கு உடன்படவொட்டாமல் ஒருவனை விலக்கிக்காக்குமென்றாலும், உண்மையான நீதியொழுக்கமுதலியவைகளால் பத்திரமாய்க் காக்கப்பட்டாலன்றி சுவப்பிரயோஜனமான துர்மார்க்கங்களினின்றும் விலக்கிக் காக்கமாட்டாது. ஆனதுபற்றியே கல்வியில் நன்றாய்த்தெளிந்தும் ஒழுக்கத்தில் மிகவும் குறைவுள்ளவர்களாயும், பாடசாலைப்படிப்புப் பூரணமாயிருந்தும் வியவகாரஞானம் சிறிதுமில்லாதவர்களாயும், நாம் பார்த்தனுசரிக்கத்தக்க நல்லொழுக்கமுள்ளவர்களாயிருக்கவேண்டுவது போக நாம் கண்டஞ்சி ஜாக்கிரதையாயிருக்கவேண்டிய தப்பொழுக்கமுள்ளவர்களாயும் அங்கங்கே அநேகரைக் காண்கிறோம். "புத்திமான் பலவான்" என்று அடிக்கடி பழமொழி வழங்குகிறதென்றாலும், அந்தப்புத்தியை நல்வழியிற்கொண்டு திருப்பாவிட்டால் அது சிறிதும் பலமாகமாட்டாது. மேலும் தீயோர்

களைப்பினும் கொடியவர்களாக்கி உலகத்திற்கே அபாயம் விளைப்பதாகும்.

இக்காலத்திலிருக்கும் கல்விப்பயிற்சியின் மேம்பாட்டை நாம் மிகவும் பெருமைப்படுத்திப் பேசும்படியாயிருக்கும்; புஸ்தகசாலைகளும், தர்மசாஸ்திரங்களும், விநோதப்பொருட்காட்சிச் சாலைகளும் அநேகமிருப்பதனால் அவற்றைக்கண்டு நமது கல்விப்பயிற்சி விசேஷமாய்ப் பெருகுகிறதென்று எண்ணும்படியாகவுமிருக்கும். ஆயினும் இவ்வகையான சாதனங்கள் அவனவன் உயர்ந்த கல்வித்துறைகளில் தன்னைத்தான் பண்படுத்திக்கொள்வதற்குத் துணையாயிருப்பதுபோலவே பெரும்பாலும் அதற்கு இடையூறாகவும் கூடும். பொருளுள்ளவர்களெல்லாம் எப்படிப் பெருங்கொடையுள்ளவர்களாவதில்லையோ, அப்படியே விசேஷமாகப் புத்தகங்களைக் கையாள்பவர்களும் வித்வான்களாகமாட்டார்கள். நம்மிடத்தில் விசேஷ சுகசாதனங்களுள வென்றாலும், ஊன்றிப்பார்த்தல், அவதானம், விடாமுயற்சி, உழைப்பு இவையாகிய பழைய வழியைப்பிடித்துச் சென்றாலல்லது அறிவும் விவேகமும் ஒருபோதும் நமக்குச் சுவாதீனமாகமாட்டா. கல்விக்கு வேண்டிய கருவிகளைமட்டும் கையாள்வது வேறு; படிப்பிலும் உயர்ந்த சிக்ஷையால் அடையத்தக்க அறிவும் விவேகமும் வேறு. படிப்பாவது, பெரும்பாலும் பிறருடைய கருத்துக்களைக் கேட்டுத் தெரிந்துகொள்வதேயொழிய வேறல்ல. ஏனெனில், ஒன்றைப்படிக்கும்போது படிப்பவன் புத்தி புதிதாய் ஒருவேலையும் செய்வதில்லை. ஆதலால் நமது படிப்பு, சிறிதளவேனும் மனதைத் திருத்தித் தெளிவிக்காமலும், ஒழுக்கத்தை உறுதி செய்யாமலும், கணப்பொழுது இதமான உள்ளக்கிளர்ச்சி தரும் ஒருவிதமான மதுபானஞ்செய்வது போலாகின்றது. இவ்வாறே அநேகர், வீணாய்ப் பொழுதுபோகும் எளியவேலை செய்துவருங் காலத்தில், தங்கள் மனதைப் பண்படுத்துகிறோமென்று சொல்லிப் பாசாங்குசெய்து திரிகிறார்கள். ஆயின் அதினும் இழிதொழில் செய்யப்புகாமல் அந்தமட்டிலாவது அவர்களைக் காக்கிறதேயென்று அப்பொழுதுபோக்கும் வேலையைப்பார்த்தும் நாம் சந்தோஷிக்க வேண்டுவதுதான்.

மேலும் புத்தகங்களைப் படித்துவரும் அறிவு வெகுவாய் விலை பெற்றதாயிருந்தாலும் புத்தகப்படிப்பாகவே முடிகிறது. அனுபவத்தால் வரும் அறிவோ விவேகமாகமுடிகிறது. ஏட்டுக்கல்வி அளவற்றிருப்பதும் சரி, அனுபவம் சிறிதளவிருப்பதும் சரி. ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாதல்லவா?

நல்லநூல்களை வாசிப்பது நமக்குப் பயன்பட்டு ஞானத்தை விருத்திபண்ணுமாயினும், மனதைப் பண்படுத்தும் விஷயத்தில் பத்தோடு பதினொராவதாயிருக்கிறதேயன்றி மற்றப்படியல்ல. நல்லொழுக்கமுண்டாக்கும் விஷயத்திலோ நல்ல அனுபவமும் உதாரணமும் உதவுவதுபோல அவ்வளவு ஒருபோதும் உதவுவதில்லை. ஆதலால் முக்கியமாய்க் கல்வி கற்பதின்நோக்கம், பிறருடைய கருத்துக்களைக்கொண்டு நம்மனத்தை நிறைத்து, நமது முயற்சி சிறிதுமின்றி அவர்களுடைய கல்வியறிவைக் கற்றுக்கொள்வதன்று; நமது புத்தியையும் நன்றாய் விகாசப்படுத்தி, ஜீவகாலத்தில் நாம் செய்யும்படி நேரிடுகிற பலவித வேலைகளையும் செம்மையாய்ச்செய்து உலகத்திற்கு உபகாரிகளாக்கிக் கொள்ளவேண்டுமென்பதே. மிக்க ஊக்கமும் உற்சாகமுமாயுழைத்து உலகத்திற்கு உபகாரிகளான பலரும் வெகுவாய்ப் படிப்பில் தேர்ச்சிபெறாதவர்களே. பிரிண்டிலி, ஸ்டீவின்ஸன் இவர்களுக்கு நல்ல வயதுவந்து பெரியோர்களாகிற வரையில் எழுதப்படிக்கக்கூடத் தெரியாது. ஆயினும் சிறந்த செயல்களைச்செய்து இருவரும் இருபதுபேருக்குச் சமானமாய்க் காலங்கழித்தார்கள். ஜான்ஹண்டர் என்பவருக்கு இருபதுவயதுவரையில் எழுதப்படிக்கத் தெரியாதென்றாலும் தச்சுவேலை பயின்ற எவனுக்கும் இளைக்காமல் மேஜை நாற்காலிகள் மட்டும் செய்ய வல்லவராயிருந்தார்.

ஆதலால், அறிவுவேண்டுவது அவசியமென்றாலும், ஒருவன் விசேஷமாயறிவதே முக்கியமன்று; அவ்வறிவின் நோக்கமும் பிரயோஜனமுமே முக்கியமாம். விவேகத்தை விருத்திபண்ணி, ஒழுக்கத்தைச் சீர்படுத்தி, நம்மை முன்னிலும் மிக்க யோக்கியர்களாயும், சௌக்கியமுள்ளவர்களாயும், பிறர்க்கு உபயோகமானவர்களாயும், ஈவிரக்கமுள்ளவர்களாயும், விசேஷ சாமர்த்தியமும் உலகத்தில் எவ்

வகைச்சிறந்த காரியத்தையும் விடாமுயற்சியாய்ச் செய்து முடிக்க வேண்டுமென்கிற ஊக்கமுள்ளவர்களாயும் ஆக்குவதே அறிவின் நோக்கமாயிருக்கவேண்டும். நீதிநெறியைக் கவனியாமல் இவ்விதமான புத்தி வைபவத்தைமாத்திரம் வியந்து விருத்திசெய்யும் வழக்கத்தை ஒருதரம் கையாளப்புகுந்தால், அவர்கள் இழிவென்னப்படும் அனைத்திற்கும் செல்லும் பெரும்பாதையில் அடிவைத்தவர்களென்றே சொல்லவேண்டும். பிறரிருந்த ஸ்திதியையும் செய்த செயல்களையுங்குறித்து எழுதிவைத்திருப்பவைகளைப் படித்துச் சிந்தனைசெய்வது மாத்திரமே போதுமென்று திருப்தியடைந்திருக்கக்கூடாது. நாமும் அவ்விதமான ஸ்திதிக்குவந்து அவ்வகைச்செயல்களைச் செய்ய முயலவேண்டும். நமது உயர்ந்த அறிவு ஒழுக்கத்திலும், உயர்ந்த யுக்தி ஆலோசனைகளெல்லாம் காரியத்திலும் உபயோகமாகவேண்டும். நான் என்னால் சாதிக்கக்கூடிய மட்டும் சாதித்தேன்; இதற்கு மிஞ்ச எவர்க்கும் அவசியமில்லை என ரிக்டர் சொன்னவளவாவது நாமும் சொல்லத் திறமையுள்ளவர்களாக வேண்டும். தமக்கு இயற்கையாயமைந்த சக்தி சாமர்த்தியங்களுக்குத் தகுந்தபடி தெய்வசகாயத்தைக்கொண்டு தன்னைத்தானே நன்றாய்ப் பண்படுத்தி நல்வழிப்படுத்துவது எவர்க்கும் கடமை.

தன்னைத்தானே சிக்ஷித்துக்கொள்வதும் தன்னைத்தானே அடக்கி ஆள்வதுமே அப்பியாசஞானம் உண்டாவதற்குக் காரணமாம். இவற்றிற்கெல்லாம் மூலாதாரம் தன்மானமென்பது; அதாவது, தன் பெருமையைத் தானறிந்திருப்பதாம். ஒருவனுக்குக் கோரிக்கையென்பது இதனின்றுமுண்டாகின்றது. கோரிக்கையானது அதிகாரத்துக்குத் தோழனும் காரியசித்திக்குத் தாயுமாம். அப்படிச்சிறந்த கோரிக்கையுள்ளவனிடத்தில் அற்புதமான வரப்பிரசாதமிருக்கிறதென்றே சொல்லவேண்டும். அவரவர் தம் இயற்கையான தீக்குணங்களை விலக்குவதுமாத்திரமேயன்றி நற்குணங்களை விருத்திபண்ணவும் வேண்டும். தன்மானம்போலப் பிறர்மானத்தையும் பாராட்டவேண்டும். பிறரும் அப்படியே நம்முடைய கௌரவத்தைப்பாராட்டுவது கடன்.

தன்மானமென்பது ஒருவன் தரித்துக்கொள்ளத்தக்க உயர்ந்த வஸ்திரமும், தன்னை விசேஷமாய்ப் பெருமைப்படுத்திக் கொள்ளும்

படியான ஈசுவரயத்தினமாய் இருதயத்தில் உதிக்கத்தக்க உயர்ந்த அபிப்பிராயமுமாம். தன்னைத்தானே இழிவாய் நினைப்பது, பிறர் மதிப்பில்மாத்திரமேயன்றித் தன் மதிப்பிலும் தாழ்ந்து போவதாம். சிந்தனையெப்படியோ அப்படித்தான் செய்கையும். இழிவானவைகளையே எண்ணிக்கொண்டிருப்பவன் ஒருபோதும் உயர்பதம் பெற மாட்டான். உயர்ந்தபதம் பெறவேண்டுமானால் உள்ளக்கருத்துகளும் உயர்ந்தேயிருக்கவேண்டும். எளியார்க்கெளியனும் இதை முறைமையாய் நினைந்து அனுசரித்து வருவானானால், தடையின்றி உயர்ந்தெழுவான். தன்மானமாத்திரம் ஒருவனுக்கு இருக்குமானால், தரித்திரஸ்திதியும் மேன்மைபெற்றுச் சிறப்பாய் விளங்கும். ஏழையொருவன், துராசைகள் பல சூழ்ந்துகொள்ளும்பொழுதும் நெறிவிலகாது நேராய்நின்று இழிந்த செயல்செய்ய உடன்படாதிருப்பானாயின் அதைவிட அற்புதக்காட்சி வேறென்ன?

உலகத்தில் தான் விருத்தியடையவேண்டுவதற்கு மாத்திரம் முக்கியசாதனமாய் எண்ணி ஒருவன் தற்பயிற்சி செய்வானாயின், அவ்வெண்ணமே அப்பயிற்சியை இழிவுபடுத்துவதாம். இந்த நோக்காய்ப் பார்க்குமிடத்தில், காலம் உழைப்பு என்னும் மூலதனத்தை வித்தியாப்பியாசத்திற்காக வைப்பது ஓர் உத்தம உபாயமென்பதற்கு ஐயமில்லை. அறிவுதெளிந்தவன் எந்த ஜீவனோபாய மார்க்கத்திலும் காலதேச வர்த்தமானங்களுக்கு ஏற்றபடி அறிந்து நடக்கவல்லவனாவான். திருத்தமாய்த் தொழில்செய்யும் விதம் எதுவும் அவன் புத்தியில் தோன்றும். எல்லாவிஷயத்திலும் அவன் விசேஷ சாமர்த்தியமும், கருமமுடிக்கும் திறமையும் உடையவனாவான். சரீரமும் மனமும் ஒத்து உழைப்பவன் தன் வேலைகளைத் தெளிவாய்ப் பார்க்கவல்லவனாவான். அவனுடைய சாமர்த்தியம் விருத்தியாவது அப்போது அவனுக்கே நன்றாய்த்தெரியும். இதுவே மனிதர் மனதிற்பிறக்கும் அறிவுகளெல்லாவற்றுள்ளும் மிகுந்த உல்லாசந்தரும் அறிவுபோலும். தன் முயற்சியின்வலிமை வரவர விருத்தியாகும். ஒருவனுக்குத் தன்மானம் இருக்குமளவிற்கேற்றபடி அற்பவிஷயங்களிலுள்ள துராசைகளை விலக்க அவனுக்குத் திறமையுண்டாகும்.

ஆயினும் மேலெடுத்துக்கூறிய பல திருஷ்டாந்தங்களில் விளங்கியபடி தற்பயிற்சியால் மேன்மை கிடைக்காமலேயிருந்தாலும் இருக்கும். மனிதரிற் பெரும்பாலார் எவ்வளவு சிறப்பும் நாகரீகமும் பெற்றிருந்தாலும், ஜீவனோபாயத்திற்கு வேண்டிய சாமானிய த்தொழில்முயற்சிசெய்துவராமல் தீராது. ஓர் ஊரார்க்காக ஒரு தேசத்தார்க்காக; மனம் எவ்வளவு பண்பட்டிருப்பினும் அவர்கள் தவறாமல் செய்யவேண்டிய தினவேலையை ஒழித்திருக்க அவர்களாலாகாது ஆனால் ஒன்று. உயர்ந்தோர் இழிந்தோர் ஆகியயாவரும் சிறப்பித்து வியக்கத்தக்க உயர்ந்த அபிப்பிராயங்களுக்கேற்றபடி அந்த உழைப்பின் தரத்தையும் உயர்த்தலாம். எப்படியெனில், முற்காலத்திலும் தற்காலத்திலும் நூதனதத்துவங்களை நுணுககினைந்தறியவல்ல பண்டிதர், ஒருவன் எத்தனைவறிஞனும் தணிந்தவனுமாயிருப்பினும், அவன் ஒதுங்கும் குடிசை எத்தனை அலங்கோலமாயிருப்பினும், அவனை வீடுதேடிப்போய்க் கண்டு அவனுடன் உட்கார்ந்து அவ்வேலைக்குத் தோழமைகொண்டாடினாலும் கொண்டாடுவார். இவ்வாறே நலந்தெரிந்து நல்ல கிரந்தங்களை வாசிப்பதனால் உண்டாகும் கல்விப்பயிற்சியானது மிகுந்த மனவெழுச்சிக்கும் தன்னறிவு தன்முயற்சி இவைகளால் திருந்தி விருத்தியடைவதற்கும் ஏதுவாகி நற்குணம் நன்னடக்கை இவைகளை மெத்தனவே நன்றாய்ப் பழக்குவித்து எப்போதும் நற்பயனை விளைவிக்கும். வித்தையில் தம்மைத்தாம் பண்படுத்துவோர்க்குச் செல்வப்பொருள் சேராதிருப்பினும், உயர்ந்த அபிப்பிராயங்களோடு தோழமையுண்டாம்.

ஜனவிநோதினி.

---

# ஷோடச நியாய நிரூபணம்.

## க. காகதந்த பரீக்ஷை நியாயம்.

காக்கையின் பற்களைப் பரிசோதித்தலென்பது இதன் பொருள். ஒரு விஷயம் உபயோகமற்ற தென்பதைத் தெளிவாகக்காட்டும் போது இது வழங்கப்படுகின்றது. (கடோபனிஷத்பாஷ்யத்தில் ஸ்ரீசங்கராசாரியர் கூறியது.)

## உ. காகநிஷ்கதாச நியாயம்.

ஒரு சோகியை ஒருவராகனுக நினைத்துத் தாசனுய் விடுவது. (சங்கற்ப சூரியோதய நாடகம். 5-ம் அங்கத்தில் ஸ்ரீவேங்கட நாதா சாரியர் கூறியது.)

## ௩. கூபமண்டூக நியாயம்.

அஃதாவது கிணற்றுத்தவளை நியாயம். தமிழர் "கிணற்றுத்தவளைக்கு நாட்டுவளப்பமேன்" என்பர். உலகவிஷய மொன்றுமறியாத மூடனைச்சுட்டி நிற்கின்றது. (பிரஸன்னராகவ நாடகத்திற்காண்க.)

## ௪. கைமுதிக நியாயம்.

கிமுதா என்பது கைமுதிகமாயிற்று. (கிமுதா-கேட்பானேன்) பூனைக்கஞ்சும்போது புலிக்கஞ்சுதலைப்பற்றிக் கேட்பானேன் என்பது. (சங்கற்ப சூரியோதய நாடகம் முதலங்கம்.)

## ௫. பகவ்ருத்தி நியாயம்.

(பகம் - கொக்கு) கொக்கைப்போல் ஒன்றுமறியாதவன் போலிருந்து சமயம் பார்த்து மோசம் செய்தல் (விஷ்ணுபுராணம். மூன்றாம் அம்சம்). இஃது, ஒருகெட்ட சிஷ்யன் தன்மையை உணர்த்துதல் காண்க.

## ௬. பிடாலவிருத நியாயம்.

(பிடாலம் - பூனை) எதிரில் பிரியமாய்ப்பேசுவதும் மறைவில் தீங்குசெய்தலையு முணர்த்துகின்றது; இதுவும் தீயமாணுக்கன் தன்மையைச் சுட்டுகின்றது. (விண்டுபுராணம் மூன்றாம் அம்சம்.)

## ௭. மர்க்கடகிசோர நியாயம்.

(மர்க்கடம்=குரங்கு) (கிசோரம்=குட்டி) குரங்கு தன்னை இறுகக்கட்டிக்கொண்ட தன் குட்டியைக்காப்பாற்றுதல் என்பது. பகவான் காரணமொன்றையும் நாடாமலே அடியார்களைக் காப்பதுண்மையாயினும் அவன் கட்டளையாயும் அவன் ஸம்மதிகொண்டவாயுமுள்ள கருமங்களை அவனடியார் செய்தல் வேண்டுமென்பதைச்சுட்டி வைணவர் கூறுவது. (ஸ்ரீவேங்கடநாதாசாரியரின் பரமபதசோபானம்.)

## அ. மார்ஜாரகிசோர நியாயம்.

(மார்ஜாரம் - பூனை) யாதோர் ஏதுவுமின்றிப்பூனை தன் குட்டியைத்தானே சென்று பிடரியைக்கவ்வி எடுத்துக் காப்பாற்றுதல் போல் பகவான் தானாகவே காரணங்கருதாது சென்று காப்பரென்பது. (பரமபதசோபானம் விவேக பருவம்.)

## கூ. பிக்ஷுபாதப்ரஸரண நியாயம்.

கால்வைக்க ஓர் ஸன்னியாசி இடங்கேட்டுப் பிறகு கிரகமுழுவதையும் அபகரித்துக்கொண்டது. (சங்கற்பசூரியோதய நாடகம், மூன்றும் அங்கம்.)

## க0. சந்திரசந்திரிகா நியாயம்.

சந்திரனும் அவனொளியும் பிரியாது ஒன்றுசேர்ந்திருத்தல். (சங்கரவிஜயம - ஆநந்திகிரி செய்தது.)

## கக. மண்டூகப்லுதி நியாயம்.

இதனைத் தமிழ்நன்னூலில் பவணந்திமுனிவர் தவளைப்பாய்த்தென்றனர். சூத்திரங்களொன்றோடொன்று தொடர்ந்து நிற்கும் நான்கு நிலைகளிலிஃது ஒன்று. தவளை பாய்வதுபோல் ஒருசூத்திரம் இடையில் சிலசூத்திரஙகளை விட்டு விட்டு வேறொன்றைநாடிக்குதித்தல்.

## கஉ. மத்யதீபிகா நியாயம்.

நடுவில் நின்றொளிரும் தீபம் இரண்டுபக்கங்களிலுமொளியை வீசுதல். (இராமதீர்த்தர் செய்த வேதாந்தஸாரம்.)

## மத்திய மணிநியாயம்.

என்பது மிதுவே. மாதர்கள் மூக்கிலணியும் நத்தென்னுமணியிலுள்ள ஓர்செம்மணி அதனிருபக்கத்திலுமிருக்கும்முத்துக்களின் மேல் ஒளியைவீசுதல்.

## கங. விஷக்கிரிமி நியாயம்.

விஷங் கொல்லுந்தன்மையுடையதாயினும் அதிற் புழு உண்டாகிச் சாகாதிருப்பதுண்டென்பது. அஃதாவது ஒருவருக்கு விஷம் போன்றது மற்றொருவருக் கமுதுபோற் சுகமளிக்குமென்பதாம்.

கச. சுபகாபிக்ஷுக நியாயம்.

மருமகள் ஒருபிக்ஷுகனுக்குப் பிக்ஷையில்லையென்று கூறவே அவள்மாமி பிக்ஷுகனை யழைத்து, இல்லத்தில் நின்று பிக்ஷையில் லையென்று கூற அவளுக்கென்ன அதிகாரம்? அந்த அதிகாரம் என் னுடையதாம்; ஆதலின் நீர் போகலாமென்று கூறியனுப்பினளென் பது (சங்கற்ப சூரியோதய நாடகம். 2. ம் அங்கம்)

கரு. ஸ்தாலீபுலாக நியாயம்.

ஒருபானைச்சோற்றிற்கு ஓர் அவிழைப் பதம்பார்ப்பதுபோல் வது. பலதுறையிலுந் தேர்ந்தாரொருவரை அவரது ஒருதுறையிற் கண்ட தெள்ளியநியாயங்கொண்டே மற்றைய துறைகளிலுந் தேர்ந் துளாரெனக் கொள்வது போல்வது; (முன்சொன்ன 2, ம் அங்கம் நாடகம்.)

கசா. ஹாலிகஜம்புக நியாயம்.

ஒருவன்கொல்லை உழுதுகொண்டிருக்கையில் அங்கே ஒரு நரி வரக்கண்டு அந்நரியைப்பின்தொடர்ந்து செல்வதுபோல்வது. கைக் கொண்டதொன்றை நீத்து நடுவில்நேர்ந்ததை நாடுதல் பிழையுள தென்பதை இஃது உணர்த்துகின்றது.

(இன்னும் தொடரும்)

இங்ஙனம்,

தி. வேங்கடராம ஐயங்கார்,
தமிழ்ப்பண்டிதர்.

---

# நுண்பொருண்மாலை.

## கக-ம் அதி. புறங்கூறாமை.

கஅச.. கண்ணின்றுகண்.........பின்னோக்காச்சொல்

ந - லை:—கண் - கண்ணோட்டம். பின்வருங் குற்றமென்றதால் பின் ஆகுபெயர். நோக்காதசொல் - அக்குற்றம் பரிகரிக்கக் கருதாத சொல். முன்னிற்றலும் சொல்வான்தொழில் சொன்மேலேற்றப் பட்டது.

கஅஎ. பகச்சொல்லிக்.........தேற்றாதவர்

நு - லை:—பிரிப்பர் - பிரியப்பண்ணுவர்; "அறிவகற்றும்" (திருக்-௩எ௨.) என்பதும் அது. "தேற்றாதவர்"—அறியாதவர் எனத்தன் வினையானது. "தேற்றாதலார்க்குமரிது" (ஷை ௬௯௩) என்றதுபோல நில்லாமையானுமறிக.

## ௨0-ம் அதி - பயனிலசொல்லாமை.

கக௯க. பல்லோர்முனியப்.........மெள்ளப்படும்.

நு - லை:—எல்லாருமென்றது மூன்றன் விகாரம். இஃது "என்புமுரியரோடு" (எ௨) ஒக்கும்.

கக௯௪. நயன்சாரா.........பல்லாரகத்து.

நு - லை:—நயன்சாரா, பயன்சாரா என மூன்றனை விரித்தார். ஈார்ச்சியைத் தொல்காப்பியர் இரண்டனுக்கும் ஏழனுக்கும் விதித்தார் தொல்காப்பியத்துள்.(சொல் - ௲௪) இளம்பூரணர் "புள்ளியில்லா வெல்லா மெய்யும்" (தொல்-எழுத்-கஎ.) "புள்ளியில்லாவாய்" எனச்செய்தெனெச்சவாய்பாட்டான் உரைத்ததுபோல, இவ்வுரையாசிரியரும், "நயன்சாராவாய்" என உரைத்தார். "காலாழ்களரினரியடுங் கண்ணஞ்சா" (ரு00) என்பதுமது ஆகாரவீற்று அஃறிணைப் பன்மையெதிர்மறை வினைமுற்று எச்சமாயிற்றெனை அமைப்பினும் அமையும்.

க௯௫. பயனில்சொற்.........பதடியெனல்.

நு - லை:—அல்விகுதி வியங்கோள் முன்னெதிர்மறையினும் பின் உடம்பாட்டினும் வந்தது. இவ்வாறுரையாது, அல்விகுதி முன்எதிர்மறையினும் பின்வியங்கோளினும் வந்ததெனவுரைத்தமை பிழை.* "உள்ளத்தானுள்ளலுந்தீதே" (௨அ௨) என்பதனுள்ளும் "அங்கணத்துளுக்கவமிழ்தற்றால்" (௭௨0) என்பதனுள்ளும் 'அல்விகுதி வியங்கோளெதிர்மறைக்கண் வந்தது' என்பதனாலுமறிக. எதிர்மறையிலும் விதியிலும் "சொல்லுகசொல்லிற்......சொல்லற்க" (௨00) எனக் கவ்வீற்று வியங்கோள் வந்தது. வினையியலில் "முன்னிலை தன்மை

---

* இவர் "பிழை"யென்று காரணங்காட்டி மறுக்கும் பாடங்கள், ஏடுகளிற் சிறுபான்மை காணப்படுகின்றன.

யாயிரிடத்தொடு, மன்னு தாகும் வியங்கோட் கிளவி" (தொல்-சொல். உஉ) என்னுஞ் சூத்திரத்துள் நச்சினார்க்கினியரும் "பயனில்சொற் ......மகனெனல் மக்கட் பதடியெனல்" (கஅ௯) என்பதனை உடன்பாட்டினும் எதிர்மறையினும் வியங்கோளாய் வந்ததென்றார்.

உ00. சொல்லுகசொல்லிற்........பயனிலாச்சொல்.

ரு - லை:—சொற்பொருட்பின்வருநிலை. "வைகலும்வைகல்" என்பது மது. (நாலடி) "குன்றினனையாருங்குன்றுப" (௯௬ரு) என்பது சொற் பின்வருநிலை. பக்ஷாந்தரத்துள்—ஒத்தசொல்லும் மிக்கசொல்லுமென அமைந்து கிடந்தது காண்க.*

உக-ம் அதி—தீவினையச்சம்.

உ0௯. அறிவினுளெல்லாந்.........செய்யாவிடல்.

ரு - லை:—செய்யாவிடல் என்பது செய்புட்டொடை காரணமாகவந்த கடைக்குறை. "செலவிடாநிதொரீஇ" (௪உஉ) "முட்டாச்செயின்" (ருசஉ) "தோன்றாக்கெடும்" (௪எ௬) என்பனவுமாம்.

(உக0) அருங்கேடனென்ப.........செய்யானெனின்.

ரு - லை:—அருமை இன்மைமேனின்றது. அருங்கேடன் - கேடிலன். அரிதாகிய கேட்டையுடையன் என எண்டுண்மைப்பொருள் கொண்டும் இன்மைமேனின்றது. "சென்றுசேர்கல்லா" என்ற நற்றிணையை† இதற்குச்சொற்சோதனை காட்டினர். "சூழ்ந்துமுரன்றணவி............வீழ்ந்தவிந்தபாசத்தார்" (தண்டியலங்காரமேற்கோள்) என்பதனுள் "வீழ்ந்தவிந்தபாசத்தா"ருமது. "சுழ்னுமிசைவேண்டிவேண்டா வுயிரார் (எஎஎ) என்பதும், கோவையாரில் "நீங்கினநாணொடு நேரிழை நின்றது"ம் (௪௪-ம் பாடற் கொளு) வடமொழியுள் "வீதராகி" என்பதுமது. ஓடி என்பது, செய்யான் என்னும் எதிர்மறையுள் செய்தலோடு முடிந்தது. "எண்பதத்தானோரா" (ருசஅ) "அலர் நாணவொல்வதோ" (கக௪௯) என்பனவும், கோவையாருள் "காவி நின்றேர்தரும்" (௪க) "கற்றிலகண்டன்ன" (௯எ)

---

* இங்கே காட்டிய பக்ஷாந்தரம் பரிமேலழகருரையிற் காணப்படாமையால், வேறுரை பற்றியது போலும்.

† இம்மேற்கோள், அகநானூறு, ௪உ - ம் பாட்டிற் கண்டதென்று தெரிகிறது.

என்பனவும் இவ்வாறும். "ஆக்கங்கருதி" (சகூ௩) என்பதனுள், ஊக்காரென்பதனைக்கொள்ளுமென்பது குறித்து, கருதியென்னுமெச்சம் இழக்குமென்னும் பெயரெச்சவினை கொண்டதென்றார். இவ்வாறே மூதல்பேராசிரியர்க்கு மொக்கும். உடம்பாட்டெச்சம் உடம்பாட்டு வினைகொள்ளுதலன்றி எதிர்மறைவினைகொள்ளா தென்பது அவர்கள் கருத்துப்போலும். வினையெச்சத்திற்கு விதி இவ்வாறு கூறாமையின் அவர்கள் கருத்தறிதல் அரிதென்க.

## உஉ-ம் அதி - ஒப்புரவறிதல்.

உகக. கைம்மாறு வேண்டா.........கொல்லோவுலகு.

நு - லே:—கடப்பாடு - முறையறிந்து செய்யுமுபகாரம். அஃது எழுவாயாகலிற் செய்வாரதுவேண்டாமை செய்வதன் மேனின்றது.

உக௩. புத்தேளுலகத்து.........நல்லபிற.

நு - லே:—இன் உவமவுருபு. நல்லபிற - நல்லனபிற செய்தல்களாயிற்று.

உக௫. ஊருணிநீர்நிறைந்.........வாளன்றிரு.

நு - லே:—இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது. "அளவளாவில்லாதான்" (எ௮0) "வசையிலாவண்பயன்" (உ௩௬) "அருமறைசோரும்" (௮௬எ) "புரந்தார் கண்ணீர்மல்க" (எ௮0) "வாலெயிறூறியநீர்" (ககஉக) என்பனவுமது. "நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றும்" (கஎ) "ஆபயன்குன்றும்" (௫௬0) என்பனவுமாம். நிகழ்பொருள் இயற்கையாயுண்டாகிய பொருள்; செயற்கையுமாமென்னில், "பணைநீங்கிப் பைந்தொடி சோரும்" (கஉ௩௪) என்பதனுள் எழுதியதாலறிக.* இனி, "இலங்கிழாயின் றுமறப்பின்" (கஉ௬உ) என்னும் பாட்டினுள் "கலங்கழியும்" என்பதற்கும் "இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது" என்றது பிழை; (இப்பாடற்கு) "பணை நீங்கிப்பைந்தொடிசோரும்" என்பதற்குரைத் தாங்குரைக்க. "அக்குமரவுமணிமணி" என்னுங் கோவையாருள் (௪0௩) பேராசிரியரும இவ்வாறே எழுதினாரென்க.

---

* "வளைத்தொழில் தோண்மேனின்றது" என்பது பரி......ருரை.

இனித்தொல்காப்பிய வினையியலுள், 'ஆகிடந்து செறுவினையும்'* என்பதனை இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேனின்றதென்றார். (ஈண்டு) நிகழ்பொருள் செய்யுட்கண் வெளிப்படையாக வாராமையின் ஆகுபெயர்க்குள் அடங்குமென்க.† இவ்வாறெழுதுவது நச்சினார்க்கினியர் கருத்து. இவ்வுரையாசிரியர் "தொட்டனைத்தூறு மணற்கேணி" (ருகசு) என்பதன்கண், இடத்து நிகழ்பொருளின் றொழில் இடத்தின்மேனின்றது என எழுதாமை காண்க.‡

உகசு. பயன்மரமுள்ளூர்ப்........படின்.

ஙு - லை:—உள்ளூர் - ஊர்நடு; முன் பின்னாகத்தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை. "முற்பகல் : 'பிற்பகல்" (ருகக) "நுனிக்கொம்பரேறினார்" (சஎசு) கடைக்கண் (சஎசு-உரை) கீழ்நீர் (கூஉக) என்பனவுமஃது. முருகாற்றுப்படையுள், கீழ்நீர் என்பதனை "மீயென மரீஇய" (தொல்- எழுத்- உருயஎ) என்னுஞ் சூத்திரவிதியால் இலக்கணமரூஉவாக்கினார் நச்சினார்க்கினியரென்க. (அடி - உகூ - உவை) இளம்பூரணரும், புள்ளிமயங்கியலுள், முன்றில் என்பதனையும் இலக்கணமரூஉ எனவுரைத்து, கடைக்கண் என்பதனையும் அது வென்றார். (ருருரு- ஆம்சூத்திரம்). இவ்வுரையாசிரியர், வடநூன்மரபும், வடநூலை மொழிபெயர்த்துச் செய்த வீரசோழியமுதலிய பின்னூலுங் கண்டு, இவ்வாறுரைத்தார்போலுமென்க. பரிபாட்டினுள், "மழையிருஞ்சூல்வண்ணன்" என்பதனை முன்பின்னாகத்தொக்க இரண்டாம் வேற்றுமைத்தொகையென்றார் இவ்வுரையாசிரியர். ஆகையால் அவர்கருத்து எம்மனோர்க்கு அறிதலரிதென்க.

உரு-ம் அதி - ஈகை.

உஉக. வறியார்க்கொன்........நீரதுடைத்து.

ஙு - லை:—நீரது - பகுதிப்பொருள்விகுதி; பகுதிப்பொருள்விகுதியாவது, பகுதியின் பொருளையேபடும்: விகுதிபெற்றிருந்துமென்க. பகுதிவிகுதியாவது—குழையென்பது பகுதி, அன் என்பது விகுதி: குழையையுடையன் குழையனென முடிக்க. அஃதிவ்வாறு பொருட்

* தொல், சொல்லதிகாரம், வினையியல் "ஐம்முக்கிளவி" (உருரு) என்னும் சூத்திரவுரை பார்க்க.

† பரிமேலழகர், "கேணியென்றது அதன்கணீரை" எழுதினர்.

படாமைகாண்க. "நத்தம்போற்கேடு" (உ௩௫) "நுனிக்கொம்பர்" (௪எ௬) "உள்ளத்தார்காதலவராக" (௧உ௪௬) "செயற்கையறிந்தக்கடைத்தும்" (௬௩எ) என்பனவுமாம்.

உஉ௩. இலனென்னுமெவ்வ.........கண்ணேயுள.

ந - லே:—குலன் - குடி. ஈதலைப்பலவாக்கிய பக்ஷாந்தரமூன்று காண்க. "எதிலார்போலப்பொதுநோக்கு" (௧0௯௯) என்பதற்கும் இவ்வுரையாசிரியர் அவ்வாறெழுதினரென்க.

உஉ௪. இன்னாதிரக்கப்.........காணுமளவு.

ந - லே:—இரக்கப்படுதல் - இரப்பார்க்கீவனென்றிருத்தல். படுதல் எச்சவும்மை; அளவு முற்றும்மை; (இவை) செய்யுட்டொடைவிகாரத்தாற் றொக்குநின்றன. இரக்கப்படுதல், செயப்படுபொருண்மேனில்லாது ஈவலென்றிருத்தற் றொழின்மேனின்றது. "அகத்தினானஞ்சரையஞ்சப்படும்" (அஉ௪) (என்பதுமது). கோவையாருள் "கொள்ளப்படாது" (அஎ) என்பதற்குப் பேராசிரியரும் இவ்வாறுரைத்தார்.* "உதவிசெயப்பட்டார்" (௧0௫) என்பதும், "உட்கப்படாஅர்" (௬உ௧) என்பதும, பாயிரத்துள் † "கற்கப்படார்" என்பதும் இவ்வாறு வேறுபொருள்படுமென்க.

உஉஅ. த்துவக்குமின்ப.........தீண்டலரிது.

ந - லே:—ஈத்து வினையெச்சத்திரிசொல். தம்முடைமை எனநிற்கற்பாலது தாமுடைமையெனவும், முன்னர்க் காமத்துப்பாலில், "தாமுடைய நெஞ்சந்துணையல்வழி".........தமரல்வழி (௧உ௯௯-௧௩00) எனவும், "பூங்கணையார்" என்னுங் கோவையாருள் (௧௬) "பாங்கனையானன்னபண்பனை" எனவும், "தெளிநீயனையபொன்னே பன்னுகோலந் தெளிவுறவே" (ஷ-௧உஉ) எனவும், "வேனில்வெயிற்குலர்ந்த

---

* "கொள்ளப்படாதென்பது, வினைமுதன்மேலுஞ்செயப்படுபொருண்மேலுமன்றி வினைமேனின்ற முற்றுச்சொல்; "அகத்தினானஞ்சரையஞ்சப்படும்" என்பதுபோல" என்றார் பேராசிரியர். பரிமேலழகரும், அஞ்சப்படுமென்பதற்கு அஞ்சுதல் செய்யப்படுமென விசேடவுரையிற் கூறினர்.

† பாயிரத்துளென்பது, தொல்காப்பியப்பொதுப்பாயிரத் தென்க.

மெய்வறுமைகண்டிரங்கி, வானின் வளஞ்சுரந்த வண்புயற்குத்—தானுடைய, தாதுமேதக்கமதுவுந்தடஞ்சினையாற், போதுமீதேந்தும் பொழில்" (தண்டி) என்பதனுள் 'தானுடைய' எனவும், பிற்காலக் கவியினும் "தானுடைய மெய்ந்நுடக்கந் தண்மா தவிக்களித்து" எனவும் பெரும்பான்மையும் வரும். "தானமென்னுமகரவிறுதியும், யாமெ னிறுதியு மதனோரன்ன" (தொல், எழுத் - ௧௮௮) என்னுஞ் சூத்திரவிதிபெறாது உருபுபுணர்ச்சிகதும் பொருட்புணர்ச்சிக்கும் மாறுபட்டுவருதலின், இவற்றின்கண் உரையாசிரியர் பரிகரியாமையால், இவ்வுரையாசிரியர் கருத்தும் எம்மனோர்க்கறிதல் அரிதென்க.

௨௨௯. இரத்தலின்னாது.........தமியருணல்.

ந - லை:—நிரப்பிய என்பது செய்யிய என்னும் வினையெச்சம். "பெருங்கடலாடிய" என்றார் நாலடியாரில். இச்செய்யுளாசிரியரும், "கோட்டுப்பூச் சூடினும்.......காட்டியசூடினீரென்று" (௧௩௧௩) "தினியவிருந்தது" (௧௨௯௬) எனக்காமத்துப்(பாலுட்) கூறினார்.

## ௨௪-ம் அதி - புகழ்.

௨௩௧. ஈதலிசைபட.........மில்லையுயிர்க்கு.

ந - லை:—ஈதலாற் புகழுண்டாக வாழ்தலென்றார். "இரப்பார்க் கொன்றீவார்மேனிற்கும்புகழ்" (௨௩௨) என்பதுவும் இக்கருத்து. படுதல் - உண்டாதல். இனி, இவ்வுரையாசிரியர் பரிபாட்டினுள், "இலம்படு புலவர் ஏற்றகை நிறையப், பொலன்சொரி வழுதி" என்பதற்குத் - தொல்காப்பியத்துள், "இலமென் கிளவிக்கு" என்னுஞ்சூத்திரத்திற்கு (தொல், எழுத்-௩௧௯) இளம்பூரணருரைத்தாங்கு உரைத்தார். அத்தன்மை எம்மனோர்க்கறிதலரிதென்க. நச்சினார்க்கினியர் அதனை வேறுரைத்தாரென்க.‡

௨௩௪. நிலவரை நீள்புகழ்........புத்தேளுலகு.

‡ இலம்படுபுலவரென்பதற்கு 'இலத்தாற் பற்றப்பட்ட புலவர்' என இளம்பூரணரும், 'இல்லாமையுண்டாகின்ற புலவ'ரென நச்சினார்க்கினியரும் பொருள் கூறினர்.

நு - லை:—"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின் - வலவ னேவா வானவூர்தி - யெய்துப வென்பதஞ் செய்வினை முடித்து" (புறம் - ௨௭) எனக்காட்டுதலாற் புலவர் பாடுக்கொள்ளுதல் அற மாமென்க.

௨௩௫. நத்தம்போற்கேடு.........கல்லாலரிது.

நு - லை:—போல் - ஒப்பில்போலி; "மலைநாட்டுள் மங்கலமென் பதோர் ஊருண்டுபோலும்" என்பதுமது. ஆகுமென்பதனை முன் னுங்கூட்டி அரிதென்பதனைத் தனித்தனி கூட்டுக. தனித்தனி கூட்டாதொழியின், பன்மை யொருமை மயக்கமாதலாமென்க. "கடு மொழியுங் கையிகந்த தண்டமும்...தேய்க்குமரம்" (௫௬௭) "இக லின் மிகலினி தென்பவன் வாழ்க்கை......நணித்து" (அ௫௬) என் பனவும் இவ்வாறும். நத்தம் போற்கேடு - புகழுடம்பிற்கு ஆக்க மாகுங்கேடு. உளதாகுஞ் சாக்காடு - புகழுடம்புளதாகுஞ் சாக் காடு. நந்தென்னுந் தொழிற்பெயர் விகாரத்தால் நத்தென்றாயிற்று. அம் - பகுதிப்பொருள் விகுதி.

(தொடரும்)

பத்திராசிரியர்.

---

# புராதன இந்தியா.

(முற்றொடர்ச்சி.)

[பங்களூர் ஸ்ரீமான்-எஸ். கிருஷ்ணசாமி ஐயங்காரவர்கள், M. A. எழுதியது.]

இக்காலத்திலெல்லாம் தக்ஷிணமேவெனின், மாளவக்ஷேத்திர பர்கள் புரிந்தபெரும்போர்களால் சிதைவுண்டு, வெகுவானசிற்றரசு களாய்ப் பிரிவுபெற்று நின்றன.— சமுத்திரகுப்தன் இத்திசைபுகுங் கால் பதினொரு ராஜ்யங்களாக நின்றபோதிலும், மேற்புறமாத்தி ரம் இப்போதை மஹாராஷ்டிரத்துக்கும், கான்தேசத்துக்கும் சரியாக தைவராஷ்டிரம், எரண்டபள்ளியென்னுமிரு கூறுகவே நின்றது. இவ்விரண்டில் முற்கூறிய மஹாராஷ்டிரத்தினின்றுமே முதல் அரச வமசம் வளர்ச்சிபெற்றது. ஹூணர்கட்கும் பிந்திய குப்தர்கட்

கும் பெரும்போர் விளைந்து, குப்தராஜ்யம் நிலைதவறியதாய்க்கிடந்த காலத்தில், இச்சளுக்கியர் சிறிதுசிறிதாய்த் தங்கள் பாற்பட்ட கான் தேசத்தை ஆக்கிரமித்துக்கொண்டு, கிருஷ்ணாநதி வடகரையோடுங் கடல்வரை விரிந்த வெங்கிநாடு முழுவதையும் தமதாக்கிக்கொண்டனர். இங்கேதான் பல்லவர்கட்கும், சளுக்கியர்கட்கும் அண்மைநேரிட்டு ஓயாப்போரும் விளைந்தது.

கிருஷ்ணாநதிக்குத் தென்பாற்பட்ட நாடுகளும் பல்லவர்பாற்பட்டு ஒன்றுபட்டுவந்தது. ஸமுத்திரகுப்தனது விஜயயாத்திரை காலத்துக் காஞ்சியிலாண்ட பல்லவன் விஷ்ணுகுப்தனென்பான். இவன் பின்வந்த பல்லவஅரசர்கள், சுற்றிலுமிருந்த பல்லவநாடுகளையும் சேர்த்துக்கொண்டு தென்புறமகன்று காஞ்சிக்கும் சோழசேரமண்டலங்களுக்குமிடைப்பட்ட நாடுகளையெல்லாம் சேர்த்துக்கொண்டார்கள். கிருஷ்ணாநதிக்கரையிலோவென்றால், சளுக்கியர்களை யோங்கவிடாமல் வெகுஇமையாநாட்டத்தோடு காவல்பூண்டிருக்கவேண்டியதாயிற்று. பல்லவவுயர்வுடன் பிராமணமதமும் உயர்வடைந்தது. பல்லவரசர்கள் ஆலயநிருமாணத்திலும், தமிழ்வளர்ச்சியிலும் ஊக்கம்பெற்று நின்றதால், இப்பொழுது வெகுபழமைபெற்ற சைவ வைஷ்ணவக்கற்றளிக ளிவர்களாலேயே நிருமிக்கப்பெற்றனவென்றே கொள்ளவேண்டுவனவாய்க் கிடந்தன.

இவ்வாறு நாடுகள் புதுவடிவம்பெற்று வெளிப்படுங்கால் இந்திய தேயம் மேல்வரும் மூன்று பிரிவாகக்கிடந்தது. வடக்கில் தானேச்வர அதிராஜ்யத்துக்கடிமைப்பட்ட ஹிந்துஸ்தானமும், இடையில் சளுக்கிய அதீன தக்ஷிணமும், தெற்கில் பல்லவராஜ்யம் பூண்ட தென்னாடுமாம். இக்காலத்திற்றான் சீனயாத்திரிகனாக ஹியூயன்ஸாங் என்பவன் இத்தேயமுழுதும் யாத்திரைசெய்ததுமன்றி தேயத்துச் சரித்திரசாதனங்களும் ஏற்பட்டமையால் இதேகிரமத்திலிம்மூன்று கூறுகளும் எடுத்தாளப்படும். பாணகவியின் ஹர்ஷசரிதமும், நந்திக்கலம்பகமும், வைஷ்ணவப் பிரபந்தங்களும், சைவ அடியார்களிலனேகர் கவிகளும், மூன்றிடத்தவையுமான அநேக சாஸனங்களுமிக்காலத்திய நிகழ்ச்சிகளுக்குரிய சாதனங்களாம்.

ஆயினும் காலக்கிரமவேறுபாடில்லா திருத்தல் வேண்டின் தென் இந்தியா விஷயம் முதற்கூறல்தகும்— சளுக்கியப்பெருக்கைத்

தடைப்படுத்திக் கிருஷ்ணாநதிக்கரையிலே நிறுத்துவது பல்லவர்களுடைய முதற்காரியமாயிற்று. கி. பி. சுமார் 500-ல் குப்தர்கள் ஹூணர்களால் தகர்ப்புண்டு பொருது நிற்குங்கால், தெற்கேபல்லவர்கள் முதன்மைபெறவே, சளுக்கியகீர்த்திவர்மனும் அவன்பின்னோன் மங்களீசனும் தக்ஷிணமெல்லாம் ஒன்றுபடுத்தப்பட்டது. மஹேந்திரபல்லவனிறந்து பல்லவராஜ்யம் மிகப்பெருமைபெறச்செய்த நரசிம்மவர்மன்பாற்படவே, சளுக்கியவரசும் அவ்வம்சத்திய பேரரசனை இரண்டாம் புலிகேசன்பாற் பட்டுநின்றது. இவ்விருவரும் சிம்மாசனமேறியகாலத்திலே உத்தரமும் ஹர்ஷவர்த்தனன்பாற்பட, அனேகவிளைவுகளுண்டாயின. ஆகையால் முதல் தானேசுவரம்நின்று, பிறகுகன்னோசையில் நிலைபெற்ற, ஹர்ஷவர்த்தன சிலாதித்திய சரிதம் சிறிதுநோக்கல்வேண்டும்.

சாகலத்தில் நிலைபெற்ற மிஹிரகுளன் படையெழுச்சியாலுண்டாய பெருங்குழப்பத்தினின்றும் வெளிப்பட்டு, இப்பெரும்பகைவழியினின்று இத்தேயத்துவாழ்வின் மாறாட்டத்துக்கேதுவான அனேகபெரும்பூசல் விளைந்தவிடமான குருக்ஷேத்திரத்தின் அருகே, தானேச்வரத்தில் பிரபாகரனென்னும் சிற்றரசன் குப்தவம்சத்தில் மணம்புரிந்து அவர்களோடு நட்புப்பூண்டு விளங்கினன்—தன்வலி வாய்ந்த இருமக்களால் ஹூணர்களை பின்னோட்டித்தேயத்தைப்பாதுகாத்தனன். இவர்களிலிளையோனாய்ப் பதினைந்தாண்டுவாய்ந்த, ஹர்ஷன் தன்முன்னோன் படைகொண்டு முன்னேகத் தான்பிற்கூற்றை நடாத்திச்செல்வான், இமையவரைத் தென்சாரலிற் றங்கியிருக்குநாளிலே தாதைபிரபாகரன் நோயுற்றசெய்திகேட்டுப் பின்திரும்பி வந்தனன்,—மாற்றார்படையை மாள்வித்து, எல்லைநாட்டையெல்லாம் நன்னிலைபெறச்செய்து இவன்முன்னோனை ராஜ்யவர்த்தனனும் சடிதியில்வந்துசேர்ந்தனன். பிரபாகரனிறக்கவே ராஜ்யவர்த்தனன் பட்டம்பெற்றுத்தன்னொரே யுடன்பிறந்தாளான மகதகிரஹவன்மன் மனைவி ராஜ்யஸ்ரீயென்பாட்கு வாய்ந்த விதிவிளைவைக்கேட்டு மனமழன்றனன். அஃதெற்றேலெனின், மாளவதேயத்தரையனால் கிரகவன்மன் கொலையுண்ணவே ராஜ்யஸ்ரீயும் சிறைப்படுத்தப்பட்டாள். ராஜ்யவர்த்தனன் மாளவஞ்சென்று இவ்விடுக்கட்கேதுவான மாளவவரசனைப்புறங்காட்டச்செய்து திரும்பிவருமளவில் பங்காள

த்தரசனாய சசங்கன் சூழ்ச்சியால் கொலையுண்டான்— ராஜ்யஸ்ரீ யோவெனில் விந்தியாரண்யம் புகுந்து உயிர்பிழைத்தனள். அதிகாரம் பெற ஆவலுற்றிலனாயினும் ஹர்ஷன் ஆட்சிப்பொறையை வகிக்கவேண்டியதாயிற்று.

உடன்பிறந்தார்களைத் தேடிக்கண்டு, உயிர்ப்பலியினின்றும் மீட்பது ஹர்ஷனது முதற்கடப்பாடாய்நின்றது. இது முடிவுபெறவே, சசங்கன்மேற் றிரும்பி யவனையுமடிப்படுத்தினான். பிறகு குப்தர்கள் காலத்திருந்தவாறு அதிராஜ்யமொன்றை நிலைபெறச்செய்ய வேண்டுமென்பதைத் தன் கடமையாகப் பூண்டான். அவன் நீண்டவாட்சியில் முப்பதாண்டு ஓயாமல், போர்த்தொழிலையே மேற்பூண்டு இந்துஸ்தானத்தை யெல்லாம் தன்னடிப்படுத்திக் கொள்ளவே, பிராம்மணவரசனை காமரூபத்துக்குமாரராஜனும், பங்காளத்திய சைவசசங்கனும, இவ்விரண்டுக்கு மெதிர்முனையில் நின்ற வல்லபி, காஸ்மீரவரசர்களு மிவனதிராஜ்யத்துக் கீடுபட்டு நின்றார்கள். ஆயினும் ஓரெல்லையில் மாத்திரம் தடைப்படுத்தப்படவே சமுத்திரகுப்தனைப்போ லேகாதிபத்தியம் பெறுவது ஹர்ஷனுக் கியலாமற் போயிற்று. எப்படியெனின், ஹர்ஷன் தக்ஷிணத்தின் மேற் படைசெலுத்தவே, சளுக்கியபுலிகேசி விந்தியக்கணவாய்களி லெல்லாம் காவலிட்டு ஹர்ஷனைத்தோல்வியடையச் செய்தனன். பிற பெருமக்கள் போலவே ஹர்ஷன் தன்வலியளவைத் தெரிந்துகொண்டு மறுபடியுமிவ்விஷயத்தில் யத்தனிக்காமல் நின்றான். இவ்வாறு ஹிந்துஸ்தான வெல்லைக்குட்பட்ட அதிராஜ்யமொன்றை நிறுமித்து மிருந்தகாலமெல்லாமிதை நிலைபெறச்செய்யும் முயற்சியையே பூண்டோனாயினன்.

இவனாட்சியின் பிற்பாதியிற்றான் சீனதர்மசாஸ்திர ஆசிரியனான ஹுயவன்ஸாங் என்பவன் இந்துதேயத்தில் யாத்திரை செய்தது. இவன் ஹர்ஷவாட்சி, இரண்டு சதமானங்களுக்கு முற்பட்ட குப்தவாட்சி போலவே திருப்திகரமாயிருந்த போதிலும், பிரயாணமார்க்கங்கள் முன்போ லவ்வளவு நன்றாய்க காப்படைய வில்லையென்று தேர்ந்தனன் போலும். சக்கிரவர்த்தியோ தன்ராஜ்யத்தில் இடைவிடாமல் சஞ்சரித்துவரவே அவர் நிலைவீடு சலிகரும் நகரத்தைப்

போன்று விளங்கியதாம். தண்டநீதி தாமதமின்றிச்செலுத்தப்பட்டதுர்தவிர, முன்னுளிற்காட்டிலும் கொஞ்சம் குரூரமாயிருந்ததாகத்தோன்றுகிறது. நமக்கு ஒன்றும் கிடைத்தலரிதாயினும் கிரமமாய் வைத்தாளப்பெற்ற ஆட்சிப்பத்திரங்கள் அமைவு பெற்று நின்றனவாம். ஹர்ஷன் பெரிய வித்வானும் கவிஞனுமாயிருந்ததும் கல்விவளர்ப்பதில் ஊக்கமடைந்தவனுய் நின்றதுமன்றி இச்சீனயாத்திரிகன் சொல்லுமாறு ஜனங்கள் கல்விப்பயிற்சியில் உயர்வு பெற்றிருத்தல் சாத்தியமன்று. இவன் சபையில் அனேக கவிஞர்கள் இவன் வண்மையாற் றழைத்தோங்கியதனுல் கவிவண்மை பூண்டவள்ளல்களி லிவன் உயர்வு பூண்டவனுனன் இயற்கையாகவேயோ பயிற்சியினுலேயோ ஹர்ஷன் மதானுஷ்டானத்தில் மிகப் பொறுமை பூண்டவனுய் நின்றனன். இவன் மதப்பொதுமை அக்பர் சக்கிரவர்த்தியதைப் போன்றதேயாயினும், பிற்காலத்தில் ஹயவுன்ஸாங் உபதேசபலத்தால் மஹாயான பௌத்தக்கொள்கைகளிற் சார்புபெற்றவனுனன். கன்னேசைப் பட்டணத்திலிவன் நடாத்திய பௌத்தப்பெருவிழவும், பிறகு அலஹபாத்தில் நடைபெற்ற மதப்பொதுமை விழவும் இவனது விரிவு மறிவும் வாய்ந்த மதக்கொள்கைகளை நன்கு விளக்கும். முப்பதாண்டு போர்த்தொழில் பூண்டவனுயினும் இவன் போர்பூண்டது, இன்றியமையாமையாலேயொழிய விருப்பத்தாலன்று. இவன் மதாவேசத்தாற் குடிகளைத்துன்புறுத்தினனென்னும் கொள்கைகளெல்லாம் நம்பற்கேலாதனவே. கி. பி. 648-இல் இவன் காலமாகவே, தகுதியான யுவராஜனின்மையால் அர்ஜுனன் என்னுமமைச்ச னரசாட்சியை அதிக்கிரமிக்கவே, அக்காலத்துச் சீனராயபாரியால் தோல்வியடைந்து அதிராஜ்யத்தையும் முடிவுபெறச்செய்தான். எப்படியோவெனின் ஹர்ஷன் ஒரு பிராமணனைச் சீனத்துக்கு ராயபாரம் செலுத்தினுன். இவன் திரும்பிவரவே சீனசக்கரவர்த்தி இவனுடன் வாங்ஹீன்ஸீ என்பவனையனுப்பினன். ராஜ்யாபகாரியான அர்ஜுனன் அவனை அவமதித்து நடத்தவே அவன் திபத்துக்குப்போ யங்குநின்றுமுதவி பெற்றுத் திரும்பிவந்து அர்ஜுனனை யழிவுபெறச்செய்து அதிராஜ்யத்தையும் முடிவுபெறச்செய்தான். கி. பி. 700-க்கு மேல் இத்தேயம் மஹம்மதியர் வசப்படுமுன் அதிராஜ்யம் என்பதேயின்றி சிறிது சிறிதாயும், சலபமாயும் அவ்வவர் பாற்பட நின்றது.

சற்றேறக்குறைய இதேகாலத்தில் பல்லவராஜ்யமும் முடிவு பெற்றது. விந்தியமலைச்சாரலில் ஹர்ஷனைத் தடைப்படுத்தியது முதற் புலிகேசிக்கும, பல்லவ நரசிம்ம வன்மனுக்கும் பெரும்போர் விளைந்து, மலைக்குகைபாலயங்களையும் மாமல்லாபுரத்தையும் நிருமித்த நரஸிம்மபல்லவன் படைத்தலைவர்கள் சளுக்கியரை அப்பாற படுத்தி, அவர்களரசவீடாகிய வாதாபியை எரியூட்டி, சளுக்கிடதேயத்தைப் பதின்மூன்றுவருஷ பிறையிலியாகச்செய்தனர். புலிகேசியின்பின்னோர்கள் வடக்கெல்லைப் பிராந்தியங்களெல்லாம்இடரின்றி வதிந்தமையால் பல்லவராஜ்யத்தூட் படைபோகவிவெற்றிபெற்றனர். இப்பல்லவ எல்லைநாட்டைக் காக்கவே புலிகேசி வெங்கை ஆதிபத்தியமொன்று தனியே நிலைபெறச்செய்து தன் பின்னோனுய குப்ஜ விஷ்ணு வர்த்தனனைப் பிரதிநிதியாக நிறுத்தினன்போலும்.

கி. பி. ஏழாம்நூற்றுண்டி னிரண்டாம்பகுதியில் சளுக்கியர்கட்குப் பெரிய விபத்தொன்று நேர்ந்தது. பல்லவ எல்லையினின்றும் வெகு தூரத்தில்நின்ற மான்யகேத ராஜதானிபெற்ற ராஷ்டிர கூடர்கள் சளுக்கியவரசவம்சத்தை யழிவுபெறச்செய்து, அவருரிமையெல்லாந் தாம் பெற்றனர். இது பல்லவர்கட்குக் கொஞ்சம் விராமம்கொடுத்தது. ஆயினும் ராஷ்டிரகூட தந்திதுர்க வைரமேகன் காஞ்சிசூழ்ந்து நீங்கியபிறகு, நந்திவர்மனே கடைசியாக, பல்லவஅதிராஜ்யம் சிதறுண்டு பல சிற்றரசுகளாய்க் கிடந்து முடிவில் சோழசக்கராதிபத்தியத்தி லடங்கிப்போயிற்று.

இப்போது நாம் இதுகாறும் விவரித்த சரித்திரகாலமெல்லாம், இத்தேயத்துச் சிறுதுணுக்குகளான ராஜ்ஜியங்கள் எவ்வளவோ குழப்பம் பெற்றிருந்தபோதிலும் இக்குழப்பததினிடையே தெளிவாய் நாமறியத்தகுந்த கொள்கையொன்று முன்னிற்கும். அக்கேதேதோவெனின் மௌரியரேயாகுக; குப்தரேயாகுக; இல்லாவிடில் ஹர்ஷனேயாகுக; யாரேனுமொருவன் கைப்பட்டு, தேயமெல்லாமொன்றுபடுத்தப்பெற்று ஒரேயதிராஜ்யமாய் நின்றுவிளங்கியபோது தேயமெல்லாமமைதியடைந்து, நல்லாட்சியின நல்விளைவுகளைப் பெற்றதுமன்றி, எல்லைநாடுகளுமிருகூறின்றி நின்றன. எவ்வெக்காலத்தி லிவ்வைக்கியமில்லாமற்போயிற்றோ அக்காலங்களிலெல்லாம் தலையெடுத்து, தேயகூறுகளெல்லாம ஒன்றோடொன்று முரண்பட்டு, அயற்றேயத்திய அரசர்களை பழைப்பது போனின்றன.

அத்தருணத்தில் உட்புக வயலாருமாயத்தமாயிருத்தற் கையமில்லை. ஆகையால் கி. பி. 700-ம் வருடத்தோடு முடிவுபெறும் ஆயிரமாண்டுகளில், சிறந்துவிளங்குமரசியல் லக்ஷணமேதேனுமொன்றுண்டேயாயின் அது சக்கராதிபத்தியநிர்மாணயத்தனமென்று சொல்லலாம். இவ்வளவுகுழப்பங்களிலும் ஜனங்கள் வெகுவாயமைதிபெற்று, நல்வாழ்வுற்று தனதான்யச்செழிப்புப்பெற்றுப் பெரும்பாலும் சுகமாய் வாழ்ந்தனரென்பது நன்குபுலப்படுகிறது. கல்வியேமுதலாயகலைகளில் நம்முன்னோரடைந்த சிறப்பு நாம் நன்குமதித்துப் பெருமைபாராட்டத்தக்கதேயாகும். நவீனரானநம்மைக்காட்டிலும் நம்முன்னோர்கள் அகன்ற தூரதிருஷ்டிபெற்றவர்களாய், தங்கள்நயத்தையே பாராட்டாது பின்வருவோரனுகூலத்தையே வேண்டித் தம்மாலியன்றமட்டும் முயற்சி செய்ததேயிதற்கெல்லாம் காரணமாய் நின்றது.

ஆயினும் நம்முன்னோர் தமநாட்டபட்ட சிற்றாட்சிக்கும் அதிராஜ்யபராதீனத்துக்கு முட்கிடந்த மாறுபாட்டை நீக்கியொற்றுமைபெறச்செய்யும் கொள்கைகளைக் கண்டுபிடிக்காமற்போனது வியாகுலப்படத்தக்கதே. ஏனெனின் இத்தேயத்துக்குண்டான அழற்சிக்கெல்லாமிவ்வொற்றுமையின்மையே காரணமாம்.

இவ்வியாசமெழுதியதின் அபிப்பிராயத்தையிரண்டொரு வார்த்தைகளால் விளக்கி யதை முடிவுபெறச்செய்வது நேர்மைபெறும் நமக்குக்கிடைத்திருக்கும் சாதனங்களையெல்லாம் ஒருவாறு யுற்றுநோக்கிச்சரித்திரம் நிருமிக்கப்புகின் இந்து ஹிந்தியசரிதம் ஒற்றுமைபெறுமென்பதற்கையமேயில்லை. இச்சாதனங்களையெல்லாமொருங்குசேர்த்து அரசவம்சத்தியர் சரிதத்தைவிட்டு ஜனங்களைப்பற்றியேயெழுதப்புகின் இவ்வொற்றுமை நன்குவிளங்கும். ஆயின் முன்னதின்றிப் பின்னது முடியாமையாற்றான் இவ்வியாசம் வரையப்பெற்றது. ஆயின் இந்தியஜனசரிதமெழுத சாதனங்கள் இந்தியவாராய்ச்சியையே மேற்பூண்டுழைக்கும் மஹான்களின கைம்மாறுகருதாப் பெருமுயற்சியால் நாளைக்குநாள் முடியற்பாலதாய் நிலைபெறுகிறது. இதையாரேனும் செய்க. என்னபிப்பிராயமெல்லா மப்பேர்ப்பட்டவர்களைக்கொஞ்சம் தூண்டிவிடவேண்டுமென்பதே. இக்காரியத்திற் சிறிதேனுஞ் யானுஞ்சாதித்தவனேயாயின் என்முயற்சியெல்லாம் நற்பயன் பட்டதாகக் கருதுவேன்.

(முற்றும்.)

# விக்கிரஹாராதனம்.

விக்கிரஹாராதனம் முற்காலங்களில் இந்த தேசத்திலும் மற்ற தேசங்களிலும் விஸ்தாரமாய்ப் பரவியிருந்ததென்றும் நாஸ்திக மதங்களும் ஆஸ்திக மதங்களும் கிரஸ்து மதம்போன்ற சிலமதங்களும் பிரசாரப்படுகையில் வரவரக்குறைந்துபோனபோதிலும் இத்தேசத்திலும் பின்னும் சிலதேசங்களிலும் மற்ற மதஸ்தர்களுடைய துர்போதனைகளுக்குட்பட்டு முழுவதும்அழிந்துபோகாமல் இதுவரை ஜீவித்திருக்கின்றதென்பதும் யாவருக்குந் தெரிந்த விஷயம. இந்த விக்கிரஹாராதனமானது உபநிஷத்துகளிலும் புராணங்களிலும் பாஞ்சராத்திரம் முதலிய ஆகமங்களிலும ஆத்மாவாகிய பரமேசுவரனுடைய வாஸ்தவ சுவரூபமறியாதவர்கள் கிரமக்கிரமமாக அவருடைய உண்மையான சுவரூபத்தை அறிந்துகொள்ளுவதற்காக ஏற்படுத்தப்பட்ட ஓர் உபாயமாகிறது. இதற்கு அர்ச்சை என்றும் பிம்போபாஸனையென்றும பிரதிமோபாஸனையென்றும் பேர்களுண்டு. விக்கிரஹம் என்றால் சரீரம்; ஆராதனமென்றால் பூஜை. ஆகவே விக்கிரஹாராதனமென்பதற்கு சரீரபூஜையென்றர்த்தம். அஃதாவது ஈசுவரன் எங்கும் நிறைந்தவராயும் வடிவமற்றவராயும ஆகாயம்போல சகல வஸ்துக்களிலுமுள்ளும் வெளியும் வியாபித்திருந்து நம்முடைய அற்பபுத்தியால் உள்ளபடி அறியத்தகாதவராயுமிருக்கிறபடியால் அவரை உள்ளவாறு அறிந்துகொள்வதற்காக ஏற்பட்ட உபாயமென்றாகிறது. அஃதெப்படிப்போலென்றால், கண்ணால் காணமுடியாத அகரம் முதலிய ஒவ்வோர் ஒலியையும் அவைகளின் வரிசைகளாகிய வார்த்தைகளையும் வாக்கியங்களையும் இன்னின்னவையென்று கண்டுகொள்வதற்காகவும் அவற்றின் அர்த்தமின்னவென்று தீர்மானிக்கவும், ஒவ்வொரு தேசத்தார் ஒவ்வோர் எழுத்தைக் கற்பித்துக்கொண்டு அப் பற்பல எழுத்துக்கள் நிறைந்த புஸ்தகங்களின் வாயிலாய் வரிசைக்கிரமமாக ஏற்பட்ட ஒலிகளாகிய சாஸ்திரங்களை அறிந்துகொள்ளுகிறார்கள். நன்றாய் விசாரித்தால் அந்தந்த

* இவ்வியாசம், மதுரை நேடிவ் காலேஜ் ஸம்ஸ்கிருத பண்டிதராயிருந்து, இப்போது சென்னை சம்ஸ்கிருதகலாசாலைப் பண்டிதராய் விளங்கும் **ப்ரம்மஸ்ரீ-சந்திரசேகர சாஸ்திரிகள்** எழுதியனுப்பியது.

தேசத்தாராற் கற்பிக்கப்பட்ட எழுத்துகளில் ஒன்றாவது அந்தந்த ஒலிகளின் வாஸ்தவமான வடிவமல்லவென்பது யாவருக்குந்தெரிந்த விஷயம். அப்படியிருந்தும் இந்தப்பொய்யான வடிவங்களைக் கொண்டு மெய்யான ஒலிகளை அறிந்துகொள்ளுகிறார்கள். அதுபோலவே நிராகாரராகிய பரமேசுவரனுக்கு நம்மாற் கற்பிக்கப்பட்ட ஒவ்வொரு வடிவமும் வாஸ்தவமல்லவாயினும் அவைகளின் மூலமாய் அவர் அறியத்தக்கவரென்பதில் ஆக்ஷேபமில்லை. முதன் முதல் எழுத்துக்களைக் கற்க ஆரம்பித்தவனிடம் அகரவெழுத்து வேறு, அகரவொலி வேறு என்று சொன்னால் அச்சிறுவனுக்கு ஒன்றும் விளங்காது; அகரஎழுத்தும் அகரவொலியுமொன்றென்று தான் அவனுக்கு முதலிற் கற்பிக்கவேண்டும். சிலகாலஞ் சென்றபிறகு இஃது அகர எழுத்து: இதன் மூலமாய் அறியப்படத்தக்க அகரவொலியொன்றிருக்கின்றது—என்றுசொன்னால் அவனுக்கு நன்றாய்த் தெரியும். அதுபோலவே முதலில் சுவாமியை யுபாசிக்கத்தொடங்குபவனுக்கு விக்கிரஹந்தான் சுவாமியென்று உபதேசித்துச் சிலகாலஞ் சென்று அந்த விக்கிரஹத்தில் அவனுடைய மனசு திடப்பட்டபின் இஃது அவரை அறிவிக்கும் உபாயம்: இதன் மூலமாய் உபாசிக்கத்தக்கவராகிய ஈசுவரன் வேறொருவருண்டென்று உபதேசித்தால் அப்பொழுது வெளிப்புலன்களால் விக்கிரஹத்தையும் மனதினாலீசுவரனையு முபாசிக்கும் யோக்கியதை அவனுக்குண்டாகும். அப்படியே சிலகாலமாய்விட்டால் விக்கிரஹத்தின் உதவியின்றியே மனதினாலீசுவரனை யுபாசிக்கும் யோக்கியதை யுண்டாம். அஃதெப்படியெனில், ஒரு மனிதன் ஒரு புதுக்கறவைமாடு வாங்கினானென்று வைத்துக்கொள்வோம். அவன் அந்த மேய்ச்சலுக்காக மாட்டுக்காரனிடம் ஒப்புவித்து சாயங்காலம்வரை மேய்த்துவரும்படி கட்டளையிடுகிறான். அந்தப் பசுமாடானது தனிமையாக மேய்ச்சலுக்குக் கொண்டுபோகப்பட்டால் அது சரியாக மேயாமல் எங்கேயோ தன்னைக் கொண்டுவந்துவிட்டார்களே யென்று ஏமாறித் திக்குகளை நோக்கித் திகைத்து ஓட்டம்பிடிக்கும்; அதேமாட்டைச் சிலகாலம் வரை பழகிய நாலுமாடுகளுடன் சேர்த்துப் பிணைத்து அனுப்பினால் கொஞ்சங்கொஞ்சமாய்க் கூச்சந்தெளிந்து சிலநாட் செல்லுகையில் மற்ற மாடுகளின் உதவியை எதிர்பாராமலே தானே தனிமையாக

மந்தை சென்று நன்றாய் மேய்ந்து வரும். அதுபோலவே மனமென்ற புதுமாட்டுக்கு வெளிப்புலன்கள் துணையாடுகளாம். ஆகையால் முதலிற் கண்ணால் பார்க்கக்கூடிய உருவத்தையே பகவானென்று பாவித்துப் பிற்பாடு கண் முதலிய புலன்களின் உதவியின்றியே மனதினாலேயே பகவானை நாம் தியானிக்க முடியும். இவ்விதமாக, பகவானுடைய வாஸ்தவரூபம் வெளியாவதற்காக விக்கிரஹாராதனம் ஆவசியகமென்றேற்பட்டது. அவருக்கு எத்தகைய வடிவத்தைக் கற்பிக்கலாமென் றாலோசிக்கையில் உலகத்திலே ஒருவருடைய எண்ணம்போல் மற்றவருக்கிருக்கவேண்டு மென்பதின்மையால் அவரவர்களுடைய புத்திக்கெட்டியவரை பகவானுக்கு அந்தந்த வடிவத்தைக் கற்பித்து உபாசிக்கிறார்கள். சிலர் உலகத்திலுள்ள வஸ்துக்களில் உயிர்ப்பிராணி உயர்ந்ததெனவும், உயிர்ப்பிராணிகளில் மனிதர் உயர்ந்தவரெனவும் நினைத்து, மனிதரைவிட உயர்ந்த வேறு ஜீவராசியை இவர் பார்க்காமையால், தங்களுக்கு மேலானதாகத்தோன்றிய மானுடவுருவத்தையே பகவானுக்கு சரீரமாகக்கற்பித்து, அதிலும் நம்மைவிட பகவானுக்கிருக்கும் விசேஷத்தை வெளியிடுவதற்காக, அவருக்கு 4- தலைகள் 5- தலைகள் 6- தலைகள் 4கைகள், 8கைகள், 3கண்கள், முதலிய அநேகவித்தியாசங்களைக்கற்பித்து உபாசிக்கிறார்கள்.* மற்றவர்களோ ஆகாரமற்ற பகவானுக்கு நம்மைப்போல் ஆகாரம் கற்பிப்பது முறையல்லவென்று நினைத்து அவருக்கு யாதோர் உருவமுமில்லையாது என்பதைத் திடப்படுத்துவதற்காக, சிவலிங்கம் சாளக்கிராமம் முதலியவைகளில் பகவானையுபாசிக்கிறார்கள். பகவானுக்கு வாஸ்தவத்தில ஆகாரமில்லையேனும், அவிவேகிகளுடைய சஞ்சலமானமனசு திடப்பட்டு தியானத்துக்கு யோக்கியமாதல்வேண்டி, விக்கிரஹங்கள் பகவானாலேயே கற்பிக்கப்பட்டனவென்பது பின்வரும்பிரமாணங்களால் தெரியவருகிறது. பாஞ்சராத்திராகமத்தில் வாசுதேவன் தன் பக்தர்களிடத்துள்ள வாத்ஸலியத்தால் தன் லீலையினாலே ஐந்து மூர்த்திகளைக் கற்பிக்கிறார். 1. அர்ச்சை, 2. விபவம், 3. வியூஹம், 4. சூக்ஷ்மம், 5. அந்தர்

---

* அத்வைத மதமுறையில் இங்ஙனம் சாஸ்திரிகள் கூறினும், சைவ வைணவர்கள் கொள்கைப்படி இறைவன் அனுக்கிரகத்தின் பொருட்டெடுத்தருளிய திருவுருவங்களே உபாசிக்கப்படுவன என்றுணர்க. ப-ர்.

யாமினை ஐந்துமூர்த்திகள். பிரதிமைகளே அர்ச்சையெனப்படும்-பதது அவதாரங்களும் விபவமெனப்படும்.

1, ஸங்கர்ஷணன், 2, வாசுதேவன், 3, பிரதியும்னன், 4, அனிருத்தனென நான்கு வியூகஙகள். (இவைகளே மனோபுத்தி சித்தாஹங்காரங்களென்றும் சொல்லலாம்) (1. சர்வஞ்ஞத்துவம், 2. நித்தியதிருப்தி, 3. நித்தியஞ்ஞானம், 4. சுவாதீனம், 5. குறைவற்றசக்தி, 6. அளவற்றசக்தி-) என்கிற 6-குணங்கள் நிறைந்தவர் சூக்ஷ்மமாவார். இந்த சுவரூபத்துக்குத்தான் வாசுதேவனென்றும் பரப்பிரம்மமென்றும் பெயர். ஜீவனுக்குள்ளிருந்து அவன்செய்த முன் கருமத்துக்குத்தக்கபடி நல்ல அல்லது கெட்ட செய்கைகளைச்செய்யும்படி ஏவுகிறவர் அந்தர்யாமியாவார். அர்ச்சோபாசனையென்கிற விக்கிரஹாராதனையினால் மனதின் கல்மஷம் நீங்கினால் விபவோபாசனையிலும் அதன்பிறகு வியூஹோபாசனையிலும் அப்படியே ஸூக்ஷ்மாந்தர்யாமியுபாசனைகளிலும் யோக்கியதையுண்டாகும்."

சைவாகமங்களில் "பரமேசுவரன் ஆகாரமற்றவராகவேயிருந்தால் சாதாரணபுத்திக்குப் புலப்படமாட்டாராதலின் ஆகாரமுடையவராகவே அவரையுபாசிக்கவேண்டும். உபாசிக்கிறவர்களுக்கு அனுகூலமாயிருப்பதற்காகவே ஈசானதத்புருஷாகோரவாமதேவஸத்யோஜாதங்களென்கிற 5-மந்திரங்களுள் பகவானுக்கு ஈசானமந்திரத்தை மஸ்தகமாகவும் தத்புருஷமந்திரத்தை முகமாகவும் அகோரமந்திரத்தை மார்பாகவும் வாமதேவமந்திரத்தை கடிப்பிரதேசமாகவும் ஸத்யோஜாதமந்திரத்தைக் கால்களாகவுங்கொண்டு இப்படி மந்திரமயமான வடிவமுடையவராக வுபாசிக்கவேண்டுமென்று சொல்லப் பட்டிருக்கிறது." எப்பொழுதுமே வெளிவிஷயங்களில் ஓடியாடித்திரிகின்றமனசு இவ்விதமான விக்கிரஹோபாசனையினுதவியால் அசைவற்று ஈசுவரனுகிய ஒரேவஸ்துவில் நிலைநிற்கும்படியான யோக்கியதையை யடைந்துவிட்டால், அப்போது அதற்கு உலகத்தில் நடக்கு மெல்லாசங்கதிகளையு மறியும்வல்லமையுள்ள பகவானுடைய அனுக்கிரகத்தால் பகவானுடைய வாஸ்தவமான சுவரூபத்தை யறியும் வல்லமையுண்டாகும். அஃதெப்படியெனில் கண்

ணாடி ஜலம் முதலிய சிலவஸ்துக்களில் பிரதிபிம்பம் காணப்படுகின்றது. ஆனால், அந்தக் கண்ணாடி முதலியவை களங்கமன்றியி லும் அசையாமலுமிருந்தாலொழிய சரியானபடி அவைகளில் பிரதிபிம்பத்தைப் பார்க்கமுடியாது. அப்படியே மனதும் தெளிவாயும் அசைவற்றுமிருந்தாற்றான் அதில் ஈசுவரனுடைய வாஸ்தவமான சுவரூபம நன்றாய்விளங்கும். இந்த விக்கிரஹங்கள் 8. விதமென்று பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அவையாவன:—1. கல் விக்கிரஹம். 2. மரத்தினாற்செய்யப்பட்டது. 3. லோஹவிக்கிரஹம். 4. மண், காரை முதலியவிக்கிரஹம், 5. மணலாற்செய்யப்பட்டது, 6. சித்திரத்தில் எழுதப்பட்டது, 7. மனதினால் கற்பிக்கப்பட்டது, 8. ரத்தினத்தினால் செய்யப்பட்டது. மனோமயவிக்கிரஹத்தில் உபாசிக்கும் யோககியதைவந்துவிட்டால் மற்ற விக்கிரகங்கள் அவசியமில்லை. அதுவரையிலிவை வேண்டியவைகளே. அதுவுஞ் சொல்லியிருக்கிறது. "அறியாதவர்கள் பிரதிமைகளிலீசுவரனை யுபாசிக்கவேண்டியது; விவேகிகள் எங்குமீசுவரனை யுபாசிக்கலாம்."

இந்தப் பிரதிமைகளில் செய்யும் உபாசனையால் பகவானுக்கு அனுக்கிரக முண்டாகி அவருடைய தயவுக்கு இந்த உபாசகன் பாத்திரமாகிறானென்ப தெப்படி? பிரதிமைகள் வாஸ்தவத்திலீசுவரனுடைய சுவரூபங்களல்லவே? அப்படியிருக்க இந்த பிம்பங்களில் செய்கிற பூஜையினால் அவருக்கு தயவுவரக்காரணமென்ன? என்றால் கவனியுங்கள். நமது இந்துதேசத்துச் சக்கிரவர்த்தியாகிய எட்வர்ட்டு மகாராஜா அவர்களுடைய புகைப்படம ஒன்று கடையிலிருக்கக்கண்டு நமது தேசத்து உள்நாட்டு அரசர் முதலியோர் அந்தப் புகைப்படத்தை ஆதரவுடன் வாங்கி தம்ராஜதானியாகிய பட்டணத்தில் அந்தப் புகைப்படத்துக்கு ஊர்கோலமுதலிய உபசாரங்களைச் செய்திருந்து சிலகாலமானபிறகு சமாசாரப்பத்திரிகைகளின் மூலமாயிந்த வர்த்தமானம் மஹாராஜா அவர்களுக்குத் தெரியவந்தால் வாஸ்தவத்தில் தம்முடைய சரீரமாகாத இப்படத்துக்கு அந்தராஜாக்கள் நடத்திய மரியாதையை நேரில் தமக்கே செய்ததாக எண்ணி அந்த ராஜாக்கள் தம்மிடத்தில் வைத்திருக்கிற ராஜபக்திக்காக அவர்களிடம் பரிபூர்ண தயவுடன் அவர்களுக்கு

வேண்டிய அனுகூலங்களைச் செய்ய எப்படி மஹாராஜா அவர்களை பிரியமுடையவராவார்களோ அப்படியே பகவானுக்கு இந்த பிம்பங்கள் வாஸ்தவ வடிவமாகாவிடினும் மனப்பூர்வமாயவைகளில் செய்த பூஜையைத் தமக்குச் செய்வதாகவே யெண்ணி அனுக்கிரகிப்பாரென்பதில் சந்தேகமில்லை. சக்கிரவர்த்திக்கும் சுவாமிக்கு மிவ்விஷயத்தில் வித்தியாச மென்னவெனில், சக்கிரவர்த்திக்கு ஷை சங்கதி பத்திரிகை மூலமாவது வேறு எந்தவிதத்தாலாவது பிறர்தெரிவித்தால் தான் இதையறிய முடியும். பகவானோ எங்கும்நிறைந்து எல்லாவற்றையுமறியுஞ் சக்தியுடையவராகையால் நாம்செய்கிற ஒவ்வொரு காரியத்தையும் அந்தந்த க்ஷணத்திலேயே அறிந்துகொண்டு அனுக்கிரகிப்பார். இவ்விதம் விக்கிரகாராதனைசெய்து சித்தம்சுத்தமான மகான்களுக்குத்தான் ஞானம்பிடிபடுமாகையால் மற்றவர்கள் சித்தசுத்திக்காக விக்கிரகாராதனை செய்யவேண்டியதவசியம். சித்தசுத்தி பெற்றவர்களுக்கு அவசியமில்லையாகிலும், அவர்கள் இந்தமகாப் பிரயோசனமுள்ள விக்கிரகாராதனையை விட்டுவிட்டால், அபக்குவ சித்தர்களும் இவர்களைப்பார்த்து "மகான்களே விக்கிரகாராதனை செய்யவில்லையே, நாமேன்செய்ய வேண்டுமென்று இன்தயலக்ஷியஞ் செய்வார்கள். அதினால் அவர்கள்நஷ்டத்தை யடைவார்கள். ஆகையால் அவர்களை நல்வழிக்குக்கொண்டு வருவதற்காகவே, தாங்களும் அனுஷ்டித்துக் காண்பிக்கவேண்டும். அப்படியிருக்க ஞானத்தில் அதிகாரமடைந்த சிலவிக்கிரகாராதனம் முதலியகருமங்களில் யாதொருபிரயோசனமுமில்லை. எல்லாரும் ஞானப்பியாசந்தான்செய்யவேண்டும். கருமத்தின்பலன் அற்பமாகவே யிருக்குமென்று உபதேசிக்கிறார்கள்; அப்படி உபதேசிப்பது சரியல்ல. பகவத்கீதையில் பகவான் அர்ஜுனனுக்கு அநேக உபதேசங்களைச்செய்யும் நடுவில் "எனக்குக் கருமஞ்செய்வதினாலாகும் பயனில்லை; ஆகிலும் கருமங்களைச் செய்துவருகிறேன். ஏனெனில் உலகத்தில் பெரியவனெதைச் செய்துவருகிறானோ அதையே சிறியவர்களும் செய்வார்களாகையால் நான்கருமங்களை விட்டுவிட்டால் என்னைப்பார்த்து அபக்குவசித்தமுடையவரும் கருமங்களை விட்டுக்கெட்டுப்போவார்கள்; தான்ஞானியாயிருந்தாலும் கருமசிரத்தையுள்ளவர்களுக்கு அவர்களுடைய புத்திபேதப்படும்படி உபதேசிக்கலாகாது" என்று உப

தேசித்திருக்கிறார். இந்த விக்கிரஹாராதனையின் மூலமாய்த்தான் மார்க்கண்டேயர் முதலானபக்தர்கள் பகவானுடைய கிருபைக்குப் பாத்திரமாகி என்றும் பதினாறுவயது என்றுசொல்லும் படியான சிரஞ்சீவிபதவியையும் பின்னுஞ் சிலர் ஞானத்தின்பேரில் மோக்ஷத்தையு மடைந்திருக்கிறார்கள். உலகத்திற் காணப்படுகிற பிரபுக்களை வேண்டுமானால் கபடமாயனுசரித்தத தன்காரியங்களை அவர்களுடைய தயவினால் ஒருவாறு நிறைவேற்றிக்கொள்ளலாம். அப்படிப்போல பகவானை ஏமாற்றமுடியாது. அவர் சர்வஞ்ஞராகையால் கபடத்தை யப்போதே அறிவார். ஆகையால் நாமெல்லோரும் கபட்மற்று விக்கிரஹங்களையே பகவானுடைய சரீரமென்று பாவித்துத் தக்கபூஜையை பக்தியுடன் சாஸ்திரங்களிற்சொல்லியபடி தவறாமல் செய்துவந்தால் மகா கருணாமூர்த்தியாயும் மோக்ஷம்வரைசகலபுருஷார்த்தத்தையுங் கொடுக்கும் சக்தியும் தயையுமுடைய பகவானுடைய கிருபைக்கு பாத்திரராகிச் சகலாபீஷ்டங்களையும் நாம் அடையலாமென்பதில் யாதோர் ஆக்ஷேபமுமில்லை,

---

# பெரியபுராண அரும்பதவிளக்கம்.

[பழைய ஏட்டினின்று எடுக்கப்பட்டது.]

(முற்றொடர்ச்சி)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம்.

(க) வைதிகமார்க்கந் தழைத்தோங்கவும், மேலான சைவம் விளங்கவும், ஆன்மகோடிகள் பொலியவும், சுத்தமாகிய திருவாயை மலர்ந்தழுத, குளிர்ந்த வளஞ்செறிந்த வயலையுடைய சீகாழியிலே திருவவதாரஞ் செய்தருளிய திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாருடைய திருவடித்தாமரைகளைச் சிரசின்மேல் வைத்துக்கொண்டு, அவருடைய திருத்தொண்டை (யாம்) பிரவுவாம். பூதபரம்பரையென்பதற்குக் குருபரம்பரை என்று கோடலுமொன்று. இப்பொருட்குப் பூதம் - சுத்தம்.

(உ) கன்னிகையைப்போலச் சமீபத்து நண்ணுதற்கு மரிய காவலினையுடைய மதின்மீது முகில்கணெருங்குகின்ற சீகாழியாகிய பழையநகரம், சடையிலே வளராநின்ற சந்திரனையணிந்த சிலம்பை யணிந்த சிவந்த திருவடியையுமுடைய சிவபெருமானது நிலையான சைவசமயத்தின் வழிவந்த குடியாகிய வளவர்களது காவிரிவளந் தருகின்ற சோழநாடு பொலிவடைய விளங்கியது. கன்னிமதில் உவமைத்தொகை. மற்றைநகர் மதில்களினுஞ் சிறந்தமையாற் புது மதில்எனப் பொருள்கொண்டு, பண்புத்தொகை எனக் கோடலு மாம். அழியாதமதில் என்றுமாம்.

(ஙு) பிராமணர்கள் தங்களுடைய ஓதும்பள்ளியில் அரிய வேதங்களை முறைப்படி அத்தியயனஞ்செய்கின்ற ஒலியோடு வளர் கின்ற செழிய கமுகஞ்சோலைபக்கத்தேசூழ, உவமையில்லாதநகரம் உயர்தலால், அது, உகமுடிவின் மாத்திரமன்றி எந்நாளுங் கடலின் மீதே மிதப்பதென்றுகூற இயைபுடைத்து; பூகச்சோலை கடனி றத்தையும், வேதவொலி கடன்முழக்கையு மொக்கும் என்க.

(சு) அலர்கின்ற ஒளிபொருந்திய மாணிக்கங்களழுத்திய மதி லில் விட்டுணு பிரமா முதலிய தேவரும் அடங்கும்படி எழுகின்ற வெள்ளங்கள் மேலே எறிந்த திரையினுடைய வளைகள் மதிலின் முற்பக்கத்தே சூழ்தல், பொங்குகின்ற பாற்கடலைக் கடைந்தநாளில் மந்தரமாகிய மத்தைச்சூழ்ந்த வரிபொருந்திய சர்ப்ப வடம்போல் விளங்கும். மதில் மந்தரத்தையும், திரையினுடையவளை சர்ப்பத் தையும் நிகர்க்குமென்க.

(எ) பல ஏரிகள், வளம்பொருந்திய மருதநிலத்தின்பக்கத்தே வாசனைபொருந்திய பசிய இலைநெருங்கிய இதழ்பொலியும நீரினுள்ள செந்தாமரையின் அலரும் பக்குவத்தையுடைய விசாலித்தமலரால், கருமைபொருந்திய நீரையுடைய கடல் ஒரு சூரியனை மலர்வதெனக் கருதித் தான் இளஞ் சூரியர்கள் பலவற்றை மலர்ந்தாற்போலப பலவுள்ளன. இலஞ்சி பலசெந்தாமரைச் செவ்வித்தடமலரால், இளம்பரிதி பலமலர்ந்தாற்போற் பலவுள்ளன எனக்கூட்டுக.

(அ) வேதங்களைப்படிக்கும் அந்தணர்களுடைய ஓமப்புகை யினிரவும், விளங்கிய விபூதியொளியிற்பொருந்திய நல்ல பகலும்

மலர்ந்து, அளந்தறிதற்கரிய பழைய ஊழிகாலங்களினு நடத்தலாற் பூமியில் விளங்கிய அப்பழைய ஊர்க்குச் சூரியனுடைய உதயம் அத்தமனமாகிய இவற்றாலுண்டாகின்ற வேறான இரவும் பகலும் மிகையாம். மிகை - அதிகம்: வேண்டுவதில்லை என்பது கருத்து.

(எ) பரந்த விளைவையுடைய வயலிலுள்ள தாமரையாகிய கிளர்கின்ற அக்கினியில் வரம்பிலே வளர்கின்ற இனியமாவின் பழங்கிழிந்த தேனாகிய நறுநெய் நாடோறும் நெடிய இலைநுதியால் ஒழுகுதலினாலே நெடிதாகிய அவ்வூரிலுள்ள (அந்தணரேயன்றி) மரங்களும் ஆகுதியை வேட்குந் தகைமையுடையனவெனப் பொருந்தியது.

(அ) உஷ்ணகிரணத்தையுடையசூரியன் கடலுறபடிந்த மேன்மையையுடைய இரவில் வெள்ளிய சந்திரனானவன் சோலைதோறும் நுழைந்துபுறப்படும்பொழுது நெருங்கிய மலரின்பக்கத்தையடைந்து தேனிற்றோய்ந்து மகரந்தத்தை அணைந்து படிந்து அதிகாலத்தில் மாலையிலெழுகின்ற சிவந்த ஒளியையுடைய சந்திரனைப்போலத்தகும்.

(கூ) அழகிய சீகாழியிலுள்ள அந்தணரைப்போல, வாசனை கமழ்கின்றதாமரையும், புறவிதழையும் விளங்கிய நாலையுந்தாங்கிச் சுத்தமாகிய நுண்ணியதுகளை அணிந்து துளியாகவருகின்றதேனிறைந்து, தேனிற்பொருந்திய மிருதுவான வண்டினிசையால், செழுமையாகிய சாமகீதத்தைப்பாடும். அந்தணருக் கியையக்கூறுங்கால், முஞ்சிப்புல்லையும், பூணூலையும், விபூதியையுமணிந்து, கண்ணீர் நிறைந்து சாமவேதத்தைப் பாடுவாரெனக.

(ம) மாடங்களானவை, அணிந்த நீண்ட பொற்குண்டலமசையப் பொலிவாகிய கொய்சகத்தைப் பின்னேபோக்கித் தொழில் வாய்ந்த ஓமவேதியின் மெழுக்கிற்பொருந்த வெள்ளியசுண்ணத்தாற் கோலமிடுகின்ற, ஒலிக்கின்ற ஆகாயத்திலுள்ள முகில்போன்ற கூந்தலையுடைய ஒளியைச்செய்கின்ற அருந்ததிபோன்ற கற்பினையுடைய இல்லறத்திற்குரிய பெண்களுடைய வளம் பொலிவன.

(௧௧) அழகிய வீதிகள், பிராமணர் செய்கின்ற வேள்விச் சடங்கை, விளையாட்டிடங்கடோறும் புழுதியாற் பொருந்த வகுத் துண்டாக்கிய பொன்னாற்செய்த கிண்கிணிஒலிப்ப, உருளையை யுடைய அழகிய சிறியதேரை ஊர்ந்து அத்தேர் சென்றவழியிற் பூதூளி திவள்கின்ற வாழ்வையுடைய அருட்செல்வம் வளர்கின்ற பார்ப்பனப்புதலவர் நெருங்கியுள்ளன.

(௧உ) ஒளிவிடுகின்ற நெடிய அழகிய வீதியிற் பொருந்திய வெள்ளிய சுண்ணச்சாந்துதீற்றிய மாளிகையிலுள்ள முகில்படியும் சிகரத்திலுள்ள நாசிகைதோறுந் தொடுத்த கொடிகளானவை, சூழ் கின்ற இராக்காலம் நக்ஷத்திரமென்கின்ற அன்றலரு மலர்களை அலரும்படி, பொருந்திய பகற்காலத்தில் பலநிறத்தினால் நெடிய ஆகாயம் தளிர்ப்பதுபோல நெருங்கியுள்ளன, பக்கங்களிளெல்லாம்.

(௧௬) நீர்மடைகளெங்கும் இரத்தினக்குப்பை, வயலெங்கும் கயல்வெள்ளம்; பக்கமெங்கும் பூமலை, அருகெங்கும் யாகப்பொலிவு, ஓதும் பள்ளிகளினெல்லாங் கலைக்கூட்டம், சோலைகளினெல்லாம் ஒலிக்கின்றவண்டுகள், இடங்களினெல்லாம் முனிவர்கூட்டம், மதில் களினெல்லாம் பொருந்தியமுகில்.

(௧எ) இருமரபு - தாய்மரபு, தந்தைமரபு. வேதத்தில் விதிக் கப்பட்ட இல்வாழ்க்கை.

(௧அ) பூமியின்மேற் சமணர்களாகிய கீழ்மக்கள், புத்தர்களு டைய பொய்ச்சமயங்கள் விருத்தியடைந்து, சிவபெருமானது அரிய வேதவழக்கங்குன்றிச் சிவனடியாரிடத்தே சிவசின்னவிளக்கம் பே ணப்படுதலுண்டாகாது ஒழிய அதனைக்கண்டு.

(உ௰) பிறவி தெரிதலால் தோற்றும் பெரியபேறு, உலகமுய் யும்படி உளதாக. "உருத்தெரியவரும் பெரும்பேறு." என்பதற் குக் கருப்பமெனக்கூறினுமமையும்.

(உ௫) தாள் - முயற்சி.

(உசா) கெடுதலில்லாத சராசரங்கட்கெல்லாம் நன்மையை விருத்திசெய்யும்.

(௨௯) அரும்பவிழ்ந்து பூவின் மணம்பொருந்துஞ் சோலையெங்குமுள்ள தேன்பொருந்திய மகரந்தத்தோடு நெருங்க. (தேன்-ஈ முவாய்.) திக்குக்களினெல்லாம் ஒளிபொருந்திய பிரபைவிரிய, துகளின்றிச் சிறுதென்றலும் வந்துலாவும். பூந்துகளை அடக்கிச் சிறுதென்றலுலாவுமென்றுமாம்.

(௩0) சுவர்க்கத்துள்ளதேவர்களும் விருப்பத்தோடு கரப்பில்லாமல் சோலையிலுள்ள மலரைப்போலக் கற்பகதருவின் மலர்மழையைச் சொரிந்து பூமியில்வந்து கிருபைவளர்கின்ற சீகாழிநகரிலிருக்கும் ஒழுக்கத்தையுடைய அந்தணரோடு ஓமத்தொழிலைச்செய்வார்.

(௩௧) பூதகணத்தியர் பூம்வாழும்படி சிவனருள்செய்த அருளின் பெருமையைக் கண்டு நன்மையைச் செய்வார். அந்தணர் பிறிதுமொழியினும், அது நீங்காத வேதவாக்கால் எங்கும் ஒலி விளங்கி எழும்.

(௩௨) பலவிருக்ஷங்களுங் கொடிகளும், நிரம்பிப்பிரயோசனத்தைத் தருவன. விளங்குகின்றநீருமு தெளிவோடு குளிர்ச்சியைப் பொருந்தும். ஆகாயங்களங்கமற் றொளிவிளங்கும். நல்லதிக்குக்களினெல்லாம் புட்களினொலி நன்மை செய்வனவாம்.

(௩௩) எல்லாவிடங்களிலும் படுப்பவரின்றியும் முழங்கும் மங்கலஒலி.

(௩௪) தமயில்லின் முன்றிலில பெரியகளிப்போடு சிவபெருமானுடைய திருவருளினாலே அரியதிருப்புதல்வரைப்பெற இசைய ந்த அணியைச்செய்வார்.

(௩௫) உடம்பிலணியுமா நெய்யணியைத் திருவிழாவோடு செய்வர்; பிறப்பினிகழும் மங்கலத்தொழிலின் ஒலிபொங்கப் பிறப்பின் முறையான பலசடங்கைச்செய்வார்.

(௩௮) மகிழ்ச்சி மயக்கால் வாசனை அலர்கின்ற நறியதொடையலை வண்டோடு தொடுப்பார். வேப்பிலைமுதலியவற்றாற்பேய் நீங்குதற்குரிய தொழிலைச் செய்வார்.

(சக) இன்பத்தைத் தருகின்ற உதயத்தையுடைய சூரியனைப் போலவிளங்குகின்றதலைவரை. சரவணப்பொய்கையிலுள்ள தாமரை மலர் மீதுள்ள ஒப்பற்றமுதன்மையையுடைய குமாரக்கடவுளைப் போல.

(சஉ) பெருமலைபயந்தகொடி—உமாதேவியார் (ரு—ம் வரி) பெற்ற பார்ப்பனியார் - சிவனுடையபாதங்களைப்பரவு மன்பையே திருமுலையிற்சுரந்தமுது செய்வித்தார்.

(சச) தாயார்களுடைய அழகிய மடியிலும், விளங்குகின்ற தடுக்கிலும், சுத்தமான ஒளியையுடைய தொட்டிலிலும், தூங்கு மஞ்சத்திலும், செப்பமான பொருளையுடைய அழகிய வேதமும் இனியதமிழும் சிறக்கும்படி வருகின்ற தலைவரைத்தாலாட்டுகின்ற நலங்கள் பலவற்றைக் கோதாட்டினர்.

(சரு) வருகின்றமுறைமையையுடைய பருவத்தில் அழகுவளர் கின்ற சீகாழிப்பிள்ளையார், அரியவேதந் தலையெடுக்க ஆண்டதிரு முடியை யெடுத்துப் பெரியமுறைவையுடைய சிவபெருமானது தொண்டினையல்லாற் பிறிதொன்றற் குடன்படேமென்பார்போல அழகிய திருமுக மண்டல மசையச் செங்கீரையாடினர்.

(சசு) நாம்பரசமயங்களை அறியேம்; உலகிலுள்ளீரே, எதிரே நாடாது தூரத்தேபோமென்று அழகிய கையைத்தட்டுவதையும், சிவபெருமானிடத்தே அழகியதாளம் பெறுவதற்கு ஒத்துவதை யுங் காட்டுதல்போல, செந்தாமரைமலர்போன்ற கைகளாற் சப்பாணிகொட்டினர். உலகிலெதிர் நாடாது போயென்பதற்கு உலகத்திலே அவை எதிரே ஒருவராலும் நாடப்படாமல் நீங்குமென கூறினுமமையும்.

(சஎ) விதிதவறுபடுகின்ற பரசமயங்களாகிய குழிக்கண்வீழ்ந்து மேற் கதிகெடுமாறு பெரியஆகாயத்தில்நிறைந்த புதிய நெடிய கங்காநதியானது தவழ்கின்ற சடாமுடியையுடைய சிவபெருமான் ஞானமளித்தற் குரியராகியபிள்ளையார் சந்திரன் றவழ்கின்ற மாளிகை முன்றிலின் பக்கத்தே தவழ்ந்தருளினர். தவழ்தல்முன்னையது நகருதல்; கதிதடைப்பட்டுக கெடுதலென்னும பொருட்டு.

(௪அ) சூழவருகின்ற பெரியசுற்றத்திலுள்ள பெண்களும், தாதியரும், "காழியர்தஞ் சீராட்டே, கவுணியர்தங்கற்பகமே" என்று ஏழிசைகளும், பலகலைகளும் எவ்வுலகங்களுந் தனித்தனியேவாழு மாறு வருகின்றஅவரை வருக, வருக என்றழைக்க.

(௪௯) சீகாழியிலவதரித்த பிள்ளையார் தம்மை அழைத்தவரது திருமுகங்களை அழகியசிரிப்பான் மலர்வித்தும், வருகின்றமகிழ்ச்சி அதிகரிக்க அவர்மேற்செல்லும்படி உதைத்தும், உருகிமனங்கரைந்தலையும்படி உடனே அணைந்து தழுவியும் முன்னரே பெரிய இன்பை மிகக்கொடுத்தார்

(௫௦) வளர்கின்ற பருவமுறையான ஒருவருடம் வருவதன் முன்னரே மலரிற்பொருந்தும் வரியையுடைய வண்டுகுடைகின்ற கரியமிருதுவான சுருளையுடைய குடுமி உடனே அலையுமாறுசெவ்வையாக நிமிர்ந்துநின்று ,விளங்குகின்ற ஒளியையுடைய கிண்கிணி ஓசைமிகக் கீழ்மை நெறியையுடைய சமயங்கள் தள்ளாடிஅழுமாறு தாமுங்குறுகுறு நடந்தருளினர்.

(௫௧) தளர்கின்ற நடையின் அசைவொழிந்து, ஒளிபொருந்திய அழகிய இரத்தினம் அழுத்திய சதங்கை தொடுத்தவடத்தைப்பக்கத்தே சூழ்ந்த பாததாமரை நிலத்திற்பொருந்த; ஆண்டொன்றின் மீதணைய—ஒருவருடத்தின்மேல்வர.

(௫௨) சிறியமணிகளையுடைய தேரைத்தொடர்ந் துருட்டிச் செழுமையான அழகிய சிற்றிலைக்கட்டுகின்ற நறியநுதலையுடைய பேதையர்களின் பக்கத்தே நடந்தோடி மாறுபட்டழித்தும், குறுவெயர்வை துளியாயரும்ப, செழித்த விபூதியை யணிந்த கோலமானது வீதியிற் பேரொளியைப் பரப்பவந்தும் வளர்ந்தருளினர்.

(௫௩) திருவருளைப் பெறுதற்குச் செய்ததவத்தின் முளையைப் போல.

(௫௪) நாவையாண்ட சரசுவதியும பலகலைகளும் நன்மைசிறக்கவும், செந்தாமரைப் பூவையாண்ட இலக்குமியும புண்ணியமும் பொலிவடையவும், இடபத்தையாண்ட கொடியையுடையசிவபிரானது சீகாழிப்பிள்ளையாருக்கு. செய்யுளாகலின் பலகலையும்நாடகளுமென முறைபிறழவைத்தார்.

(௫௫) முன்னரே திருவடியை மறவாத தன்மையை யுடையாரை, சிவபெருமான் தவத்தையுடைய சிவபாதவிருதயரது வழிபாட்டால்கொடுத்தருள தொண்டினிலையைத் தரவருபவராகிய பிள்ளையார் முன்னரே தொடர்பையுடைய பிரிவாலாய உணர்வு ஒருகாற்பொருந்தி எழுதலும், அச்சங்கொண்டாற்போலக் குறிப் பயிலாய் அழுவர். பயில்—சைகை. பயில் குறிப்பாய் எனப்பிரித்துக் கூட்டலுமாம். குறிப்பயலாய்—என்பதுபாடமாயின், குறிப்பு அயலாய் எனப்பிரித்துப் பொருளுரைக்க. குறிப்புக்கு அயலாக என்பதுபொருள், இரண்டாவதான குறிப்பாக என்பது தாற்பரியம்.

(௫௭) கிண்கிணி அணிந்தகாலைக் கொட்டி.

(௫௮) தருமத்தின் முடிவில் நின்ற சிவபாதவிருதயர், உகமுடிவில் ஒப்பற்றவெள்ளம் பலவற்றையும் விரிக்கின்ற கருப்பம் போல, இடையறாத தீர்த்தமெவற்றிற்கும் இருப்பிடமாய்ச் சிவபெருமானுடைய திருத்தோணிப்பற்று விடாத மென்மையதாந் தடாகத்தில்.

(௬0) ஸ்நானஞ்செய்து தருப்பணஞ்செய்து நியமங்கள் பல செய்வாராய்ச் செய்ததின்பின்பு, சிறப்பையுடைய புதல்வனார்காண்பதன் முன் தெவிட்டாத விருப்பத்தோடு அகமருஷணஞ் செய்யும்படி நீரில் அசையாதுமூழ்கினார். அகமருஷணம்—பாவத்தைக் கெடுத்தல்.

(௬க) சிவபாதவிருதயர் ஸ்நானஞ் செய்தலும், அவரைக்காணாது "குழந்தைகள் பிதாமாதாவைக் காணாது இறையளவாயினும் தரியார் என்னுந்தன்மை" காரணமாக.

(௬௨) திருமேனியிற் கண்ணீர்வாரமுன் வேறெவ்விடங் களினும் பார்த்தழுவார்தமது பழையசார்பை யுணர்ந்தோ, அல்லது பாலமையினாலேயோ சிவபெருமான் எழுந்தருளியிருக்குந் திருத்தோணியின்சிகரத்தைப்பார்த்து.

(தொடரும்)

ஜி. சதாசிவம்பிள்ளை

ஸ்ரீ:

ஸ்ரீசைலேச ராமாநுஜாய நம:.

அப்பன் திருவடிகளே சரணம்.

## திருக்கண்ணபுரம்.

# ஸ்ரீ விசிஷ்டாத்வைத ஸம்போதிநீ ஸபை விவரணம்.

---

ஸ்ரீ ஸவேதயார்க்கப்பிரதிஷ்டாபநாசார்யோபய வேதாந்தாசார்யரும், சர்வதந்த்ர ஸ்வதந்த்ரரும், பாஷ்யகாரருக்கு பாகிநேயரும் சிஷ்யருமான முதலியாண்டான் திருவம்சத்திலவதரித்தவரும், பாஷ்யகாராபராவதாரமான மணவாளமாமுனிகள் நியமித்தருளிய அஷ்டதிக்கஜங்களில் அக்ரகண்யராயுள்ள கோயில் கந்தாடையண்ணனுக்குத் திருத்தம்பியாருமான கோயில் கந்தாடையப்பன் திருவம்சத்திலவதரித்து, ஸ்ரீ விசிஷ்டாத்வைத சித்தாந்த நிர்த்தாரண சார்வபௌமராயெழுந்தருளியிருக்கிற கோயில் கந்தாடையப்பன் பிரணதார்த்திஹராசார்யஸ்வாமிகளால் தங்கள் குலகூடஸ்தராயுள்ள கோயில் கந்தாடையப்பன் திருநக்ஷத்ரமான புரட்டாசிமகம்தொடங்கி நடத்திவரும், மஹோத்ஸவகாலத்தில் வருஷந்தோறும் அந்தஸ்வாமி நியமனப்படி இந்த விசிஷ்டாத்வைதஸம்போதிநீ என்னும் ஸபை நடைபெற்றுவருகின்றது.

இந்தச் சபையில், மேற்காட்டியவிதியை யநுசரித்து வாய்க் கேள்வியாகவும், எழுத்துமூலமாகவும் கீழேகாட்டப்படும் விசிஷ்டாத்வைத சாஸ்திரங்களில் பரீக்ஷிக்கப்பெற்றுத்தேர்ந்தவர்களுக்கு ஸம்மானம்செய்யப்படும். இந்தப்பரீக்ஷையிலடங்கிய வித்தியாவிபாகங்களைக் கற்றுப் பரீக்ஷைக்குவருபவர்கள் (௧) தம்மை பரீக்ஷிக்க விரும்பும் இஷ்டமான வித்தியாவிபாகம் இன்னதென்பதும், (௨) தங்கள் சிறப்படையாளமுள்ள முழுப்பெயரும், (௩) வயதும், (௪) தொழிலும், (௫) வசிக்குமிடமும் அதற்குரிய போஸ்டாபீசும், (௬) தாம் இச்சபையில் முன் பரீக்ஷிக்கப்பட்டிருந்தால் அவை யின்னவிபாகம் என்பதும்கண்டு இச்சபையின் காரியதரிசியவர்களுக்கு ஆடி-

மாதத்துக்குள் எழுத்துமூலம் விண்ணப்பம் செய்துகொள்ளவேண்டும். அதன்பிறகு அவரைப்பரீக்ஷைக்கு அங்கீகரித்துக்கொண்டது முதலியவிவரங்கள் தெரிவிக்கப்படும்.

1, 2 அடையாளமுள்ள பண்டிதவகுப்புப் பரீக்ஷைக்கு வருபவர்கள் 35-வயதுக்கு மேற்படாமலிருக்கவேண்டும். இதர வித்தியாவிபாகங்களில், பரீக்ஷைக்குவருபவர்கள் 40 - வயதுக்கு மேற்படாமலிருக்கவேணடும்.

பண்டிதவகுப்பில் தேர்ந்தவர்களுக்குள் முதலாகத் தேர்ந்தவருக்கு, ரூபா - 35 சம்மானிததுப் பத்துவருஷமவரை வருஷந்தோறும, ரூபா- ஐந்துவீதமும், மற்றை இரண்டாவது மூன்றாவதுதரத்திற்றேர்ந்தவர்களுக்கு ரூபா- 30- 25, சம்மானித்துப் பத்துவருஷம்வரை வருஷந்தோறும் ரூபா - நான்குவீதமும், இச்சபையிலிருந்து அநுசம்மானம்செய்யப்படும். வைதுஷ்யாபிநந்தந பத்திரிகை (சர்ட்டிபிகேட்டு) இவர்களுக்கே கொடுக்கப்படும்.

பத்து வருஷம்வரை அநுசம்மானம் பெறவேண்டியவர்கள் ஒவ்வொருவருஷமும் இச்சபையின் பரீக்ஷாகாலத்தில் வந்திருந்து நேரில் பெற்றுக்கொள்ளவேண்டும்.

பரீக்ஷைக்கு வருபவர்கள் ஒருவருஷத்தில் கீழேகாட்டப்படும் வித்தியாவிபாகங்களில் ஏதேனும் ஒருவகையில்மாத்திரம் வரலாம். ஒரேவருஷத்தில் பலவகையில் பரீக்ஷிக்கப்படமாட்டார்கள். ஒருமுறை பரீக்ஷிக்கப்பட்டுத் தேர்ந்த வித்தியாவிபாகத்தில் மறுமுறை பரீக்ஷிக்கப்படமாட்டார்கள்.

பரீக்ஷையில் நூற்றுக்கு ஐம்பது அம்சத்துக்கு மேற்பட்டவர்களே தேர்ந்தவர்களாவார்களென்று தீர்மானிக்கப்பெறுவார்கள்.

☞ இங்ஙனம், ஆஸ்தானவித்வான்,

திருவேங்கடாசார்யர் கார்யதர்சி,

விசிஷ்டாத்வைத ஸம்போதிநீசபை திருக்கண்ணபுரம்,

நன்னிலந்தாலூகா, தஞ்சாவூர்.

திருக்கண்ணபுரம் விசிஷ்டாத்வைதஸபோதிநீசபையிற் பரீக்ஷித்து ஸம்மானம்செய்யப்படும் வித்தியாவிபாக விவரஅட்டவணை

| எண். | பரீக்ஷிக்கப்படும் சாஸ்திரங்கள். | சம்மான விவரம், 1-வது வகுப்பு ரூ. | 2-வது வகுப்பு ரூ. | 3-வது வகுப்பு ரூ. |
|---|---|---|---|---|
| | பண்டிதர்வகுப்பு வித்தியாவிபாகம். | | | |
| 1 | சுருதப்பிரகாசிகையுடன் கூடிய ஸ்ரீபாஷ்யமும், திருமந்த்ரார்த்தவியாக்கியான சகிதமானமுமுக்ஷுப்படியும். ... ... ... | 35 | 30 | 25 |
| 2 | திருவாய்மொழியீடும், ஆசார்யஹ்ருதயவியாக்கியானமும். ... | 25 | 22 | 20 |
| | கீழ்வகுப்பு வித்தியாவிபாகம். | | | |
| 1 | திருவாய்மொழி, ௪, ௫, ௬, பத்துக்களின ஈடும், ஈக்ஷத்யதிகரணமுதல அம்யாக வியவச்சேதபாதமுழுதும் ஸ்ரீபாஷ்யமும். ... ... ... | 14 | 12 | 10 |
| 2 | குருவிஜயமும், தத்துவத்திரய வியாக்கியானமும். ... ... | 10 | 8 | 7 |
| 3 | ஸ்ரீவசனபூஷணவியாக்கியானம், மீமாம்சாபாஷ்யத்துடன்முழுதும். ... | 10 | 8 | 7 |
| 4 | கீதாபாஷ்யமும், திருவிருத்தம் வியாக்கியானமும். ... ... | 9 | 7 | ,, |
| 5 | டீகையுடன் வேதார்த்தசங்கிரகமும், பெரியதிருவந்தாதிவியாக்கியானமும். ... | 9 | 7 | 6 |
| 6 | வேதாந்ததீபமும், திருவாசிரியம வியாக்கியானமும். ... ... | 8 | 7 | 6 |
| 7 | நியாய்சித்தாஞ்சநமும், தத்துவத்திரயம் வியாக்கியானமும். ... ... | 7 | 6 | 5 |
| 8 | திருமந்த்ரார்த்தம் ரஹஸ்யத்ரயஸாரத்தில்பிரபாவவ்வியவஸ்தாவிஸித்தஸாத்யோபாய சோதநாதிகாரங்கள் மூன்றும். ... ... ... | 7 | 6 | 5 |
| 9 | ஸ்ரீவசனபூஷணம் ஸவ்வியாக்கியானம். ... ... ... | 6 | 5 | ,, |
| 10 | ஆசார்யஹ்ருதயம் ஸவ்யாக்கியானம். ... ... ... | 6 | 5 | ,, |
| 11 | தத்வத்ரயம் ஸவ்யாக்கியானம். ... ... ... (கியானம். | 5 | 4 | ,, |
| 12 | பஞ்சஸ்தவங்கள், ஸ்ரீரங்கராஜஸ்தவம், ஸ்தோத்ரரத்நம், சதுசுலோகி ஸவ்வியாக் | 5 | 4 | ,, |
| 13 | வரவரமுனிசதகம், வரவரமுனிதினசரி, யதிராஜவிம்சதி ஸவ்யாக்கியானம். ... | 4 | 3 | ,, |
| 14 | ஷை மூலங்கள்மட்டும், ... ... ... ... | 2 | 1 | ,, |

ஸ்ரீ:

# பத்திராசிரியர் குறிப்புக்கள்.

## க. சந்திராலோகம்.

என்னுடைய தந்தையாரும், இராமநாதபுரம் ஸம்ஸ்தானவித்வானாய் விளங்கியவருமாகிய ஸ்ரீ உ.ப. வே. சதாவதானம்-முத்துஸாமி ஐயங்காரவர்கள், வடமொழியினின்று மொழிபெயர்த்த சந்திராலோகநூலின் மூல சூத்திரங்களை இச்செந்தமிழ்ப் பகுதி முதலாக வெளியிடத் தொடங்கியிருக்கிறேன். இச்சூத்திரங்களின் மொத்தத்தொகை கஉ0-ஆகும். ஸ்ரீவிசாகப்பெருமாளையரியற்றிய பஞ்சலக்ஷணவிஞவிடையில் அணிவிஷயமாக எழுதப்பட்டவையும், வடமொழிச்சந்திராலோகத்தினின்றுமே எளியநடையில் மொழிபெயர்த்தவையாதலின், இச்சூத்திரங்கள், அப்பாகத்திற்கு மூலம்போலக் கொள்ளத்தக்கன. அஃதாவது, இச்சூத்திரங்கட்கு பஞ்சலக்ஷணவிஞவிடையிற்கண்ட அணியியலே உரையாகயமைதலால், வேறுரை வேண்டா என்னலாம். அலங்கார நூல் கற்கப்புகும் மாணுக்கர்க்கு நூறணிகளையும் அவற்றின்வகைகளையும் மனனம் பண்ணிக்கொள்ளுதற்கு இச்சூத்திரங்கள் பேருபகாரமாமென்றெண்ணியே, இவை இப்போது வெளியிடப்படுகின்றன.

## உ. இராமாவதாரவுரை முதலியன.

சேதுஸம்ஸ்தான வித்வான் ஸ்ரீ. உ.ப. வே. இராகவையங்காரவர்கள் எழுதியனுப்பிய "இராமாவதாரவுரை" இரண்டு பகுதிகளாக வெளியிடப்பட்டு வருகின்றது. இவ்வுரை செந்தமிழில் வருவதினும் தனியே புத்தகமாகவெளிவரல் நன்றென்று நண்பர்சிலர் எழுதுகின்றனர். ஆனல், செந்தமிழில் அது வெளியிடப்பெற்றதன் காரணம் வேறுதும். ஐயங்காரவர்கள் இங்கு வந்திருந்தபோது, கம்பரருளிய இராமாவதாரத்திற் பாயிரமுதலிய சிலபகுதிகட்கு அவர்கள் வாய்மொழியாகக் கூறிவந்த உரை மிகச்சிறந்திருந்தது கேட்டு, அவற்றை எழுதித்தரும்படி கேட்டுக்கொண்டவாறு அவர்கள் சிலபாடல்கட்கு உரை எழுதியனுப்பினர்கள். அங்ஙனம் அனுப்பப்பட்ட

தைத் தமிழ்மக்கள் அறிந்து மகிழ்தற்கும், தக்ககனவான்கள் அவற்றையறிந்து அம்முயற்சியில் ஐயங்காரவர்களை ஊக்குவதற்குமநுகூலமாக, அவ்வுரைப்பகுதி வெளியிடப்பட்டது. இதனால், நூன் முழுதுக்கும் அவர்களுரையெழுதியிருப்பதை யான் வெளியிடத் தொடங்கவில்லை எனவுணர்க.

ஐந்திணையைம்பதும்-தொல்காப்பியச் செய்யுளில் நச்சினார்க்கினியமும்:—செந்தமிழ் நான்காம் தொகுதியில் ஐந்திணையெழுபது என்னுஞ் சங்கநூல் அச்சிடத்தொடங்கி ஒருபாரம் வெளிவந்து அதனுடன் நின்றுவிட்டது. அதனெஞ்சிய பகுதியும் வெளிவரவில்லையென்று சிலர் குறைகூறுவதாகத் தெரிகின்றது. ஐந்திணையெழுபதை ஒருபாரம்வரை ஒழுங்காயிருந்தமையால் அச்சிட்டு, அதனெஞ்சிய பகுதியைப் பின்பு ஆராய்ந்தபோது, மிகப்பிழைபாடுடையதாகக் காணப்பட்டமையால், நல்லபிரதிகள் சிலவற்றைத்தேடிப் பரிசோதித்துக் கொண்டபின்னரே அந்நூல் வெளியிடத்தக்கதென்று அப்பொது நிறுத்திக்கொள்ளப்பட்டது. பின்பு, வேறு தக்கபிரதிகள் கிடைக்குமென்று எதிர்பார்த்தவையும், முன்னதுபோலவேயிருத்தலால் அம்முயற்சியை இப்போதும் தொடங்கக்கூடாதிருத்தலை விசனத்துடன் அறிவிக்கவேண்டியிருக்கிறது. இனி, முன்பு செந்தமிழில் வெளியிட்டுவந்த தொல்காப்பியச் செய்யுளியல் நச்சினார்க்கினியத்தைத் தாமேதொடங்கி முடித்துவிடுவதாக ஸ்ரீ இராகவையங்காரவர்கள் கூறியபடி, அந்நூல் அவர்கள் ஆராய்ச்சிக்கே விடப்பட்டுள்ளது. அங்ஙனமே, சென்ற இரண்டு பகுதிகளில் அவர்கள் ஆராய்ந்தனுப்பிய அவ்வுரைப்பாகம் வெளிவந்துமிருக்கிறது. ஆனால், சிலமாதங்களாக அவர்கள் மேற்கொண்டுள்ள வேறு வேலைகளால் அஃது இடையீடின்றி வெளிவரல் கூடவில்லை. ஆயினும், சௌகரியத்தில் முடித்துத்தருவதாகவே ஐயங்காரவர்கள் தெரிவித்திருக்கின்றார்கள்.

பத்திராசிரியர்.

# புத்தகக்குறிப்பு.

ஸ்ரீ விவேகானந்தவிஜயம்;—இப்பெயர் கொண்டதோர் அரிய நூல் ஸ்ரீ மகேசகுமார சர்மா அவர்களால் இயற்றி வெளியிடப் பெற்றுள்ளது. ஸ்ரீ விவேகானந்தசுவாமிகளது 'அழகியவைபவமும்', அவர்கள் அயனாடுகளிலும் நம்பாரதகண்டத்திலும் புரிந்த அற்புதபிரசங்கங்களில் முக்கியமானவும், பற்பல அரியவிஷயங்களைப் பற்றிய சுவாமிகளபிப்பிராயங்களும் பிறவும் இதனில் அடங்கியிருக்கின்றன. இந்தநூல்விஷயத்தில் சர்மா அவர்கள் காட்டியிருக்கும் மொழிபெயர்ப்பாற்றலை எழுதுவதாயின் முன்பு அவர்களது "ஆனந்தமட"த்தைப்பற்றி யாமெழுதிய உண்மைப் புகழ்ச்சிகளிலும் சிலமடங்கு அதிகமாகவே கூறவேண்டியிருக்கிறது. ஏனெனில், சாதாரண கதாபாகமன்றி, மொழிபெயர்த்தற்கரிய வேதாந்தமுதலிய நுட்பவிஷயங்களிலும், அவர்கள் மூலத்தின்சுவைபெற அரியசாமர்த்தியங் காட்டியிருத்தலாலென்க. சுருங்கவுரைக்குமிடத்து, இந்நூலின் அரியவிஷயங்கள் விவேகானந்தசுவாமிகளது அற்புதசக்தியை விளக்குவதுபோலவே, இதனை சர்மா அவர்களது மொழிபெயர்ப்பாற்றலை நன்குவிளக்குமதென்னலாம். இந்நூலைப்படித்துவருமிடத்து, வேதாந்த நுட்பங்கள்பல, வெள்ளிடைமலைபோல் விளங்குவதோடு, ஆசாரச்சீர்திருத்தம்பற்றியும் வித்தியாவிஷயம்பற்றியும், இந்தியாவின்மேம்பாட்டுக்குற்ற பிற லௌகிக வைதிக தர்மங்களைப் பற்றியும் ஒவ்வொருவருந் தெரிந்துகொள்ளற்குரிய நுணுக்கங்கள்பல மிகத்தெளிவாக வற்புறுத்தி முழக்கப்பட்டிருக்கின்றன. இந்நூல் நம்மவர்க்கு நல்விருந்தாயும் பேராறுதலளிப்பதாயும் உள்ளதாதலால், தமிழ்மக்கள் இதனை மகிழ்ச்சியுடன் எதிர்கொள்ளத் தவறார்களென்றே நம்புகிறேன். இந்நூலைப்பற்றிய குறிப்பை, அசௌகரியங்கள் சிலவற்றால், நாட்பட்டு எழுதநேர்ந்ததைப்பற்றி வியசனிக்கிறேன். இந்நூல் விலை ரூபா—1—4—0 இது சென்னை "ரிப்பன் பிரஸ்" தலைவரிடம் பெறுதற்குரியது.

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-எ] கீலக ௵ தை ௴. [பகுதி-௩.

## ஸ்ரீவான்மீகரும் தென்னாடும்.

" வாங்கரும் பாதநான்கும் வகுத்தவான் மீகியென்பான் - தீங் கவி செவிகளாரத் தேவரும் பருகச் செய்தான்" என்றும், "செவ் விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல்-வவ்விய ...முனிவ" ரென்றும், மகாகவிகளெல்லாம் புகழும் ஸ்ரீவால்மீகிபக வான், தம்காலத்தில் விளங்கிய பரதகண்டநிலையைத் தம் ஆதிகாவி யத்தில் உரியவிடங்களிலெல்லாம் சூசிப்பித்தருளுவர். அம்முறைப் படி, தென்னாடும் அவர்வாக்கில் குறிப்பிடப்பட்டுளது. வான்மீகி முனி கூறிய தென்னாடென்பது விந்தியமலையின் தென்பக்கமுழுமை யுமாம். கிஷ்கிந்தையில்,* சுக்கிரீவமகாராஜன், பிராட்டியைத் தேடி வரும்படி வானரவீரர்களை ஏவும்போது, தென்பக்கமாகச் செல்லு தற்குரியாரைநோக்கிச் சொல்லியதாக வால்மீகிமுனிவர் கூறியவை அடியில்வருமாறு;—

" அந்தப்பெரிய வானரசேனையை அனுப்பிவிட்டுக், குறிக்கப்பட்ட வானரர் சிலரைச் தென்றிசைக் கேவுவானாயினன்... .....பின்பு அவன் தென்றிசையில் போதற்கரிதாயிருக்குமென்பதைப்பற்றி அவர்களைநோக்கிச் சொல்லத்தொடங்கி--" பலவித மரங்களும் கொடிகளுஞ்செறிந்த ஆயிரஞ் சிகரங்களையுடைய விந்தமலையையும், பெரும்பாம்புகள் தங்குவதும் கடத் தற்கரியதுமாகிய நருமதாநதியையும், பெரும்பகுதிகளையுடைய வரதாநதி யையும், மேகலை உத்கலை தசார்ண முதலிய நாடுகளையும், அசுவவந்தி அவ ந்திமுதலிய நகரங்களையும் நீங்கள் காண்பீர்கள்; விதர்ப்பம் ருஷிகம் மாகிஷகம் வங்கம் கலிங்கம் கௌசிகம், மலைகளும் நதிகளும் குகைகளுமு டைய தண்டகாரணியம், கோதாவரிநதி முதலியவற்றையும் காண்பீர்கள்

* இது மைசூர் ராஜ்யத்துக்கு வடபாலுள்ளதும், துங்கபத்திரைக்கு சமீபமானதும், பம்பாசரவிருந்தவிடமுமாகிய ஹம்பி (Hampi) நகருக்கு பக்கத்திருந்ததென்பர்.

அவ்வாறே, ஆந்திரம் புண்டரம் சோளம் கேரளத்தோடுகூடிய பாண்டிய நாடுகளையும் காண்பீர்; பின்பு, தாதுக்கள் நிறைந்ததும் விசித்திரமான சிகரங்களுடையதும் பலவர்ணமான பூக்கள் நிறைந்த சோலைகளையுடையதும் சந்தனவனங்கள் செறிந்ததுமான பெரிய அயோமுகமலையைத் *தேடுங்கள்; அதன்பின், தேவரம்பையர் வந்து நீராடுகின்ற திவ்யமான தெளிந்தநீரையுடைய அழகிய காவேரிநதியை அங்கே காண்பீர்கள்; அந்த மலயமலையின் சிகரத்திலே ஆதித்தனுக்குச் சமானமான மிகுந்த ஒளியையுடைய முனிசிரேஷ்டரான அகஸ்தியரைக் காண்பீர்கள். பின் அம்மகருஷியிடத்தில் ஆணைபெற்றுச்சென்று முதலைகள் நிரம்பிய பெரிய தாமிரபர்ணி நதியைத் தாண்டுங்கள். அந்நதி அழகிய சந்தனச்சோலைகளால் மூடப்பெற்ற திட்டுக்களையுடையதாய், கணவனிடத்தன்புள்ள யுவதியானவள் புக்ககம் புகுமாறுபோல, சமுத்திரத்திற்சென்று விழும். பிறகு பொன்னிறைந்ததாயும் அழகுடைத்தாயும், முத்தமயமான மணிகளால் அலங்கரிக்கப் பெற்றதாயும், பாண்டியர்க்கு யோக்கியமாயுமுள்ள கவாடத்தையும் பார்க்கக் கடவீர்கள்; அதன்பின் சமுத்திரத்தையடைந்து காரிய நிச்சயத்தைச் செய்யுங்கள்."

வான்மீகி பகவானது இவ்வாக்கியங்களில், விந்தியபர்வதத்துக்குத் தென்பக்கத்தே — நருமதை, கிருஷ்ணவேணி, கோதாவரி, காவேரி, தாமிரபர்ணி முதலிய நதிகளும், மேகலதேசம் (விந்தப்ரதேசம்) உத்கல (கஞ்சம்) தேசம், தசார்ணம் (சண்டயிரியின் கிழக்கு) அசுவவந்தி; விதர்ப்பம் (பீரார்) ருஷிகதேசம் (பங்காளப்பகுதி) மாகிஷகதேசம்†, கலிங்கம் (வடசர்க்கார்) கௌசிகம், ஆந்திரம் (தெலுங்காணம்) புண்டரம் (வங்கதேசப்பகுதி) சேரசோழபாண்டியம் முதலிய நாடுகளும், தண்டகாரணியம் என்ற பெரிய வனமும் குறிக்கப்பட்டுள்ளன. சுக்கிரீவன் வானரவீரர்களைத் தென்றிசைக்குச் செல்லும்படி விடுக்குமிடத்து, இந்நாடு முதலியவை வருதலால், இவை, ஆரியமக்களால் தக்ஷிணப்பிரிவுகளாக முன்பு கருதப்பட்டிருந்தனவென்பது விளங்கும்.

இவற்றுள் தண்டகாரணியத்தினைப்பற்றிய வரலாறுகள்சில வான்மீகத்தினின்று அதிகமாக அறியப்படுகின்றன. இவற்றை, யாழ்ப்பாணத்து ஸ்ரீமாந்-முத்துத்தம்பிப் பிள்ளையவர்கள் "தமிழ்நாட்

---

* இது மலயமலையைக் குறிக்கும்.

† இது விந்தப்பிரதேசத்தைச் சார்ந்த அநூபதேசத்தின் தலைநகர் என்று இரகுவம்சத்து, சு-ம்சர்க்கம், ருஎ, சருக-ம் சுலோகங்களால் விளங்குகிறது. மைசூர்அன்றுபோலும்!

டின் பூர்வநிலை" * என்ற வியாசத்துக் குறத்திருக்கிறார்கள். அவர்கள் ஆண்டு வேண்டியவளவே எடுத்தெழுதியிருத்தலால், நம் ஆராய்ச்சியின்பொருட்டு அவைமுழுதும் அடியில் தருகிறேன். †

1. மகாதபஸியாகிய அகஸ்தியரே! இந்தச் சகலமான தேசமும் முன்பு ஒருவரும் இல்லாது பாழாயிருந்தனவே; எப்படி இப்போது ஜனங்களால் குடியிருக்கப்பெற்றவாயின?

2. அதை எனக்கு விடாது சொல்லுங்கள்; அதைக்கேட்க விருப்பம் அதிகமாயிருக்கிறது என்றார். அந்த இனிமையான வார்த்தையைக்கேட்டு,

3. பகவானாகிய அகத்தியமுனிவரானவர் ஸ்ரீராமனைப்பார்த்து, ரகுகுலோத்தமா! இந்தத் தேசத்தினுடைய கதையை உள்ளபடி சொல்லுகிறேன் கேளும் என்றுவிடையளித்தார்.

4. மகாபுருஷனாகிய தண்டகன் என்பவனால் விடப்பட்ட இந்தத் தேசமானது, பார்க்கவமகரிஷியின் சாபத்தால் மனுஷர்கள் இல்லாததாயும் மிருகமில்லாததாயுமாயிற்று.

5. அப்பா இராகவா! மரம், புதர், கொடி இவைகளில்லாததாயும் ரிஷிகள் இல்லாததாயும் அதிக பயங்கரமாயும் கொடியதாயுமான காடாய் விட்டது.

6. விந்திய பர்வதத்தின் தாழ்வரைத் தெற்கில் ஆயிரம் யோசனை தூரம் வரையில் காடாய்விட்டது. இங்கு மேகம் மழை பொழிவதுமில்லை; நல்ல காற்று வீசுவதுமில்லை.

7. அதிக பயங்கரமாயும், கொடியதாயும், கோரமாயும், புகை சூழ்ந்ததாயுமான காடாய்விட்டது. இந்தக்காடானது அனேக ஆயிரம்வருஷம் வரையில் ஒருமனுஷனும் இல்லாததாக இருந்தது.

8. கந்தர்வர்களாலும், ரிஷிக்கூட்டங்களாலும், தேவதைகளாலும் விடப்பட்டதாக ஆயிற்று. ராஜாவே! சிலகாலம் சென்றதன்மேல் தெய்வாதீனமாய் நான்—

* செந்தமிழ்த் தொகுதி - க; பக் - ௩௦௧.

† இப்பகுதி—ஆரணியகாண்டத்துப் பதின்மூன்றும் அத்தியாயத்துக் கண்டதென்று—ஷை பிள்ளையவர்கள் குறித்திருத்தலோடு, "மூதற்குறளுண்மை" என்னுந் தலைப்பெயருடன் 1900-ஆ மதுராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையினின்று வெளிவந்த புஸ்தகத்தும் விவரிக்கப்பட்டுள்ளது. அதிற்கண்டபடியே, ஈண்டுப் பதிப்பித்திருக்கிறேன். இப்பகுதி அச்சுப்பிரதிகளிற் காணப்படவில்லையென்றும், சில வான்மீகக் கையெழுத்துப் பிரதிகளிற் கண்டதென்றுந் தெரியவருகிறது.

9. வெண்மையுள்ள இமயமலையுச்சியிலிருந்து இங்குவந்தேன்; பிறகு என்றால் பர்ஜன்யமென்னும் ஜலதேவதையானது மேகங்களுடன் இங்கே கொண்டுவரப்பட்டது.

10. சத்துருக்களைக் கொல்லுகிறவனே! சிலகாலம்வரையில் மேகங்கள் இஷ்டப்படி மழைகளை வர்ஷிக்கும்படி செய்யப்பட்டன. தபப்பிரதாபத்தினால் அநேக யமதூதர்களும்—

11. மிருத்யுதூதர்களும், வியாதிகளும் போக்கடிக்கப்பட்டன. இமயமலையடிவாரத்திலுள்ள மரங்களெல்லாம் க்ஷணத்தமாத்திரத்தில் இங்கே கொண்டுவரப்பட்டன.

12. மறுபடியும் மலர்ந்த தாமரைகளையுடைய நதிகளும், அழகானகுளங்களும், ஏரிகளும், குட்டைகளும் செய்யப்பட்டன.

13. அழுக்கில்லாததாயும், நல்ல வாசனையுள்ளதாயும், சுகசீதளமாயுமுள்ள ஜலமும் காற்றும் உண்டாயின. பிறகு இந்தத்தேசமானது அனேக வனக்கூட்டங்களுள்ளதாயும், நன்றாய்விளைந்த தானியங்களையுடையதாயும்,

14. மனதிற்குச் சந்தோஷமுள்ளதாயும், அனேக ரிஷிக்கூட்டங்களால் அடையப்பட்டதாயும் ஆயிற்று. ரகுநந்தனா! அந்தத் தண்டகனுடைய சாபத்தால் மாத்திரம்—

15. கொடிய செய்கைகளையுடைய ராட்சதர்களால் உபத்திரவத்தோடு கூடியதாயிருந்தாலும் எப்போதுமுதல் நீ சித்திரகூடத்துக்கு வந்தாயோ,

16. அப்போதுமுதல் ராட்சதர்கள் ரிஷிகளை இம்சை செய்கிறார்கள். ஆகையால் வீரனே! ரிஷிகளுக்கு அபயத்தைக்கொடுக்கச் சக்தியுள்ளவனாகிறாய்.

17. இந்தக் காரணத்தால், ராமா! தண்டகாரணியத்தில் வசிக்கிறவர்களைக் காப்பாற்றுகிறதற்காகவே நீ இங்குவந்தாய்; ஆகையால் நீ எங்களைக்காப்பாற்ற வேண்டும்.

18. ஸ்ரீராமனே! மூன்று உலகங்களையும் காப்பாற்றுவதில் சாமர்த்தியமுள்ளவனாயிருக்கிறாய்; அப்படியிருக்கப் பிராமணர்களுடைய கோபத்தினால் மாண்டுபோகும் அபாயமுள்ள இந்த ராட்சதர்களை நீ ஜயிப்பாய் என்பதில் சந்தேகமுண்டோ?

19. அதிக பலமுள்ளவனாகிய இராமனே! இட்சுவாகுவின் புத்திரனாகிய தண்டகன் நிமித்தம் சாபத்தினால் இந்தத் தேசமானது அழிக்கப்பட்டது.

20. இந்த எல்லாத் தண்டகாரணியமும் உன்னுடைய பார்வையினுலேயே காப்பாற்றப்பட்டனவாயின. சத்துருக்களை ஜயிக்கும் திறமுள்ள ரகுராமனே! அவனுடைய தேசசாப முடிவின்பொருட்டே நீ இங்குவந்தாய்.

21. ஆகையால் நீ உன் முன்னோர்களாகிய பிதுர்க்களால் தள்ளப்பட்டதாகிய இந்தத் தண்டகாரணியத்தைச் சாபத்திலிருந்து கரையேற்றிவிடுக."

இச்செய்திகளால், இராமாயண சரித்திரம் நடந்தேறுதற்கு முன்னர், தண்டகாரணியத்துக்கு அகஸ்தியமகருஷி வந்தாரென்றும் அவர் வருகைக்கு முன்பு இக்காடு வெறும்பாழ்வனமாயும் சிலவிடத்து அடர்ந்தபெருங் காடாயுமிருந்ததென்றும், அம்முனிவர் இங்கு வரும்போது அநேக ருஷிகளையும் அழைத்துவந்தாரென்றும், அக்குறுமுனிவரே இத்தேசத்தில் நல்லமழை நல்லநதி நன்மரங்கள் முதலியவற்றை உண்டாக்கினுரென்றும் புலப்படும். அகத்தியனுர் இங்கு வருதற்குமுன், இக்ஷ்வாகு மைந்தனுகிய தண்டகன் சுக்கிர சாபத்தினுல் மண்மாரிபெய்ய மடிந்தகாலத்து அவன் ராஜ்யமும் மடிந்ததென்பது இராமாயணம் உத்தரகாண்டத்துக் கண்டது. இக்ஷ்வாகுவின் மைந்தனுன தண்டகன் கொடியோனுய் விந்தத்துக்கும் சைவலத்துக்கும் இடைப்பட்ட நாட்டை ஆட்சிசெய்து வருகையில், பார்க்கவ புத்திரியாகிய அரசை யென்பாளைக் காதலித்து அவளை வலிதிற்புணர்ந்து அக்காரணத்தால் அங்ஙனம் சாபம் பெற்றனனென்பது கதை. இதனை,

"அந்த வெள்ளி யனலென்ன வாலகால விடமென்னச்
சிந்தை யெழுந்த பெருங்கோபந் தீரா விடும்பை யென்மகட்குத்
தந்த தண்டன் வளநாடுந் தானுங் கிளையுந் தந்திரமும்
வெந்து பொடியாய் வீழ்கவென வெல்லாம் பொடியாய் வீழ்ந்தனவே.

"அவன்ற னுட்டிற் றண்டகமா மடவி யாகி யாரழலின்
சிவந்த வெள்ளி சாபத்தா னரர்புண் மிருகஞ் சேர்வின்றித்
தவஞ்செய் முனிவர் நெருங்குதலாற் சனமா தான மெனப்பேராய்
உவந்த கருணை பொழிவிழியா யுற்றதிதுமுன் பெனவுரைத்தான்".

எனத் தமிழ் உத்தரகாண்டம், சம்புவன் வதைப்படலம், ௬௪, ௬௫-ஆம் பாடல்களாலும் அறிக.

தண்டகாரண்ய மென்பது, முற்காலத்தில், சேரசோழ பாண்டிய நாடுகளை அடுத்திருந்ததென்பது, அந்நாடுகட்கும் விந்தத்துக்கு

மிடையில் வேறுதேசங்களைக்குறியாது, *"விந்தத்தின் தெற்கே ஆயிரம் யோசனையளவும் வெறுங்காடாய்க் கிடந்தது" என வான்மீகி கூறுதலால் விளங்கும். ஸ்ரீராமபிரான்காலத்தில், அப்பெருவனாந்தரத்தில் அங்கங்கே ருஷிகளநேகர் குடியேறி வசித்துவந்தனரென்பதும், அப்பிரதேசம் ஜனஸ்தானம் எனப் பெயர்பெற்றதென்பதும் மேற்காட்டிய பிரமாணங்களை விளக்கும். "ஜனஸ்தானத்தில் போருண்டாகுமென்று சந்தேகித்தவனும் இலங்கைக் கரசனுமாகிய இராவணன், ஈசுவரனிடமிருந்து அடைதற்கரிய பிரமசிர மென்ற அஸ்திரத்தைப் பாண்டியன் பெற்றிருப்பது தெரிந்து, அம்மன்னனுடன் சந்திசெய்துகொண்டு இந்திரலோகத்தை வெல்லப் போனான்"† எனக் காளிதாசர் ரகுவமிசத்திற் கூறுவதால், அந்த ஜனஸ்தானமும் தமிழ்நாட்டுக்கு வெகுதூரமன்றென்பது பெறப்படும். இத்தண்டகாரண்யம், ஆரியமக்களால் மிகுதியுங் குடியேறப்பெற்ற பிற்காலத்திலும், அவ்வனத்தின் ஆதிப்பெயரே தன்பெயராய்த் தண்டகாரண்ய நாடென்னும் பெயர்பெறலாயிற்று. பதிற்றுப்பத்தின் ஆறுவதன் பதிகத்தில், ஆடுகோட்பாட்டுச்சேரலாதன் செய்கைகளுள், "தண்டாரணியத்துக் கோட்பட்ட வருடையைத், தொண்டியுட்டந்து கொடுப்பித்து" எனவும், அதனுரையில் "தண்டாரணிய மென்றது ஆரிய நாட்டிலுள்ளதோர் நாடு" ‡ எனவும் வருதலால், சேரநாட்டையடுத்து அஃதிருந்ததும் பிறவும் உணர்க.

இத்தண்டகாரணியத்துக்குப் பின், வான்மீகி முனிவர், ஆந்திர புண்டர சோழ கேரளபாண்டிய நாடுகளைக் குறித்துவிட்டு, தெற்கே

---

* சேரசோழ பாண்டியதேசங்கள் நீங்க, மேலே கூறிய நாடுகளெல்லாம் விந்தியத்தையொட்டியும் அதனைச்சிறிது அடுத்து முள்ள வைகளேயாதலாலும், விந்தத்துக்குந் தென்னாட்டுக்கும் மத்தியில் வேறுதேசங் குறிக்கப்படாமையாலும், வால்மீகிகாலத்து அவ்விடம் பெருவனாந்தரமேயென்பது நன்கு தெளியப்படும். பாரதத்தில், தெற்கே அநேக ராஜ்யங்கள் குறிக்கப்பட்டுள்ளன. (See Bhandarkar's History of Dekkan. pp. 142.)

† இரகுவமிசம், சர்க்-சு; சுலோ—சுஅ.

‡ மகாராஷ்டிர தேசத்துப் பிராமணர், விசேடகாலங்களிற் செய்யும் ஸங்கல்பத்தில் "மகாராஷ்டிரதேசே" என்னாது "தண்டகாரண்ய தேசே" எனக் கூறிவருதல் இன்றும் வழக்கமென்று தெரிதலால், அம்மகாராஷ்டிர தேசமே இவ்வாரிய நாடாகக் கருதத்தக்கது. (Ibid. pp. 136.)

மலையபருவதத்தின் சிறப்பையும் அம்மலையினின்று உ... காவிரி பிர வகித்தலையும் குறிப்பிட்டுள்ளார். மலையபர்வதமென்பது, தென் கோடியிலுள்ள பொதியின்மட்டுமன்றி, இப்போது "மேற்குத்தொ டர்ச்சிமலை" என்று கூறும் நீண்டமலைத்தொடர் முழுதுமாமென் பது வான்மீகத்துப் பலவிடங்களாலுந் தெரியவருகிறது. இம்மலை யினின்று தெய்வத்தன்மைவாய்ந்த காவிரி வெளியாவதையும் அம் மலையினுச்சியில் அகஸ்தியமுனிவர் விளங்குவதையும், வான்மீகி யார் கூறுதல் காண்க. அகஸ்தியர் காவிரியுற்பத்தியாகுமிடத்தில் வசிப்பதாக முனிவர் இங்கே கூறினும், ஆரணியகாண்டத்தில், கோ தாவரிக் கரையிலுள்ள பஞ்சவடிக்கு (Nasik) இரண்டுயோசனை தூர த்தில் அகஸ்தியாசிரம மிருந்ததாக அவர் விரிவாகக் கூறியிருத்த லால், அக்குறுமுனிவர், "மலயம்" என்னும் மேற்குத்தொடர்ச்சி மலை முழுமைக்குமுரியவராய்த் தென்னாட்டைக் காத்தருளியவரென் பதே கொள்ளத்தக்கது. இனி வானரவீரர்களைநோக்கி சுக்ரீவன் வழிகூறும்போது, "அம்மலயமலையினுச்சியில் மிகவும் தேஜோவா னாய் சூரியஸமானராய் ருஷிசிரேஷ்டராய் உள்ள அகஸ்தியமுனிவ ரையும் பாருங்கள்; பிறகு, நிர்மலசித்தமும் மிகவும் ஞானவானு மான அம்முனிவரது ஆணைபெற்றுக்கொண்டு தாமிரபர்ணியைத் தாண்டுங்கள்" எனக்குறித்தலால், தென்னாட்டிற்புகுவதற்கு அகஸ் தியமுனிவரது கட்டளைபெறுதல் அக்காலத்தில் அநுகூலமாயிருந்த தென்பதும் விளங்கும். இதனை நோக்கும்போது; "இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்து அவனை ஆண்டு (தென்னாட்டுள்) வாராமை விலக்கி" என்ற நச்சினார்க்கினியர் வரலாறு ஞாபகத்துக்கு வருகி றது. அக்காலத்து அந்நியரால் தென்னாட்டுக்கு நேரும் இடுக்கணீக் குதற்கும் அநுகூலஞ்செய்தற்கும் அகத்தியரே முன்னின்றுபகரித் தாரென்பதற்கு வடமொழி தென்மொழிப்பிரமாணங்கள் பலகாட்ட லாம். வான்மீகிபகவான், ஸ்ரீராமபிரான் லக்ஷ்மணரை நோக்கி அகஸ் தியாசிரமத்தைப்பற்றிக் கூறியதைக் குறிக்கும்போது, "அம்மகா னாகிய அகஸ்தியர், தாம் இவ்வுலகத்துக்கு நன்மை செய்யும்பொரு ட்டு, இங்கிருந்த யமனுடைய உபத்திரவத்தை நீக்கி, இத்தென்றி சையையும் சுகமாகக் வசிக்கத்தக்க திசையாகத் தமது தவவலி மையாற் செய்து வைத்தார்" எனவும், "எவரொருவருடைய மகி

மையால், இன்றைக்கும் அசுரர்கள் இத்தென்றிசையைக் கண்ணெடுத்துப் பார்த்து உட்புக நடுங்குகின்றார்களோ, அவருடைய ஆசிரமம் அது; மகா புண்ணியமூர்த்தியாகிய அவர் இத்திசைக்கு வந்ததுமுதல், இங்கே அரக்கர்கள் தம் பகைமைநீங்கிச் சாந்தமுள்ளவராய் விட்டார்கள். அவர் பெயரைக்கொண்டே இத்தென்றிசையும் **அகஸ்தியர்திசை** என்று வெகு சாந்தமான பெயர் பெற்று மூவுலகத்தும் பிரசித்தியடைந்து கொடியவர் அஞ்சும் திசையாக விளங்குகிறது" எனவும் ஆரணியகாண்டத்து கக-ம் சருக்கத்துக் கூறுதலால் மேற்கூறிய விஷயம் நன்கு வெளியாகும். இனித் தமிழ் வரலாறுகளை நோக்குமிடத்து, முற்காலத்தே அசுரர்களால் துன்பநேர்ந்தபோது சோழனொருவன் "தூங்கெயிலெறிந்" தது இக் குறுமுனிவர் அருளினாலேயாமென்பது விளங்கும். இதனை,

"உலகந் திரியா வோங்குயர் விழுச்சீர்ப்
பலர்புகழ் மூதூர்ப் பண்புமேம் படீஇய
ஓங்குயர் மலையத் தருந்தவ னுரைப்பத்
தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்" (காதை - க.)

என்னும் மணிமேகலையடிகளிற் காண்க. காந்தமன என்னும் மற்றொரு சோழன், பரசுராமரது கொடுமையினின்று தப்ப, இம் முனிவரது பேரருளை நாடிய வரலாறு "அமர முனிவ னகத்தியன் றனாது, துயர்நீங்கு கிளவியின் யான்றோன் றளவுங், ககந்தன் காத்தல்" என அந்நூலானே (உஉ சிறைசெய்காதை; அடி,—நடு-நஎ) அறியலாம். இக்காந்தமன்னவன் பொருட்டே, காவிரியைச் சோணாட்டிற் பிரவகிக்கும்படி அவ்வகத்தியனார் செய்தாரென்பது,

"செங்கதிர்ச் செல்வன் திருக்குலம் விளக்கும்
கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட
அமர முனிவன் அகத்தியன் றனாது
கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை
செங்குணக் கொழுகிய சம்பாபதி (புகார்)

எனவரும் அந்நூற்பதிகத்தால் அறிக. இதனுள், "அமர முனிவனகத்தியன் றனாது, கரகங் கவிழ்த்த காவிரி" என்பதனால், அகஸ்தியாசிரமமொன்று, பஞ்சவடிக்குப்பக்கத்திலன்றித் தென்னாட்டிலும் இருந்தமை வலிபெறும். இவ்வாறே, பாண்டியனுக்கு அகத்

நியனார் மிகவும் அருள்செய்தவரென்பது, சென்ற பகுதியில் "மது ரைக்காஞ்சியாராய்ச்சி" என்னும் என்வியாசத்துப் பரக்கக் காண லாம். "மகாபருவதமாகிய விந்தியமலையை அடக்கினவராயும், சமு த்திரத்தை முற்றுங் குடித்து வெளியிட்டவராயுமுள்ள அகஸ்தியமா முனிவர், இப்பாண்டியர் தமது அசுவமேதயாகத்தை முடித்து அவ பிருதஸ்நானஞ் செய்தவுடன், வெகு அன்போடும் இம்மன்னரிடம் வந்து 'தங்களுடைய ஸ்நாநம் சரிவர முடிந்ததா? என்று கேட்கிறார்' என்று காளிதாசரும் இரகுவம்சத்துக் (சருக்-சு; சுலோ-சுக) கூறு தல், அகஸ்தியர் பாண்டியர்க்குள்ள நெருங்கியதொடர்பை விளக்கும்.

இனி, விந்தியத்தின் தென்பாலுள்ள நாடுகளைக் குறித்துவந்த வான்மீகிமுனிவர், "சோளாந் பாண்ட்யாந் ஸகேரளாந்"—(சோழ தேசத்தையும் கேரளத்தோடுகூடிய பாண்டியதேசத்தையும்) என்று கூறுகிறார். "ஒருவினையொடுச்சொல் லுயர்பின்வழித்தே" என்னுந் தமிழ்வழக்குப்படி, 'கேரளத்தோடுகூடியபாண்டியம்' என்பது கேரளதேசம் உயர்ந்ததென்பதைக் குறிக்குமாயினும், வடமொழி வழக்கு இதற்கு நேரெதிராகும்; என்னை? "ஸஹயுக்தே அப்பிரதா னே" என்பது அதனிலக்கணமாதலின். அஃதாவது "ஒருவினை யொடுச்சொல் இழிபின் வழித்தே" என்பதாம். இங்ஙனம் 'பாண ட்யாந் ஸகேரளாந்' என அப்பிரதானத்தில் கேரளத்துக்கு ஒடுக் கொடுத்திருத்தலால் வால்மீகி காலத்துப் பாண்டியநாட்டுக்குள்ளட ங்கிச் சேரநாடிருந்தது போலும்!

இனி, மலயத்திலுள்ள அகத்தியமுனிவர்பால் விடைபெற்ற பின்னர், தாமிரபர்ணிநதியைத் தாண்டும்படி கூறப்படுதலோடு, அந் நதி சமுத்திரத்துச் செல்லுமாறுஞ் சொல்லப்படுகிறது.* அதன் பின்பு பாண்டியனது நகரவிசேடம் வருகின்றது. இங்ஙனம், அந் நதி சமுத்திரஞ்சார்தலைக்கூறிப் பாண்டியநகரவிசேடத்தை வால் மீகி குறித்தலால், அப்பட்டணம் தாமிரபர்ணியின் சங்கமத்தயலில் இருந்ததாகக் கருதத்தக்கது. "அதன்பின் சமுத்திரத்தையடைந்து காரிய நிச்சயத்தைச் செய்யுங்கள்" என முடிவில் மகருஷிகூறுதலா லும் இதுவே கருத்தாதல் காணலாம். இனி, இப்பாண்டியனது நகர விசேடத்தைப்பற்றி வால்மீகி கூறும் சுலோகம் வருமாறு:—

* தென்பால்,வையை முதலியநதிகளை முனிவர் கூறாமைகவனிக்கத்தக்கது

𑌤𑌤𑍋 𑌹𑍇𑌮𑌮𑌯𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌮𑌣𑌿𑌵𑌿𑌭𑍂𑌷𑌿𑌤𑌮𑍍।
𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌕𑌵𑌾𑌟𑌂 𑌪𑌾𑌣𑍍𑌡𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌗𑌤𑌾 𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌥 𑌵𑌾𑌨𑌰𑌾𑌃॥

இதன்பொருள்:—“பிறகு, பொன்னிறைந்ததாயும் அழகுடைத்தாயும், முத்துமயமான மணிகளால், அலங்கரிக்கப்பட்டதாயும், பாண்டியர்க்கு யோக்யமானதாயுமுள்ள கவாடத்தை வானரவீரர்காள்! பார்க்கக்கடவீர்” என்பது. இவ்வுரை, திலகர் தீர்த்தர் கோவிந்தராஜர் என்னும் பழைய இராமாயண வியாக்யாதாக்களுள் பின்னவர் கூறியது. முன்னவரிருவரும் “பின்பு பொன்னிறைந்ததாயும், அழகுடைத்தாயும், முத்துமணி யிவற்றால் அணியப்பட்டதாயும் நகரத்தரணோடு இணைக்கப்பட்டதாயுமுள்ள பாண்டியர் வாயிற்கதவை வானரர்காள்! போய்க்காண்பீர்” என்னும் பொருள்படக்கூறினர். அஃதாவது—“கவாடம் - பாண்ட்யாநாம் -நகரத்வாரகபாடம்”—(பாண்டியரது நகரவாயிற் கதவு) - என்பது தீர்த்தீயம்; “யுக்தம்—புரப்ராகாரகடிதம்” (நகரத்தெயிலோடு இணைக்கப்பட்ட) என்பது திலகம். இங்ஙனம், வடநாட்டாராய் விளங்கிய உரையாசிரியர் கருத்திவையாயினும், தென்னாட்டாராய் வான்மீக த்துக்குரையிட்ட கோவிந்தராஜர் முழுக்கருத்தும் ஈண்டு ஆராயத்தக்கது. அவர் அடியில் வருமாறு எழுதுகிறார்.

𑌤𑌤𑍋 𑌹𑍇𑌮𑌮𑌯𑌮𑌿𑌤𑌿॥ 𑌪𑌾𑌣𑍍𑌡𑍍𑌯𑌾𑌨𑌾𑌂-𑌪𑌾𑌣𑍍𑌡𑍍𑌯𑌰𑌾𑌜𑌾𑌨𑌾𑌂। 𑌯𑍁𑌕𑍍𑌤𑌂-𑌯𑍋𑌗𑍍𑌯𑌂। 𑌕𑌵𑌾𑌟𑌂-𑌅𑌨𑍇𑌨 𑌨𑌗𑌰𑌂 𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇। 𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌮𑌣𑌿𑌵𑌿𑌭𑍂𑌷𑌿𑌤𑌂; 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌸𑍍𑌯𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌸𑍍𑌥𑌾𑌨𑌤𑍍𑌵𑌾𑌤𑍍॥

பொருள்:—பாண்டியாநாம் - பாண்டிய ராஜாக்களுடைய; யுக்தம் - யோக்யம். கவாடம் - இதனால் நகரம் குறிக்கப்படுகிறது. முக்தமணிவிபூஷிதம் -முத்துமயமான மணிகளால் அலங்காரமாகிய: (எ)ன்றது அது பிறக்குமிடமாதலால் (அங்கே அது மிகுந்துள்ளது) (எ)ன்பதுகருத்து.”

இவ்வரும்பதவுரையால், ஸ்ரீகோவிந்தராஜர் “முத்துமயமான மணிகளால் அலங்காரமானதும் பாண்டியர்க்கு யோக்யமானதுமான பாண்டியரது கவாடபுரம்” என்பதே பொருளென்று கருதினராதல் காண்க. முற்கூறிய தீர்த்தீய திலக வியாக்கியானங்களினும், இ

வியாக்கியானம், தமிழ்வழக்குகளைத் தழுவி மிகச்சிறந்து நிற்றல் தெளியப்படும்; என்னை? "கபாடபுரம்" என்பது பழங்காலத்தே பாண்டியராஜதானியாய்த் தமிழாராய்ச்சி செறிந்துநிகழ்ந்த நகரமென்பதற்கு இலக்கியங்கள் மிகுதியுமுண்டாதலால் என்க. இதனை, இறையனார் களவியற் பாயிரத்தில் "அவர் (இடைச்சங்கத்தார்) சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத்தென்பது" எனவும்; சிலப்பதிகார உரைப்பாயிரத்தே "இரண்டா மூழியதாகிய கபாடபுரத்தில் இடைச்சங்கத்துத் தொல்காப்பியம் புலப்படுத்திரீஇய நிலந்தரு திருவிற் பாண்டியன் அவைத்து" எனவும் "இவ்வகையரசரிற் கவியரங் கேறினர்; ஐவகை யரச ராயிடைச்சங்கம், விண்ணகம் பரவும் மேதகுகீர்த்திக்,கண்ணகன் பரப்பிற் கபாடபுர மென்ப"* எனவும் வருதலாற் காண்க. திலக முதலிய வியாக்யானங்களின்படி, கவாடமென்பது பாண்டியரது வாயிற்கதவெனக்கொண்டு, அதற்கேற்ப 'யுக்தம்' என்னும் சொல்லை நகரத்தரணேடிணைக்கப்பட்ட என்னும் பொருள்படுத்திக் கவாடத்துடன்பொருத்தல் சிறவாமை கண்டு, அது பாண்டியரது நகரத்தையே குறித்ததாகல் வேண்டுமென சுலோகவியல்பையறிந்து கோவிந்தராஜர் எழுதியவுரை ஈண்டுப் புகழத்தக்கதாம். கபாடமென்னும் பெயர்கொண்ட பாண்டிய நகரமொன்றிருக்கும்போது, கதவென்னல் வேண்டா என்பது எளிதில் விளங்கத்தக்கதன்றோ. இனி, "முக்தாமணி விபூஷிதம்" என்னும் அடைக்கு கோவிந்தராஜர், முத்துமணியுமிவற்றால் அலங்கரிக்கப்பட்ட எனக் கதவுக்கேற்பக் கொள்ளாது, "முத்துமயமானமணிகளால் அலங்காரமாயுள்ள; என்றது அது பிறக்குமிடமாதலால் (அந்நகரத்தில் அது மிகுந்துள்ளது) என்பது கருத்து" என்று நகரத்துக்கேற்பக் கூறியதும், அவரது தமிழ் வழக்கினை யறிந்தெழுதும் உரைத்திட்பத்தைக் குறிக்கின்றது. என்னை? கபாடபுரம், தாமிரபர்ணியின் சங்கமத்தயலில் உள்ளதாதலாலும், அந்நதி கடலுடன் கலக்குமிடத்துப் பிறக்கும் முத்து ஆணித்தரமானதென நூல்கள் கூறலாலும் என்க. இதனை "தலங்காவலன்றஞ்சை வா

---

*சிலப்பதிகார உரைப்பாயிரத்தில், மகாமகோபாத்யாயர். ஸ்ரீ வே. சாமிநாதையரவர்கள் காட்டியிருக்கும் பழைய அகவலொன்றைப் பார்க்க.

ணன்முந் நீர்பொருந் தண்பொருந்தத் திலங்கார் வலவடக் * கொங் கை வெற்பா” என்னும் பொய்யாமொழியார் வாக்காலும் (தஞ் சை வாணன்கோவை, பாட்டு-௫௪) ஸ்ரீகாளிதாசரும், “ரகுமகாராஜ ருக்கு அப்பாண்டியர், தாமிரபர்ணி சமுத்திரத்தில் விழுமிடத்திலிரு ந்து எடுத்த நன்முத்துக்களை, தாங்கள் அவ்வளவு நாளாகச் சேர் த்து வைத்திருந்த புகழைக் கொடுப்பதுபோல, கொடுத்தார்கள்” என இரகுவமிசத்துக் (ஸர்க்-௪; சு-௫௦) கூறுதலாலும் அறியலா கும். இதனால், ஆணிமுத்துக்களின் வளத்தால் அலங்காரமாயுள்ளது கபாடபுரமென்பதாயிற்று.

இங்ஙனம் “விண்ணகம் பரவு மேதகு கீர்த்திக்-கண்ணகன் பர ப்பிற் கபாடபுர” த்தை, தெய்வப்புலமை வால்மீகிபகவான் சிறப் பித்துக் கூறியிருத்தல்போலவே, அவரால் வேறு தமிழ்நாட்டு முக் கிய பட்டணமும் கூறப்பட்டதுண்டோ எனின்; உண்டு. வானர வீரரிற் சிலரை, சுக்கிரீவன் மேல்நாடுகளில் தேடவிடுக்கும்போது அடியிற்கண்ட சுலோகம் சொல்லப்பட்டுள்ளது.

मरीचीपत्तनं चैव रम्यं चैव जटीपुरम्।
अवन्तीमङ्गलोपां च तथा चाक्षीवतं वनम्॥

(கிஷ்கிந்தாகாண்டம், ௪௩-ம் அத்யாயம், ௧௨-ம் சுலோகம்)

இச்சுலோகத்துக் கண்ட நகரமுதலியவைகளில், முதலிற்குறி த்த முரசீபத்தனம் என்பது, அம்மேல்கடற்கரையிலுள்ள முசிரி என்னும் பட்டணமேயாம். இது, முற்காலத்தே, சுள்ளியென்ற பேர்யாறு கடலுடன் கலக்கும் இடத்துவிளங்கிய பெருந்துறை முகமாயும், சேரவரசர்க்கு முக்கியபட்டணங்களில் ஒன்றாயும் இருந் ததென்றும், மேனாட்டு யவனரது மரக்கலங்கள் மிளகு முதலியன ஏற்றுதற்கு இதுவே அக்காலத்து ஏற்றபட்டினமென்றும், மேற் றேயத்து யாத்திரைக்காரராகிய பிளினி தாலமி முதலிய யவனசிரி யர் குறிப்புக்களால் விளங்குதலோடு, “சேரலர், சுள்ளியம் பேர்யா யாற்று வெண்ணுரை கலங்க, யவனர் தந்த வினைமாண் கலம், பொன்னொடு வந்து கறியொடு பெயரும், வளங்கெழு முசிரி” என் னும் அகநானூற்று ௧௪௯-ம் பாட்டானும் தெளிவாகின்றது. சே

*“தஞ்சைவாணனது கடலையெதிரும் தண்ணிய பொருநையாற்றின் கண் பிறந்தொளிரும் முத்துக்கள் கோத்த வலியவடம்” என்பது இதனுரை.

ரர்க்குரிய இப்பட்டினத்தை, பழங்காலத்துப் பாண்டியனொருவன் வளைந்துகொண்டு பெரும்போர் புரிந்து, இதன்கணிருந்த சேரரது படிமமொன்றைக் கவர்ந்து சென்றனன் (அகம்-கசக). இத்தகைய பட்டினம், மிகுந்தபழைமையும் மேல்கடற்பக்கத்ததாயுமுண்மையால் இதனையே வான்மீகிமுனிவர் 'முரசீபத்தனம்" என்றனராதல்வேண்டும். முசிரி என்பதை வான்மீகி முரசி என்று ஒருபடியாகத் திரித்துவழங்க, பழையோராகிய **வராகமிகிரர்** பிரகத்சம்ஹிதையில், இதனை **மரீசிபத்தனம்** என வழங்கினர். மரீசி - மிளகு; மிளகின் வளமிகுதியைக் கொண்டிருந்தமையால் அப்பட்டினம் அவ்வாறு மரீசி எனவழங்கி அதுவே தமிழில் முசிரி எனத் திரிந்ததுபோலும். வான்மீகியும் "மரீசிபத்தனம்" என்றே வழங்கியிருந்து, பின், படிப்போரால் "முரசீபத்தனம்" என மாற்றப்பட்டதென்றலும் இழுக்காது.

இங்ஙனம், வான்மீகியார் திருவாக்கில், சோழநாட்டின் தலைநகர் காணப்படாது போயினும், ஏனைச் சேரபாண்டிய இராஜதானிகள் குறிக்கப்படுதல் தெளிவாகப் புலப்படுகின்றது. இதனால், அம்முனிவர்க்கு, வடநாட்டிற்போல, தமிழ்நாட்டுவிசேடங்கள் சிலவும் நன்குதெரிந்திருந்தனவென்பது வெளியாகின்றது. அன்றியும் ஆரணியகாண்டத்தில் இராவணனுடன் மாரீசன் இராமனது பெருமையை எடுத்துரைக்கும்போது, "இராமனுக்கு நான் மிகவும் பயந்திருக்கிறபடியால், ரகாரத்தில் தொடங்கும் ரத்னம் ரதம் என்ற பெயர்கள்கூட எனக்குப் பெரும்பயத்தை உண்டாக்குகின்றன" என்றதாக வான்மீகி கூறியிருப்பதில்—"ரேபாதீனி" என்னும் வடமொழி வழக்கை யெடுத்தாளாது "ரகாராதீனி" எனத் தமிழ் வழக்குப்படி கூறுதலால், அம்முனிவர் தென்னாட்டார்பேசுமாற்றைத் தெரிந்திருந்தவராதல் வேண்டுமென்று கருதுவாருமுளர். இதற்கேற்ப, தலைச்சங்கப்புலவர்களில் "வான்மீகியார்" என்னும் புலவரொருவர் காணப்படுகின்றார். புறநானூற்றில்—

"பருதி சூழ்ந்தவிப் பயங்கெழு மாநிலம்
ஒருபக லெழுவ ரெய்தி யற்றே
வையமுந் தவமுந் தூக்கிற் றவத்துக்
கையவி யனைத்து மாற்றா தாகலிற்
கைவிட் டனரே காதல ரதனால்
விட் டோரை விடாள் திருவே
விடாஅ தோரிவள் விடப்பட் டோரே."

என்னும் ஙருஅ-ம் பாடல் வான்மீகையார் பாடியதென்று காணப்படுகின்றது. இப்பாடல், வான்மீகியார்பாடல் என்பதற்கேற்ப, தவத்தின் பெருமையை மிகவழகாக வ்ர்ணித்துநிற்பதுங் காண்க. இவற்றை நோக்கும் போது, "தபஸ்வாத்யாயநிரதம்" என்று தொடங்கிய மகருஷி வான்மீகிபகவான், தலைச்சங்கத்தை அறிந்திருந்தவர் தாமோ? என்ற ஐயமுண்டாதல் இயல்பேயாம். இதற்கியைய, திரேதாயுகத்தில் வால்மீகி யிருந்ததாகக் கூறுவதும், இரண்டாமூழியிற் கபாடபுரமிருந்ததாகத் தமிழ்நூல்கள் கூறுவதும் ஒருவாறு ஒற்றுமையும் பெற்றதாயிருக்கிறது. அன்றியும், வால்மீகி முனிவர், தம் ஆதிநிலையில் ஆரியரின்வேறாய வேடர்கூட்டத்துடன் சேர்ந்து கொடுந்தொழில் செய்துவந்து, பின் மகருஷியானதாகக் கூறப்படுஞ்சரித்திரம், இவர் இத்தேசத்துப்பூர்வகுடிகளுடன் சம்பந்தமுடையராயிருந்ததைக் காட்டுமென்றும், தமிழ் அப்பூர்வகுடிகள் வழங்கிய பாஷைகளிற் சிறந்ததாயிருந்ததென்றும், வால்மீகியார் வசித்தபிரதேசத்தில் தமிழ் முற்காலத்து வழங்கியிருந்ததென்பதற்கு இப்போதும் அநேக சான்றுகளுண்டென்றும் * பிறவுஞ் சில ஏதுக்கள் கூறுதலுமுண்டு; இவற்றை ஈண்டுவிரிப்பிற்பெருகும். இனிக் கம்பர் வால்மீகி கூறியவாறன்றி, வானரவீரர் தேடற்குரிய விடங்களை வேறாகவுரைப்பர். அவற்றை அவரருளிய இராமாவதாரத்துக் கண்டுகொள்க.

பத்திராசிரியர்.

---

* வால்மீகிமுனிவரது ஆசிரமம் சித்திரகூடம். இது 'மத்திய இந்தியா'வில் 'பண்டில்கண்ட்'பிரதேசத்தில் உள்ளதென்பர். இவ்விடங்களில் தமிழ்ப்பாஷை முன்னாளில் வழங்கியிருக்கக் கூடுமென்பதற்கேற்ப, இம்மத்தியஇந்தியாவிலே பெரும்பான்மையான இடங்களிலும், மத்தியமாகாணங்களிலும், அதன்வடபாற் சூடியநாகபுரிப்பிரதேசங்களிலும், அதற்கு வடக்கேயுள்ள 'ராஜ்யஹால்' மலைப்பக்கத்துமுள்ள—அரவணரும் (Oraons) மலையருமு (Malar) பாணியரும் (Panians) தமிழ்ச்சாதியின் சரியான அச்சாக இருக்கின்றாரெனப்படுகின்றது. இவரில் மத்தியமாகாணத்தும் சூடியநாகபுரியிலுமுள்ள பழைய திராவிடஜனத்தொகை 1901-ஆம் ஆண்டு ஜனகணிதத்தின்படி, 592,351-என்றும், அம்மக்களது பாஷை "குறுக்கு" (Kurukh) அல்லது "அரவன் (Oraon) என்றும்; இவர் மொழி, திராவிட பாஷைகளில் ஏனையவற்றினும் தமிழ்கன்னடங்களுடன் மிக நெருங்கிய சம்பந்தமுடையதென்றும் தெரியவருகிறது. இனிக் கங்கைக்கரையின் கண்ணுள்ள 'ராஜ்மஹால்' மலைப்பிரதேசங்களில்வசிக்கும் தமிழ்ச்சாதியார் "மலையர் (Malar) எனவும்; அவர் பாஷை "மலாடு" (Malto) எனவும் வழங்கப்பெறுமென்றும், இம்மக்களின்தொகை, அக்கணிதப்படி, 60,777-என்றும் இவர் மேற்கூறிய 'அரவன்' களுடன் தொடர்புடைய சாதியாரேயென்றும் சொல்லப்படுகின்றன. (The Imperial Gazetteer of India; Vol I—New Edition-1907—pp. 296; 381—382.)

# இராமாவதாரச் செய்யுட் பாடாந்தரம்.

(முற்றொடர்ச்சி)

## ட்சிப்படலம்,

இன்ன லம்பர வேந்தற்கியற்றிய
பன்ன லம்பதி னாயிரம்படை
கன்னன் மூன்றிற் களப்படக் கால்வளை
வின்ன லம்புகழ்ந் தேற்றி வெதும்புவாள்.

என்னும் உ௨-ம் செய்யுள்.

இன்னல் செய்கர னாதிய ரோடெழும்
பன்னு வெள்ளக் கணக்குறும் பல்படை
கன்னன் மூன்றிற் களப்படக் கொன்றபோர்
வின்ன லத்தினை யுன்னி விரும்புவாள்.

எனக் காணப்படுகின்றது. கரனாதியர் எனப் பெயர் வெளிப்படை யாய் வருதலானும், கூறியது கூறலாகாமையை 'விரும்புவாள்' என்பது விலக்கி நிற்றலானும் பின்னையதே சிறப்புடைத்து. விரும்புவாள் விரும்பிவருந்துவாள் என்க.

### ௩௪

'வெவ் விராதனை' என்னும் உகூ-ம் செய்யுளின் பின்னர்;

இன்ன வெண்ணி யிடருறு வாண்மருங்
குன்றொ ராயிர கோடி யரக்கியர்
துன்னு காவலுட் டூய திரிசடை
யென்னு மங்கை துணையின்றி வேறிலாள். எனவும்,

தரும நீதி தழுவிய சிந்தைகொண்
டரியவீடணன் றந்தரு ளொண்டொடி
திரிச டைக்கொடி நாடொறுந் தேற்றுஞ்சொ
லருளி னாற்றன தாவிபெற் றுய்ந்துளாள். எனவும்,

அன்ன ளாய வருந்ததிக் கற்பினாண்
மன்னு சோலையின் மாருதி யும்வரத்
தன்னி டந்துடித் தெய்துறச் சானகி
யென்னு மங்கை யினிதிருந் தாளரோ. எனவும்,

மூன்று செய்யுள்கள் காணப்படுகின்றன. இவை மூன்றும் ஈண்டுப் பொருத்தமுடையனவே. இனிதிருத்தல் - இடந் துடித்தலால் (தனக்கு நன்மை வரும்போதும் என்று சிறிது) இனிமையோடு இருத்தல்.

ஷை

நலந்துடிக் கின்றதோ நான்செய் தீவினைச்
சலந்துடித் தின்னமுந் தருவ துண்மையோ
பொலந்துடி மருங்குலாய் புருவங் கண்முதல்
வலந்துடிக் கின்றில வருவ தோர்கிலேன்.

என்னும் ௩௨-ம் செய்யுளில், 'தருவதுண்மையோ' என்பது 'தருவதோவிடர்' எனக் காணப்படுகின்றது. தருவது இன்னதெ ன்பது வெளிப்படையாய் வருதலிற் பின்னையதே பொருத்தமுடை த்து.

ஷை

நஞ்சனை யான்வனத் திழைக்கு நாளிடை
வஞ்சனை யால்வலந் துடித்த வாய்மையா
லெஞ்சல வீண்டுதா மிடந்து டித்ததா
லஞ்சலென் றிரங்குதற் கடுப்ப தியாதென்றாள்.

என்னும் ௩௫-ம் செய்யுள்,

நஞ்சனை யானெனைக் கவர நண்ணிய
வஞ்சனை நாளுமென் வலந்து டித்ததா
லெஞ்சல விற்றைநா ளிடந்து டித்ததா
லஞ்சலென் றறிந்துரை யடுப்ப தியாதென்றாள்.

எனக் காணப்படுகின்றது. 'இழைக்குநாளிடை' என்பதும், 'வஞ்சனையால் வலந்துடித்த' என்பதும், 'அஞ்சலென் றிரங்குதற்கு' என்பதும் பொருத்தமின்மையிற் பின்னையதே பொருத்தமுடைத்து.

ஷை

புனைகழ லிராகவன் புயத்தை யோபுகழ்
வனிதையர் திலகத்தின் மனத்தின் மாண்மையோ
வினைகழ லரசரின் வண்மை வீக்கிடும்
சனகர்தங் குலத்தையோ யாதைச் சாற்றுகேன்.

என்னும் கஅ-ம செய்யுளில், 'மன்னர் மூலரசரின் வண்மையின் மிகுதிடும்—சனகர்தங் குலத்தையோ யாதைச் சாற்றுகேன்' என்பது, 'சனகர்தங்குலத்தையோ தருமங்காத்ததே—மன்னர்தம குலத்தையோ வாரைப்போற்றுகேன்' எனக் காணப்படுகின்றது. இச்சீதை யாற் பிறந்தகுலம் புகுந்தகுலம் இரண்டும் பெருமையடைந்தன என்னும் பொருள்பட்டு சிறந்து நிற்றலிற் பின்னையதே சிறப்புடைத்து. ஆனெனினும் இரண்டு வழுவமைதிபோலும்.

ஷெ

தருமமே காத்ததோ சழக்கன் றன்வினைக்
கருமமே காத்ததோ கற்பின் காவலோ
வருமையே யருமையே யாரி தாற்றுவா
ரொருமையே யெம்மனோர்க் குரைக்கற் பாலதோ.

என்னும் எரு-ம் செய்யுளில் 'சழக்கன்றன்வினைக்-கருமமே காத்ததோ' என்பது "சனகனல்வினைக்—கருமமே காத்ததோ' எனக் காணப்படுகின்றது. இராவணன்றீவினை கற்பைக் காத்ததாகக் கூறல் சிறப்பின்மையிற் பின்னையதே பொருத்தமுடைத்து. மகளிர் கற்பில்வழுவின், அது பிறந்தகுலத்துக்கே பெருவசையையுண்டாக்குமாதலிற் "சனகனல்வினைக்கருமமே காத்ததோ" என்றார். 'ஒருமையே' என்பதை "ஒருமையோடு" எனப் பாடாந்தரமாக்கிக் கொள்க.

## நிந்தனைப்படலம்.

"நானநெய் விளக்க நாலிரு கோடி நங்கைய ரங்கையி லெடுப்ப
மேனிவந் தெழுந்த மணியுடை யணியின் விரிகதி ரிருளெலாம் விழுங்கக்
கான்முதற் றொடர்ந்த நூபுரஞ் சிலம்பக் கிண்கிணி கலையொடுங் கலிப்ப
பானிறத் தன்னக் குழாம்படர்ந் தென்னப் பற்பல மழலையும் பகர"

என்னும் ங-ம்செய்யுளில், 'பற்பல மழலையும் பகர' என்பது 'பற்பல மங்கையர் படர' எனக் காணப்படுகின்றது. 'படர்ந்தென மழலையும் பகர' என்பது, பொருத்தமின்மையிற் பின்னையதே பொருத்தமுடைத்து.

ஷெ

அந்தரம் புகுந்த துண்டென முனிவுற் றருந்துயி னீங்கினு ளுண்டைச்
சந்திரவதனத் தருந்ததி யிருந்த தண்ணறுஞ் சோலையின் றனையோ

மந்திரம் யாதோ யாரொடும் போமோ வென்றுமா மனமறுக் குறலா
லிந்திரன் முதலோ ரிமைப்பிலா நாட்ட முகிழ்த்தன ருயிர்ப்பவிந் திருப்ப.

என்னும் ௪-ம் செய்யுள்,

அந்தரம் புகுதற் குன்னினன் முனிவுற் றருந்துயி னீத்ததோ வதன்மேற்
சந்திர வதனத் தருந்ததி யிருந்த தண்ணறுஞ் சோலைபுக் குறவோ
மந்திரம் யாதோ யாரொடும் போமோ வென்றுதம் மனமறுக் குறலா
லிந்திரன் முதலோ ரிமைப்பிலா நாட்டத் தெனைவரு முயிர்ப்பவிந் திருப்ப.

எனக் காணப்படுகின்றது. 'அந்தரம் புகுந்த தூண்டென முனிவுற் றருந்துயி னீங்கினன்' என்பதும், 'சோலையின் றனையோ' என்பதும், பொருத்தமில்லனவாதலிற் பின்னையதே பொருத்தமுடைத்து.

ஷை

கூசி யாவி குலைவுறு வாளையு
மாசை யாலுயி ராசழி வாளையும்
காசில் கண்ணிணை சான்றெனக் கண்டனன்
ஊச லாடி யுளையு முளத்தினன்.

என்னும் உஉ-ம் செய்யுளில், 'ஊசலாடியுளையு முளத்தினன்' என்பது 'ஊசலாடு முளமொழிந் தோதுவான்' எனக் காணப்படுகின்றது. சானகி கூசியாவி குலைதலாலும், இராவணன் ஆசையா லுயிரழிதலாலும் சானகியின் கற்பிற்குக் கேடின்மை யறிந்தானுதலின் முற்கொண்டசந்தேகம் நீங்கினன் என்பார் 'ஊசலாடுமுள மொழிந்து' என்றாராதலிற் பின்னையதே பொருத்தமுடைத்து.

ஷை

(வாழி சானகி) 'என்னும் உஙு-ம் செய்யுளின் பின்னர்,

என்ன வாழ்த்திய மாருதி யீதுநா
மின்னுங் காண்டு மெனமறைந் தெய்தினன்
சொன்ன வாளரக் கன்சுடு தீச்சுடு
மன்னை வைகுறு மவ்விடத் தாயினன்.

என ஒரு செய்யுள் காணப்படுகின்றது. இஃது ஈண்டுப் பொருத்தமுடையதென்பது, முன்பின் செய்யுட்களோ டியையுமாற்றாற் காண்க.

சி. கணேசையர்.

கடவுள் துணை

# உபாத்திமைத்தொழில்.

உலகத்துள்ளவர்களா னனுசரிக்கப்படுந்தொழில்கள் பல. தொழிலாவது, உலகநடத்தற்கேதுவாய்த்தன்னயமும் பிறர்நயமுங்கருதி ஒருவர் நியதியாகச் செய்யுமுயற்சியேயாம். அங்ஙனம் தொழில் செய்யுங்கால் ஓரேதொழிலைச் செய்வோரெல்லாந் தம்முளொன்று கூடித் தாம் சிறப்படைதற்கேதுவாய பிரமாணங்களியற்றி ஓர் சங்கமாக வாழ்வர். இதனானே அத்தொழிலு மதனனைத்தொழிலாளரு நன்கு மதிக்கப்பட்டுச் சிறப்படைதல் நிச்சயம். இதுவே இக்காலத்தில் ஐரோப்பா முதலிய மேலைத்தேசங்களிலுமுள்ள வழக்கு. உதாரணமாகச் சட்டவித்தை கற்று நியாயதுரந்தரராயினோரொரு கழகமும், வயித்தியங்கற்று வயித்தியத்தொழில் பூண்டவரொரு கழகமும், வர்த்தகஞ்செய்வோர் தம்முளொருகூட்டமும், மலைப்பிரதேசங்களிற் பயிர்செய்வோர் ஒரு கூட்டமும் உடையராயிருப்பர். இப்படியே யொவ்வோர்தொழிலாளருந் தம்முளோர் சங்கம் சேர்ந்து ஒருவர்க்குச் செய்ததீங்கு அச்சங்கத்தாரெல்லார்க்குஞ் செய்ததுபோலவும் ஒருவருக்குவந்தபெருமை எல்லோர்க்கும் வந்தது போலவும் பாவித்துச் சகோதரபாவத்துடன் வாழ்வர். இவ்விதமாயுள்ள தொழில்கள் மேலோங்குவதும் அல்லாதன அத்தொழிலாளருளொற்றுமையின்மையால் நசிப்பதும் யாவருமனுபத்திற் காணலாம்.

இங்ஙனமாய தொழில்களுட்சிறந்தது உபாத்திமைத்தொழிலே. என்னை? பொருண் முதலியன தேடியவற்று ளிப்பூதவுடம்பிற்கு மாத்திரமுறுதிசெய்ய இயன்றனவாய் மற்றத்தொழில்களைக் கற்றற்கும் இன்றியமையாக்கருவியுஞ் "சிற்றுயிர்க்குற்ற துணை" யுமாகிய கல்வியைப் போதிக்குந் தொழிலாதலின். மேலும் உபாத்தியாயரே எச்சாதியாரையு நன்னிலைப்படுத்துயர்த்துபவர்: அவ்வச்சாதிச்சிறுவர் மனதைத் தெருட்டியருளிவிடுபவரவராதலின். தரிசாகக் கிடக்கு நிலத்தை உழுதுபண்படுத்தி அதிலிடும் வித்து முளைத்துத்

தழைத்தோங்குமாறு செய்யு மேழிச்செல்வனதுபோலத் தன்னை யடைந்த சிறுவரது மனதைத் திருத்திப் புத்தியை விருத்தியடைய ச்செய்து சித்தத்தையூக்கப்படுத்தும் உபாத்தியாயன்றொழில் மிக்கு யர்ந்த தென்பது. ஒருபாத்தியாயனுக்குக் கீழுள்ள சிறுவர்கள் அவன்றன்மையே சிறிதுசிறிதாகப் பின்பற்றுவர். 'அரசனெவ்வழி யவ்வழிக் குடிகள்" என்றபடி, உபாத்தியாயன் செய்வன, சொல்வன, எண்ணுவன ஒவ்வொன்று மவன்கீழ்க்கற்பவரிற் பிரதிபலித்தலொ ருதலையாம். ஒருபாத்தியாயனது செயல் மாணுக்கனுக்கு எழுத வாசிக்கக் கற்றுக்கொடுத்தல்மாத்திரமன்று. அஃது அவன்செய்கை யின் ஓர் மிகச்சிறுபாகமேயாம். மாணுக்கன் தன்னுசிரியனிடம் பழ கிய குணமே அவனைதெஞ்சிய சீவியத்துச்சுகதுக்கங்களுக்குக் காரண மாகும். ஆகவே ஒருவன் றன்னுசானிட மடையுநன்மைதீமைகள் அவன் செய்யுஞ்சீவியத்தின் குணுகுணங்களானறியப்படும்.

ஆதலின் உபாத்தியாயனது தொழிலின் பயன் உடனுக்குட ன் அறியப்படுவதன்று. அவனுல் மாணுக்கனுக்கு இவ்வளவு நன் மையல்லது இவ்வளவு தீமை விளைந்ததென்றும், இவ்வளவுவேலை தான்செய்யப்பட்டது: இது இத்தனைரூபா இத்தன சதம்பெறு மென்றும் அளந்து நிச்சயித்தல்கூடாது. ஓர் நோயாளிக்கு வைத் தியஞ்செய்வோன்றிறம் அந்நோய்நீககம் அல்லது நீங்காமையானும், நியாயத்தலத்தில் ஓர் கட்சிக்காரனுக்காக வாதிக்கு நியாயதுரந்தரன் றிறம் அவனவ்வழக்கை வெல்வது அல்லது தோற்பதனுலும நிதா னித்து அளக்கப்படும். உபாத்தியாயன்றொழிலோ அங்ஙனமன்று; அவன செய்கையின் பயனும பயனின்மையும் ஒருநாள் இருநாள் அல்லது ஒருமாதமிருமாதங்களில் அல்லது ஒருவருடமிருவருடங் களிற்றுனு நிச்சயிக்கப்படாமையின். ஆதலினன்றே கற்போரெ வருங் கற்கப்படுபவராகிய நல்லாசிரியரை அடைதல்வேண்டியதவசிய மாயிற்று.

இங்ஙனமற்றைய தொழிலெவற்றினுமிக்க மேம்பாடுடைத்தாய இவ்வுபாத்திமைத் தொழில், அததொழிலாளரு ளொற்றுமையின்மை யாற் சில விசேட குறைவுகளையுடைத்தாகின்றது. அவைதாம், உபா த்தியாயருடைய வேதனமிகக் குறைவாயிருத்தலும், அதனுலும்வே

று காரணங்களாலும் அத்தொழிற்கு மதிப்புக்குறைவு மென்பன. படிப்பித்தலுமொருதொழிலா யுறுதிபெற்றுக்கட்டுப்பாடடையாததே அவற்றின்காரணம். அக்கட்டுப்பாடும் பலதிறத்தராய உபாத்தியாயருந் தத்தந் தராதரத்துக்கேற்பச் சங்கங்கள் சேர்ந்து ஒற்றுமையுடையராய வழியே பெறப்படும். உபாத்தியாயருள் ஒற்றுமையின்மையால் அவர் வேதனமிகக்குறைய அதனாலத்தொழிற்குக் கௌரவக் குறைவாயிற்று. குறையவே அத்தொழிலிற் பிரவேசிப்பவருமரியராயினர். இக்காலத்திற் சிலர் ஓர்பாடசாலையி லுபாத்திமைத்தொழிலிலமர்ந்து, மற்றொரு உத்தியோகத்துக்கு வேண்டிய பரீக்ஷைகளுக்குப் படித்துத்தேர்ந்து அதிற் சித்தியெய்தியவுடன் தமது உபாத்திமைத்தொழிலைக் கைவிடுவர். இப்படிப்பட்டவர்களின் கருத்தெல்லாம் வேறுத்தியோகத்தின் மீதிருக்குமல்லாமல் பாடசாலையின் மீதிராது. உபாத்தியாயரெல்லாமொன்றுகூடி "உபாத்திமார் சங்கம்" என ஓர் சங்கத்தினராய் இத்திற உபாத்தியாயனின்ன வேதனத்துக்குக் குறையினிசை வதில்லையென ஓர் கட்டுப்பாடுசெய்து கொள்ளினன்றி அவர் வேதனமுயர்வதும் அத்தொழிலாளர்க் கூக்கமுமின்றாம். மேலும் உபாத்திமைத்தொழிற்குக் கௌரவக்குறைவு நேர்ந்தது. அத்தொழிற்கருகரல்லாதாரனேகர் அதிற்பிரவேசித்தவினுலுமாம்—உபாத்திமைத்தொழில் மிக இலகுவானதென்றனேகர் எண்ணுகின்றனர். அது தவறு. படித்தவர்களெல்லாந் தாம் படித்ததைப் பிறர்க்குக்கற்பித்தலிலும் வல்லுநரென்லகூடாது. வல்லுநரென்றல் செல்வர்களெல்லாம் உதாரகுணமுடையரெனலைபோல அவ்வியாத்தியாம்.

கற்பிக்குந்திறனுமொருவர்க்கியற்கையில் அமைந்திருத்தல் விசேடம். "வரமுடன்புவியிற்றேன்றுங்" கவீச்சுரர்கள்போல உபாத்தியாயர்களும் அதற்கெனப்பிறத்தல்வேண்டுமென்பது ஒருசாரார் கொள்கை. அது பொருந்தாது. என்னை? கவிகளுள் அதியுத்தம கவியே யுலகத்திற்கு வேண்டப்படுபவன். அன்றி மற்றை அதமர் மத்திமரன்று; உபாத்தியாயருளோ உத்தமரேயன்றி யேனைய மத்திமருங் கொள்ளப்படுபவராவராதலின். போதனைசக்தி இயற்கையிலமையப்பெறாரெங்ஙன மத்திறமையடைவரெனின், அதுவும் அத

திறமையியற்கையிலமையப்பெற்ற நல்லுபாத்தியாயரையடுத்து பற்பல மாணாக்கர்க்குப் பற்பலவிஷயங்களைக் கற்பித்தலி லவர்கைக்கொள்ளும் விதிகளையும், பிரயோகிக்குமுபாயங்களையுமுற்றுநோக்கித் தாமுமவற்றைப்பயின்று கற்றலின்வருமென்க. போதனா ஞானத்தைக்கற்பித்தற்கெழுந்தன போதனாசிரியவித்தியாசாலைகள். "எட்டுச்சுரைக்காய் கறிக்குதவாத"துபோல் போதனாசிரியவித்தியாசாலையிற் போதனாஞானத்தைமாத்திரங் கற்றவளவில் நல்லாசிரியனாதலெங்ஙனமெனச்சிலர் நகையாடுவர். ஆயினுங் காரியங்களை நன்கு ஆராயுங்கால் அவர் நகைப்பின்பொருளன்மை தெள்ளிதிற்புலப்படும்.

உலகத்துள்ள எக்கருமத்தைச்செய்தற்கும் வேண்டப்படும் அறிவு இருவகைத்து. ஒன்று நன்குவகுக்கப்பட்டு ஒழுங்குபடுத்திய பொதுவிதிகளினறிவு. அதுவே சாத்திர அறிவு அல்லது சாத்திரஞானமெனப்படும். மற்றையது அச்சாத்திரஞானத்தை வெளிப்படையான் அல்லது குறிப்பினாற் றழுவிக் காரியங்களைச்சாதிக்குமிடத்துக் கரசரணாதியவயவங்களையுபயோகித்தலிற் கூர்மையுஞ்சாமர்த்தியமும் ஆகிய பிரயோகஞ்ஞானம். ஆதலின் போதிக்குமறிவும் "சாத்திரம்" "பிரயோகம்" என இருபாற்று. அவற்றுட்போதனாசாத்திரஞ்ஞானம் படிப்பித்தலிற்பீடிகையாயுள்ள பொதுவிதிகளுஞ்சிறப்புவிதிகளுமாம். பிரயோகஞ்ஞானம் பாடசாலையிற்செய்யப்படும் அப்பியாசம். பிரயோகம் முந்தியது. சாத்திரம் பிந்தியது. அது, "இலக்கியங்கண்டதற்கிலக்கணமியம்பல்" போலும். சாத்திர அறிவும் பிரயோகமும் ஒன்றற்கொன்று துணையாவனவன்றி வெவ்வேறன்று. படிப்பித்தற்கு வேண்டும் பீடிகை விதிகளையறியாது குருட்டுத்தனமாகச் செல்லும் அநுபவஞானியும் பிரயோகாநுபவஞ்சிறிதுமின்றிப் பகற்கனவுகாணுஞ் சாத்திரஞானியுமென இவ்விருவருந் தவிர்க்கப்படவேண்டியவர். சாத்திர அறிவும் அநுபவமுங்கலந்திருப்பவரே நல்லாசிரியர். சாத்திரஞானமில்வழிப் பிரயோகமும், பிரயோகமில்வழிச் சாத்திரஞானமுஞ் சிறப்படையா. கல்விகற்பிக்குமுறையைச் செவ்வனேகற்று உபாத்திமைத்தொழிலி லிதுகாறுஞ்செய்யப்பெற்ற சாதனங்களை நன்கு பயின்றவரேனும் அம்மாத்திரத்தில் அவர் நல்லாசிரியராகிவிடல் முடியாது. ஏனெனிற் கற்பி

த்தலின் மேலாந்தாரும் காலமிடங்களுக்கேற்ப மாறுபடும் பல காரியங்கள் சேர்ந்து சித்திப்பதொன்றும். சாதகமாகிய காரியங்களுள் படிப்பிக்குமுறைக்குரிய பீடிகாவிதிகளையுஞ் சிறப்புவிதிகளையுங்கற்றலும் ஒன்று. அங்ஙனம் அவைகளைக்கற்றலால் உபாத்தியாயத்தொழிலிற் புதிதாகப்பிரவேசிக்குமிளைஞன் அனேக தவறுகளினின்றுந் தப்பித்துக்கொள்வன்; தான் முன்செய்ததையாதல் மற்றையோர் செய்துவந்ததையாதல் குருட்டுத்தனமாய்ப் பின்பற்றிச் செய்யான். அன்றியுந் தன்னனுபவத்தைப் பொதுவிதிக்கிணங்கத் திருத்தி மிக்க பலனுறச்செய்வன்; அதுமட்டோ, தன் முயற்சியையுமோர் "தொழிலி"னது கௌரவத்தையடையச்செய்வன்.

ஆதலின், கற்பிக்குமறிவுக்குரிய சாத்திரஞ்ஞானம், உபாத்தியாயராவார் எல்லாராலு மவசியங் கற்கப்படவேண்டியதென்பது. அது போதனசக்தி இயற்கையிலமையப்பெறார்க்கேயன்றிப் பெற்றார்க்கு மிக்க துணையாம். போதனைமுறையைப்பயிறலால் மத்திமராயிருப்பவர் உத்தமராகவும், உத்தமராயிருப்பவர் உத்தமோத்தமராகவும் ஆவர். இப்போதனைமுறையும்—ஆசாரியன்றன்மையும், மாணாக்கன்றன்மையும், ஈதலியற்கையுமென மூவகைத்து. ஈயப்படுவனவற்றினியற்கை யீதலியற்கையுளடங்கும். அவற்றை மேற்கூறுதும்.

தி. சதாசிவ ஐயர்.

---

# தமிழணியிலக்கண வரலாறு.*

—————o—————

தமிழிலக்கணம் எழுத்துச்சொல் பொருள் யாப்பு அணியென்னும் ஐந்து பகுதிகளை யுடையது. இப்பாகுபாடனைத்து மடங்கிய இலக்கண நூல்கள் சிறுபான்மையா யுள்ளன. இவற்றுள் மிகப்பண்டையதும், இக்காலத்துத் தமிழுக்கிலக்கணமா யெடுத்தாளப் படுவதுமாகிய நூல் தோல்காப்பியம். இந்நூலாசிரியர் தமிழிலக்கணத்தை எழுத்துச் சொல் பொருளென மூவகையாக்கிக் கூறிப்

* காலஞ்சென்ற ஸ்ரீ. P. தருராயரவர்கள் "ஞானபோதினியில்" எழுதி வெளிப்படுத்தியது.

போந்தாரேயன்றி யாப்பணிகளை வேறதிகாரங்களா யமைத்துக் கூறிற்றிலர். இயலிசைநாடகமென்னும் முத்தமிழையுங் கூறுவதாகிய அகத்தியம் வெகுகாலத்துக்கு முன்னரே இறந்தமையின், அகத்தியனார் இயற்றமிழ்ப் பகுதிகளை யின்னமுறைமைப்பட வகுத்து நூல் யாத்தனரென்று துணிதலியலாது: ஆயினும்,

"எழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச்
செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி"

எனத் தொல்காப்பியப்பாயிரச் சூத்திரத்துப் பனம்பாரனார் கூறியிருத்தலின் அகத்தியனாரும் தமிழின் பாகுபாடுகள் எழுத்துச் சொற்பொருள்களென்றே கொண்டனர்போலும். இம் மூன்று பகுதிகளையும் எழுத்தின் பின் சொல், சொல்லின்பின் பொருள் என முறைகாட்டிக் கூறுத இவ்வாசிரியர் இவற்றி னிலக்கணங்களை விரவிக் கூறினரென்ப. முதனூலாகிய வகத்தியத்து விரவிக்கூறிய முத்தமிழில் இயற்றமிழை வேறுபிரித்து அதன் பகுதிகளாகிய எழுத்துச் சொற்பொருள்களை முறைப்படுத்து ஆசிரியர் தொல்காப்பியனார் நூல்செய்ததுபோலவே தொல்காப்பியப் பொருளதிகாரத் தடங்கிக் கிடக்கும் யாப்பணிகளைப் பிற்காலத்தார் வேறியல்களாக அமைத்து இலககணநூல் செய்தனர். பிற்காலத்துத் தோன்றிய இலக்கண நூல்களி லொன்றாகிய நன்னூலை யியற்றிய பவணந்தி முனிவரும் எழுத்துச் சொற் பொருள் யாப்பணிகளாகிய ஐந்து பகுதிகளையுமடக்கி நூல் கூறுவான் றொடங்கினமை;

"குணகடல் குமரி குடகம் வேங்கடம்
மெனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலு
ளரும்பொரு ளைந்தையும் யாவரு முணரத்
தொகைவகை விரியிற் றருகென"

என்று அந்நூலின் சிறப்புப் பாயிரத்துட் கூறியிருத்தலால் விளங்கும். எழுத்துச் சொற்களி னிலக்கணத்தைமாத்திர மினிதுணர்த்தித் தமிழ்ப்புலவர்களாற் புகழ்ந்துரைக்கப்படு மிந்நூல் ஏனைப் பொருள் யாப்பணிகளாகிய முப்பகுதிகளையு மடக்கிய நூலாயிருக்குமாயி னெத்துணைச் சிறப்பிற்றாகக்கொண்டாடப்படுமோ! தமிழினைக்

திலக்கணங்களைப் புணர்த்துவான் றொடங்கி [illegible] செய்த நூலினுட் பொருள்யாப்பணிகள் கணப்பட [illegible] ரணம் யாதோவறிகிலோம். இலக்கண [illegible] எழுத்து முதலிய பகுதிகளைத்தைப [illegible] நூலிற் [illegible]. இவ்வாறு இலக்கணப்பகுதிகள் யாவு ம[illegible]ங்கிய நூலையன்றி [illegible]ற்றுள் ஒவ்வொன்றனையே விரித்துக் கூறுமிலக்கணநூல்களு முள. அவை யாப்பருங்கலக்காரிகை முதலியன. மேற்கூறியவாற்றால் அணியிலக்கணம் பண்டைக்காலத்து நூல்களில் தனித்த ஓரதிகாரமாகக் கூறப்படவில்லையென்பதும் பிற்காலத்து நூல்களில் வேறோரதிகாரமாகக் கூறப்பட்டதென்பதும் விளங்குகின்றன. சங்கத்தார் காலத்துத் தோன்றிய இலக்கணநூல்களில் இப்பொழுதுள்ளதாகிய தொல்காப்பியத்தைச் சிறிதாராய்வோமாயின், இந்நூலாசிரியர் காலத்து அணியிலக்கணத்தின் நிலைமை இத்தன்மைத்தாயிருந்த தென்பது நன்குபுலப்படும். இப்பழைய நூலின் பொருளதிகாரத்துள்ள பலவியல்களுள் உவமவியல் ஒன்று. இவ்வியல் பலவகையாகிய அணிகளுள் உவமமொன்றனையே கூறும். பொருட்புலப்பாட்டினுக் குபகாரமுடைத்தாதல் பற்றி இவ்வியலை ஆசிரியர் பொருளதிகாரத் தடக்கினர். தொல்காப்பிய வகத்திணையியலில் அவர் உவமத்தினை உள்ளுறையுவமம் ஏனையுவமமென இருகூறாக்கிச் சுருக்கியோதி உவமவியலுள் அவற்றை விரித்துக் கூறினர். உவமத்தின் கூறுபாடுகள் தொல்காப்பியத்துட் கூறியபடி நான்காகும். அவை தொழில் பயன் வடிவு வண்ணம் என்பனவாம். பிற்காலத்து நூல்களிலோ வென்றால், இவ்வணி பலவகையாகித்தோன்றும். உவமம் பலவகையாயிருத்தலானும் வேறு பல அலங்காரங்களுக்கு அடியாயிருத்தலானும் பிற்காலத்துத்தோன்றிய அலங்கார நூல்கள் இதனைப் பலவகையாக்கியும் வேறுபல அலங்காரங்களைக் கூட்டியும் பொருளணிக்கிலக்கணம் கூறுவன வாயின. சொல்லணி யெத்துணைச் சிறப்பிற்றாய்ப் பிற்காலத்து நூல்களிற்காணப்படுகின்றதோ அத்துணைச் சிறப்புடைத்தாகத் தொல்லாசிரியர் கருதவில்லை யென்பது பழைய நூல்களையும் பிற்காலத்துச் செய்யுட்களையும் ஒப்பிட்டுச் சீர் தூக்கி நோக்க விளங்கும்.

தொல்காப்பியர் உவமமொன்றனையே அணியாகக் கொண்டனர். பொருளணிகள் பல உவமத்தினடியாகத் தோன்று மென்னுங் கருத்து அப்பையதீக்ஷிதரியற்றிய சித்ர மீமாம்ஸையிலுள்ள

* உவமை யென்னுந் தவலருங் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய வரங்கிற் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவ ரிதய
நீப்பற மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே.

என்னும் பொருள்கொண்ட ஆரியையாலும் புலப்படும். பிற்காலத்து நூல்செய்த ஆசிரியர் உவமத்தின் விகற்பங்களை வேறுகுறியிட்டு வெவ்வேறலங்காரங்களாக்கி யுரைத்தனர். தொல்காப்பியர் அவற்றை உவமமாகக் கருதினரேயன்றி வேறு பெயராற் கூறிற்றிலர். இவ்வுவமத்தின் வேறுபாடுகளுட் குறிப்பினால் உவமை கோடலொன்று. இதனை நச்சினார்க்கினியர்,

"உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை"

என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தில் 'உள்ளுங்காலை' என்பதனாற் கொண்டார். இதைக் குறித்த இவ்வுரையாசிரியருரை இங்கு ஆராயத் தகுந்தது. "என்ற வியப்ப வென்றவை யெனாஅ" என மேல் வருஞ் சூத்திரத்துள் "என்ற" வென்பதோர் உவமவுருபு கூறினமையின், "வாயென்ற பவளம்" எனவும், "வாய்பவளமாக" எனவும், "வாய்பவளம்" எனவும் வருவனவும், அக்குறிப்புவமையின் பகுதியெனவே படும். இவற்றை வேறுவேறு பெயர் கொடுத்து விரித்துக்கூறாது முன்னத்தி னுணர்வனவே இவை யெல்லா மென்னுந் துணையே இலேசினாற்கூறி யொழிந்ததென்னை யெனின், இவற்றாற் செய்யுள் செய்வார் செய்யும் பொருட்படைப்பகுதி எண்ணிறந்தனவாகலின், அப்பகுதியெல்லாங் கூறாது பொதுவகையான் வரையறைப்படும் இலக்கணமே கூறி யொழிந்தாரென்பது. வாயென்ற பவளமெனவும் வாய்பவளமாக வெனவும் வாய்பவள மெனவும்

---

* உபமைகா ஶைலூஷீ ஸம்ப்ராப்தா சித்ரபூமிகாபேதாந் ।
ரஞ்ஜயதி காவ்யரங்கே ந்ருத்யந்தீ தத்விதாம் சேத: ॥

என்ற ஆரியையின் மொழிபெயர்ப்பு இது.

வந்த பவளக் குறிப்புவமைகளை இக்காலத்தார் உருவக மென்றே வழங்குப. இனி வாய் பவளமெனவும் கண் கருவிளை யெனவும் பெயர்ப்பயனிலைவரின் அவற்றை ஒற்றுமைகாட்டி உருவகமென்று ராகலின் அதுவும் உவமையெனவே படுமென்பது. பொருளை உவமமாக்கி உவமையைப் பொருளாக்கிக் கூறுவதும் ஒருவமைவிகற்பமாகின்றது. 'திருமுகம் வீழ்ந்த தெய்வத் தாமரை' என்ற விடத்துத் திருமுகம் உவமையும் தாமரை பொருளுமாயின. இஃது உவமத்தொகையாங்கால் முகத்தாமரையென நிற்கும். இதைக்குறித்து நச்சினார்க்கினியர் 'இவற்றை வேறு உருவகமென்றும் பிறர் மயங்குப' என்றார். இவ்வாறன்றி இன்னும் பலவாறாக வேறுபட்டு வந்த உவமச்சாதிகளை ஆசிரியர்,

> "வேறுபட வந்த வுவமத் தோற்றங்
> கூறிய மருங்கிற் கொள்வழிக் கொளாஅல்"

என்ற சூத்திரத்திலடக்கினார். இதனுரையில் நச்சினார்க்கினியர் உவமத்தின் வேறுபாடுகளை விரித்துரைத்து உதாரணங்காட்டி விளக்கியிருக்கின்றார். இவ்வுதாரணச் செய்யுட்களுட் சில தண்டியலங்காரவுரையில் வேற்றுமையணிக்கும் தற்குறிப்பேற்றவணிக்கும் இலக்கியமாகக் காட்டப்பட்டிருக்கின்றன. தண்டியலங்காரத்து நிரனிறை யென்ற பெயராற் கூறப்பட்டிருக்கும் அணியினைத் தொல்காப்பியர் உவமத்தின்பாற் படுத்தோதுவர். ஆயினும் தொல்காப்பியத்துக் கூறிய நிரனிறை உவமையையும் பொருளினையும் நிரலேநிறுத்து ஒப்புமை கோடலொன்றனையே குறித்தது. தண்டியலங்காரத்துள்ள நிரனிறையோ வெனின், இவ்வாறன்றி இன்னும் பலவாகச் சொல்லையும் பொருளையும் நிரலே நிறுத்துப் பொருள்கொள்வது. இவ்வணியைத் தண்டியாசிரியர் தமது காவ்யாதர்சத்துட் கிரமமென்றும் சந்திராலோகமுடையார் யதாஸங்கிய மென்றும் கூறுவர்.

உவமத்தின் பலவிகற்பங்களையும் வேறணிகளாக்கி யுரைத்தல் நச்சினார்க்கினியர்க்கும் உடன்பாடன்மை அவர் இச்சூத்திரத்துக் கூறிய வுரையால் நன்கு புலப்படும். "இனி இவ்வோத்தினிற் கூறுகின்ற உவமங்களுட் சிலவற்றையுஞ் சொல்லதிகாரத்தினுள்ளுஞ் செய்யுளியலுள்ளுஞ் சொல்லுகின்ற சில பொருள்களையும் வாங்கிக்கொ

ண்டு மற்றவை செய்யுட்கண்ணே அணியாமென இக்காலத்தாசிரியர் நூல் செய்தாருமுளர். அவை ஒரு தலையாகச் செய்யுட்கு அணியென்று இலக்கணங் கூறப்படா...... ........................... அல்லதூஉம் பொருளதிகாரத்துப் பொருட்பகுதிகளெல்லாஞ் செய்யுட்கு அணியாகலான் அவை பாடலுட் பயின்றவை யெனப்பட்டன என்றதனான் அவையெல்லாந்தொகுத்து அணியெனக்கூறாது வேறு சிலவற்றை வரைந்து அணியெனக்கூறுதல் பயமில் கூற்றென்பது" என்றும், "இனி இரண்டு பொருளெண்ணியவற்றை வினைப்படுக்குங்கால் 'ஒருங்கு' என்பதோர் சொற்பெய்தல் செய்யுட்கு அணியென்ப. பிறவும் இன்னோரன்ன பலவுஞ் செய்யுட் கணியாமென்பது அவர் கருத்து. ஒருங்கே யென்பதேயன்றி மூன்று தாழிசையுண் மூன்று பொருள் கூறி 'எனவாங்கு' என்பதொரு சொல்லான் முடிந்தவழியும் எனவாங்கு என்பதோர்மொழி, எனவென்பது ஓரலங்காரமெனல் வேண்டுமாகலான் அவ்வாறு வரையறுத்துக் கூறலமையாதென்பது. பிறவும் அன்ன. இனி அவற்றைப் பொருளுறப் பென்பதல்லது அணியென்பவாயிற் சாத்தனையுஞ் சாத்தனுலணியப்பட்ட முடியுந்தொடியு முதலாயவற்றையும் வேறு கண்டாற்போல அவ்வணியுஞ் செய்யுளின் வேறாகல் வேண்டுமென்பது" என்றும், "இனிச்செய்யுட் கணிசெய்யும் பொருட்படை எல்லாங் கூறாது சிலவே கூறி ஒழியின் அது குன்றக்கூறலாமென்பது" என்றும் அவர் கூறியிருத்தலால் உவமத்தினைத்தவிர்த்து வேறு சிலவற்றை அணியாகக் கொள்ளுதல் பயனின்றென்பது அவர் கருத்து.

தொல்காப்பியர் உவமமொன்றனையே ஓரியலாக்கி இலக்கணங் கூறினாராக, இவர்க்குப்பின் வந்த இலக்கண நூலாசிரியர்களின் கொள்கையைச் சிறிதாராய்வோம். சங்கத்தார் காலத்துத்தோன்றிய நூல்களுள் தொல்காப்பியத்தைத் தவிர்த்து அகப்பொருளைப்பற்றிய இறையனாரகப்பொருளும் புறப்பொருளைப்பற்றிய பன்னிரு படலமும் புறப்பொருள்வெண்பாமாலையும் போன்று அணியிலக்கணத்தைக் கூறும் நூல்கள் வேறு காணேம். யாப்பிலக்கண நூல்கள் அக்காலத்து வேறு சில தோன்றி வழங்கி வந்தன. இவற்றுட் சிலவற்றை யியற்றிய ஆசிரியர்கள் இன்னாரென்பது,

"தொல்காப் பியப்புலவர் தோன்ற விரித்துரைத்தார்
பல்காய னார்வகுத்துப் பன்னினார்—நல்யாப்புக்
கற்றார் மதிக்குங் கலைக்காக்கை பாடினியார்
சொற்றார்தந் நூலிற் றொகுத்து"

என்னும் வெண்பாவால் விளங்கும். தொல்காப்பியரைத் தவிர்த்து இங்குக்கூறிய பல்காயனார் காக்கைபாடினியா ரென்னு மிவர்களே யன்றி நத்தத்தனார் அவிநயனார் மயேச்சுரனார் என்ற ஆசிரியர்களும் யாப்பு நூல் யாத்தனரென்பது யாப்பருங்கலக்காரிகையி னுரை யாலும் வீரசோழியயாப்புப் படலத்தினுரையாலும் இனிது புலப்படும். தொல்காப்பியர் காலத்தாயினும் அன்றி அவர் காலத்துக்குச் சிறிதுபின்னராயினும் அணியிலக்கணநூல் வேறு யாதொன்றும் இயற்றப்பட வில்லையென்றே கொள்ளல் வேண்டும். சங்கத்தார் காலத்துத்தோன்றிச் சிறிதுகாலம் வழங்கிவந்து பின் இறந்துபோன மிகப்புழைய நூல்கள்போன்று அலங்காரநூல்களும் முற்காலத்துச் சில தோன்றிப் பின்னிறந்தனவெனக் கருதலமையாதோ வெனின், அவ்வாறு கருதுதற்குச் சான்றுயாதும் காணப்படவில்லை. இக்காலத்து எங்கும் புலவர்களா லணிகளுக்கிலக்கணமா யெடுத்தாளப்பட்டு வருவதாகிய நூல் தண்டியலங்காரம். இந்நூலைத்தவிர்த்து மாறனலங்காரம் என்ற பிறிதோரலங்காரநூலுண்டு. தமிழின் ஐவகையிலக்கணங்களையும் ஒருங்கே முறைப்படுத்துக் கூறும் இலக்கண நூல்களும் சில உள. இவற்றுள் இலக்கண விளக்கம் முற்கூறப்பட்டது. இதுபோன்றதாகிய மற்றொரு நூல் வீரசோழியம். இவ்விரண்டனுள் இலக்கண விளக்கம் மிகப்பிற்காலத்தது. இதிலுள்ள அணியியல் பெரும்பான்மையும் தண்டியலங்காரத்தைத் தழுவி யெழுதப்பட்டிருக்கின்றது. வீரசோழியம் மிக முற்காலத்ததுமன்று மிகப் பிற்காலத்தது மன்று. இவ்விலக்கண நூல்தோன்றிய காலத்தைச் சிறிதாராய்வோம். இது வீரசோழன் காலத்தில் அவன்கீழ்ப்பொன் பற்றியூரிற் சிற்றரசு புரிந்த புத்தமித்திர அரசனால் எழுதப்பட்டு அவ்வீரசோழனது பெயர் * வகிக்கப்பெற்றிருக்கின்றது. இவ் வீரசோழனென்னும் அரசன் இன்னகாலத்தினனென்பதை நாம் ஆராய்ந் தறிவோமாயின் இந்த இலக்கண நூல் தோன்றிய காலத்தினை

* வீரசோழியப் பதிப்புரை.

ஒருவாறு வரையறுத்துக் கூறல் இயலும். வீரசோழனென்றபெயர் இந்நூலாசிரியர் காலத்தரசுபுரிந்து வந்தசோழன் ஒருவன் பாத்திரமே கொண்டபெயரன்று. சோழர் பரம்பரையிலுள்ள வேறு சில வேந்தர்களும் இப்பெயர் வகித்திருந்தார்களென்பது விளங்குகின்றமையின், இஃது ஒரு சோழனுக்குரிய பெயரன்றென்பதும், சிறப்புப்பற்றிப் பலசோழர்களாற் புனையப்பட்டதென்பதும் புலப்படும். இஃது எங்ஙனமோவெனின், * முதற்பராந்தக சோழனுக்கும் கீழ்நாட்டுச் சாளுக்கியர் பாரம்பரையைச்சார்ந்த † ஒன்பதாம் விஷ்ணுவர்த்தனனென்னும் அரசனுக்கும் வீரசோழ னென்ற பெயருண்டு. இவர்கள் போலவே இந்நூல் தோன்றியகாலத்துச் சோழநாட்டில் ஆண்டுவந்த அரசனும் வீரசோழனென்னும் பெயரைப் பூண்டிருந்தன னென்பது தெளிவாய் விளங்குகின்றது. இவ்வரசனியற்பெயர் யாதோவெனின், வீரசோழியத்தின் சந்திப் படலத்துள்ள,

ஆவி யனைத்துங் கசதந பமவ் வரியும்வவ்வி
லேவிய வெட்டும்யவ் வாறுஞ் ஞான்குமெல் லாவுலகு
மேவிய வெண்குடைச் செம்பியன் வீரரா சேந்திரன்றன்
நாவியல் செந்தமிட் சொல்லின் மொழிமுத லென்னுதலே.

என்னுஞ் செய்யுளால் இச்சோழன் வீரராசேந்திர னென்னும் பெயரினன் என்பது புலப்படும். இவ்விடத்தன்றி அலங்காரப் படலத்து இவ்விலக்கண நூலினுரையாசிரியராகிய பெருந்தேவனார் எட்டாரைச்சக்கர மென்னுஞ் சித்திரக்கவிக்கிலக்கியங் காட்டியுள்ள செய்யுளை விளக்குமிடத்து "இதன் கணிரண்டாநேமியிற் கயிலகுலகரனு நான்காநேமியிற் காவேரிவல்லவனு மாறுநேமியிற் கண்ணுமுனைறிவானு மெட்டாநேமியிற் கரிகாலனும் பத்தாநேமியில் விக்கிரமசோழனும் பன்னிரண்டாநேமியில் வளவ நாராயணனும் பதினாலாநேமியில் வீரராசேந்திரனும் பதினாறுநேமியிற் பரநிருபகாலனுமென எட்டுப்பெயரும் புலப்படும்" என்று கூறியிருத்தலின் இவ்வரசனுக்குப் பல பெயர்களுண்டென்பது நன்கு புலப்படும். மேலெடுத்துக்காட்டிய வீரசோழியச்செய்யுளிற் கூறியுள்ள வீரராசேந்திரனே இங்குக்கூறப்

---

* Parantaka I. † VishnuvardhanaIX of the Eastern Chalukya Dynasty. Dr. Hultzsch's *South Indian inscriptions*. Vol. I. p. 32.

பட்டிருக்கும் வீரராசேந்திரனென்பதற்கு ஐயமில்லை. இவ்வுரையின் கண் * உள்ள

"விண்கூ டலசங்க மத்துடைந்த வேல்வடுக
ரெண்கூ டலறு மிருங்கானிற்—கண்கூடப்
பண்ணினான் றன்னுடைய பாதம் பணியாமைக்
கெண்ணினார் சேரு மிடம்"

"மின்னார் வடிவேற்கை வீரரா சேந்திரன்றன்
பொன்னார் பதயுகளம் போற்றுது—கன்னடர்
புன்கூ டலசங்க மத்திறெம் போருடைந்தார்
நன்கூ டலசங்க மத்து."

என்றவெண்பாக்களால் இவ்வரசன் கூடலசங்கம் என்னுமிடத்து நடந்த போரில் வெற்றியடைந்ததை விளங்குகின்றது. இதனையேயத்தின் தென்னாட்டுச் சிலாசாதனங்கள் † இப்போரைப்பற்றிக் கூறும். ஆகலின் நூலாசிரியராகிய புத்தமித்திரரும் உரையாசிரியராகிய பெருந் தேவனாரும் ஒருகாலத்தினரென்பது புலப்படும். ஸ்ரீ: தாமோதரம் பிள்ளையவர்கள் தமிழுலகத்துக்கு மிகப்பயன்படுமாறு பதிப்பித்த வீரசோழியத்தின் பதிப்புரையில் 'உரையில் எடுத்துக்காட்டாகப் பல செய்யுட்களை விக்கிரமசோழன் மகன் மகனாகிய அநபமசோழனது புகழாகப்பாடிச் சேர்த்ததனால் உரையாசிரியரும் ஆசிரியரும் ஒரேகாலத்தினராயிருத்தல் வேண்டும். "உரையைக்கடனாவே நவின்றான்" என்றுரைச்சிறப்புப்பாயிரத்தார் கூறினமையால் அவர் புத்தமித்திரனார் மாணாக்கரிலொருவரென உத்தேசிப்பாரும் பலருண்டு' ‡ எனக்கூறியிருத்தலால் அவர்கருத்து மிதுவேயாகின்றது. கொப்பமென்னுமிடத்தில் நடந்தபோரில் இராசேந்திரதேவனென்னும் சோழன் வெற்றியுறப்பொருததமை ஒரு சிலாசாதனம் $ கூறும். வீரசோழியத்தினுரையில் இப்போரைக்குறித்த செய்யுளொன்று இலக்கியமாகக் காட்டப்பட்டிருக்கின்றது. இச்செய்யுள்,

---

* அலங்காரப்படலவுரை—ப. 187. 8. † Dr Hultzsch's *South Indian Inscriptions* Vol II. Part II. Introduction to No 58 p-p. 229-232. ‡ வீரசோழியப்பதிப்புரை—ப. 24. $ Dr. Hultzsch's *South Indian Inscriptions* Vo.l I. p. 134, No. 127.

"துற்றுற் றன்றிவெம் போர்செய்த விற்கைப் பன்மன்முன் போடவோர் - தத்திற் றுன்றவன்பாய்பரியுய்த்துத் தம்மைகொண் டோடிய, வெற்றுச்செம்பியன் பார்புகழ்கொற்கைக் கண்டன்வன் பாரதம்-வெற்புக்கொண்டுதிண் போர்புரி கொப்பத் தன்றெதிர்ந்தோர் பெறு, கொற்றத்தொங்கல்சிங் காதன மொற்றைச்சங்குவெண் சாமரை - குத்துப்பந்தர்முன் பாவிய முத்துப்பந்திமுன் றுன்மகி, ழொற்றைப் பெண்டிர்மண் டாரமொ டொற்றைத் தன்பெருஞ் சேனையு, மிட்டிட் டன்றுடைந் தான்வசைப் பட்டுக் கண்டவங் காரனே" * என்பது. கலிங்கத்துப்பரணி யிராசபாரம் பரியத்தும்இதைக்குறித்த

ஒருகளிற்றின்மேல் வருகளிற்றையொத்
துலகுயக்கொளப் பொருதுகொப்பையிற்
மொருகளத்திலே முடிகவித்தவன்
புவிகவிப்பதோர் குடைகவித்ததும். †

என்றசெய்யுளொன்றுண்டு. கோப்பத்தில் நடந்தபோரைக்கூறும் செய்யுளைப் பெருந்தேவனார் இலக்கியமாகக்காட்டியிருத்தலின இவர் இராசேந்திர தேவன் காலத்தும் இருந்தனரெனக்கூறுதற்கிடமுண்டு. கி. பி. பதினொன்றும் நூற்றாண்டின் பிற்பாகத்தும், பன்னிரண்டா நூற்றாண்டினுடைய முற்பாகத்திலும அரசுபுரிந்துவந்த குலோத்துங்க சோழதேவனுக்கு ‡ முன்னாண்ட சோழர்களின் முறைமை யின்னதெனச் சிலாசாதனங்களாலறியலாம. இராசராசதேவன், இராசேந்திரசோழன், இராசேந்திரதேவன், வீரராசேந்திரதேவன் என்னுமிவ்வரசர்கள் $ குலோத்துங்கசோழதேவனுக்கு முன்னர் இங்குக்காட்டிய முறைபபடி ஆண்டுவந்தமை விளங்குகின்றது. வீரராசேந்திரதேவன் கி. பி. 1063-ஆம ஆண்டின் பின்னரும் ஆண்டுவந்தமை ஒரு சிலாசாதனத்தாற் புலப்படுகின்றது.¶ ஆகலின் வீரசோழியமென்னு மிலக்கணநூலும அதன் உரையும கி. பி. பதினொன்றும் நூற்றாண்டிலெழுதப்பட்டன வென்று கொள்ளல்வேண்டும்.

(தொடரும்.)

* வீரசோழியம், யாப்புப்படல உரை—செய்யுள் 34-ப. 136.

† கலிங்கத்துப்பரணி, இராசபாரம்பரியம்—27.

‡ கி. பி. 1064—1113. Dr. Hultzsch's *South Indian Inscriptions* இவ்வரசன் ஆண்டகாலம் சிறிது வேறுபட்டும் தோன்றும்.

$ Dr. Hultzsch's *South Indian Inscriptions* Vol. II, Part II, Introduction of No. 38.

¶ „ „ „ „ p. 229 232.

DEPARTMENT OF AGRICULTURE, MADRAS.

# விவசாயக் குறிப்புக்கள் *

I

## விவசாய பாடசாலை.

ஜூன் மாதத்தில் விவசாய பாடசாலை கோயம்புத்தூரில் திறக்கப்பட்டது. சைதாப்பேட்டை விவசாய பாடசாலையில் மாணாக்கர்களுக்கு உபகாரச் சம்பளம் கொடுத்ததுபோல, கோயம்புத்தூர்ப் பாடசாலையில் கொடுக்கப்படாது. ஆனால் மாணாக்கர்கள் வசிக்கும் இடங்களுக்கும் அவர்களைப் படிப்பிப்பதற்கும் கட்டணமொன்றும் கட்டவேண்டியதில்லை. மாணாக்கர்கள் தங்கள்சாப்பாட்டுச்செலவைத் தாங்களே செய்துகொள்ளவேண்டியது. பிரவேசத்திற்கு அனேக விண்ணப்பங்கள் வந்தன. ஆனால், பாடசாலைத் தலைவர் 22 மாணாக்கர்களை மாத்திரம் சேர்த்துக்கொள்ளக்கூடியவரானார். இவர்களில் 14பேர் மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேர்ந்தவர்கள். மீதி 8 பேர் பாடசாலைத்தலைவருடைய நற்சாட்சிப் பத்திரிகையினால் பரீக்ஷையில் தேர்ந்தவர்களாயிருக்கவேண்டுமென்னும் விதியிலிருந்து கவர்ன்மெண்டாரால் முக்கியமாய் நீக்கிவிடப்பட்டார்கள். மாணாக்கர்களை விவசாய பாடசாலைக்குப் பொறுக்கும்போது பாடசாலைத் தலைவருடைய முக்கியகருத்து என்னவென்றால், பயிராளிகளுடையவும் விசேஷ நிலங்களை உடையவர்களுடையவும் பிள்ளைகளுக்குப் பண்ணையில் உயர்ந்த விவசாயத் தொழில்களைக் கற்பித்து அத்தொழில்களைத் தங்களுடைய நிலங்களில் உபயோகப்படுத்தும்படி செய்வது. ஒவ்வொரு மாணாக்கனும் தானே நிலத்தை உழுது, விதைவிதைத்து, கிருஷிகளைப்போல் ஒவ்வொருநாளும் செய்யவேண்டிய வேலைகளையெல்லாம் செய்துவரவேண்டும். அப்படிச் செய்வதினால் அவன் பிறகு தன்குடியானவர்களுக்கும் கூலிக்காரர்களுக்கும் கற்பிக்கக்கூடியவனாவான். இந்தக்காரணம்பற்றியே தேகசவுக்கியமும் பலமுமுள்ளமாணாக்கர்களைப் பாடசாலையில் சேர்க்கிறார்கள்.

---

* இவை சென்னை "விவசாயடிபார்ட்மெண்"டாரிடமிருந்து, பத்திரிகையில் வெளியிடும்படி எமக்கு அனுப்பப்பட்டவை. ப - ர்.

மாறுக்கர்கள் வசிப்பதற்காக ஒவ்வொரு வீட்டிலும் ஆறுமாணுக்கர்கள் வசிக்கும்படியான பத்து வீடுகளைக் கட்டும்படி சர்க்கார் உத்திரவு செய்திருக்கிறார்கள். ஆகையால், எல்லாவித ஜாதி மாணுக்கர்களுக்கும் தாங்கள் வசிப்பதற்குத் தகுந்த இடமுண்டு.

## II

## நெல்விதை விதைத்தல்,

அனேக இடங்களில் இப்போது சம்பாப்பயிருக்காக நாற்றுப் பயிரிடுவார்கள். திருநெல்வேலி ஜில்லாவில் நாற்றுக்காக ஒவ்வோர் ஏகராவுக்கு 60 - பட்டணமபடி. நெல்விதை விதைக்கிறார்கள். மற்றத் தமிழ் ஜில்லாக்களில் ஓர் ஏகராவுக்கு 30 முதல் 40 பட்டணம்படி நெல்விதை விதைக்கிறார்கள். கிருஷ்ணு ஜில்லாவில் 5 அல்லது 6 பட்டணம்படி மாத்திரம் விதைக்கிறார்கள். கிருஷ்ணு ஜில்லாவில் வளரும் பயிர்கள் இதர ஜில்லாக்களில் வளரும் பயிர்களைப்போல நன்றுயிருக்கிறபடியால், திருநெல்வேலிஜில்லாவிலும் இதர தமிழ்ஜில்லாக்களிலும் விதைகள் அதிகமாய் வீணுக்கப்படுகின்றனவென்பது தெளிவாயிருக்கிறது. இப்படி வீணுக்கப்பட்ட விதையினுல் அனேக ஜனங்களைப் போஷிக்கலாம்.

கிருஷ்ணு ஜில்லாவில் ஏன் கொஞ்சவிதை விதைக்கிறார்களென்றல் அவ்விடத்தில் நாற்றங்காலுக்கு நல்ல எருப்போட்டு விதைகளை அதிக நெருக்கமாயில்லாமல் தூரமாய் நடுகிறார்கள். இப்படிச் செய்வதால் பயிர்கள் பெரிதாய் வளர்கின்றன. நாற்று நடும்போது ஒரு துளையில் ஒரு செடியை நடுகிறார்கள், வளர்வதற்கு வேண்டிய இடமிருப்பதால் நாற்றிலிருந்து அனேக பக்கக்கிளைகள் உண்டாகின்றன. நெருக்கமாய் நடப்பட்ட பத்துச்செடிகளைப் பார்கிலும் அதிகக் கதிர்களை இக்கிளைகளெல்லாம் சேர்ந்துவிடுகின்றன. ஏனென்றல் இந்தப் பத்துச்செடிகளுக்கும வளர இடமில்லை. அவைகள் ஆகாரமின்மையால் இளைத்துப்போயின. அது எப்படியென்றல் ஒரு கால்நடைக்குவேண்டிய புல்மேயும் நிலத்தில் அனேக மாடுகளை மேய்த்தால் அவைகள் இளைத்துவிடுவதுபோலப் பயிர்களும் இளைத்துப்போம். இதற்கு திருஷ்டாந்தமாகக் கோயம்புத்தூரிலிருக்கும் சர்க்கார்பண்ணையில் ஒரே நாற்று நட்டிருக்கும் செடியிலிருந்து உண்டாகும் ஐம்பது பக்கக்கிளைகள் எண்ணப்பட்டன.

தென் ஆர்க்காடு ஜில்லாவில் சிதம்பரத்துக்கு அருகிலே யிருக்கும் வீரசோழத்தில் ஒரு புத்தியுள்ள பயிர்க்குடியானவன் இந்தச் சங்கதியை தானே தெரிந்துகொண்டு ஓர் ஏகராவுக்கு $2\frac{1}{2}$ பட்டணம்படி விதைமாத்திரம் உபயோகப்படுத்தி அவனுக்குப் பக்கத்திலிருக்கிற பயிராளிகளைவிட அதிகக் கண்டுமுதலே அடைகிறான்.

ஒவ்வொரு பயிராளியும் தன்னுடைய நிலத்தில் ஒரு துண்டில் இந்தவிஷயத்தை தானே சோதித்துப் பார்க்கவேண்டும். நாற்றங்காலில் ஒரு மூலையில் கொஞ்சம் விதைகளைத் தனித்தனியாய் விதைத்து நன்றாய் எருப்போட்டு ஒருமாசத்துக்கு அதிகப்படாமல் வளரவைத்துப் பிறகு நாற்றை நடவேண்டும். இந்த நாற்றுகளுக்கு வளர அதிகஇடமிருப்பதால் அவைகள் சீக்கிரம் வளர்ந்து ஒரு மாததில் அவைகளைப் பிடுங்குவதற்குப் பக்குவமாய்ப் பெரிதாய் வளர்ந்திருக்கும். நாற்று நடும்போது பூமி வளமாயிருந்தால் ஒவ்வொரு செடியும் ஒரு சாண் தூரத்தில நடவேண்டும. பூமி வளமாயில்லாவிட்டால் ஒவ்வொரு செடியும் அரைச் சாண் தூரத்தில் நடவேண்டும். கொஞ்சநாளைக்குப் பூமியில் நீர் அதிக ஆழமாயிருக்கும்படி செய்யகூடாது. முக்கியமாய்க் கவனிக்கவேண்டிய விஷயங்கள் வேறே கிடையா. முதலில் செடிகள் மிகவும் எளிமையாயிருக்கும். ஆனால் இரண்டு மாதத்தில் அநேக பக்கக்கிளைகள் உண்டாகி வழக்கத்தைப்போல நடயுநட்டதுபோற் புலமுழுதும் அடர்ந்த பயிர்களாயிருக்கும். அறுப்புக்காலத்தில் இந்தச் செடிகள் அதிக தானியங்களைக் கொடுப்பதாகத் தெரியவரும. மேலும் தானியங்கள் சாதாரணமாய்ப் பயிரிட்டுவரும் தானியங்களைவிடப் பெரிதாயும் பளுவாயுமிருக்கும.

III

சென்னை இராஜதானியின் அநேக இடங்களில் பயிரிடும் குடிகள் தங்களுடைய நன்செய் நிலங்களை எருவிடுவதற்காகப் பச்சை இலைகளையும் கொழுஞ்சி இலைகளையும் சேகரித்துக் கட்டைவண்டி, ரெயில்வண்டிமூலமாய் அதிகப் பணம் செலவுசெய்து கொண்டுபோகிறார்கள். இவ்விதமாக அதிகப்பணம் செலவுசெய்கிறதைவிட மிகவும் சுலபமான வழியிருக்கிறது. அதாவது பச்சைஎருவை நன்

[illegible] நிலங்களிலேயே பயிரிடுவது. அப்படிப் பயிரிடுவதால் எருவை [illegible] கொண்டுபோவதற்கு வேண்டிய செலவு மீந்துவிடும்.

அடியிற்கண்ட குறிப்புக்கள் கும்பகோணத்திலும் பிரம்பலூரிலும், பச்சை யெருவை நன்செய்நிலங்களிலேயே பயிரிடுவதற்கு என்னசெய்கிறார்களென்று சுருக்கமாய்க் காண்பிக்கும்.

## கும்பகோணம் விவசாயசங்கத்தின் பண்ணையில் தழை எருவுக்கென்று பயிரிடப்பட்ட சடம்பு (சணல்) பயிரின் குறிப்பு.

---

கும்பகோணம் விவசாய சங்கத்தார் இந்தவருஷத்தில் ஜனங்களுக்கு அனுபோகத்தில் ரூபிக்க, தங்களுடைய சங்கத்தின் பண்ணையிற் பயிர்செய்த சடம்புப் (சணல்) பயிர், தஞ்சாவூர் ஜில்லாவில் விவசாயஞ்செய்யும் ஒவ்வொருவருக்கும் நிரம்பவும் உபகாரப்படத் தக்கது. ஜூன்மீ மத்தியில் காலில் ஜலம்வந்தவுடன் வயல்களில் தண்ணீரைப்பாய்ச்சி, உழுது, ஏகர்ஒன்றுக்கு சுமார் 6 (ஆறு) பட்டணம்படி விதை தெளிக்கப்பட்டது. ஆகஸ்டுமீ 22உயில் மேற்சொன்ன பயிரைப் பார்க்கும்பொழுது அது சுமார் 3 அடி (இரண்டு முழம்) உயரம்வளர்ந்திருந்தது. நெல் சாகுபடி செய்யுமுன் இதை நிலத்தில் தழை எருவுக்கென்று அப்பால் உழப்பட்டது. இந்தநிலத்திற்கு வேறுகுப்பை யெரு முதலானவை போடாமல் இந்தப்பயிரையே உழுது மக்கவைத்திருப்பதின் மாசூல், எப்படிக் காணுமென்று ஆவலுடனும் சிரத்தையுடனும் எதிர்பார்க்கலாம். இப்படித் தழைப்பயிர்செய்து அதை உழுது எருவாக உபயோகிப்பதில் விதைச்செலவேதவிர வேறொன்றுமில்லை. பயிருண்டாக்க உழவு முதலானவைகளில் செலவாகுமென்று சிலர் ஆக்ஷேபணைசொல்லலாம். ஆனால் நெல் சாகுபடிசெய்யும் நிலங்கள் ஆகஸ்டுமாதத்தில் முதன்முதல் உழுவாவது வழக்கம். அப்படிக்கில்லாமல் தழைப்பயிர் செய்ய பிரயத்தனஞ்செய்யும்போது காலில் ஜலம் வந்தவுடன் ஜூன் மாதத்தில் முதல் உழவு போடப்படுகிறது. ஆகவே பின்னாற் செய்யப்பட்ட உழவு முன்னால் செய்யப்படுவதால், உழவுச்செலவு அதிகம் இதனாலாகிறதென்று சொல்ல மார்க்கமில்லை.

## திருச்சிராப்பள்ளி ஜில்லா பிரம்பலூர்த்தாலூகாவில் தழை எருவுக்கென்று பயிரிடப்பட்ட அவுரிப்பயிரின் வரலாறு.

---

பிரம்பலூர்த் தாலூக்காவில் அவுரிப்பயிரானது சாயத்திற்கென்று அனேக வருஷங்களாய்ப் பயிரிடப்பட்டுவந்தது. ஆனால் அவுரி மருந்தின் (நீலத்தின்) விலை சகாயமானது. கொஞ்சகாலமாய் இந்தப் பயிரானது தழை எருவுக்கென்று சாகுபடி செய்யப்பட்டுவருகிறது. கிருஷிகளுக்குத் தழை யெரு சுலபமாய் அகப்படமார்க்கமில்லாததினாலும் தழை யெருவை உபயோகிப்பதின் குணம் சிலாக்கியமானதென்று குடியானவர்களுக்குத் தெரிந்து எல்லாரும அதை உபயோகிப்பதால் அதிகத் தழையெரு அகப்பட மார்க்கமில்லாமையினாலும், இந்த அவுரிப்பயிரை இந்தத் தாலூக்காவில் தழை யெருவுக்கென்று பயிர்செய்கிறார்கள். பிரம்பலூர்த் தாலூக்காவின் மேற்குபாகத்திலிருப்பவர்கள் தங்களுடைய சொந்த சாப்பாட்டு உபயோகத்திற்காக நன்செய் நிலங்களிலும், கிணற்று இறைவை நிலங்களிலும், கேழ்வரகு கம்பு முதலான பயிர்களைச்சாகுபடி செய்கிறார்கள். தங்களுக்கு நேரிடும் ரொக்கப்பணச்செலவுகளுக்காக நெல்லும் சாகுபடி செய்கிறார்கள். ஆகவே கிணறுகளிருக்கும் ஒவ்வொருவரும் நெல் அவசியமாய்ச்சாகுபடி செய்துவருகிறார்கள். அந்தப்பிரகாரமே நன்செய் சாகுபடி செய்யும் குடியானவர்கள் ஒவ்வொருவரும் கிணறுகள் தங்கள் நிலங்களில் வெட்டியிருக்கிறார்கள். அப்படிக்கில்லாவிட்டாலும் கிணறு வெட்டவேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள். ஆகையால் நன்செய் நிலங்களும் கிணற்றுப்பாய்ச்சல் நிலங்களும் எப்போதும் பயிரிடப்பட்டுக்கொண்டு இருக்கலாகின்றன.

மேற்சொன்ன நிலங்களில் தாள்மாற்றி (பயிர்மாற்றி) சாகுபடி செய்யும் வழக்கமுமிருக்கிறது. இவ்விடத்தில் சாதாரணமாய்க் கையாடிவரும பின்குறித்த தாள்மாறிப்பயிரிடுதல் மிக்க சிலாக்கியமானதாக இருக்கிறது. அதாவது மார்ச்சு, ஏப்பிரல் மாதங்களில் கோடைக்கம்பு கிணற்றிறைவைப் பயிராகச்சாகுபடி செய்யப்படுகிறது. இதனுடன் ஏக்கர் ஒன்றுக்கு சுமார் 3-பட்டணம்படி அவுரிவிதையும் கலந்து தெளிக்கப்படுகிறது. கம்புப்பயிர் ஜூலைமாதத்துக்கடை

சிக்கு முன் அறுவடையாகிவிடும். அப்பால் அதில் விதைத்திருக்கும் அவுரிப்பயிரை ஆகஸ்டு, ஸெப்டம்பர் மாதம்வரை வளரும்படி செய்து அப்பால் அதைச் சேறறில் சடைச்சம்பா நெல் நடுமுன் உழுது மக்கவைக்கிறார்கள். அடுத்த வருஷத்தில் நெல்லுக்குப் பின்னால், இந்தக் கமபும் அவுரியுமே விதைக்கிறார்கள். இல்லாவிட்டால் கரும்பு சாகுபடி செய்கிறார்கள். மேற்சொன்ன கம்புப் பயிரும், கரும்புப்பயிரும் செய்யாவிட்டால் கேழ்வரகு நடுகிறார்கள். இதற்கு மாட்டுச்சாணம் குப்பை முதலாகிய எருக்கள் போடுகிறார்கள். இது அறுவடைசெய்தபின் காட்டுத்தழை எருவிட்டுச் சேற்றில் சடைச்சம்பாநெல் சாகுபடி செய்கிறார்கள்.

மேற்சொன்னபிரகாரம் அவுரித்தழை பசுந்தாள்எருவுக்காக பயிரிடச்செலவு 3-பட்டணம்படியேதவிர வேறில்லை. ஆகையால் இவ்விதமான கிணற்று இறைவைப்பயிர்களும் நீர்ப்பாய்ச்சும் சாதனமும உள்ள எல்லாஜில்லாக்களிலுமம மேற்சொன்னபிரகாரம் தழையெரு சுலபமாய்ச் செய்யக்கூடும்.

(தொடரும்)

---

உ

# பெரியபுராண அரும்பத விளக்கம்.

[பழைய ஏட்டினின்று எடுக்கப்பட்டது.]

(முற்றொடர்ச்சி.)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணம்.

(சச) அப்பொழுது திருத்தோணியில் வீற்றிருந்த சிவபெருமான் கிருபாநோக்கத்தால் பழையஙிலைமையையுடைய திருத்தொண்டை நினைந்து.

(சரு) வேதநூலை அறிந்த சிவபாதவிருதயருக்கும் பகவதியாருக்குங் கொடுத்த மிகுந்தவரத்தை நினைந்தோ தம்முடைய பெருமையான பாதங்களை விரும்பும் ஒருப்பாட்டான வழியில்வரு

கின்ற ஞானத்தைக்கொடுப்பதற்கு உடனிருந்த அரியவேதங்களை ஆளுகின்ற உமையைக் கொடுத்தருளுமாறு கட்டளையிட்டருளுவார்.

(சுஅ) உமாதேவியார் மதித்தற்கரிய சிவஞானமாகிய இனிய அமுதத்தைக் குழைத்து எதிரேபார்க்குங் கண்ணிலுள்ள நீரைத் துடைத்துக் கையிலே பொற்கிண்ணத்தைக் கொடுத்து அடிசிலை உணவென்று ஊட்ட, சிவபெருமான் பிள்ளையாரை அழுகைதீர்த்துக் கருணைபுரிந்தார்.

(எ0) பிறவியறும்படி நீக்கும் உரிமையோடுயர்ந்த ஞானமாகிய சிவனுடைய பாதங்களையே தியானிக்கும் அருட்செல்வம் பெருகும் சிவஞானத்தையும், உவமையில்லாத கலைஞானத்தாலுண்டாகின்ற உணர்தற்கரிய மெய்ஞ்ஞானத்தையும் தவமுதல்வராகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அப்பொழுதே அறிந்தார். பரஞானம், அபரஞானமிரண்டையும் ஒருங்கே அறிந்தார் என்பது கருத்து.

(எக) எப்பொருளையுமுண்டாக்குவோன் சிவனே என்னுமுணர்வையும், அப்பொருளையாளுவோர் சிவனடியார்களென்னு மறிவையும், இப்படியாகின்றஇதுவன்றித் தம்முடைய இசைவைக்கொண்டே இயல்கின்ற அநுபவமில்லாதவர்களுடைய துணிவுகள் துகளாம்வண்ணம் எண்ணி எழுந்தார். உணர்வையும் அறிவையுஞ்சூழ்ந்தெழுந்தாரென முடிக்க.

(எரு) "எல்லையிலா மறைமுதன் மெய்யுடனெடுத்த வெழுதுமறை; மல்லனெடுந்தமிழால்"—எல்லையற்ற வேதத்தின் முதலிலுள்ள பிரணவத்தைத் தகரமெய்யோடு புணர்த்தெடுத்த எழுதுமறையாகிய வளவிய நெடியதமிழ்வேதமாகிய பதிகத்தால். தகரமெய்யோடு பிரணவத்தைப் புணர்த்தால், தோ - எனவரும். பிரணவம்- ஓ; மெய் - த். இரண்டையும் புணர்த்தால் அது, தோ - எனவரும்.

(எஎ) நிலவுலகில் வாழ்வோர் குற்றஞ்செய்தாலும், வந்தடைந்தால் சிவனுடைய பெருங்கருணை அங்கீகரிக்குமெனக்காட்டற்கு எண்ணமில்லாத வலிய இராவணன் கைலையை எடுத்து முறிந்து இசைபாட, சிவனுக்கருள் புரிந்த அக்கப்பாட்டை வைத்து எட்டாந் திருப்பாட்டாலும்.

(எஅ) வணங்குபவர்க்கே சிவபெருமானருள்வதெனத் தொழாராய் வழுவான மானத்தினலே மயக்கத்தையடைந்த விட்டுணுவும் பிரமாவும் இழிவான பன்றியு மன்னமுமாய்ச் சென்று அடையாமையால் விழுபவர்கள் பஞ்சாக்ஷரங்களையுந் துதிசெய்துய்ந்ததிறத்தை ஒன்பதாந்திருப்பாட்டிலும் அமைத்தார்.

(எகூ) எம்பெருமானகிய சம்பந்தநாயனர், வேதகாரணராகிய பாலசந்திரன் சேர்ந்த சிவந்த சடையையுடைய சிவபெருமானது மார்க்கத்தை அறிந்துய்யாராய்த் தம்மிலே நன்கு மதிக்கும் ஞானமில்லாதவர்களாகிய சமணர்கள் புத்தர்களுடைய மார்க்கங்கள் பழிக்கப்படும் ஏதத்தை ஆக்குமென்பதைப் பத்தாந்திருப்பாட்டிலருளிச் செய்தார்.

(அ0) இருக்குமொழி—வேதமொழி: தேவாரம்.

(அஉ) வேதங்கள் கிளர்ந்து ஒலிவளரும்படி முழங்கிட, தேவர்களானேர் தங்களுடைய அழகுநிறைந்த முடி ஒழுங்கான மணிசிந்தும்படி நெடிய வானத்துறையென வந்துலகமுழுவது நிறைய, நீங்காத மெய்ம்மையுடைய பொறை பெருகுகின்ற தவத்தையுடைய முனிவரென்கிற கடல் பக்கத்தே சூழ.

(அகூ) அணையும்படி வந்தெழுகின்ற அறிவு தொடங்கிய அடியாரிடத்தே உவமையில்லாத பிறவி கிளர்கின்றகடலைக்கடக்க இரண்டு தாளாகியதெப்பத்தை அவர்களுக்குக் கொடுக்கின்ற சிவபிரான் பொருகின்ற இடபத்தில் தங்கிய பொருந்திய பாகத்திலுள்ள துணையோடு வேதந்தொடர்ந்த திருத்தோணியை அடைந்தார்.

(அச) கண்வழியே சென்ற கருத்துவிடாது கலந்து செல்ல.

(அரு) மாறுவிழுந்த— அடிக்கும்படி எடுத்தகோல் வழுவித்தானே வீழ்க்க. வெருட்சி வியப்பு - அச்சத்தோடுகூடிய வியப்பு.

(கூஈ) புண்ணியமுதலே, அணிந்த அழகிய அரைஞாணேடு போகின்ற கண்ணிற்கு நிறைந்த சூரியனே, இளம்பிறையே. மூன்று வருடமாகிய பவத்தே.

(கூச) நிரந்தபோது - பரந்தபோது. பியல் - பிடர்.

(கூரு) அந்தணர்குழாத்தோடு நிரம்பிய பல தொண்டர் கூட்டம் பக்கத்தே சூழ்ந்து, தாம் உத்தரியப்புடைவையை ஒப்பற்ற ஆகாயத்திலெறிந் தாரவாரிக்குந் தன்மையால், அத்தன்மை பொலிந்தவீதி, சிவானந்தப்பெருக்கையுடைய ஆறு போக அதன்மேற்பொங்கும் அழகிய நுரைக்குமிழி வந்திறங்குதலைப்போல விளங்குகின்ற காட்சியினை யுடைத்தாகும்.

(கூகூ) நிலத்தேவராகிய பிராமணர்களுடைய மாளிகையின் மேல்.

(கூகூ) நாம நெடுங்கதிர் - இராக்காலத்துக்கு அச்சத்தைக்கொடுக்குஞ் சூரியன்.

(க00) போத - மிக.

(க0உ) ஒத்தறுத்தல் - தாளந்தட்டுதல்.

(க0அ) தாயாராகிய பகவதியார் முன்னரே வந்து பிறக்க.

(கககூ) சங்கின்வடிவமாகத் தருகின்ற முறைமையுடைய ஒழுங்கான அக்கோயிலை.

(கஉ0) 'கொடியுடை' - "கொடியுடை" என்பதை முதலாகவுடைய.

(கஉகூ) "கண்காட்டுநுதலான்" என்பதை முதலாகவுடைய; திரிபுரத்தை அழித்த சிவபெருமானுடைய பாதங்களைச் சேரற்கு வழியாகிய திருமுகக்குளத்தையும்பாடி.

(கஉஎ) தருக்கள் மலிந்த சீகாழியில வந்து.

(கஉஅ) தூய ஆணியாம் - சுத்தமாகிய ஆணியாகும்.

(கங்க) வணங்கத்தரு நீர்மையையுடைய.

(கங்ரு) தானநிலையிலே க ீவியை வசப்படுத்தி ஆரோகண அவரோகண முறைமைத்தகுதியால். கோல் - யாழ்வாசிக்குங் கருவி. அங்கணர் தம்பாணியினை - சிவபெருமானுடைய பதிகத்தை.

(கங்சு) யாழிலெழுமொலியோடு இருவர்மிடற்றொலி பொருந்தி வாழ்வையுடைய திருத்தோணியில் வீற்றிருக்கின்ற சிவபெருமான் மாட்டினையும் மாட்சியைப்பார்த்துத் தங்குகின்ற இருசிறகையுடைய பறவை படிந்தன.

(கசஙு) புள்ளிபொருந்திய மான்றோலையுடையாகவுடையவரை; புலித்தோல் எனினும் பொருந்தும.

(கசசா) வண்டொலித்தெழுகின்ற செழுமையாகிய மலர் மலையையும், இரத்தினத்தையும் முத்தையுங் கொழித்துச் சோலையின் பலவளத்தோடும் வருகின்ற நீரானது படிந்து சிவந்த பாதங்களிலே தாழ, தெளிந்ததிரையுடைய கடலினது பவளத்தையுஞ் சங்கையுஞ் செழுமையாகிய இரத்தினக்குலைகளையும் முத்தையுங் கொண்டொலித்துப் பாய்கின்ற திரை எதிர்கொள்ளக் கொள்ளிடத்தைக்கடந்தேறி.

(கசஎ) நீரையுடைய தடாகம், தங்குகின்ற புட்களினொலியாகிய வாழ்த்துரையெடுத்து, முதன்மைபொருந்திய தேன் செறிந்த தாமரையாகிய வாசனைபொருந்திய பொலிவான சிவந்த முகையாகிய கையைகுவித்து அலர்முகங் காட்டின.

(கசகூ) மலர்களையுடையசோலை, தோகையையுடைய மிருதுவான மயிற்கூட்டம் மகிழ்ந்தெழுக்கப், புதிய மணத்தையுடைய குளிர்ந்த வாயுவந்துலாவி முன்னரே வணங்கி எதிர்கொள்ளக் கிளர்ந்தெழுந்துடனே வருகின்ற வண்டொலிக்க, சிவந்த தளிரினொளி நிறம் விளங்க இருகுழை பக்கத்தேயாட, மலர்முகங்கள் பொலிந்தசைய, மிருதுவான கொம்பர் நின்றுடுவன. பெண்களுக்கியைய கூறுங்கால், கலவம் என்பதற்குக் கலவமென்னும் ஆபரணமென்றும், சுருப்பு என்பதற்கு வளையல் என்றும், செந்தளிரொளி நிறம் என்பதற்குச் செந்தளிர்போன்ற ஒளிபொருந்திய உடம்பினிறம்என்றும், குழைஎன்பதற்குக் குண்டலமென்றும், மலர்முகமென்பதற்குத் தாமரைமலர்போன்ற முகமெனவுங் கொள்க.

(கருo) விசாலித்த மருதநிலத்திற் பொருந்திய வயலிலுள்ள நெற்கள் குளிர்ந்த தென்றலால் நறிய மலரிலுள்ள நுண்ணியதுகளை வீசி.

(கருக) பலகண் பெறுந்தன்மையால்; கண் - வரை.

(கருஉ) புகைப்பரப்பால் நெடியவானம் உயர்ந்த நீலநிறம்பொருந்திய நுண்ணிய புடைவையால் விதானித்தது போன்றது.

(கருரு) சோபனவாக்கம் -சோபனத்தைத்தருகின்ற ஆக்கம்.

(கருசு) ஆவணமறுகு - கடைவீதி.

(கருஎ) மலர்ந்த பேரொளி குளிர, சிவமணங்கமழ்ந்து, மிகுந்ததுகள்மாறி.

(கசுக) அறிவில் நேர்பெறுதற்கு அரிய சிவயோகத்தை நீக்கமின்றி உடம்பிலுள்ள பஞ்சப்பொறியளவினும் எளிவரும்படி அருளினீர், எனத்துதித்து.

(கசுங) தேவநாயகருடைய கூத்தை மிகவெளியே தரிசித்து. காலம்பெற - காலத்திலே ஞானத்தைப் பெற.

(கஎக) ஐயரே நீர் வர; செய்தவாறென்னை என்று.

(கஅங) 'முத்தாறுடு' என்பதனைத் தொடுத்த பாமாலையை.

(கஅரு) பெருவரத்தினிற் பெற்றவர் - சிவபாத விருதயர்.

(கஅஎ) தாமரை - எழுவாய்.

(கஅகூ)- பாசமற்றிலராயினும் பூமியில் ஆசை சிவனுக்கான தன்மையால் ஒளிமிக்க திருவுருவத்தையுடைய பிள்ளையார். மற்று அசை. இவ்வாறன்றி ஆசைபிறிதிலராயினும் எனினுமமையும்.

(ககூங) பேணுவார் வினையாலணையும் பெயர்.

(ககூரு) விபூதியைமகிழ்ந்த மலரகிதர் ஏறற்குப்பல்லக்கு, நிழற்றக்குடை, திருநாமங்களைக்கூறி ஊத அழகிய சின்னங்கள், உவமையில்லாத முத்தின்றன்மையால் மன்னியவற்றை.

(ககூசு) குலமறைதேடு சேவடிதோன்ற - சிவபிரான் கூட்டமானவேதங்கள் தேடுகின்ற சிவந்த பாதங்கள் தோன்ற.

(ககூஅ) அந்தணாளரானோர்.

(ககூகூ) அருளானது அடியாரோடு கோயிலிலுள்ளார்க்குமுண்டாக.

(உ0க) சந்திரன்போலும் நீர்மையையுடைய.

(உ0அ) மாலையையுடைய யாமம் புலர்வுறுகின்ற வைகறையில்.

(உகஉ) பன்றுளார் அருள் நேர்ந்ததென்று.

(உகச)மெய்ம்மையைப் போற்றி விடாவிருப்பால் தம்மைத் தியானிக்குந்தன்மையைத் தந்தாள்வோர் செப்பமான முத்துச்சிவிகை தான் எம்மையாளாக உவப்போனின்று தந்தது.

(உகஅ) ஆதாரமாய் ஆர்க்கப்பட்ட ஒப்பற்ற கருணையிற்றெடுக்குண்டவாகிய முத்து விளையுமிருந்த கிரணங்களுடைய.

(உஉக) மாற்றுயர்ந்த பொன்னுலலங்கரிக்கப்பட்ட. சைவமாமறைத்தலைவர் -சிவாகமங்களை அருளிச்செய்த சிவபெருமான்.

(உஉஉ) உமையம்மையை, முற்றுமானவளென்றது.

உஉஎ) திருமேனியிற் சொரிந்திழி கண்ணீரிலாடினூர்.

(உஙஉ) கதிர்செய்வான் - சூரியன் உதிக்கும் வானிற்கலப்ப பூமியைக் கைம்மாறின்றிக் காக்க வந்தருளிய திருஞான சம்பந்தப்பிள்ளையார்.

(உஙங) வயிரின்குறை - வயிராகிய குறை.

(உசச) சிவபெருமான் சடையிலுள்ள சுத்தமான மாலையைமுன் சூட்டின சண்டேசுர நாயனூர் உரிமையோடு வரும்பதி என்று.

(உசரு) பெருமையையுடைய அந்தணர்கள் அழகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளத் தங்களுடைய பிள்ளையாராகிய சண்டேசுர நாயனூர் அழகிய பதியில் வந்தருளக்கண்டாராகும் மகிழ்வோடு.

(உசஅ) பாதகப் பயன் பெறும் - பாதகத்தாற் பயனைப் பெறும்.

(உருச) பைப்பணியவர் - படம் பொருந்திய சர்ப்பத்தை ஆபரணமாகவுடையவர்.

(உருசு) கண் - கணு.

(உருஅ) வாரணங்கு - கச்சிற்குத் துன்பத்தைச் செய்யும்.

(உசுஉ) முதலாயுள்ளவற்றை.

(உசுங) ஒல்லைமுறை - பழையமுறைப்படி. தோலோடு நூரு

ங்கினர் - பூஞ்சிமான்றோலோடு யஞ்ஞோபவீதத்தைத் தாங்கின வர்.

(உகூஅ) பந்து வந்தணைகின்ற மெல்லியவிரலையுடையாளும்.

(உசுகூ) வாக்கின் பெருவிறன்மன்னவர் - வாகீசர். நல்வினை ஆக்கியபேறென்று.

(உஎ0) மனத்திலிடையறுவன்பும் திருமேனியிலசைகின்ற க ந்தையும் மிகை என்கின்ற கருத்தும்.

(உஎச) புகலிப்பிரானனவர் உடன்பாட்டோடும் பின்னாகவர.

(உஎரு) நிறைந்தவெள்ளமாகிய வேதத்திலே திருத்தோணி யில் வீற்றிருந்தவரை. தூக்கின் - யாப்பினால்.

(உஅசு) சம்பாதி, சடாயுவென்னும் பட்சிராசர் வணங்கி.

(உஅகூ) பருத்த யானையை யுரித்தவர்.

(௩0௧) புலனைந்தும் பொறிகலங்குமிடத்தஞ்சற்க என்பாரு டைய ஐயாறென்று.

(௩0சு) "அங்கையாரழல்" என்று முதலிலெடுத்து, மங்கை வாழ் பாகத்தார் மழபாடி தலையினால் வணங்குவார்கள், பொங்கு மா தவமுடையா ரெனப்பாடி வணங்கி.

(௩0எ) வயிரமணித்தூணமர்ந்து மகிழ் - வச்சிரத்தம்பநாயகர் விரும்பி மகிழ்கின்ற.

(௩க0) செந்தாமரையின் முறுக்கவிழ.

(௩கக) அங்கரிலுள்ள கொல்லி மழவனானவன் தான் பெற் ற பெறற்கரிய அமுதம்போன்ற மென்சொல்லையுடைய கன்னிகை யாகிய இளமடப்பிணைபாகும், விரும்பத்தக்க அழகிய கொழுந்தி னுடைய ஒளிபொருந்திய உடம்பில் நிலையான பெருவியாதியாகும் முயலகன் வந்தடைய உடம்பு வருத்தத்தைப் பொருந்தி.

(௩கஉ) வேறொரு தன்மையாற் றவிராததாக, சிவபெருமானு டைய பாதங்களைப்பற்றியே வருங்குலத்துப்பாண்மையினா னுதலி னால் வருத்தந்தீர.

(௩கச) நாட்டும் - நாட்டுங்கள். ஏத்தும் - ஏத்துங்கள்.

(௩கஅ) பாச்சின்மேய - திருப்பாச்சிலாச்சிரமத்தின் மேய.

(௩உ௩) மலைவிசேடத்தால் சிவந்த கண்களையுடைய குறவரை.

(௩௨அ) அவ்விடத்தே ஆளுடையபிள்ளையாரமர்ந்திருக்கு நாளின்கண் துளிதூங்கும் முகிற்கூட்டங்கள் சுரக்கும் பெய்தலொழி காலத்தில் மிகுந்த கடல் சூழ்ந்த உலகமெல்லாம் வெய்யிலைப்பெறு மையால் வெய்யிலின் மேல் விருப்புவரப் பக்கத்திலுள்ள மலையுங் குளிர்கின்ற பனிப்பருவம் வந்தது.

(௩௨௯) தாமரைமுகம் புலர்தலால் வண்டின் கூட்டங்கள் வெறுத்தகல, பனிக்குமணியை மரகதக்கொடியிற்கோத்தபான்மையைப் போலத் துளித்தலைமெல்லறுகானது பனியைத்தொடுத்தசைய, மலைகளுஞ் சூழ்கின்ற பனியால் குளிருக்குடைந்து வெள்ளிய வஸ்திரத்தைப் போர்த்தாற்போன்றன.

(௩௩௧) இறை - இறப்பு. கருமுகையினிதழலர்கின்ற மிருதுவான கூந்தலையுடைய பெண்களது இரண்டாகிய கலசம்போன்ற விரும்பத்தக்க முலையில். பித்திகை, குளிர்காலத்தே உஷ்ணத்துக்காக அணியும் மலர்.

(௩௩௨) விரிந்த மிருதுவான முல்லைமலர்களையுடைய அழகிய மேலைத்திசையினிடங்களிலெல்லாம் உஷ்ணத்திற்காக மஞ்சளையுங் குங்குமத்தையும் அரைத்து அமைப்பார்கள். அயலிடங்களினெல்லாம் பருத்த அகிற்றுண்டங்களைப் பிளந்து புகைப்பார்கள்; இடையிடங்களிலெல்லாம் அக்கினியை உமிழ்கின்ற பேழ்வாயையுடைய இரும்புத்தோணியை இழுப்பார்கள்.

(௩௩௩) கொடிமாடச்செங்குன்றூர். பனித்தல் - நடுங்கல். குளிர் முன்னணிபினி- குளிர் முன்னர்க்கண்டு பின்பு சுரங்காணுநோய்; அது, குளிர்ச்சுரம். மேலே இரும்புத்தோணி என்றது, இரும்பாற் றோணிவடிவாகச்செய்து தீயை நிறைத்துக் குளிரின் பொருட்டுச் சமீபத்தில் இழுக்கப்படுவதை.

(௩௩௫) அவ்வினைக்கிவ்வினை என்று முதலிலெடுத்து, சிவனுண்ட வெவ்விடத்தை முன்னமே தடுத்து எமதிடரைநீக்கிய வெற்றியினால் எவ்விடத்தும் அடியாரிடர் தீர்ப்பது கண்டேமென்று.

(தொடரும்.)

ஜி. சதாசிவம்பிள்ளை.

னம் திருக்குறளாசிரியராய்த் தமிழகத்தை வாழ்வித்த திருவள்ளுவர் தென்மதுரைக்குச் சிறந்தவரென்பது கருத்து. இப்பாட்டின் போக்கிலிருந்து, வடமதுரை கண்ணன் அவதாரவிடமாய் விளங்குவதுபோலத் தென்மதுரை திருவள்ளுவர் அவதாரவிடமாக விளங்குவது என்னுங் குறிப்புத்தோன்றுதல் காண்க. கூடற்குத் தென்மதுரையென்னும் வழக்கு "தக்கிண மதுரை தான்வறிதாக" என்னும் மணிமேகலையடியானும் அறியப்படும். இவற்றால், திருவள்ளுவர் அவதாரஸ்தலம் மதுரையெனக்கொண்டு, அவர் வசித்தவிடம் மயிலாப்பூராகக் கோடல் பொருத்தம் போலும்!

## உ. ஏலேலசிங்கன்.

இப்பெயருடையான், திருவள்ளுவர்காலத்துக் கப்பல்வர்த்தகனாயிருந்தானென்பதும் திருவள்ளுவராற் பெரிதும் அநுக்கிரகிக்கப் பெற்றானென்பதும் பிறசிலவரலாறுகளும் பிரசித்தமாக வழங்கிவருகின்றன. இக்கர்ணபரம்பரைச் சரித்திரங்கள் முழுமையும் ஆதாரமின்றியே நம்பமுடியாதாயினும், அவற்றினின்று சிற்சில உண்மைகளை நாம் ஆராய்ந்துகொள்ளலாம். அம்முறையே நோக்குமிடத்து ஏலேலசிங்கனென்பானொருவன் பழங்காலத்திலிருந்தசெய்தி இப்போது தெரியவருகிறது. இலங்கைச் சரித்திரக்குறிப்பு என்னும் பெயருடன் Hon. P. அருணாசலமவர்கள் வெளியிட்டநூலில், முற்காலத்தே இலங்கையைவென்று, அதனை மிக்ககீர்த்தியுடன் ஆட்சிபுரிந்த தமிழரசரில் ஏலேலன் என்பான் சிறந்தவனென்பது காணப்படுகின்றது. இவன் பெயருடன் இணைக்கப்பட்ட சிங்கனென்பது சிங்களத்தை ஆண்ட அரசர்புனைந்த சிறப்புப்பெயர்களுள் ஒன்றும். இதனை அவ்வரசர் கூட்டத்தில்வரும் பரராசசிங்கன், இராஜசிங்கன் முதலியவற்றால் உணர்க. இனி இவ்வேலேலசிங்கனுடைய வரலாற்றைப்பற்றி, ஸ்ரீ-அருணாசலமவர்கள் எழுதியிருப்பவை வருமாறு:—

"கி. மு. 237-ம் ஆண்டில் விஜயவமிசத்திற் குழப்பங்கள் தொடங்கின. அரசன்கீழ் உத்தியோகத்திலிருந்த தமிழ்ச்சிற்றரசரிருவர் அரசனைக்கொன்று அவன் பெருநாட்டை அபகரித்து அதனை அவ்விருவருமாக இருபத்திரண்டுவருஷம் ஆண்டார்கள்

பிறகு, அவர்கள் அவ்வாட்சியினின்றும் நீக்கிக்கொல்லப்படவே, பூர்வீகவமிசமானது முன்னைநிலைமையில் வைக்கப்பட்டது. ஏலேலன் (Elalen) என்ற பெயருடைய சோழனொருவனால், பத்துவருஷத்துக்குப்பிறகு தமிழர் தங்களை மறுபடியும் ஸ்தாபித்துக்கொண்டார்கள். (இவரால்) ஆட்சியினின்று நீக்கப்பட்ட வமிசத்தார்,—எந்தவிடத்தில் இன்றும் பெரியதடாகமும் திச்சாராமாவின்கோயிலும் இன்னோருடைய ஆட்சியின் ஞாபகசின்னங்களாக விளங்குகின்றனவோ, அந்தத் தென்கடற்கரையிலிருக்கும்—மாகம்பத்தென்னுமிடத்தில் அடைக்கலம் புகுந்தார்கள். அநுராதபுரத்திலிருந்த ஏலேலன், மித்திரரிடத்துஞ் சத்துருக்களிடத்தும் பக்ஷபாதமின்றி அவ்விராஜ்யத்தை நாற்பத்துநான்குவருஷம் ஆண்டான் என்று புத்தகோசங்கள்தெரிவிக்கின்றன. சோழவரசரின் வழக்கப்படி, அவன் அரண்மனைவாயிலில், அவ்வரசர், படுக்கையின் தலைப்புடனிணைக்கப்பட்ட "ஆராய்ச்சிமணி" தொங்கிற்று. அந்தமணி அடிக்கப்பெற்றால், உடனே நியாயவிசாரணை நடைபெற்று மனக்குறைகள் நீக்கப்படும். மகாவமிசத்தில், (அவனாட்சிக்காலத்திலே) பறவைகளும் மிருகங்களுங்கூட மனக்குறை தீரப்பெற்றன என்று கதைகள் வழங்குகின்றன. அவனது வழுவாநீதியானது, தன்மகன்மேலும் மரணதண்டனை விதிக்கச் செய்தது. அம்மகன், அறியாமலே தன்றேரால் உண்டாக்கிய புத்தப்பள்ளியி னழிவுக்காகத் தன் உயிரையே அவன் அதற்குப் பிரதியளிக்கும்படி நேர்ந்தது" எனக்கண்டுகொள்க.

இவற்றால், இற்றைக்கு 2100-ஆண்டுகட்கு முற்பட்ட ஏலேலசிங்கனே, திருவள்ளுவர்க்கு நட்பினனாயிருத்தல் கூடுமென்றும், இவன் இலங்கையை வெல்லுதற்குக் கப்பல்கள் பலவற்றைச்செலுத்திப் பிரசித்தியடைந்தமைபற்றி, இவனையே கப்பல்வியாபாரியென்று பிற்காலத்தார் வழங்கியிருக்கக்கூடுமென்றும் தோன்றக்கூடும். கர்ணபரம்பரையிலும், ஏலேலனுடைய இணையற்ற நீதிமுறையினாலே, "நின்னைமெய்ப் பரதனை நிகரில் பார்த்தனை—முன்னினு நினைத்தவை யனைத்து முற்றுமால்" (நைடதம்) என்றபடி, கப்பலோட்டிகள் முதலிய தொழிலாளர் தாம் நினைத்த பெருங்காரியங்கள் நிறைவேறுமென்று கருதி, "ஏலேல" என அவன் பெயரை

வழங்குவர் என்பர். இவ்வேலேலனே திருவள்ளுவர் காலத்தா னென்பதை வற்புறுத்தற்கு இவற்றுக்குமேல் ஒன்றும் தெரியவந் திலது.

## ரு. திருவள்ளுவர்காலம்.

தெய்வப்புலவரை, கடைச்சங்கத்தார் காலத்துக்கு இருநூறு முந்நூறாண்டுகட்கு முன்னவராக நிறுத்துதலே பொருத்தமாகத் தோற்றுகிறது. திருவள்ளுவர்வழங்கிய சொற்களையும் பொருள்க ளையும் எடுத்துவழங்காத சங்கநூல்கள் ஒன்றுமில்லாமையே இதற் குத்தக்க சான்றாகும். அன்றியும், எட்டுத்தொகையுள்ளே ஔவை யார் கபிலர் முதலிய சங்கப்புலவர் பாடல்களுடன் திருவள்ளுவ ரது தனிப்பாடலொன்றும் காணப்படாமையும் அறியத்தக்கது. இன்னும், கூலவாணிகன் சாத்தனார், மணிமேகலையில், பரசுராமர் காலத்திருந்த சோழவரசனாகிய ககந்தனென்பவன்சிறுவன், காவி ரிக்கரையில் மருதி என்னும் பார்ப்பனியை இச்சிக்க, அதற்கு அவள் உள்ளம் நடுங்கி விரைந்து பூதசதுக்கஞ்சென்று தெய்வத்தை நோக்கித் தனக்குநேர்ந்த கற்புக்குறைவைப்பற்றிப் பிரலாபித்த போது அத்தெய்வத்தின் கூற்றாகவைத்து—

“தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை என்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்.”

எனச் சிறைசெய்காதையிற் கூறியுள்ளார். இங்ஙனம், பரசுராமர் காலத்துக் கதையிலே, தெய்வத்தின் கூற்றில்வைத்துத் திருவள் ளுவர் வாக்கைத்தொடுத்திருப்பது, சாத்தனார்க்கு இத்தெய்வப்புல வர் சிலநூற்றாண்டுகளளவேனும் முற்பட்டவரென்பதைக் குறிக்கா மற்போகாது. தங்காலத்துள்ளார்வாக்கை (அவர் எத்தகையபெரியா ராயினும்) மிகப்பழஞ்செய்தியில் இடைநுழைத்துக்கூறின், அஃது ஆராயத்தக்கதேயன்றோ. நம்காலத்துள்ள பெரியபுலவரொருவர் வாக்கை இராமர்காலத்திருந்த ஒருவர் கூற்றாகவைத்துப் “பொய் யில் புலவன் பொருளுரை தேறாய்” எனின், அது சிறவாதென்பது பிரத்தியக்ஷமாம். இவற்றால் தெய்வப்புலவர் சிலநூற்றாண்டுகள ளவேனும் கடைச்சங்கத்து முற்பட்டவராகக் கருதலாம். இங்ஙனம்

கூறின், கர்ணபரம்பரைபற்றிய சிலசெய்திகளுக்கு விரோதமாகு மெனின், அவையெல்லாம், நாம் செவ்வையாக ஆராய்ச்சிசெய்தற் குரியனவேயென்க.

## ச. திருவள்ளுவர்மேற்கோள்.

திருவள்ளுவனார், தம்நூலே, "வியாழவெள்ளிகள் துணிபுதொகுத்துப் பின்னீதிநூலுடையார் கூறியவாறு கூறுவர்" என்று பரிமேலழகர் எழுதாநிற்பர். வியாழவெள்ளிகள் துணிபு - பிரகஸ்பதியும் சுக்கிரபகவானுங்கூறிய நீதிசாஸ்திரங்கள்; அவர்கள் துணிபு தொகுத்துக்கூறிய பின்னீதிநூலுடையார் - சாணக்கியரும் காமந்தகரும்; இவர்கள், அன்னோர்வழியே பற்றியவரென்பது சாணக்கிய அர்த்தசாஸ்திரம் காமந்தகங்களால் அறியப்படும். இவற்றுள், சாணக்கியரியற்றிய அர்த்தசாஸ்திரம், இதுகாறும் வெளிவந்ததில்லையாயினும், இப்போது சிலகாலமாக, அது "மைசூர்ரெவ்யூ" என்னும் ஆங்கிலமாஸிகபத்திரிகையில் மொழிபெயர்க்கப்பட்டு வருகிறது. இதனில், எத்தனையோ அரியவிஷயங்கள் வெளியாகின்றன. திருக்குறள்—தெரிந்துதெளிதல் என்ற அதிகாரத்தில்,—

"அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்."

என்னுங் குறளிற் பரிமேலழகர் **உபதைகளைப்**பற்றிக்கூறிய உரை முழுதும், காமந்தகத்திலின்றேனும், சாணக்கிய அர்த்தசாஸ்திரத்துப் பத்தாவதத்தியாயத்துக் காணப்படுகிறது. இவ்வுரையினீற்றில், "இவ்வடநூற்பொருண்மையை உட்கொண்டு இவரோதியதறியாது பிறரெல்லாம் இதனை "உயிரெச்சம்" எனப்பாடந்திரித்துத் தத்தமக்குத் தோன்றியவாறே உரைத்தார்" எனப் பரிமேலழகர், பிறர்கொண்ட பாடத்தின் பிழைகாட்டித் திருவள்ளுவருண்மைக்கருத்தைச் சாணக்கியத்தைக்கொண்டு தெளிவுபடுத்தியிருத்தல் காண்க. இன்னும் "ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர், சொற்றொக்க தேறப் படும்" (௫அ௯) என்னுந் திருவள்ளுவர் கருத்துச் சாணக்கியம், கஉ-ம் அதிகாரத்துக் காணப்படும். இங்ஙனமே பலவுள.

## ௫. இஷ்டம் பூர்த்தம் தத்தம்.

வடநூலார் அறஞ்செயன்முறையை மூன்றுவிதமாக வழங்குவர்; அவை :—இஷ்டம், பூர்த்தம், தத்தமென்பன. அவற்றுள் **இஷ்டமாவது**, உலகனைத்தும் வாழ்கவெனக்கருதித் தெய்வங்களை நோக்கித் தொழுமுறை ; இஃது, அக்கினி, ஆகுதி, மந்திரமுதலியவற்றால் வேள்விமூலம் ஆராதித்தலாம். **பூர்த்தமென்பது**, எல்லாவுயிர்களும் இடுக்கணின்றி இன்பமடையும் வண்ணம் இயற்றும் அறம்; வித்தியாசாலை, வைத்தியசாலை, தண்ணீர்ப்பந்தல் முதலாய பொதுநன்மைகளை இது குறிக்கும். **தத்தமென்பது** எளியோர்க்கிரங்கி ஈதலாம். இம்மூவகையுள்ளே, முதலிற்குறித்த இஷ்டம் அவ்வவ்வருணாச்சிரமங்கட்கு ஏற்றவாறு சிறப்பாயமைவதென்றும் ஏனைப்பூர்த்தமும் தத்தமும் எல்லார்க்குமொத்த தர்மங்களென்றும் உணர்க. இங்ஙனம் வடநூலார் வகுத்தமுறையையே, திருவள்ளுவரும் கூறியிருத்தல் கவனிக்கத்தக்கது. அம்முப்பகுதியறங்களுள், சிறப்பியல்புடைய இஷ்டத்தை "எல்லா அறநூல்களினும் நல்லனவெடுத்து எல்லார்க்கும் பொதுப்படக்கூறுதலே இயல்பாகவுடைய" வள்ளுவனார் தம்நூலில் விரித்துரைக்க ஒருப்பட்டிலராயினும், இல்வாழ்க்கையதிகாரத்தில்—

> "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லொனென்றாங்
> கைம்புலத்தா றோம்ப றலை."

என்பதனால் அவ்வறத்தைக் குறிப்பித்தருளினார். பிதிர்க்களுக்கும் தெய்வங்களுக்கும் விருந்தினர்க்குஞ்செய்வன யாகாதிகிருத்தியங்களன்றோ. இங்ஙனமே, "இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்—நல்லாற்றி னின்ற துணை" என, வானப்பிரஸ்தமுதலிய சிறப்புத் தருமங்களையும் தெய்வப்புலவர் சூசிப்பித்தல் காண்க. இனிப் பொதுநன்மையாகிய பூர்த்தமும், வறியராய் ஏற்றார்க்கு மாற்றுதீதலாகிய தத்தமும், இல்லறவியலினீற்றில் ஒப்புரவு ஈகை என்ற இரண்டு அதிகாரங்களால் முறையே விரித்துக்கூறினர். ஒப்புரவு எனத்தெய்வப்புலவர் கருதியது பொதுநன்மையான தர்மங்களையே என்பதை, செந்தமிழில் முன்பு தனிவிஷயமாகக்கொண்டு விளக்கியிருக்கிறேன். திருக்குறளில், ஒப்புரவறிதலதிகாரத்துள்ள பாடல்

களைக்கொண்டாராயினும் அவ்விஷயம் யாவருக்கும் எளிதில் விளங்கத்தக்கது. இங்ஙனம், தெய்வப்புலவர் வடநூலார் கூறும் அறவியல் மூன்றையும் முறையே ஓதி, அவற்றால் அடைதற்குரிய புகழை இல்லறவியலினீற்றில் வைத்து முடித்திருத்தல் கண்டுகொள்க.

## ௬. திருக்குறள்களின் முறைவைப்பு.

திருக்குறளில் அதிகாரமுறை, ஆசிரியர்வைத்தமுறையே வழங்குகின்றனவாயினும், அவற்றின் பாடன்முறையை, உரையாசிரியர் ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாகக் கொண்டெழுதுகின்றனர். மணக்குடவர்பரிமேலழகர் உரைகளை நோக்குமிடத்து, இவ்வேற்றுமையை அதிகாரங்கடோறும் மிகுதியாகக்காணலாம். இதனால், திருக்குறளின் ஆதிப்பாடன்முறை நிச்சயித்தல் கூடாதுபோயிற்று.

## ௭. ஒரு குறிப்பு.

திருக்குறளில் மற்றொருவிசேடங் கவனித்தற்குரியது. சங்கநூல்கள் பெரும்பான்மையிலும் "குஃறொடர்ந்த அன்மொழி" பயிலுதல் காணலாம். அவற்றிலும், அகப்பொருளைப்பற்றிய நூல்களிலோ எனில், அச்சொல்வழக்கம் மிகுதியேயாம். இம்முறையே, ௨௫-அதிகாரங்கள் காமவிஷயமாகக்கூறிய திருவள்ளுவரிலும் அச்சொல்லை எதிர்பார்த்தல் இயல்பே. ஆனால், அந்நூலில் ஓரிடத்தும் அது வழங்கப்படாமை வியக்கத்தக்கது. இச்செய்தி, வள்ளுவனார் தம் நூற்பெருமையில் பெருநோக்குடையராயிருந்தனர் என்பதைப் புலப்படுத்தக்கூடியது. ஏனைப்புலவர்கள் அகப்பொருள்விஷயமாகக் கூறியவற்றினும் பலமடங்கு சிறப்பாகவும் கௌரவமாகவும் வள்ளுவனார் தம் காமத்துப்பாலையியற்றினார் என்று அறிஞர்கள் போற்றும் புகழ்ச்சியோடு இவ்விஷயமும் சேர்த்து மதிக்கற்பாலது.

## ௮. இறையனார் பாயிரம்.

திருவள்ளுவமாலையில் அசரீரி நாமகள் இவர்கள் பாடலையடுத்து இறையனார்பாயிரம் வைக்கப்பட்டிருக்கிறது. இம்முறைவைப்புச் சிறிது சந்தேகத்துக்கு இடந்தருகிறது. என்னை? கல்லாடத்தில்,

"சமயக் கணக்கர் மதிவழி கூறாது
உலகியல் கூறிப் பொருளிது வென்ற
வள்ளுவன் றனக்கு வளர்கவிப் புலவர்முன்
முதற்கவி பாடிய முக்கட் பெருமான்."

எனவரும் அடிகளில் இறையனார் பாயிரத்தை "முதற்கவி" எனக் கூறுதலால் என்க. இதனால், அம்மாலையின் முதற்பாட்டு இறைய னாரதே போலும்!

### ௬. பரிமேலழகர்.

இவரைப்பற்றிச் செந்தமிழில் முன்பெழுதிய என் வியாச மொன்றில், இவர் உரைப்பாயிரமாகக் கண்ட

"விரைத்தா ரலங்கற் றிருவள்ளுவர் முன்பு வெண்குறட்பா
நிரைத்தார் மிகுபொரு ளொன்றும் விளங்க நெறிப்புலவ
ருரைத்தார் பலரு மதற்குரை தன்னை உலகறியக்
கருத்தான் வகுத்தமைத் தான்கலை தேரொக்கை காவலனே."

என்னும் பாடலைக்காட்டி, இவர், ஒக்கை என்ற ஊரினரென்பதை விளக்கியிருக்கிறேன். இனி, இவரின் பெருமையை, கொற்றவன் குடி உமாபதிசிவாசாரியார்,

"வள்ளுவர்சீ ரன்பர்மொழி வாசகந்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை—ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணந் தொகுசித்தி யோராறுந்
தண்டமிழின் மேலாந் தரம்."

என விதந்துகூறுவர். இப்பாடல் உமாபதிசிவாசாரியாரதென்பது பெருவழக்கு. இச் சிவாசாரியார்காலம் இற்றைக்கு 600-வருஷங் கட்கு முற்பட்டதாகலான், பரிமேலழகர் அவர்க்கு மிகவும் முற்பட் டவரென்று தடையின்றிக்கருதலாம். இப்பரிமேலழகர் பரிபாடற் கும் உரையியற்றினவரென்பதும், இவர் வைணவரென்பதும் செந் தமிழ்வாயிலாக முன்னரே உணர்ந்தவை. செந்தமிழ் உ-ம்பகுதி யில் வெளிவந்த நுண்பொருண்மாலையில் திருமேனி இரத்தினகவி ராயர் இவரது பரிபாட்டுரையினின்று இரண்டு மேற்கோள்கூறிப் போதலுங்காண்க. இவரது உரையை, ஏடுகளைவைத்துப் பரிசோ

திக்கும்போது பல அரியதிருத்தங்கள் காணப்படுகின்றன. உதாரணமாக,—நான்முதலிற் காணும் வேறுபாடுகள் சில வருமாறு:—கஅ "சிறப்போடுபூசனை" என்னுங் குறளுரையிலே—"தேவர்கட்கு இவ்வுலகின் மக்களாற்செய்யப்படும் விழவும்பூசையும் நடவாது" என அச்சிற்பதிப்பிக்கப்பட்டுளது. ஏட்டுப்பிரதிகளில் "மக்களாற் செய்யப்படும் விழவொடுகூடிய பூசையும் நடவாது" என்று காணப்படுகிறது. "விழவும்பூசையும் நடவாது" என்பது ஒருமைப்பன்மை மயக்கமாவதேயன்றி, "நைமித்திகத்தொடுகூடிய நித்தியமென்றுராகலின்" என மேல் விசேடவுரையிற் கூறலாலும், அச்சுப்பாடம் பிழைபடுதல் காண்க. சஙு-வது குறள் விசேடவுரையிலே—"விருந்தொக்கலுனென்றாங்கு" என்பதன்கணுள்ள—"என்றவென்பது விகாரமாயிற்று"—என்பது அச்சுப்பிரதியிற் காணப்படுகிறது. இவ்வாக்கியம் ஏட்டுப்பிரதிகளில் இல்லை. உஎ-ம் குறளில் "சுவையொளியூறோசை நாற்றமென்றைந்தின்" என்புழி, 'என்றைந்தின்' என்னுமிடத்தும் இவர் இங்ஙனமெழுதாமைகாண்க. இனி, ககஅ-ம் குறளின் விசேடவுரையிலே "சான்றோர் சீர்தூக்கலாவது—தடைவிடைகளாற் கேட்டவற்றை ஊழானுள்ளவாறு உணர்தலாகவும்" என அச்சிற்காணப்படுகின்றது. ஏட்டுப்பிரதிகளிலே, "தொடைவிடைகளாற் கேட்டவற்றை" எனக்காணப்படுகிறது. இதுவே, மிகப்பொருத்தமானதும் பரிமேலழகர் கருத்துமென்பதை—புறப்பொருள்வெண்பாமாலை, வாகைப்படலம் அவையமுல்லையில் வரும், "தொடைவிடை யூழாத் தொடைவிடை துன்னித், தொடைவிடையூழிவை தோலா" என்னும் பாட்டானும் அதனுரையானும் நன்கு தெளியலாம். சகூ-ம்குறளின் விசேடவுரையிலே, "ஐம்புலவின் பங்களாரத்துய்க்கும் எண்மையுடைய" என்றிருக்கற்பாலது, "துய்க்கும் மேன்மையுடைய" என்றுள்ளது. சுகூ-ம் குறளுரையிலே, "கவானின்கட்கண்ட பொதுவுவகையினும்" என்றபாடம், "கவானின்மகற் கண்டபொழுதைபுவகையினும்" என ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகின்றது. "கவாஅன் மகற்கண்ட தாய்மறந்தாங்கு" என்னும் நாலடியின் சொல்லையும்பொருளையும் இப்பாடம் நன்கு தழீஇநிற்றல் உய்த்துணர்க. கஙகூ-ம் குறளுரையிலே—"சொல் சாதியொருமை; சொல்லெனவே அமைந்திருக்க வாயாலென வேண்

டாது கூறினர்" எனக்காணப்படுவது, ஏட்டுப்பிரதிகளில் "சொலல் சாதியொருமை; சொலலெனவேயமைந்திருக்க" எனக் காணப்படு கின்றது. "ஒல்லாவே......வாயாற்சொலல்" என்ற விடத்து பால் மயக்க நீக்குதற்கு இவ்வுரை எழுதப்பட்டதாதலானும், "சொலல் - சொல்லுந்தொழில்கள்" என உரைகாரர் இக்கருத்தை விளக்குதலா னும் அச்சுப்பாடம் தவறுதல் அறிக. இன்னும், இங்ஙனமே எழுதிச்செல்லின் மிகவிரியும்; சமயநேர்ந்துழி விளக்குவேன். இவையன்றி, திருக்குறளிலே உரைகாரர் கூறுத பாடபேதங் களும் காணப்படும். எ௮-ம் குறளில் "வன்பாற்கண்" எனவும், உரையில், வன்பால் - வன்னிலமெனவும் காணப்படுகின்றன; ஏட் டுப்பிரதிகளிலே "வன்பார்க்கண்" என்றேயுள்ளது. பால் - நில மென்பதினும், வன்பார் - வன்னிலம் என்பது பொருத்தமாகத் தோற்றுகிறது. ந௮-ம்குறளில், "வீழ்நாள்படாமை" என—அள பெடுக்கற்பாலது—பிழைபட்டுக்காணப்படுகிறது. உ௨ரு-ம்குறளில், "ஆற்றுவாராற்றல்" என்பது "ஆற்றுவார்க்காற்றல்" எனவுமுள் ளது; "ஐந்தவித்தானாற்றல்" என்பதில், நான்கனுருபை விரித்த வர் "ஆற்றுவாராற்றல்" என்புழியும் விரியாமற்போகாராதலின், பின்னையபாடமே பாடம்போலும். இவ்வாறே மற்றுஞ்சிலவுள.

## க0. கதைகள், பிரசித்த உலகவழக்குகள், வடமொழிப்பதங்கள்.

திருவள்ளுவர், தம்நூலில் பல சரித்திரங்களை வெளிப்படையா கவும் குறிப்பாகவும் கூறிச்செல்வர். அவை :—இந்திரன் கௌதம ராற் சாபம்பெற்றமை (உரு), நகுஷன்கேடு (அகூக), மார்க்கண்டே யர் (உகூக), ததீசி, சிபி (எஉ), திருமால் உலகளந்தது (கூக0),— இவையன்றிப் பரிமேலழகியார் அவ்வவ்விடங்கட்கேற்பக் காட்டுஞ் சரிதங்களும் உள. பாண்டவர் சூதாட்டம் (கூநரு), இராமராவண யுத்தம் (எஎந), பொற்கைப்பாண்டியன், மகனை முறைசெய்தசோ ழன் (ருகஎ), கட்டியங்காரன் (ருக௪), பதுமுகன் (எஎக), இனி, உலகவழக்குகளில் முக்கியமானவையிரண்டு :—தூரத்தே சென்ற பந்துக்கள் நினைந்தால், அவரால் நினைக்கப்பட்டவர்க்குத் தும்மல் தோன்றுமென்பது. இதனை "நினைப்பதுபோன்று நினையார்கொ

றும்மல், சினைப்பதுபோன்று கெடும்" என்னும் கஉ0௩-ம் குறளிற் கண்டுகொள்க. மகளிர், சுவரின்கட் கோடிழைத்துத் தொகையெண்ணுதல் மரபு; இதனை கஉ௬௧-ம் குறளில் "நாளொற்றித்தேய்ந்தவிரல்" என்பதற்குப் பரிமேலழகர்கூறிய உரையானுணர்க. இனித், திருக்குறளில் வடமொழி வழக்குகள் பலவற்றைத் தெய்வப்புலவர் கூறுதல்போலவே, வடமொழிப்பதங்கள் பலவும் ஆளுவர். இவற்றில், தற்சமமாகவும் தென்மொழியில் வழக்குமிகுதியாகவுமுள்ள வடசொற்களை நீக்கிப்பார்த்தாலும், ஏறக்குறைய ௫0-க்கு மேற்பட்ட சுத்த வடபதங்கள் காணப்படும். அவை:—புரந்தரன், புருவம், பூதம், மங்கலம், மந்திரி, மதி, மணி, மாத்திரை, மாயம், மானம், முகம், முத்தம், யாமம், வித்தகர், தேயம், தேவர், நாகம், நாகரிகம், நாமம், பருவம், பாகம், பாக்கியம், பாவம், கருமம், கனம், காமம், காரணம், குணம், குலம், கோடி, சலம், ஞானம், தண்டம், தவம், தானம், துலை, தெய்வம், இலக்கம், இந்திரன், ஆயம், ஆசாரம், ஆதி, ஆகுலம், அவி, அந்தம், அமரர், அமிர்தம், அங்கணம்' அதி (நுட்பம்) முதலியன.

பத்திராசிரியர்.

---

# "இயல்வது கரவேல்."

---

இது அறஞ்செய்தலையுணர்த்தி யளவுகூறுகின்றது. இ - ள். (வறுமையானிரப்பவர்க்கு உன்னாற்) கொடுக்கக்கூடியபொருளை (நீ) ஒளியாதே எ - று. இதனாற் கொடுக்கக்கூடிய பொருள் எத்துணைச் சிறிதளவாயினும் அது குற்றமன்றென்பதும், கொடுக்கக் கூடாத பொருளில்லை யென்பதும் பெறப்படும். இவ் வளவு, இரப்பார்க்குக் கரக்கும் வஞ்சைமக்களை நோக்கிக் கூறியவாறு. இரப்பார்க்கு ஈயுமிரக்கமுடையரேனும் இரப்பார்பெருமைக்கேற்ப ஈயும் பொருளிலையே, இத்துணையானீதல் பெருமையன்றே என ஈயாதொழியினுமொழியுமென்று கருதி ஒல்லும்வகையா னவ்வீதலைச் செய்கவென்பார் இயல்வதுகரவே லென்றார். ஈண்டிரப்பார் வறியராயி

ஞான்றோ? அன்னோர்க்குப் பெருமையென்னோ? எனின்; வறியரே யாயினும் அவர்தாமுந் தகுதியிற் குணத்தி னொழுக்கத்திற் செய விற் பலதிறப்படுவர். முன் அறஞ்செயவிரும்பென்றதன் விருத் தியுட் பிறர்பயன்கருதியதென்புழிக்கூறிய, பலர்க்கும் பயனுமாறு செய்யும் அறத்தினை யேற்றுத் தன்கையிற் பொருளின்மையா னிரக்கப் புகுவாருமுளர். அன்னோர் தகுதியிற் குறையாதார். அன்றிப் பொருளுடையராயு மிருப்பர். இருந்துந் தாமேற்ற அறச் செயன் மிகுந்து பொருளேற்கும் பெற்றியதாயின் என்செய்வர்? அத்தகுதியுந் தன்மைப் பொருட்சிறுமையு நோக்கி ஈயாதொழித லாகாதென்பார் இயல்வது கரவேலெனக் கூறினாரென்னும் பொ ருந்தும். இரப்பார்பகுதி யனைத்தும் பின் ஏற்பதிகழ்ச்சி யென்பத னுட் கூறுதுங் கண்டுகொள்க. இனி; இயல்வது:—இருப்பினியல் வதும், வருவாயினியல்வதும், நிலையினியல்வதுந், தகுதியி னியல் வதும், நெஞ்சினியல்வதுஞ், சொல்லினியல்வதுஞ், செயலினியல் வது மெனப் பலவகைப்படும். இவைதம்மு ளொன்றேபெறினுஞ் சிலவேபெறினு மனைத்தும்பெறினு மெவ்வாற்றானுங் கரவேலென் பது. 'எஞ்சலின் வைப்பொடு வரனிலை தகுதி, நெஞ்சொடு சொற் செய லென்றிவை யேழி, னியல்வது கரவே லென்மனார் புலவர்.' இஃதுரைச் சூத்திரம். இவற்றுள்;

இருப்பினியல்வதென்பது:—முற்செய்துபோந்த நல்வினை காரண மாகப் பொருளெய்திய செல்வர் அடுத்து வரும் பிறவியினுந் தாம் அவ்வாறாதற்பொருட்டு 'ஈதற்குச் செய்க பொருளை' யென்ப வாகலின் அவ்வறத்தினுக்கு ஆக்குங்கால் அப்பொருளி னளவறி தல்." அளவறிதலாவது, ஒரேகாலத்து எல்லாப்பொருளு மொழியு மாறின்றி யெஞ்ஞான்று மது குறைவுபடாவண்ணங் காண்டல். அங்ஙனம் இருப்பினியலுமாறு செய்யுங்கால் இரப்பவர் அதற்கு உண்மகிழாதொழியின் அப்பழி ஈவார்க்கன்று. 'கரப்பினவர்பழி' யென்று ஈவார்க்கேற்றியதுபோல இரப்பார்க்கேயாமென்க. இருப் புக்கேற்பவீயாது கரக்குமேல் 'இளைஞர்க் குதவாதான் செல்வம்... உள்ளனபோலக் கெடும்' என்பவாகலிற் செல்வமழியுங்காலத்து முன் ஈயாமையைக் கருதி யுலகம் அவரை யொதுக்கும். இருப்பு

மிகுந்திருந்து மீயாது கரப்பரேல் அவ்விருப்பானவர்க்குப் பயனுவது மில்லை. பொருள் பெருகுநெறியே மனஞ்செல்வதியல்பு. அது பெருகுவது எதன்பொருட் டென்றுராய்தலே யறிவுடையோர் செய்கை. அங்ஙனமாராயவே, பொருள் செய்யுமாறும், இருப்பினளவும், எத்துணையளவானதனை யீதலென்பதும், ஈயாது கரத்தலான் வருங் கேடும் பிறவு முணரப்படும். இருப்புச் சிறிதேபெறினும் 'இவ்வளவேனு மிட்டுண்மின்' என்றுற்போல அதற்கியைய வளித்தலுங் கூடும். இயல்வது என்றதனுல் இருப்பிற்கு விஞ்சி யளித்தலு மாகாதென்ப. ஆயின், 'ஆனமுதலி னதிகஞ் செலவானுன், மான மழிந்து மதிகெட்டுப்—போனதிசை, யெல்லார்க்குங் கள்ளனு யேழ் பிறப்புந் தீயனு, நல்லார்க்கும் பொல்லனு நாடு' என்பதுபோலக் கெடும். இருப்புக்கேற்ப ஈயுமொருவனை நல்லோர் அல்லது இரப்பவர் யாவரும் யாதுமிகழாது புகழ்தலே செய்வர். அவர் செல்வரே யாவர். 'நீதிஉந்து—ஒல்வது பாத்துண்ணுமொருவன், செல்வ னெனப்படுவான்' என்பது மேற்கோள். இருப்பி னளவறியா தெவ்வாற்றுனு மீதலே யுறுதியென வெல்லாமீந் திடர்ப்படுவார் சிற்சு; அத்தகையோராய் வள்ளலெனப் பெயரெய்திஞருமிலரோ வெனின்; அவர் தாமும் இருப்பி னளவறிந்தே யீந்துபோந்தனரென்க. தேரினை முல்லைக்குதவிய பாரி யொரு வள்ளல். மயிற்குக் கலிங்கம் வழங்கினு னொருவள்ளல். அவரெல்லா 'மிரப்பவரென் பெறினு மென்' னென்று ஈதலையே கடைப்பிடித் தொழுகுங் கொடைமடம் பெற்றனரேயன்றி அளவின்றிக் கொடுத்துக் கெட்டவரல்ல ரென்றுணர்க. இருப்பு, வைப்பு என்பன ஒரு பொருட் கிளவி.

இனி; வருவாயினியல்வது. 'வருவாயுட் கால்வழங்கி வாழ்தல்' என வருவாயி னீயுமளவு வகுத்துணர்த்தப்பட்டது, வரவி னான்கி லொன்றென்பதாம. இதுவே வரவி னியல்வதென்பது. இதனின் ஒருககாங் மிகினுங்குற்றமின்று. மிகுமேல் ஒருக்கால் இடர்ப்படுதலுங் கூடும. குறைபுமேற் கரத்தலென்னுங் குற்றமெய்தும். இருப்புமுடையராயின் வருவாயினளவு கடந்தீதலுஞ் செய்யலாம. இருப்பு மிகுந்தும் வருவாய் மிகுந்து முளவாயின் இருப்பினியலு மாறீதலுடன் வருவாயிற் கால் வழங்கலும் கூடும். எவ்வாற்று

னும் 'இல்லார்க் கொன்றீயு முடைமை, நன்றறியு மாந்தர்க் குள' வென்பது கருதி ஒல்லும்வகையா னறவினைகரவாதோம்புக வென்பர்.

இனி; நிலையினியல்வ தென்பது. நிலை—தலைமையுங், கீழ்மையுங், கிழமையுஞ், செல்வமும், வறுமையும், பிரமசரியங் கிரகத்தம் வானப்பிரத்தஞ் சந்நியாச மெனவிவையும் பிறவுநின்ற தன்மையெனப் பலதிறப்படும். இவற்றுட்டலைமை நிலையாவது: ஒன்றையாளுந் தன்மையது. இத்தலைமைப்பாடு—புரவலன் முதலிரவலனீறாகவுள்ள வினைஞர் பலர்க்கும், பார்ப்பனன்முதற் பஞ்சமனீறாகவுள்ள குலத்தினர் பலர்க்குஞ் செல்லும். அத்தலைமையெய்தினார் தத்தந் தலைமைப்பாட்டிற் கேற்பக் கரவாதீகவென்பது. புரவலனுய தலைவன் றானாளுமாந்தர்பலர்க்கு மியல்வது கரவற்க. இரவலனுய தலைவனுந் தானிரந்துந் தன்கீழிரக்குமேனையோர்க் கியல்வது கரவற்க. பார்ப்பன னேற்றலேயன்றி யீதற்கு முரியனுதலின் இரக்கவரூஉ மெளியர்க் கியல்வது கரவற்க. பஞ்சமனுந் தன்பாலேற்றற்குரிய வியல்பினுற்கியல்வது கரவற்க. இவரு ணடுநின்று தலைமை யெய்தினாரு மஃதாகவென்ப. இதனைப் 'புணர்வின்கட்டக்க தறியுந் தலைமகனு' மென்பதனுலுணர்க. இவரெல்லாஞ் சிறுபான்மை பெரும்பான்மை இருப்பும் வரவுமுளராவ ரென்க. இனிக்; கீழ்மை நிலையாவது—தலைவரின் கீழ்ப்பட்ட தன்மையும், படிற்றொழுக்கமுடைய வியல்புமாம். இத்தன்மையுடையார் கணக்கர், காரியகாரர், ஊழியர் முதலாயினார்; களியும் ம யுங் காமியுங் கள்வரும் பிறருமாவர். இவருட் கணக்கர் முதலாகத் தலைவரின்கீழ்ப்பட்ட கீழ்மை நிலையுடையார் வரவொன்றே யுடையர். இவர் தமக்கு வரூஉம் வருவாயி னளவுணர்ந்து அதற்கேற்ப இயல்வது கரவற்க. களி முதலாகவுள்ள கேழைன்னும் யோகரூடி பெற்ற படிற்றொழுக்க நிலையுடையார்க்கு இருப்பிருந்தும் இலரேயாவர். வரவினு மவரேயாவர். அவர் தாமுந் தாம்படிற்றொழுக்கச் செயற்குச் செலவிடும் பொருளளவின் நற்கருமத்திற்குஞ் சிறிதாகவென் றுஇயல்வது கரவற்கவென்ப. இனிக்; கிழமை நிலையாவது—சுற்றமுநட்பும் பிறவுமாந்தன்மையது. சுற்றமு நட்பும் வறுமையா னிடர்ப் பட்டுழி யவர் கேளாதேயு மியல்வது கரவற்கவென்ப. இதனைக் 'கிளைஞர்க் குதவாதான் வாழ்க்கை'

யெனவுங், 'காக்கை கரவா கரைந்துண்ணு' மெனவும், 'பழமை கந்தாகப் பசைந்த வழியே கிழமைதான் யாதானுஞ் செய்க' வெனவும் பிறருங் கூறுதலாற் கண்டுகொள்க. இனிச்; செல்வநிலையாவது பொருளுடைமை. அது முற்கூறிய இருப்புளடங்கும். செல்வமுடைமைக் கியல்வது கரவாமையேயியல்பென்பார். ஏனையோரும் 'வள்ளன்மை பூண்டான் கட்செல்வ' மெனக் கூறினர் காண்க. இனி; வறுமைநிலையாவது: இன்மைவந்தெய்திய காலத்தும், பெருக்கற்றொழிந்தவாற்றி னூற்றுநீரேபோலச் சிறிதளவேயுமியல்வது கரவற்க. இதனை 'நல்கூர்ந்தாராயினு, மில்லையென மாட்டாரிசைந்து' என இவ்வாசிரியரே மற்றோர் நூலுட் கூறுமாறும் 'இல்லாவிடத்து மியைந்த வளவினு......லுவந்து, கொடையொடுபட்ட குணனுடைமாந்தர்' என நாலடியுணர்த்துமாறுங் காண்க. இனிப்; பிரமசரிய முதலியநிலையினருட் கிரகத்தர் நீங்கலாக ஏனையோர் பெறுதலொன்றற்கே யுரியாராயினுந் தாஞ்செய்யுந் தவமகிமையா னெல்லாஞ் செய்ய வல்லராதலி னவர்மாட்டிரக்கப் புகுவாருமுளர். அன்னோர்க்கவரு மியல்வதுகரவற்கவெனவுங் கூறுப. இதனை 'அந்தணரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ், செந்தண்மை பூண்டொழுகலான்' என்பதனானுணர்க. 'தலைமை கீழ்மை கிழமை பொருண்மை, யின்மை யொடுவரு வன்னி முதலாகக், கிளந்த நிலையை யளந்தனர் புலவர்' இஃதுரைச் சூத்திரம்.

இனித்; தகுதியினியல்வ தென்பது. எல்லாநலன்களுஞ் சால வெய்திய தகுதியும், ஒன்றேபலவெய்திய தகுதியுமெனத் தகுதி இருவகைப்படும். அவ்வவற்றிற் கேற்ப இயல்வது கரவற்கவென்பது. ஈண்டுத்தகுதி யென்றது ஒழுக்கத்தை யன்று: ஒழுக்கமுடையார் கரவாராதலின். இஃது ஈவார்க்குச் சொல்வதேயன்றி யிரப்பார் மேலதுமாம். இரப்பார் வறியராயினும் முற்பொருளுடையரா யிருந்தவாறு தத்தம் வருணத்திற்கும் பழக்கத்திற்கும் அறிவுக்கு மேற்பத் தகுதியினுயர்தலுங் குறைதலுங்கூடும். அவரவர் தகுதியி னியல்பறிந்து அவர்வேண்டிய தொன்றைக் கரவற்க வென்பதுமாம். உண்பார்க்கு உணவும், உடுப்பார்க்கு உடையும், இருப்பார்க்கு இல்லும், கிடப்பார்க்கு மருந்தும், அறவினை விழைந்தார்க்குப் பொருளும், அல்லலு

பூந்தார்க் கதனை யாற்றுஞ்சூளும் பிறவும் ஈண்டுத் தகுதியினியல்வ தென்பது. தகுதியறியாக்காற் பயனின்றாய்முடியும். தகுதியறியா னென வுலகமு நிந்திக்கும். கூழுண்பார்க்குக் கூழளித்தலொக்கும். வேண்டுமாயின் மேலுமளிக்கலாம். பாலுண்பார்க்குப் பாலுமதற்கு மேலுமன்றிக் கூழளித்தால் அப்பழக்க மவற்கின்மையின் வறுமை மிகுதியானவனதை யேற்கவரினும் அவனுடற்கஃதேலாது தீங்கெய் தினுமெய்தும். ஆகவே பழியும்பாவமுமாயிற்று. கூழுண்பான் பால்வேண்டறகுதியன்று. வேண்டி அது பெருமையாற் பழிகூறிற்குற் றம் இரப்பார் மேலதாகும். அரசவையிற் புகுந்தானொருவன் அப்பெ ற்றிய தரமுடையானுவான். அரசனவற்கு அவன்றகுதிக் கேற்ப வளி த்தல்கடன். ஏனைக் கீழ்த்தரமுடையார்க்குப் போல் ஈதல் ஏதம் பயக்குமென்ப. முண்டுடுப்பாற்கு முண்டேயன்றிக கெண்டையு டையு மீயலாம். கெண்டையீயாமைபற்றி அவர் சண்டையிடுதல் தகுதியன்று. கெண்டையுடையுடுக்குந் தரமுடையாற்கு முண்டீதற காது. ஏற்பானுளனாலும்: உலகமும புகழாது. கன்னிகாதான ஞ்சிறந்ததெனக் கருதிப் பார்ப்பனமகளைப் பஞ்சமமகற்குப் பண் ணுதல் தகுதியன்று, பாவமுமாம் ஈகைககமைந்த பெயர்களே அவ ரவர் தகுதியை யுணர்த்தாநிற்குங் காண்க. கூழ்தப்பிஎென்று கூவி யிரப்போர்க்கு ஈவது ஐயமும், பலர்க்குப் பயன்படுஞ் சத்திரமு தலியவற்றிற் செய்வது தருமமும, சிராத்தமுதலிய பிதிர்க்கிரியைக் கும் விவாகமுதலிய மங்கள வினைகட்கும் வேள்விமுதலிய காமியயோ கிாதிகட்குங் கொடுப்பது தானமும், காரியகாரர்க்கு மூழியர்க்கும் புரிவது மானியமும், கலைவல்லார்க்குங் கவிவல்லார்க்குங் கொடுப் பது பரிசிலும், சுற்றமு நட்புஞ் சூழவளிப்பது விருந்தும், துறவோ ர்க்குக் கொடுப்பது பிச்சையும், கடவுளர்கருக் காணிக்கையுமென ஈகை பலவேறுபடும். "ஐயமே பிச்சை...யறிந்நீந்தான்" மன்ப. குறவர்முதலியோர்க்குக் குடிலும், குற்றவாளர்க்குச் சிறையும், சா மானியர்க்கு வீடும், பெருஞ்செல்வர்க்கு மாளிகையும், மன்னருக்கு அரண்மனையும், முனிவருக்குப்பன்னகமும், கடவுளர்க்குக் கோயிலு மென எல்லாம் இடப்பொருளொன்றே பெறுமாக, அவரவர் தகுதிக் கேறப வசிக்குமிடம் பலவேறு பெயர்பெற்று வழங்கப்படுமாறு போல வென்க.

இனி; நெஞ்சினியல்வதென்பது. மனம் பொருந்துமாறெல்லாம் ஈதலைச் செய்தல். மனம் பொருந்துமாறுவது மனத் தூய்மை பெற்றுப் பற்றிய நல்வினைநிகழ்ச்சி நல்லாற்றிற் பயன்படுமாறு ஈகையினன்பு புரிதல். அன்பிற் கரவாமை வேண்டு மென்பதாம். அன்பிற் கரப்பாரிடத்து இரவலர் இரவார். இரவச்சங்கூறுமுகத்தான் அன்பிலார் மாட்டிரத்தலன்று, அன்புடையார் மாட்டிரத்தலன்றென்பார் “கரவாத திண்ணன்பிற் கண்ணன்னார் கண்ணும், மிரவாது வாழ்வதாம் வாழ்க்கை” யென்றார் பிறரும். புகழ் இடம்பம் அச்சம் முதலிய கருதி ஈதலுமுண்டு. அவையெல்லாம் பிறரது துயர்நீங்கற் கேதுவாயமையினும் அவர் கருதியது அதுவன்றாகலான் நெஞ்சி னியல்வதுள் அடங்காவென்க. அவ்வாறு அறங்கருதாது மேற்கூறிய வேதுக்களானமையு மீகை யத்துணைச் சிறப்பன்றாம். “அன்பின்றி, யேற்றார்க் கியைவ கரப்பான், நிரயத்துச் சென்று வீழ்வான்’ எனப் பிறருங் கூறுதலான் நெஞ்சொடுபொருந்தச் செய்தார்க்குப் பயனு மின்றாய்முடியுமென்க. நெஞ்சொடுபொருந்து மாறின்றிச் செய்தலுமாகாதென்பர். நெஞ்சொடு பொருந்தாதார் ஈதலையொழித்தன் மட்டினில்லாது இரப்பாரைநகைத்தலுஞ் செய்வர். அவர் நித்தவநித்தங்களது வேறுபாடுஞ், செல்வ நிலையாமையும், உயிர்க்குறுதி பயக்குநெறியும், பல்புகழ்நிறுத்தும்பான்மையும் உணராதார். “இல்லார்க்கொன்றீகென்பவனை நகுவார்...யாதுங் கடைப்பிடி யாதார்” எனவும், ‘இரப்பாரை யெள்ளாமகன் என்றும் பிறக்கலான்’ எனவு மோதுபவென்க. இனித், தம்மைக் கரவாதார் போலக் காட்டி மனம்வேறுதிரிந்து வாழ்வாருமுளர். அவர் நஞ்சினுங் கொடியர். நடலைவாழ்வுடையர். அவர்செயலை யீவதன்பாற் காணலாம். இன்றென்பர்; நாளையென்பர்; என்றென்று மில்லையென்று சொல்லார். நாள் பலகழிய நடப்பினு நடையொன்றே அவர்பாற்காணும் பயனாய்முடியும். இவரே நெஞ்சினியல்வது கரக்கும் பஞ்சைமக்கள். ஈய மனமிசையாது இல்லையெனல் குற்றமன்றென்பாருமுளர். “இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும், வசையன்று வையத் தியற்கை—நசையழுங்க, நின்றோடிப் பொய்த்த னிரைதொடீஇ செய்நன்றி, கொன்றாரிற்குற்றமுடைத்து” என்பர். இதுவுங் கரப்பாரை நோக்கிக் கூறியவாறுமாம். இதில்

இல்லென்றல் என்ற லேசத்தாற் கரத்தலை மறுத்தமையுமுணர்க. அவ்வாறு கூறினரேனுங் கரத்தல் கூடாதென்பதும், கரத்தலினும் இல்லென்றனன்றென்பதூஉங் கருத்தாக அங்ஙன முணர்த்தினரெனக்கொள்க. நெஞ்சங் கரக்குமேல் அது நெஞ்செனப்படாது. நெஞ்சென்னும் பெயரளவினின்று வேறுபொருள் கொள்ளுமென்க. இனி; நெஞ்சங் கரவா தமைந்தால் அதுவே சாலும், செய்கை யின்றெனினுங் குற்றமின்றென்பாருமுளர்.

இனிச்; சொல்லினியல்வதென்பது- இன்சொல்லின் வழுவாமை. ஈதற்கிதுவு வேண்டுவதாகலிற் சொல்லினியல்வதாயிற்று. இன்சொற்கரந்தார் ஈகையு முடன்கரந்தாரே யாவர். முட்புறப் பலவின் கொட்புறு கனியே போல்வாருமுளர். அதுவும் அத்துணைச் சிறப்பன்று: கடுமொழியைக்கேட்டபொழுதே விருந்தினன் மெல்லியனுதலிற் கடுகவகன்றிடுதலான். இதனைப் 'புல்லா—வகம்புகுமி னுண்ணுமி னென்பவர்மாட் டல்லான் முகம்புகுதலாற்றுமோ' வென நாலடியும், 'இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்' என வள்ளுவருங் கூறுமா றுணர்க. இவற்றுள் வள்ளுவர் கடுமொழியது வென்பார் 'இலனென்னு' மெனவும், அது தீதாமென்பார் 'எவ்வ' மெனவும், ஈதற்கு முதற்கண் வேண்டுவது இன்மொழி யென்பார் 'எவ்வமுரையாமை யீத' லென ஈதற்குமுன் எவ்வமுரையாமையை வைத்தவாறுங் கண்டுதெளிக. இவற்றின் விரிவெல்லாம் 'ஐயம்படவுரை' யென்பதன் விருத்தியுட்கூறுதும் கண்டுகொள்க. இனிச்; சொல்லினியல்வதென்பதை யீகைக்கேயன்றி, மெய்ந்நூற்பொருளை யுணர்த்தும் ஆசிரியர்க்கேற்றி அவர் உள்ளவாறு சொல்லுதலிற் கரவற்க வெனவும்; மற்று முலகினர்க்கேற்றி நடுநின்று நியாயஞ் சொல்லப் புகுந்தார் அல்லது அரசவையிற் சாட்சி யாயினார் 'மன்றிற் கொடும்பாடுரைப்பார் எச்சமிழந்து வாழ்வார்' என்றிருத்தலான் நடுமொழியிற் கரவற்க வென்பதும் பொருந்தும். அங்ஙனமாயிற் பின் ஓரஞ்சொல்லேல்' என்றது மிகையாமன்றோவெனின் ஈண்டுப் பல பொருளையு மடக்கிக் குறிப்பினுணர்த்தி ஆண்டதனை வெளிப்படையின் விளக்கினாரென்பது. அல்லதூஉம் வறியராயினார்க் கீயுமாறு அன்னோர் வேண்டினராக ஏனைச் செல்வருக்கு எடுத்துச் சொல்லுதலிற் கர

வற்க வென்பதுமாம். ஈயவியலாதாராயின் அவர்க்குச் சொல்லக் கூடிய சொல்லேனுங் காவாமைவேண்டுமென்பதும் பொருந்தும். இதனை 'ஈகையரிதெனினு மின்சொலினு நல்கூர்த, லோகோ கொடிது கொடிதம்மா' வென்பதனாற் கொள்க.

இனிச்; செயலி னியல்வதென்பது. விருந்தினனை (வறியனு மிரக்கவருவானை) இன்முகங்காட்டி யேற்றலும், ஓடியுந்தேடியுமிருந் துந் திரிந்தும் பிறர்க்கு நன்மை பயக்கு நற்கருமங்களி னூடலை யியக்குதலுமாம். இச்செயல்களிற் காவற்கவென்பது. இவற்றுண் முன்னது செல்வர்க்கும், பின்னவை வறியவர்க்குமாம். இவ்வகையே இயல்வதென்பது முடிந்தது.—(இன்னும்வரும்)

**பத்திராசிரியர் குறிப்பு:**—யாழ்ப்பாணத்து நல்லூர் வித்துவசிரோமணி ஸ்ரீ-பொன்னம்பலம்பிள்ளையவர்கள் மாணாக்கர் ஸ்ரீமத்-கோ. வைத்தியலிங்கப்பிள்ளையவர்களால் எழுதப்பெற்ற "ஆத்திசூடி விருத்தி"யில் "இயல்வது கரவேல்'' என்பதற்கு எழுதப்பட்ட விருத்தி இப்போது பதிப்பிக்கப்படுகின்றது. இந்நூலைச் செய்வித்துதவுவோர், கண்டனூர் ஸ்ரீமத்-மு. ராம. சோமசுந்தரஞ்செட்டியாரவர்கள். இவர்கள் எனக்கெழுதிய கடிதத்தினின்று, இவ்விருத்தி இப்போது அச்சிடப்பெற்று வருகின்றதென்றும், செந்தமிழுருவத்தில் இந்நூலினளவு 650-பக்கங்கட்கு மேலாகுமென்றும் தெரியவருகிறது. இவ்விருத்தியின் ஒருபகுதியை இப்பத்திரிகைவாயிலாக வெளியிட்டு, நல்லறிஞர்பலர் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்பது, இதனை இயற்றுவித்த செட்டியாரவர்கள் பெருவிருப்பமாகும். இதனைப்படிக்கும் அறிஞர் தத்தம் அபிப்பிராயத்தை நம் பத்திரிகைவாயிலாகவேனும், செட்டியாரவர்கட்கு நேரிலேனும் அறிவித்தல், அன்னோரை ஊக்குதலாயிருக்குமென நம்புகிறேன்.

---

# சொல்வகைநோக்கல்.

பொருளை நினைத்துணரும்படி அறிவிக்கும் ஆற்றலுடைய எழுத்தொலியே சொல் எனப்படும். ஆற்றலாவது சொல்லாகிய தனக்கும் பொருளுக்குமுள்ள தொடர்ச்சி. இச்சொல்லினால் இப்பொருள் அறியப்படும் என்னும் இறைவனியமமே ஆற்றல் என்பாருமுளர். ஆற்றல், வலி, சக்தி என்பன ஒரு பொருட்கிளவிகள். ஆற்றலில்லாதது சொல்லெனப்படமாட்டாது.

ஆற்றலும் முதியோர்வழக்கு, உபதேசம், நிகண்டுநூல், இலக்கணநூல் முதலியவற்றுற் கொள்ளப்படும். முதியோர்வழக்காவது

முதியோர் கூறிய வாக்கியத்தைக் கேட்டு இளையோர் அறிந்து வழங்கும்முறைமை. "புத்தகங்கொண்டுவா" என்று ஒருமுதியோன் கூறுங்கால் மற்றொருவனாற் புத்தகங் கொணரப்பட்டமையைப் பக்கத்தினின்ற இளையோன் கண்டு புத்தகங் கொணர்தலாகிய காரியம் இச்சொற்றொடராலே நிகழ்ந்தது என்றுணர்ந்து தானும் அவ்வாறு வழங்குவன். இவ்வாறுணர்ந்து வழங்குவதே முதியோர் வழக்காகும். உபதேசமாவது "இது பசு" "இஃதன்று" என்பனபோலப் பொருள்களைச் சுட்டிக்காட்டிச் சொற்களைக்கூறி அறிவித்தல். நிகண்டுநூலாவது இன்ன இன்ன பொருள்களுக்கு இன்ன இன்ன சொற்கள் என்று சொற்பொருள்களை வரிசைப்பட அறிவிக்கும் நூல். இலக்கணநூலாவது பகுதி, விகுதி முதலியவற்றின் பொருள்களை அறிவித்துச் சொற்களின்இயல்பினையும், பொருளினையுந் துணிவிக்கும் நூல். இவற்றாலும் ஒப்புமை முதலிய பிறவற்றாலும் ஆற்றல் கொள்ளப்படும்.

உலகம் வழங்கிவருவதற்குச் சொன்னிகழ்ச்சியே காரணம். எந்தக் காரியமுஞ் சொல்லினாலே நிகழ்கின்றது. கடவுளுடைய பிரமாணங்களாகிய விதிவிலக்குகளையும் பிறவற்றையுஞ் சொற்களே அறிவிக்கின்றன. பழையோர் சரித்திரங்களையுஞ் சொற்களே அறிவிக்கின்றன. மற்றும் செய்வன, தவிர்வன, வேண்டுவன முதலிய எல்லாவற்றையுஞ் சொற்களே அறிவிக்கின்றன. சொல்லென்னும் ஒளியில்லையாயின், அஞ்ஞானமாகிய இருள்பரந்து உலகந் தடுமாறும். ஒருவர் கருத்தை மற்றொருவர் அறியமாட்டார். வேண்டும் பேறுகளைப் பெறுதலுங் கூடாது. இத்துணைச் சிறப்புடைய சொற்களைப் பிரயோகிக்குங்கால் வழுப்படவொட்டாது ஆராய்ந்துகொள்ளுதல் யாவர்க்கும் ஆவசியகம். சொற்களைத் தொடுத்துப் பேசுவோரும், எழுதுவோரும், செய்யுள் செய்வோரும் தாம் எடுத்துக்கொண்ட சொற்களிலே தாம் கருதிய பொருளைவிளக்கும் ஆற்றல் உண்டோ? இன்றோ? என்பதனை ஆராய்ந்து தொடுத்தல் நன்றாகும். ஆற்றலில்லாதன கருதிய பொருளை விளக்கமாட்டா.

தமிழ்வாக்கியங்களிலே வருஞ்சொற்களெல்லாம் தமிழ்ச் சொற்களாய் வருதலே முறையாகும். முன்னோரால் வழங்கப்பட்டுப் பயின்

று வந்த வடசொற்களும் வேண்டுழி வழங்குதற் குரியனவாகும். வடசொற்குந் தமிழ்ச்சொற்கும் இயைபுமுண்டு. திருவள்ளுவர்குறள் முதலிய இலக்கியங்களிலே வருஞ்சொற்களெல்லாம் பெரும்பாலுந் தமிழ்ச்சொற்களேயாம். அற்பமாய் வடசொற்களுமுள. அவையும் பயின்றுவந்தனவேயாம். திசைச்சொற்களைக்காண்டல் அரிது. இக்காலத்திலே திசைச்சொற்களைத் தமிழ்ச்சொற்களோடு கலந்துஞ் சிலர் பிரயோகிக்கின்றனர். அது நன்றன்று. கருதிய பொருட்கு வேண்டுஞ் சொல்லில்வழி அவைகளை ஒருகாற் கொள்ளலும் அமையும்.

பெயர், வினை, இடை, உரி என்னும் சொற்களுள்ளும், செஞ்சொல்லாயுள்ளவைகளே தக்கனவாகும். செஞ்சொல்லாவது நேராற்றலினாலே தனக்குரிய பொருளை அறிவிக்குஞ் சொல். இதனை வடநூலார் வாசகம் என்பர். அது காரணச்சொல், இடுகுறிச்சொல், காரணவிடுகுறிச்சொல் என மூவகைப்படும். காரணச்சொல்லாவது பகுதி, விகுதி முதலிய உறுப்புக்களின் ஆற்றலாற் பொருளைவிளக்குஞ் சொல். இடுகுறிச்சொல் உறுப்பாற்றலின்றிச் சமுதாயவாற்றலாற் பொருளை விளக்குஞ்சொல். காரணவிடுகுறிச்சொல்லாவது உறுப்பாற்றலுடையதாயினுஞ் சமுதாயவாற்றலால் ஒருபொருளையே அறிவிப்பது.

மற்றைய இலக்கணச் சொல்லும், குறிப்புச் சொல்லும் நேராற்றலாற் பொருளை உணர்த்தமாட்டா. இலக்கணச்சொல்லாவது ஆதன்பாலுள்ள குறியினாலே இப்பொருளுடையது என்று அறியப்படுவது. அது வழக்கும், பயனும் பற்றிக் கொள்ளப்படும். வழக்காவது தொன்றுதொட்டு வழங்கி வந்தமுறை. இதனாற்கொள்ளப்படுவது ஆகுபெயர் எனவும்படும். பயனாற்கொள்ளப்படுவது விட்டவிலக்கணை விடாதவிலக்கணை முதலியனவாகப் பலவகைப்படும்.

குறிப்புச் சொல்லாவது குறிப்பாற் பொருள் பயக்குஞ்சொல். குறிப்பாவது கருதியறிவது. அது தனக்குரிய ஆற்றலாற் பிறப்பது, பொருட்குரிய ஆற்றலாற் பிறப்பது என இருவகைப்படும். பல பொருளொருசொற்களுங் கருதியபொருளை நேரே விளக்காது சார்பு பகை முதலியன பற்றி விளக்கலால் அவையுங் குறிப்புச்சொல்

எனப்படும். சார்பு முதலியனவாவன சார்பு, வினை, இனம், இடம் என்பன. வடநூலார் இவற்றோடு பிரிவு, உடனிகழ்ச்சி, பகை, பயன், சமயம், காலம், பொருத்தம் முதலியவற்றையுங் கொள்வர்.

சொற்களை இன்னும் பலவகையாக வகுப்பாருமுளர். அவைகளை ஆங்காங்குக் கண்டுகொள்க. வாக்கியங்களை எழுதுவோரும், செய்யுள் செய்வோருந் தாங்கள் எடுத்துக்கொண்ட சொற்களையெல்லாம் பரீக்ஷித்து நற்சொற்களைத்தெரிந்து பிரயோகித்தல் வேண்டும். வழூச்சொற்களையும், திசைச்சொற்களையும், இயைபில்லாச்சொற்களையும், திரிசொற்களையும், வழக்கில்லாச்சொற்களையும் பிரயோகிப்பாராயின், அவை சிறப்படையமாட்டா. பரிமேலழகர், சேனாவரையர், சிவஞானசுவாமிகள் முதலியோர்களுடைய வாக்கியங்களும், திருவள்ளுவர், கம்பர், முதலியோருடைய செய்யுள்களுஞ் சிறந்து தோன்றுவது, பெரும்பாலும் சொற்பிரயோக வன்மையினால் என்றே கொள்ளுதும்.

பிற்கால வித்துவான்களுள்ளே ஆறுமுகநாவலரவர்களுடைய பெரியபுராணவசனம், பாலபாடங்கள் முதலிய கத்தியரூபங்களெல்லாம் யாவராலும் பாராட்டிக்கொள்ளப்படுவதும், கேட்டார்ப்பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்பமொழியுஞ் சொற்பிரயோக வன்மையினால் என்றே கொள்ளுதும். "வாசகம் வல்லார்முன்னே யாவர் வாய்திறக்கவல்லார்" என்று கம்பருங் கூறுவர்.

இக்காலத்திலே சிலர் சிறுவர்களுக்குக் கற்பிக்கும் பாலபாடங்களைத்தானும் இங்கிலீசுநடையிலே எழுதிவிடுகின்றார்கள். "இப்பாடத்தினால் என்னபடித்துக்கொள்ளுகின்றாய்?", "தசரதன் என்று அழைக்கப்படும் அரசன் இருந்தான். ஆனால் அவன்"--இவை தமிழ்நடையாகுமா? இந்நடை தமிழ்கற்கும் சிறுவர் மனத்திற்பதியுமாயின் பின்னர்த்திருத்தம் எப்படி வரும்? வாக்கிய நடைமாத்திரமோ சொற்களையும் பிழைப்படப் பிரயோகிக்கின்றார்கள்; கருப்பு என்பதற்குக் கறுத்த என்றும், பாவித்தல் என்பதற்கு வழங்குதல் என்றும், நிலவு என்பதற்குக் கிரஹணம் என்றும் பொருள் கூறுகின்றனர். இச்சொற்களிடத்திலே இப்பொருள்களை உணர்த்தும் ஆ

றல்கள் இல்லையே? சொற்களைப் பிரயோகிக்கும்போது இச்சொற்கும் இப்பொருட்கும் ஆற்றலுண்டா என்பதை ஆராயவேண்டாமா? ஆற்றலில்லாதன அசதியாடற் கிடனாகும்.

செய்யுள் செய்வோருக்கும், வாக்கியம் எழுதுவோர்க்கும் சொற்களைப் பரீக்ஷித்துத் தக்கனவற்றை எடுத்துக்கொண்டு தகாதனவற்றை விலக்குதல் ஆவசியகமேயாகும்.

இங்ஙனம்.
அ. குமாரசுவாமிப்பிள்ளை.
சுன்னாகம்.

---

## புகழ்ச்சி விருப்பு.

நம்முடைய குணங்களைப்பற்றியும் செய்கைகளைப்பற்றியும் பிறர் புகழவேண்டுமென்னும் எண்ணம் உலகப்பற்றுள்ள நம் ஒவ்வொருவருக்கும் உண்டு. அது மானிட இயற்கை. அஃறிணைப்பொருள்களாகிய விலங்குமுதலியவைகளும் தம்முடைய இனத்தைச்சேர்ந்த ஏனைய பிராணிகளைவிடத் தாம் சில அம்சங்களில் மிகுந்திருந்து அதனாற் புகழ்பெறவேண்டுமென்று விரும்புவதை நாம் பிரத்தியட்சமாகக் காண்கிறோம். குதிரை, மாடுமுதலிய பிராணிகளையும் சேவல், புறாமுதலிய பறவைகளையும் பந்தயம்விடுகையில் அவற்றிற்குண்டாகும் ரோஷத்தின்மிகுதியைக் காணாதவர் யாவர்? சர்வஜீவதயாபரராகிய கடவுள் மானிடரிடத்து அமைத்துவைத்த சற்குணங்களுக்குள்ளே புகழ்ச்சிவிருப்பும் ஒருவித சற்குணமென்று மேலோர் ஒப்புக்கொள்ளுவர். மானிடரிடத்துள்ள சற்குணங்கள் எவற்றினும் புகழ்ச்சிவிருப்பைச் சிறந்ததென்று கூறுவதற்கு ஒரு பொருத்தநியாயமிருக்கிறது; ஏனெனில் எவனொருவன் பிறர் தன்னைப்புகழவேண்டுமென்கிற எண்ணங்கொள்ளுகிறானோ அவன் பிறர்சரியென்று ஒப்புக்கொண்டு வியந்துரைக்கத்தக்க காரியங்களையே பெரும்பாலும் செய்துகொண்டு வரவேண்டியவனாவான்.

உலகத்தில் தன்னைப் புகழவேண்டுமென்கிற எண்ணத்துடன் பிரவர்த்திக்கிற ஒவ்வொருவனும் பெரும்பாலும் ஜனசமூகவாழ்க்கைக்கு அநுகூலமான நற்காரியங்களையே செய்யவேண்டிவரும். அந்தப்படி செய்யாவிடில், யாவரும் ஏககாலத்தில் ஒருவனை யாதொரு தீயகாரியத்துக்காக எவ்வளவும் வியவார். 'பிறருடைய மதிப்பையும் அவமதிப்பையும் நாம் ஒருபொருளென மதியோம்; அவர்களுடைய புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் ஒருபடித்தாய் நாம் கருதுவோம்' என்று முற்றத்துறந்த ஞானிகளைப்போல் வாய்ப்பறையடிப்பவர்களைப் பெரும்பாலும் அகங்காரிகளென்றே மேலோர் கூறுவர். அப்படிப்பட்டவர்களுடைய செய்கைகள் - "நாடொப்பனசெய்." "தேசத்தோடொத்துவாழ்." என்னும் பிரமாணங்களுக்குப் பெரும்பாலும் விரோதப்பட்டிருக்கும். அப்படிப்பட்ட அகங்காரிகள் தாம் யாருடன் கலந்துவாழ்கின்றார்களோ அவர்கள் ஒப்புக்கொள்ளத்தக்க நடையுடைபாவனைகளை அநுசரியாமல் தம்முடைய மனம் போனவழி வேறொன்றை அநுசரிக்கும்போது, அவர்களுடைய இகழ்ச்சிக்கு உள்ளாகவேண்டிவரும். அவர்களுடைய இகழ்ச்சியை ஒருபொருளாக மதியாவிடில் அப்படிப்பட்டவர்களை அகங்காரிகளென்றே கூறவேண்டியதல்லவா? இகபர ஆசைகளை முற்றும் ஒழித்து இருவினையொப்பு அமையப்பெற்ற ஞானிகளைப்பற்றியன்று, இங்கே கூறவந்தது. இல்வாழ்வானாயிருந்து உலகப்பற்று எவ்வளவும் ஒழியாதவனாகி ஏனைவிஷயங்களிற் பேரவாக்கொண்டிருக்கும் ஒருவனைப்பற்றியே இங்குச் சொல்லவந்தது.

உலகத்தில் நற்கருமங்களைச்செய்த சத்புருஷர்களுக்குள்ளே பெரும்பான்மையோர் அந்தரங்கத்தில் புகழையேவிரும்பியிருந்தவர்களாகத் தெரியவருகிறது. அதுகாரணமாக யாம் அவர்களைச் சத்புருஷர்கள் அல்லரென்று கூறவந்தோமில்லை. எவ்வகைப்பட்ட சத்கருமங்களுக்கும் புகழ்ச்சிவிருப்பே மனதில் மூலகாரணமாயிருக்கிறதென்பதைக் காட்டவந்தோம். எல்லாப் பொருள்களிடத்தும் ஆசையைமுற்றும் விட்டொழிக்கவேண்டிய துறவறநெறியைப்பூண்ட ஒருவனுக்குப் புகழ்ச்சிவிருப்பையும் விட்டொழிப்பது அத்தியாவசியகமென்று கூறவந்தவிடத்தில் சிறந்தநூலாசிரியரொருவர் அடியில்வருமாறு கூறுகின்றார்:—

"உன்னுகின் றனையுனை மனோர் பெரியனென்றுணருமா செயவுன்பான்
மன்னுமீசனே பந்தம் வீடளிப்பவன் மற்றையாறிந்தென்றோ
மன்னவன் றிருப் பொன்னடிகரியதாவருந்தவஞ்செய்நெஞ்சே
பின்னை முன்னவனுலகறிந்திறைஞ்சுமா பெருமைசெய்குவனன்றே."

"உன்னை இவ்வுலகத்திலுள்ளார் தவத்தாற் பெரியவனென்று அறியுமாறுசெய்ய நீ கருதுகின்றாய்; உன்னிடத்துவிட்டுநீங்காது நிலைபெற்றிருக்கின்ற கடவுளே நீசெய்த பாவபுண்ணியத்தையறிந்து அவற்றிற்கு ஏற்கப் பந்தமும் வீடுங்கொடுப்பார்; அவரையன்றி மற்றஜீவர்கள் உன்னைப்பெரியவனென்று அறியும்படி அவர்கள்காண நீ செய்யும் தவத்தால் உனக்கு யாதுபயன்? ஜீவசாட்சியைக்குறியாமல் கடவுள் திருவடிசாட்சியாக அரியதவத்தை நெஞ்சமே நீசெய், அந்தப்படி நீ தவஞ்செய்தபின் யாவர்க்கும் முதல்வராகிய கடவுள் இவ்வுலகத்திலுள்ளார் யாவரும் உன்னைப்பெரியவனென்று அறிந்து வணங்கும்படி உனக்குப் பெருமையைக்கொடுப்பார், இதை நீ அறிவாயாக" என்று பொருள்படக்கூறிய மேற்கண்ட பாசுரத்தின் கருத்தையோசிக்கையில், உலகத்திலுள்ள சிலர் தம்மைப்புகழவேண்டுமென்று விரும்பிய மனதைநோக்கி, இப்புகழில் நீ கருத்துவையாதே, கடவுள்சாட்சியாக நீ தவஞ்செய்தால் உலகத்திலுள்ளார் யாவரும் உன்னை வணங்கும்படியான பெருமை உனக்குக்கிடைக்கும் என்று கூறியது விந்தையினும் விந்தையாயிருக்கவில்லையா? இவ்வளவுதூரம் இங்கே சொல்லவந்ததெல்லாம் எவ்வகைப்பட்டவர்களுக்கும் புகழ்ச்சியில் விருப்பையொழிப்பது கூடாதென்பதையும் புகழ்ச்சிவிருப்பு ஜீவவியற்கை என்பதையும் காட்டுவதற்கேயாம்.

இல்லறவியலைக்கூறவந்த திருவள்ளுவநாயனார் இல்வாழ்க்கை என்னும் அதிகாரம் முதலாகப் புகழென்னும் அதிகாரம் ஈறாக இருபது அதிகாரங்கள் கட்டளையிட்டிருக்கின்றனர். இல்லறஇயலின் கடைசியில் புகழைப்பற்றிய அதிகாரத்தை அப்பெருந்தகையார் சேர்த்தது யாதுகாரணத்தினால்? கிருகஸ்தாசிரமதருமத்தில் நிற்பவன் அன்புடைமை, விருந்தோம்பல், ஈகைமுதலியவற்றைத் தழுவுவதும், பிறர்மனைவிழைதல், அழுக்கறுத்தல், பயனில்சொல்லுதல் முதலியவற்றை விலக்குவதும் இல்லறவாழ்க்கையின் இறுதிப்பயனை

கிய புகழைப்பெறும்பொருட்டே என்னும் உண்மைதோன்றவே நாயனார்புகழைப்பற்றிய அதிகாரத்தை இல்லற இயலின்கடைசியில் வைத்ததாகத் தோன்றுகிறது.

" தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று."

மானிடராய்ப்பிறந்தால் புகழுக்கு ஏதுவாகிய நற்குணங்களோடு பிறக்கக்கடவர்; அப்படிப்பிறவாதவர்கள் மனிதர்களாய்ப்பிறத்தலி னும் பிறவாமலிருத்தலே நன்று என்றும்,

" வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர்."

வசையுண்டாகாமல் புகழுண்டாகும்படி வாழ்பவர்களே வாழ்பவர்க ளென்று சொல்லப்படுவார்; புகழுண்டாகாமல் இகழுண்டாகும்படி வாழ்பவர்களே வாழாதவர்கள் (இறந்தவர்கள்) என்று சொல்லப்படு வார் என்றும் தெய்வப்புலவர் தமது பொதுமறையில் கூறியிருக்கி ன்றனர். மேலெடுத்துக்காட்டிய நியாயங்களினால் புகழ்ச்சிவிருப்பு ஜீவஇயற்கை என்றும் புகழுக்கு ஹேதுவாகிய கருமங்களை ஒவ்வொரு ருவரும் செய்யவேண்டியதென்றும் தெளிவாய் விளங்குகிறது.

ஆனால் நல்ல காரியங்களுக்காக உதவத்தக்க பொருள்களை மனி தன் தன்னுடைய துர்க்குணங்களினால் தீயகாரியங்களுக்கு உபயோ கப்படுத்திக்கொள்வதுபோல, நற்குணங்களுக்கும் சற்கருமங்களுக் கும் பெருங்கருவியாயிருக்கும்படி மனிதனுடைய மனதில் கடவுள் தோற்றுவிக்கும் புகழ்ச்சிவிருப்பு என்னும் குணத்தைச் சிலதீயோர் கெடுத்துப் பாழாக்குகின்றனர். அத்தீயோருடைய மனதில் பிறர் தம்மைப் புகழவேண்டுமென்கிற ஓர் எண்ணம் மாத்திரம் சதாகு டிகொண்டிருக்கிறதேயன்றி அப்புகழைப்பெறுவதற்கு வேண்டிய நற்குணங்களையடையவும் நற்கருமங்களைச்செய்யவும் அவர்கள் முய லுவதில்லை. இல்லாத நற்குணங்களை உள்ளதுபோல மேலுக்குக் காட்டி நடித்து அப்புல்லறிவாளர் புகழ்பெற விரும்புகிறார்கள். இவர்களைவிடப் பெரும்பொய்யர்கள் வேறு உலகத்தில் உண்டா? இப்படிப்பட்டவர்கள் தம்மிடத்து இல்லாதகுணங்களை உள்ளனவாக

ஒருவன்வந்து முகஸ்துதிபண்ணுகையில் பெருமகிழ்ச்சிகொண்டு பின்னர் விளக்கில்வீழ்ந்து இறக்கும் விட்டில்போல் துக்கிப்பர். முகஸ்துதியினால் ஏமாந்துபோகிறவர்களுக்குவரும் பெருங்கேடுகளைப் பற்றி இங்கு விவகரிக்கவேண்டிய அவசியமில்லை. புகழ்ச்சிவிருப்பை விசேஷமாக மேலேகூறியதெல்லாம் அப்புகழை விரும்புவதற்கு ஏதுவாகிய குணங்களை வாஸ்தவத்தில் அடையவும் காரியங்களைச் செய்யவும் ஒருவன் மனமொழிமெய்களினாற் பாடுபடவேண்டுமென்னும் கருத்தைக்கொண்டேயாம். உத்தமர்கள் இன்ன சற்கருமங்களைச்செய்தால் அதற்குக் கூலியாக இவ்வளவு புகழுண்டாகும் என்பதை நோக்காமலே நல்லகாரியங்களைச் செய்வார்கள். அக்காரியங்களின் பயனாகப்புகழ் அவர்களுக்குத்தானே விளையுமென்பதற்கு எவ்வளவும் சந்தேகமில்லை. நாம் மனச்சாட்சிக்கு ஏற்கச் சற்கருமங்களைச்செய்துகொண்டே வரவேண்டியது. அவற்றிற்குப் பயனாகப் புகழ் தானேவிளையும். புகழ் விளையவேண்டுமென்றுகருதி ஒருகாரியத்தைச்செய்வது மாத்திரம் சரியல்ல. அறிவுடையோர் நம்முடைய குணாதிசயங்களையுஞ் செய்கைகளையுங்கண்டு மெச்சுவதையே புகழென்று சொல்லவேண்டும். அறிவிலிகள் நம்மை எப்படிச்சொன்னாலும் அதனால் நாம் மனக்கலக்கம்கொள்வது சரியன்று. ஏனெனில்,

"அவமதிப்புமான்ற மதிப்புமிரண்டு
மிகைமக்களான் மதிக்கற்பால-நயமுணராக்
கையறியாமாக்களிழிப்பு மெடுத்தேத்தும்
வையார் வடித்தநூலார்"

ஒருவரைத் தாழ்வாகமதித்தல், உயர்வாகமதித்தல் என்னும் இவ்விரண்டும் மேன்மக்களால் மதிக்கத்தக்கன; விதிவிலக்குகளையுணராதகயவர்களுடைய இகழ்ச்சியையும் புகழ்ச்சியையும் ஒருபொருளென அறிவுடையோர்கொள்ளார் என்று பிரமாணமிருக்கிறது.

உலகத்திலுள்ளயாவரும் தம்மைப்புகழும்படி ஒருவன் நடந்துகொள்ளமுயல்வது வியர்த்தமாய்முடியும். "உலகத்தோடொட்டவொழுகல்" என்பதுபோன்ற சந்தர்ப்பங்களில் உலகென்பதை உயர்ந்தோரென்றே உரையாசிரியர் பலருங் கூறியிருக்கின்றார்கள். வாசனையென்னும்பதம் நறுமணத்துக்கும் தீநாற்றத்துக்கும் பொதுவான

தாயிருப்பினும் அதை நறுமணத்துக்கே நாம் உபயோகித்துவருவது போலப் புகழ்என்னும் பதம் சற்கருமங்களுக்குரித்தானதாகவே உபயோகிக்கப்பட்டுவருகின்றது. திருடர்களும் பொய்யர்களும் வசிக்கும் ஓர் ஊரிலிருக்கும் ஒருவன் அவ்வூரில் புகழ்பெறவேண்டுமானால் பெருந்திருடனாகவும் பெரும்பொய்யனுமாக வல்லவா இருக்க வேண்டிவரும்? அவ்வாறு அத்திருடர்களும் பொய்யர்களும் தம்மை வியப்பது எதார்த்தத்தில் புகழாகமாட்டாது. ஆகவே அறிவுடையோர் வியந்துபுகழத்தக்க காரியங்களைப்புரிந்து தன்னை இவ்வுலகத்தில் நிலைபெறச்செய்து கொள்ளவேண்டியது மானிடனாய்ப்பிறந்த ஒவ்வொருவனுக்கும் பரமபுருஷார்த்தமாகும். ஏனெனில்,

> "ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
> பொன்றாது நிற்பதொன் றில்".

உலகத்தில் அழியாது நிலைபெறுவது, தனக்கு நிகரில்லாது ஓங்கிய புகழையன்றி வேறில்லை. இதற்கு, ஈகையிற்சிறந்த கன்னனும் சத்தியத்திற்சிறந்த அரிச்சந்திரனும் பொறையுடைமையிற்சிறந்த தர்மபுத்திரரும் நாளைக்கும் புகழுடம்புபெற்று உலகத்தில் ஓங்குவதே உதாரணமாயிருக்கின்றது.—(ஜ. வி.)

---

# கலிங்கத்துப்பரணியாராய்ச்சி.

(முற்றொடர்ச்சி.)

உ0. "மீனம்புகு கொடிமீனவர் விழியம்புக வோடிக் - கானம் புகவேனம்புக மடவீர்கடை திறமின்" என்னும் பாட்டில், "மீனவர் ......கானம்புக வேளம்புகு மடவீர்" எனக் காணப்படுகிறது. "கானம்புக வேனம்புகக்...கடைதிறமின" என்பதற்குச் சிறந்தபொருள் புலப்படாமையானும், பாண்டியர் காட்டிட்புகுதலால், அவர் பிரிவாற்றாது (வேள் - அம்பு - உகு-மடவீர்—) மன்மதன் தன்பாணத்தை உகுத்தற்கிலக்காயிருக்கும மடவீர் என்னும் சிறப்புடைப்பொருடாலானும், பின்னையதே சுத்தபாட மாதல்வேண்டும். கடைதிறப்பிற்குரிய மகளிரெல்லாம் பகைவரது மடவாரேயென்பர்; "அலைநாடிய"

(உக) "மழலைத்திரு" (உரு) என்ற பாடல்களாலும் இதனை நோக்கிக்கொள்க.

உரு. "மழலைத்திரு மொழியிற்சில வடுகுஞ்சில தமிழும் - குழறித்தரு குருநாடியர் குறுகிக்கடை திறமின்" என்பது—

"மழலைக்குறு மொழியிற்சில வடுகும்பல தமிழுங்
குழறித்தரு கருநாடியர் குறுகிக்கடை திறமின்"

எனக் காணப்படுகின்றது. குருநாடு பாஞ்சாலமாதலின் அந்நாட்டு மகளிர் சிலவடுகுஞ் சிலதமிழுங் குழறித்தருவரென்றல் பொருந்தாமையானும், கருநடமகளிரே அங்ஙனங் குழறுதற்குரியராதலானும் பின்னைப்பாடமே பொருத்தமென்க. இனி, "சிலவடுகுஞ் சிலதமிழும்" என்பதினும், "சிலவடுகும் பலதமிழும்" என்பதே பெரிதும் பொருந்தும். என்னை? கன்னடபாஷையிற் பெரும்பான்மை தமிழ்ச் சொற்களும் சிறுபான்மை தெலுங்குச்சொற்களுங் கலந்துநிற்றல் எல்லாருமறிந்ததேயாதலின். பழங்கன்னடத்தை நோக்குவார்க்கு இவ்விஷயம் இன்னுந் தெள்ளிதின் விளங்கும்.

உகூ. "வேகம் விளையவருங் கொழுநர் மேனிசிவந்த படிநோக்கிப்—போகம் விளைய நகைசெய்வீர்" என்பதில், 'மேனிசிவந்தபடி' என்பது 'விழிகள் சிவந்தபடி' எனக் காணப்படுகின்றது. போரில் அல்லது நீண்டவூடலிலுண்டாய சினத்தால் கணவர்க்கு விழிசிவத்தலைக் கூறலே பொருந்தும்.

ஙரு. "அளக பாரமிசை யசைய மேகலைக ளவிழ வாபரண மிவையெலா—மிளக மாமுலைக ளிணைய ருமல்வரு மியலினீர் கடைக டிறமினோ" என்னும் பாடலில், "ஆபரணமிவையெலா - மிளக மாமுலைக ளிணையருமல்வரு மியலனீர்" என்பது—"ஆபரண வகையெலாம் - இளக மாமுலைகொ டிடைவராமல் வருமியல்பினீர்" எனக்காணப்படுகின்றது. மேலே அளகமசையவும், கீழே மேகலைகளவிழவும், மத்தியில் ஆபரணமிளகவும் பெருத்த தனங்கள்கொண்டு வருமகளிருடன் அவர் இடைவரவில்லையென ஒரு வியப்பைக்குறித்துப் பின்னைப்பாடம் சிறந்துநிற்றலும், அச்சுப்பிரதிப் பாடத்திற் பொருட்சிறப்பின்மையுங் காண்க.

இனி, அடியில்வரும் பாடபேதங்களிற் சிறப்புடையனவற்றை ஆராய்ந்துகொள்க.

சO. "கோடுமிளம் பிறையிற் குறுகிய மூத்துதிர" என்பது "கோடுமிளம் பிறையிற் குறுவெயர் முத்துருள" எனவும்—கூO. "முருகிற் சிவந்த கழுநீரும்" என்பது "முருகிற் சிறந்தகழுநீரும்" எனவும்,—கரு. "பவளவாயணிசிவப்பற" என்பது "பவளவாயணி வெளுப்புற" எனவும்,—உக. "அபயற்கிடுதிறையான் மலைநாடியர் துளுநாடியர்" என்பது "அபயற்கிடுதிறையாம்—மலைநாடியர் துளு நாடியர்" எனவும், "தங்கள்பால் முனிவொழிந்து கூடுதலினுங்களைத் தேடுவீர்" என்பது—"தங்கள்பான்முனிவ துள்ளழிந்துருகி யுண் களைத் தேடுவீர்" எனவும்,—உஅ. "மதனவேள் கருதிவழிபடு படை யொடு" என்பது—"மதனவேள் கருதிவழிபடு படையது" எனவும் காணப்படுகின்றன;

இனி, அச்சுப்பிரதியிலுள்ள பாடல் சிலவற்றுக்குப் பிரதியாக அவற்றின் கருத்தமைந்த வேறுபாடல்கள் காணப்படுகின்றன. அச்சுப்பிரதியில் சகூ-வதாகவுள்ள

"வருவார் கொழுந ரெனத்திறந்தும்
வாரார் கொழுந ரெனவடைத்துந்
திருகுங் குடுமி விடிவளவுந்
தேயுங் கபாடந் திறமினோ"

என்பது—

"வாரார் கொழுந ரென வடைத்தும்
வருவார் கொழுந ரெனத்திறந்துஞ்
சீரார் பொழுது விடிவளவுந்
தேயுங் கபாடந் திறமினோ."

எனக் காணப்படுகின்றது. "தாய ரடைப்ப மகளிர் திறந்திடத்—தேயத் திரிந்த குடுமியவே—யாய்மலர், வண்டுலாங் கண்ணி வயமா ன்றேர்க் கோதையைக், கண்டுலாம் வீதி கதவு" என முத்தொள்ளாயிரப்பாடலிற் கண்டவாறு "திருகுங் குடுமி" என்னும் அரிய சொற் பிரயோகம் அச்சுப்பிரதியிற் காணப்படுகிறது. இனி, சஎ-ம் பாட்டாகிய—

"நேயக் கல்வி மயக்கத்தே
நிகழ்ந்த மொழியைக் கிளியுரைப்ப
வாயைப் புதைக்கு மடநல்லீர்
மணிப் பொற்கபாடந் திறமினோ"

என்பது—

"இரவிற் கலவி யயர்மொழியை
யின்சொற் கிளிவஞ் சியாருகே
பரவக் கனியால் வாயடைப்பீர்
பைம்பொற் கபாடந் திறமினோ"

எனக் காணப்படுகின்றது. இது, முன்னையதினும் சிறந்ததேயாம்.

இனிக் கடைதிறப்பின் முடிவில் வேறு இரண்டுபாடல்களுங் காணப்படுகின்றன.

"பூட்டொன்று சிலைவளவன்
ஒருபுலவன் புகார்பாடும்
பாட்டொன்றுக் கருளியபொன்
பதினொருநா றுயிரமே"

"குரிசில் சயதரா னொருவ னொருகவி
கொண்டு பதினொரு கோடிபொன்
பரிசி லுதவிய வளவன் ரவிகுல
திலக னிசைதிசை பரவவே"

(தொடரும்)

பத்திராசிரியர்.

---

# படிக்காசுப்புலவர் சரிதம்.

(முற்றொடர்ச்சி.)

இங்ஙனமாக இவ்விரு புலவர்களுள்ளுமேற்பட்டிருக்கும் விவாதத்தை யுணர்ந்த சேதுபதியரசர் மிகவருந்தினரெனினும், புலவர்களிவ்வாறு வழக்கிட்டு நிற்பது எவ்வாற்றானுமொவ்வாததாகவிருப்பதால் இதற்கென்செய்வதெனப் பலவாறுசிந்தித்து முடிவில் இவர்களுட் கொண்டிருக்கும் விரோதத்தையொழித்து நேசப்பான்மை கொள்ளற்கேதுவாம் சாதனங்களைச்செய்தலே சிறப்புடையதும் அற

நெறி முறைமைக்கோர் அறிகுறியாயுமிருக்குமெனத் தீர்மானித்து அவ்விருபுலவர்களையும் நேரில் வரவழைத்து, செந்தமிழ்ப்பனுவலைச்சீருடனோதிய சிறப்புடைப்புலவீர்! நும்மாட்டு நாமறிவிக்கவிருக்கும் ஓர் விஷயத்தினைச் செவியேற்று அதன்படியே நடக்கத்தவறமாட்டீர்களென்றும் நம்புகிறேன். உலகில், "கூடிக்கெட்டாருமில்லைப் பிரிந்துவாழ்ந்தாருமில்லை." என்னும் பழமொழி நீங்களறியாததல்லவே. அங்ஙனமிருக்க நீங்கள் உங்களில் நீங்காதபகைமையைக்கொண்டிருப்பதாகவறிகிறேன். இச்செயல் உங்கள் பெருமைக்கொருவாற்றானுமேற்றதல்ல: ஆகையால் நீங்களிருவரும் இன்றுமுதல் உங்களில் வைத்திருக்கும்த்வேஷத்தை முற்றிலுமொழித்து இனிப்பகையென்பதைக் கனவினுங் கருதாது ஒத்த அன்பினர்களாய் ஓருயிர் இரண்டுடலெனக் கலந்துறவாடும் வெற்றியைக் கைக்கொள்வீர்களாகவும்" என அரசன் கூறலும், புலவர்கள் வேந்தன் உரையை மாற்றவகையின்றி அங்ஙனமே உடன்பட்டிருப்பதாக உரைத்தலும் புரவலன் மிக்கவானந்தங்கொண்டு புலவர்களை நோக்கி நீங்களென்னுரையைத் தழுவி நேசப்பான்மைகொண்டதி னடையாளமாக ஒருவர்மேலொருவர் புகழ்ச்சியாகப் பாடுவீரேல் அவைதாம் நீங்கள் ஒற்றுமையைக் கைக்கொண்டிருப்பதை விளக்கக்கூடியவை என மொழிதலும், புலவர்களிசைந்து பாடிய கவிகள்,

படிக்காசுப்புலவர், கும்பனேன்னும் புலவர்மேற்சொல்லிய கவி.

"யமகம்."

கும்பாகனகசபாபதியீன்றகுளிர்ந்தூரசிக்
கும்பாவலர்சிரோரத்தினமேதமிழ்க்கோப்பசுவின்
கும்பாதபானுடன்றேனையுங்கூட்டிக்குழைத்துச்செம்பொற்
கும்பாவிலேயெடுத்துக்குடித்தாலந்தக்கூறொருக்குமே.

என்று கூற,

கும்பனேன்னும்கவி படிக்காசுப்புலவர்மேற் கூறியகவி.

மட்டாருந்தென்களந்தைப்படிக்காசனுரைத்ததமிழ்
வரைந்தவேட்டைப்
பட்டாலேசூழ்ந்தாலும்மூவுலகும்பரிமளிக்கும்
பரிந்தவேட்டைத்

தொட்டாலுங்கைமணக்குஞ்சொன்னாலும்வாய்மணக்குந்
துய்யசேற்றில்
நட்டாலுந்தமிழ்ப்பயிராய்விளைந்திடுமே
பாட்டினதுநளினந்தானே.

என்று கூறி இப்புலவர் சிகாமணிகளிருவரும் ஆயுள்பரியந்தம் ஒற்றுமையாகவே இருந்தார்களெனத் தெரிகிறது. பின்னொருகாலத்தில் இப்புலவர் அறியலூர் சென்றிருந்தசமயம் இவரை அபிமானித்திருந்தபிரபு காலவித்தியாசத்தால் இவருக்கு வருஷாந்தரமாகக்கொடுக்கவேண்டிய ஆயிரம் பொன்னைக்கொடாது ஐந்நூறுபொன்கொடுக்க அப்பொழுது புலவர் பிரபுவுக்குக் கூறிய கவி,

கனத்தசிராப்பளிதனிலேவடுகர்கூத்துக்
கட்டியாளுவதாச்சுத்தஞ்சாவூரோ
முனைத்தமராடியகாடுமிஞ்சிப்போச்சு
முனையும்போம்மூக்கும்போம்மைசூர்போச்சு
பினற்றுறையூர்காய்ச்சலாம்வடதேசத்துப்
பேய்த்துலுக்கருடையாரோகவிதைகேளார்
இனித்தமிழுக்கறியலூரொன்றிருந்தோ
மிங்குஞ்சம்பளங்குறைந்தாலென்செய்வோமே.

இக்கவியைக்கேட்டுப் பிரபுதக்க சம்மானஞ்செய்தனுப்பினராம்.

மற்றொருக்கால் ஷை பிரபு இப்புலவரைநோக்கி ஐயா! பள்ளியர்களை உலகத்தில் தாழ்வாகக் கூறுகின்றார்களே? அஃது அப்படித்தானா? என்று கேட்கப்புலவர்,

தெள்ளியபாலும்பள்ளிசெந்தமிழ்ப்பதியும்பள்ளி
ஒள்ளியமடவாரெல்லாமுண்ணவேசமைக்கும்பள்ளி
வெள்ளியிலிருந்தபெம்மான்விளங்கிழையோடும்பள்ளி
பள்ளியென்றுரைத்தவார்த்தைபகரநற்சிலையதாமே.

என்று கூறினரென்ப.

"சந்தம்படிக்காசலாதோருவர்பகரொணாதே"

என்ற புகழ்ச்சியை விளக்கும்பொருட்டு மற்றொருசமயம் இப்புலவர் கொங்குநாட்டிற் சஞ்சாரஞ்செய்து வருகையில் அக்காலத்திலநேக

வித்துவான்கள் கொங்குநாட்டில் பிரபலமாயிருந்ததால், தம்முடைய சந்தக்கவிகளையாரும் மதியாமையைக்கண்டு புலவர் கூறியகவி,

அஞ்சாலிமக்களுஞ்சாணாரும்பாணரும்அம்பட்டரும்
செஞ்சாயக்காரரும்வேசையர்மக்களுஞ்செந்தமிழைப்
பஞ்சாகப்பன்னியொருகாசுக்கோர்வண்ணம்பாடலுற்றார்
நஞ்சாகப்போச்சுதையோவென்றமிழ்க்கொங்குநாடெங்குமே.

என ஒரு செய்யுட் காணப்படுகிறது.

வெண்பாவிற்புகழேந்திபாணிக்கோர்செயங்கொண்டான்
விருத்தமென்னு
மொண்பாவிலுயர்கம்பன்கோவையுலாவந்தாதிக
கொட்டக்கூத்தன்
கண்பாயகலம்பகத்திற்கிரட்டையர்கள்வசைபாடக்
காளமேகம்
பண்பாயபகர்சந்தம்படிக்காசலாதொருவற்
பகரொணாதே.

என ஒரு செய்யுளும் வழங்கி வருகின்றது.

தூளியடவேவந்தகவிவாணர்கவியெலாங்
குறையிடுகவிராக்ஷகன்
துஷ்டநிஷ்டூரகவிசுப்ரதீபக்கவித்துறைக்கெலாந்
துள்ளுசேட்டு
வாளைகுதிபாய்கின்றவாந்தைகுடிமேவிய
மகாசனத்தலைவருக்கு
மட்டிலவுசோலைக்களந்தைப்படிக்காசு
வரவிட்டவிஞ்ஞாபனம்
காளமேகம்போலவசைபாடயாமுமிக்
காசினியிலவதரித்தோம்
காளாக்கர்தோழன்மேற்கவிதையுமேலுமுள
கவிதையுமறிந்ததிலையா
ஆளனுமிருக்கவேசெய்தகருமங்களுக்
கழிவுதேடுதலாகுமோ
ஆகாதகாரியம்போகாதுவீணிலே
யபகீர்த்திநிலைநிற்குமே.

என்னுங்கருத்தமைந்த சீட்டுக்கவியொன்றும் இப்புலவர் வாந்தைக் குடிமகாஜனத்தலைவருக்கெழுதியிருப்பதாகக் காணப்படுகிறது.

விருதுகவிராசன்கவிச்சக்கரவர்த்திவாய்
வீண்பேசுவார்கள்மிண்டன்
விஞ்சையர்கள்தம்பிரான்களந்தைப்படிக்காசு
விவாமுடனெழுதுமோலை
பொருவில்பிரபந்தமதிலிலகுகவிசேகரன்
புகழ்செய்தளவாய்குமாரன்
பூசக்கரமன்னர்பணிரகுநாதசேதுபதி
பூரித்தெழுந்துகாண்க
பரிதிமதியுள்ளளவுநிற்கும்பிரபந்தகவி
பாடிநின்கீர்த்திகேட்டு
பஞ்சலக்ஷணமொடுதமிழ்க்காணியுங்கொண்டு
பரிவாகவுனைநாடியே
இருபதின்காதவழிகடலேறிவந்தனை
னிருந்தமிழ்கொள்ளவேண்டி
யிருகாதவழியளவு * * * *
* * * * * *

என இராமநாதபுரம் இரகுநாதசேதுபதி வேந்தர்க்கு இப்புலவரெழுதிய மற்றொரு சீட்டுக்கவியும் காணப்படுகிறது.

அடகெடுவாய்பலதொழிலுமிருக்கக்கல்வி
அதிகமென்றேகற்றுவிட்டோமறிவில்லாமல்
திடமுளமோகனமாடக்கழைக்கூத்தாடச்
செப்பிடுவித்தைகளாடத்தெரிந்தோமில்லைத்
தடமுலைவேசையராகப்பிறந்தோமில்லைச்
சனியானதமிழைவிட்டுத்தையலார்தம்
இடமிருந்து தூதுசென்றுபிழைத்தோமில்லை
என்னசென்மமெடுத்துலகிலிருக்கின்றோமே.

என ஓர் கவியும் வழங்கா நின்றது.

இங்ஙனம் சின்னாட் சென்றபின் தருமபுரவாதீனத்தில் அப்பொழுது விளங்கிய ஞானாசிரியருவக்குமாறு சிலகால மனுக்கத்தொண்டராயமர்ந்திருந்து பின்னர், அவ்வாசிரியர் ஆக்கினைப்படி வைத்தீசுரர் சந்நிதியடைந்து அக்கடவுளின் கட்டளையை நடாத்திக்கொண்டு "படிக்காசுத்தம்பிரா"னென அதிகப் பிரபலமாய் வாழும் நாளில், அத்தலத்தைச்சுட்டி "வேளூர்க்கலம்பகம்" என்னும் ஓர்பிரபந்தமிய

ற்றி அச்சந்நிதியில் அரங்கேற்றி வசித்தனர். அதன்பின்பு, முன்னர்த் தமக்குப் படிக்காசுதந்து திருவருள் பாலித்த சிற்சபாநாயகர் சந்நிதியிலே தொண்டுசெய்து கதியடையவேண்டுமென்னும் அவா மேலீட்டால் ஞானசாரியாநுமதிபெற்றுச் சிதம்பரத்தைச்சேர்ந்து ஒரு திருமடம் வகுத்து அதிலிருந்துகொண்டு அக்கடவுளுடைய தொண்டை வகித்துத்தினந்தோறும் ஆலயத்தையடைந்து சபாநாயகரைத் தரிசிக்கும்பொழுது அக்கடவுள் பஞ்சாக்ஷரப்படியில் பொற்காசு ஐந்துவைத்தருளப் பெற்று சைவாசாரியராகச் சிலகாலம் நன்மாணுக்கர்களுக்கு ஞானோபதேசம் பாலித்து வீற்றிருந்து சிலபிரபந்தங்களையும் அருளிச்செய்து அக்கடவுளுடைய திருவடி நீழலையு டைந்தன ரென்ப.

இவ்வளவே படிக்காசுப்புலவர் வரலாருகத்தெரிந்தவை. இச்சரிதங்களால் படிக்காசுப்புலவர் தெய்வப்புலமை வாய்ந்த பெரியாரிலொருவரென்பதும், சிவபிரானருள் சிறக்கப்பெற்றவரென்பதும், கலைமகளார் கருணுகடாக்ஷம் கைவரப்பெற்ற திவ்வியப்புலவரென்பதும் துறவறமடைந்து ஞானசமாதிகூடி ஏகாந்தத்தினினிமையுணர்ந்த ஞான சம்பன்னரென்பதும், சந்தம்பாடுவதில் நிகரற்ற திறனை வகித்த சரஸகவியென்பதும், கடவுளினிணையடிகளில் இடையருத பக்திசெலுத்தி அவன் இன்னருள் பெறுதலே சிறந்தபேறெனக்கருதுமியல்புடையவரென்பதும், சபாநாயகர் இவர்பாடுந்தோறும் இவர் பாடலுக்குவந்து பரிசாகப் பஞ்சாக்ஷரப்படிமிசை பொற்காசுவைத்தருளப்பெற்ற மகானென்பதும், மற்றும் இவரது உத்தமகுணவிசேடங்களும் நன்குவிளங்கும். இவர்க்குவழங்கிய "படிக்காசுத்தம்பிரான்" "படிக்காசுப்புலவர்" என்பது இவரதுபாடலுக்குப் பரமன் மகிழ்ந்து பொற்காசளிக்கப்பெற்ற விசேடத்தாலெழுந்த காரணப்பெயராகும். இப்புலவர் பெருமானைப்படைத்த நந்தமிழகத்தின் பெருமையை யென்னென்றியம்புவது.

இனி, இப்புலவர் பெருமான் பாடியனவாக மேலே குறித்த பாடல்களில், "எல்லப்பனம்மையப்ப" "ஓர்கறுப்புமில்லாத" "காவைவென்றிடு" என்பவற்றைச் சோக்கநாதப்புலவர் பாடியதாக வழங்கியும், "மட்ட ஈருநதேன்களந்தை" என்று படிக்காசுப்புலவரைப் புகழ்

ந்த கும்பனென்னும் புலவன் வாக்கைப் பலபட்டடைச்சொக்கநாதப் புலவர் பாடியதாக மாற்றிடும் காணப்படுகின்றன. இச்சரிதங்களில் பாடபேதங்களும் மாறுபாடுகளும் பலவுள. இவை முன்பதிப்பித்தோர் ஆராய்ச்சிபுரியாமல் அவசரப்பட்டுச்செய்த பெரும்பிழை போலும்.

இனிப்படிக்காசுப்புலவர் காலமின்னதென்பதை ஆராய்வோம். "பெற்றுளோருபிள்ளை" "வழிமேல்விழிவைத்து" என்றபாடல்களின் கடைசி அடிகளில், "வல்லமாநகர்க் காளத்தியே" என்ற ஓர்பிரபுவினைக்குறித்தும், "மால்சீதக்காதியிருகரமே" "மைப்போதகமனையானசீதக்காதி" உரைகாண்டசீர்த்திபெறுஞ் சீதக்காதி" என்ற ஓர் வள்ளலை வியந்தேத்தியும், ஏதையறிவான் இவனுக்கேன்பல்லக்குச்சேதுரகுநாதசிங்கமே" "புகழ்தளவாய் குமாரன்" "பூச்சக்கரமன்னர் பணிரகுநாதசேதுபதி" என்று இராமநாதபுரமன்னரைப் புகழ்ந்தும், இப்புலவர் பாடியிருப்பதால் இவர் இற்றைக்கு இருநூற்றுநாற்பது வருடங்கட்கு முற்பட்டவரென்பர். இப்புலவர்சிகாமணி தஞ்சைஜில்லா நாகபட்டணத்திற்கடுத்த திவ்யக்ஷேத்திரமாகிய கமலாலயமென்ற திருவாரூரின்கண் வதிந்த வன்மீகநாதேசிகர் குமாரர் வைத்தியநாத நாவலரிடம் கல்விகற்றாரென்பதை,

"கூடுஞ்சபையிற்கவிவாரணங்களைக்கோளரிபோற்
சாடுஞ்சதாசிவசற்குருவேமுன்னுன்றந்தைதம்மாற்
பாடும்புலவர்களானோமின்றிச்செம்மறப்பட்டியெங்கும்
காடுஞ்செடியுமென்னோதமிழ்க்காரிகைகற்றதுவே."

என்று படிக்காசுப்புலவரே பாடிய செய்யுளைக் கொள்க.

தாம்பாடிய தொண்டைமண்டலசதகத்தில் "கேட்டாலுமின்பங்கிடைக்குங்கண்டீர் கொண்டகீர்த்தியொடு, பாட்டாலுயர்ந்த புகழேந்தி" என்றபாடலில் புகழேந்திப்புலவரைக் குறிப்பதால் இவர் புகழேந்திப்புலவர்க்குச் சிலநூற்றாண்டுகளுக்குப் பிற்பட்டவரென்பது துணிபு. இவர் பாடலிற்றுதித்த சீதக்காதிவள்ளலையும் "காளத்திப்பிரபுவையும்," பற்றியவிவரமொன்றும் நமக்குப்புலப்படவில்லை. இப்புலவரெழுதிய சீட்டுக்கவியிற்கண்ட ரகுநாதசேதுபதி யென்பது சேதுபதிகள் பலர்புனைந்த பெயராயினும் கி-பி. 1647-முதல் 1672-வரை மிக்கதிற

மையுடன் ஆட்சிசெய்தவரும், புலவர்க்குப் பெருநிதியாய் விளங்கிய வரும், பலபெரியதர்மங்களைச் செய்தவருமாகிய திருமலைச்சேதுபதி யாம் ரகுநாதசேதுபதியைக் குறிக்கின்றதாகவே தோற்றுகிறது. இந்தத்திருமலைச்சேதுபதி பேரிற்றான், பொன்னாங்கால் அமிர்தகவி ராயர் ஒருதுறைக்கோவைபாடிப்பரிசுபெற்றது. இக்கோவையில், சேதுபதியைத் தளவாய்புத்திரர் என்றும், தளசிங்கமென்றும் "இராமேசர்பதம்பணியுமையான்" என்றும் கூறப்படுதல் அச்சேதுபதியின் வரலாறுதல் கண்டுகொள்க.

இக்காரணங்களால் இப்புலவர் பெருமான் இற்றைக்கு 240-வருடங்களுக்கு முன் விளங்கியவரென்றே கொள்ளலாம்.

மற்றுமிவர் ஜனனமாதிய விசேடங்களொன்றும் கிடைக்கவில்லை. வேளூர்க்கலம்பகமும், தண்டலையார்சதகமும், தொண்டைமண்டலசதகமும், தவிர வேறு அரிய சந்தப்பாக்களொன்றும்அகப்படுவது அருமையாயிருக்கின்றது. இப்பிரதியும் மிகப்பிரயத்தினத்துடன் கிடைத்ததைக்கொண்டு முயன்று பரிசோதிக்கப்பட்டன.

இப்புலவர் செங்குந்தமரபினரேன்பதை,

புகழ்பூத்திடுந்தில்லைமேலோனையம்மையைப்போற்றியெங்கு
மகிழ்பூத்திடாதபொற்காசைப்பஞ்சாக்கரத்தின்படிமே
னிகழ்பூத்தல்பெற்றுப்புள்வேளூர்கலம்புகநீட்டியரூத்
திகழ்பூத்துநின்றசெயலோர்செங்குந்தசிலாக்கியரே.

எனவரும் பிரமாண முகத்தானு முணர்க. வேறிரண்டு பாடல்களு இவர் பாடியதாகக்கண்டவை வருமாறு:—

கன்மாரிகாத்தமுகில்கஸ்தூரியருள் மாவைக்கறுப்பனென்னும்
வின்மாரிதனதுகிளையத்தனையுஞ்சபைகூட்டிவியந்துகேட்டுச்
சொன்மாரிபொழிந்திடவேசிரக்கம்பஞ்செய்ததொடுசுருளுந்தந்து
பொன்மாரிபொழிந்து தந்தப்பல்லக்குஞ்சுமந்ததனுற்புகழ்பெற்றானே

கூடுந்திரைகொண்டிவன்வேளைபார்த்துக்குறுகலர்கள்
தேடுந்தென்மாவைக்கறுப்பனெங்கோனெஞ்சிவிகைதனைப்
பாடுந்தமிழ்ப்பெருமானொட்டக்கூத்தன்பதாம்புயத்தைச்
சூடுங்குலோத்துங்கசோழனைப்போலச்சுமந்தனனே.

சி. கு. நாராயணசாமி முதலியார்,
கோ-வை.

திருச்சிற்றம்பலம்.

# பெரியபுராண அரும்பத விளக்கம்.

[பழைய ஏட்டினின்று எடுக்கப்பட்டது.]

(முற்றொடர்ச்சி.)

(ருசுஉ) தேவர்களுக்குஞ் சிறப்போடுவரும் பூசையாற்றுமல்.

(ருசுஎ) நாட்கூறு - முற்பகல். தீவினைக்கு நீரென்று மடை யில்லாதீர் - தீத்தொழிற்கு என்றுமியையில்லாதவர்களே.

(ருசுஅ) இதுபிற்பாடு - இதுவே பிற்படற்காரணம்.

(ருஎங) பேரொலியையுடைய நீர்வளஞ் செறிந்த திருத்தலை யாலங்காடும்.

(ருஎசு) கரிய அமணராகிய வெவ்விய சுரத்தினை.

(ருஎகூ) காப்புச்செய்தல் - பூட்டல்.

(ருஅ0) அரிய வேதங்கள் திருக்காப்புச்செய்துவைத்த அக்க தவைத்திறக்க, அவ்வேதங்கள்கூறும் மிகுந்த அன்புடையார் சமீபி த்து நீக்கப்பெறுமையால், அன்றுமுதலாகப்பின்னர்.

(ருஅஉ) அடியார்களுடைய விண்ணோருடைய ஆர்ப்பு.

(ருகூக) அளவிறந்த கோடி வேதங்கள் நெருங்கிச்செய்த திரு க்கதவைப்பூட்டல் திறத்தலாய பணிகளை.

(ருகூஉ) அழகிய வேதங்கள் சிவபிரான் முன்னருளிச்செய்த வதனையே கூறும், ஒருப்பாட்டினின்ற அடியார் சிவபெருமான் மாட் டியைய வருகின்ற அருட்செய்கையைத் தாமே வகுக்க வல்லரா யின், பெரிய வேதத்தோடு மெய்யடியாருக்கு ஏற்றத்தாழ்வு மிகவு ண்டு.

(ருகூங) சைவவேடத்தோடு வந்து வாய்மூராகிய அவ்விடத் திருப்பேம்; அங்கே வாவென்றருளிப்போக.

(௫௯௯) கைவ்வகை முறைமை - ஒழுக்கமுறைமை.

(௬0௧) பாழி - சமண் முனிவர் வசிக்குமிடம். மூழி - கமண்டலம்.

(௬0௨) மயிர்பறித்ததலையும், பாயும், பீலியும் தடுக்கும், உடம்பிற் செறியும் முக்குடையுமாகித் திரிவோரெங்குமாகி.

(௬0௩) பாண்டியனுய்தற்காகச் சோழன் அழகோடுபெற்றருளும்.

(௬0௬) சேட்படு புலத்தார் - தூரத்தேயுள்ளவர்.

(௬௧௨) மானியார் - மங்கையர்க்கரசியார்.

(௬௧௩) கட்டழிந்து - நிலையழிந்து.

(௬௧௪) என்றப்பரிசனர் விண்ணப்பஞ்செய்த பின்னர்ச் சிவனடியாரெல்லாம் நன்று நம்மையடிமையாகவுடைய சிவனுடையபாதங்களை அடையாத அளவிறந்த சமணர்களாகிய கீழ்மக்களை வென்றருளி வேதநூல் வழியையே உளதாக்கி விபூதியை அரசனை இடுவித்து அவ்விடத்தே நிலைத்த செயல் சிவனடியார் செய்லேயாக எம்பெருமானே தேவரீர் நினைந்தருளவேண்டுமென்று நின்று தோத்திரஞ்செய்ய.

(௬௧௬) திருநாவுக்கரசுநாயனார் அருளிச்செய்வார்: ஆளுடையபிள்ளையாரே! அந்தச்சமணர்களாகிய கீழ்மக்களுடைய வஞ்சனைக்கோரெல்லையில்லை, சொல்வதுளது, பொருந்திய கிரகங்களுந்தீயன, எழுந்தருள உடன்படுவதியையாது.

(௬௧௭) புனனாடு - சோழநாடு.

(௬௨௫) கரிய கழியையுடைய சமுத்திரக்கரையிலுள்ள.

(௬௨௬) வாசனை எங்கும் நிறைகின்ற தாமரையின் வாசனை எங்கும்.

(௬௨௭) தடாகங்களினெவ்விடங்களினும் நீர்விளையாடுகின்ற பெண்களினுடைய தொய்யிலினிறம். நடனம்எவ்விடங்களினும் ஒலி நீங்காத.

(௬௨அ) சோழநாட்டைக்கடந்து நெடியமுல்லையிலுள்ள குறியபுதல்களதும், கார்காலத்தை ஆராய்கின்ற முல்லை அரும்பினதும் மணங்கமழும் முல்லை நிலத்தைக்கடந்து போரையாராயும் வில்லையுடைய வேடரது எளியகுறிஞ்சியினிடையேபோகி.

(௬௨௯) வாசனைபொருந்திய மலர்மலையையப்பக்கத்தே எறிந்துவருகின்ற நதிகள் பலவற்றைச்சென்றடைந்து, கடந்துவறி, முறுக்குப்பொருந்திய கொம்பையுடைய கலையைப்புணர்கின்ற மான்கன்று துள்ளிப்பாய்கின்ற காட்டைக்கடந்தணைந்தார்.

(௬௩௨) பள்ளிகளிலும் பக்கத்திற்பொருந்திய சமண்பாழிகளிலும், அழகிய இதழையுடைய அசோகின்மேலும் உண்கின்ற கவளத்தைக் கையிற்கொள்கின்ற மண்டபங்கண்மேலும், கூகையுடனுந்தையுந் தீய பட்சிசாலங்களுமாயின தம்மிற்கலகம் விளைத்தழிவைக் கூறும்.

(௬௩௩) சமணரனைவரும் பீலியுந்தடுக்கும் பாயுமாகப்பிடித்தவை வழுவிவிழ, கால்களுந்தடுமாறி, கண்களும் இடப்பக்கந்துடித்து, மேலேவருமழிவிற்காக வேறுகாரணங்களையுங் காணார்மயங்கி அறிவுகெட்டனர்.

(௬௩௪) கௌந்தியர் - (குருபத்னிகளியர்) தம்முள்தாமே கோபித்தெழுகின்ற கலகங்கொள்ள, அங்ஙனமே சமணர் தம் ரண்மாறுபட்டேறு பாட்டைச்செய்ய, பழைய தஞ்சமயநூலிற்பொருந்திய பொறை முதலியவற்றைநீங்கி மனசிற்கோபமுதலிய தீக்குணங்களிலேநின்றார்கள்.

(௬௩௭) சிறப்புமலிந்த அசோகானது தன்கீழிருந்த நங்கடவுள்மீதே வேரோடுசாய்ந்து வீழக்கண்டோம், அதன்பின்னரக்கடவுள் அழகிய முக்குடையுந்தாமுமாக எழுந்து கையைவீசிப்போக வூருள்ளோர் ஓடிக்காணக்கண்டனமென்று கூறுவார்.

(௬௩௮) கமண்டலத்தையுடைத்துப் பாயையுங்கிழித்து ஒரு கௌந்தியோடப் பண்டிதர்கள் பாழிகளினின்றும் கழுதைமேற்செல்வார்கள். தாமாகவே அழகிய வளையலையுடைய இய்க்கியாரும். (அருகன்றேவி) ஊளையிட்டுப்புலம்பியோட.

(சுஙக) மிக்ககொடிய அக்கினியில் முழுகக்கண்டேம், அத ன்பின் எழவுங்கண்டேம்.

(சுசo) மிக இளைய இடபக்கன்றொன்றுவந்து நம்முடைய கல் வியயிலிடத்தை உழறிச்சிதறியோடி ஒருவருந் தடுக்கப்பயந்துவிழத் தங்குதற்கு ஒருபுகலிடமுமின்றிப் பூமியைவிட்டு நிழலில்லாத மரங் களிலேறி.

(சுசக) அணைந்தருளும் வார்த்தையைக்கிளர்கின்ற சோபன ங்கூறி வந்தோர் கூறக்கேட்டார்.

(சுசஎ) தாமரைமலரிலிருக்கும் இலக்குமியைப்போல்வள், தி ருவாலவாயிலெழுந்தருளியிருப்பவரைக் கும்பிடல்வேண்டுமென்று அரசனுக்குங்கூறித் தம்பரிசனர்சூழத் தனித்தடையோடும்போய்ச் சிவபெருமானை வணங்கித்தானும ஆளுடையபிள்ளையாரது நல்லவர வையேற்றுநின்றாள். தனித்தடை என்பதற்குத்தனியான காவலெ னவுங் கற்பெனவுங்கொள்க.

(சுசஅ) அழகுவிளங்கும் முத்துச்சிவிகையின்மேற் சேவித் துவருகின்ற நிலவைத்தருஞ் சந்திரனைப்போல ஒளிவளர்கின்ற வெ ண்குடைநிழலைச்செய்ய.

(சுசகூ) துந்துபிமுதலாகிய வாத்தியங் கிளராவண்ணம் அந்த ணராகிய பிராமணர்கள் ஆயிரம்வேதங்களைத் தோத்திரஞ்செய்ய, வந்தெழுகின்ற மங்கலஒலி திக்குமுட்படமுழங்கத் தென்றலெதிர் கொண்டெப்பக்கத்துஞ் சேவைசெய்ய.

(சுருo) வஞ்சனைத்தவத்தாலே.

(சுருக) நெருங்கிய நிர்வாணமாகிய உடம்பினுள்ளதுகளாலு ம், ஆராய்கின்ற அறிவினுள்ளதுகளாலும், அவ்வழியிற்செறிந்து சேர்ந்த சமணராகிய அழுக்கைக்கழுவுதற்கு நிலையாய் ஒளிர்கின்ற வெண்மையோடும் சுத்தத்தோடும் பாண்டியநாட்டில்.

(தொடரும்.)

ஜி. சதாசிவம் பிள்ளை.

ஸ்ரீ:

# விக்கிரஹாராதனையும்

# வேதவாக்கியங்களும்.

விக்கிரஹாராதனை சம்பந்தமாக வேதத்திற் பிரமாணங்கள் சிறிதுமில்லை என்போர் அறியும்பொருட்டு, "ஆரியமத சித்தாந்தசங்கிரகம்" என்னும் நூலில் எழுதியிருப்பனவற்றைக் கீழேபதிப்பித்திருக்கின்றேன்.

"விக்கிரஹாராதனைக்கு வேதத்திற்பிரமாணமில்லையென்று சொல்லுகிறவன் வேதத்தை அத்தியயநஞ்செய்யவாவது, அதன் அர்த்த விசாரஞ்செய்யவாவது அல்லது உத்தமவைதீகர்களிடத்தில் விசாரித்தறியவாவது இல்லையென்று நிச்சயமாய்ச்சொல்லலாம். விக்கிரஹங்களை ஆவாஹநஞ்செய்யும் விஷயமாய் வேதத்திற் கணக்கற்ற மந்திரங்களேற்பட்டிருக்கின்றன. அவைகளையன்றிக் குறிப்பான வாக்கியங்களும் விக்கிரஹாராதநத்தை யாதரிக்கின்றனவாகவிருக்கின்றன. அவைகளிற் சிலவற்றை இவ்விடத்திற் குறிப்பிடுகிறேன்.

தைத்திரீயஸம்ஹிதை காண்டம்-௫-பிரசினம்-௭-அநுவாகம்-௨-பஞ்சாதி-௧-ல், "ஸம்வத்ஸர (கால) சுவரூபியான பரமாத்துமா "வாகிய உம்முடைய ரூபமெதுவோ அப்படிப்பட்ட பிரதிமையைச் "(விக்கிரஹத்தை) செய்து இருட்டாகிற அக்ஞானதசையிலுபாசிக் "கிறார்கள். அப்படியுபாசிக்கிறவன் வல்லமையுள்ள புத்திரனையும் "பூர்ணமான ஆயுளையுமடைகிறான். பிரஜைகளுக் கெஜமானத்துவ "த்தையுமடைகிறான்."

தைத்திரீயம்-காண்வஸம்ஹிதை, காண்டம்-௪-பிரசினம்-௩-கண்டம்-௪-ல், "பிரஸந்நமான முகம், கண்களிவைகளோடுகூடிய விஷ்ணு "வினுடைய அழகுடைத்தான ரூபமுள்ள பிரதிமையெதுவோ "அதைப் பூஜிக்கவேண்டியது. வணங்கவேண்டியது. ஆராதிக்கவே "ண்டியது, தியானிக்கவேண்டியது."

ஷை ஸம்ஹிதை-௫-௯-௭-ல், "ஓ! அக்கினியே! ஓ! அக்நிசுவ "ரூபமான ஹிரண்ணியகர்ப்பா! ஸகலசுவரூபியே! ஸகலத்திலுட

"வாஸஞ்செய்கிறவனே! இந்த மூர்த்திகளுடைய உலோகசுவரூபமா
"ன எல்லா அங்கங்களிலிருந்தும் வெளிப்படும், வெளிப்படும். எங்
"களை மூன்றுவித தாபத்திலிருந்து விடுவியும் விடுவியும். எங்களு
"டைய அங்கம், அவயவம், நரம்பு இவைகளிற் குளிர்ச்சியையுண்
"டாகச்செய்யும் உண்டாகச்செய்யும்."

யஜுர்வேதம்-மைத்திராயண்ணிய ஸம்ஹிதைகாண்டம்-ங-பிர
சிநம்-க-ல், "பாஷாணம் (கல்), உலோகம், இரத்திநம், மண் இவைக
"ளாற் செய்யப்பட்ட விக்கிரஹங்களிற்செய்கிற பூஜையானது, பந்
"தத்திலிருந்து விடுபட இச்சையுள்ளவனுக்கு சுகத்தைக்கொடுக்கிற
"தாகிறது."

ஸாமவேதம் ஷட்விம்சப்பிராம்மணம். பிரபாடகம-ரு. கண்டம்
"கO-ல், தேவாலயங்கள் நடுங்குகின்றன. பிரதிமாரூபமான தெய்வங்
"கள் சிரிக்கின்றன. அழுகின்றன. பாடுகின்றன. கூத்தாடுகின்றன.
"வாய்களைத்திறக்கின்றன. வேர்வையைவிடுகின்றன. கண்களைத்திறக்
"கின்றன, மூடுகின்றன, பிரதிமைகள் நடக்கின்றன, நதிகளில்தலையி
"ல்லாதமுண்டங்கள் காணப்படுகின்றன (நதியில் ஜலமிருந்தாலும்
"இல்லாததாய்க் காணப்படுகிறது."

விக்கிரஹங்களுடைய செய்கை இவ்விதமாகக் காணப்படுவது
உலகத்திற்குக்கேடு உண்டாகப்போகிறதென்பதற்கு முன்னறிவிப்
பாகவிருக்கிறது.

இருக்ஸம்ஹிதை-அஷ்டகம்-எ-வர்க்கம்-கரு-ல், "கரையற்றதா
"கிய ஸமுத்திரத்தில் மனிதர்களாற் செய்யப்பட்டதல்லாத எந்தக்க
"ட்டை மிதக்கிறதோ அந்த சீக்கிரம் கொண்டுவா."

இந்தக்கட்டைதான் ஜகந்நாதக்ஷேத்திரத்தில் ஸ்தாபிக்கப்பட்டு
தாரோஜகந்நாதமென்று பெயருண்டாயிருக்கிறது.

அதர்வணவேதம்-காண்டம்-க-கற்பம்-உ-துவநி-ங-ல், "ஓ! பக
"வானே! வாரும், இந்தக் கற்பிரதிமையிலிரும், உமக்கு சரீரமான
"து கல்விக்கிரஹமாயிருக்கட்டும்."

கடஸம்ஹிதை-காண்டம்-௧-அத்-௩-அநுவா-௬-ல், "இந்தப்பூ "மியில் எவ்வளவு கற்கள் செவ்வையாய்ப் பிரதிஷ்டை செய்யப்பட் "டிருக்கின்றனவோ, தேவனுடைய மாயையினாற் பூமியினுடைய "தூளிகள் எவ்வளவு கணக்கிடப்பட்டிருக்கின்றனவோ (அவ்வளவும் "பரமாத்துமசுவரூபமே.)"

தைத்திரீயஸம்ஹிதை-௫-உ-௫-ல், "புருஷப்பிரமாணமுள்ள "தாக (விக்கிரஹத்தை) நிர்மாணஞ்செய்யவேண்டியது."

இப்படிப்பட்ட அநேக வாக்கியங்கள் வேதத்திற் காணப்படுகின்றன. இவைகளெல்லாம் விக்கிரஹாராதனையை ஆதரிக்கிற வாக்கியங்களல்லவோ? ஆகையால், விக்கிரஹாராதநம் வேதத்திற் சொல்லப்பட்டிருக்கிறதென்று தெளிவாயிருக்கிறபடியால் ஸந்தேகிக்க யாதொரு காரணமுமில்லை."

**P. G.**

---

௨

# இராமாவதாரச் செய்யுட் பாடாந்தரம்.

(முற்றொடர்ச்சி)

## நிந்தனைப்படலம்.

மானுட னிவனென மனக்கொண் டாயெனிற்
கானுயர் வரைநிகர் கார்த்த வீரியன்
றானொரு மனிதனாற் றளர்ந்து ளானெனின்
றேனுயர் தெரியலான் றன்மை தேர்தியால்.

என்னும் ௫௦-ம்செய்யுளில் தளர்ந்து ளானெனின் என்பது 'தளர்ந்துளாயெனின்' எனக் காணப்படுகின்றது. கார்த்தவீரியனாகிய ஒரு மனிதனால் தளர்ந்துளாயென்பதே பொருத்தமுடைமையிற் பின்னையதே பொருத்தமுடைத்து. 'மனிதன்' என்பதற்குப் பரசுராமனை எனப் பொருள்கொள்வாருமுளர். அது பொருந்தாமை ௫௮-ம் செய்யுளில் கார்த்தவீரியனைப் பரசுராமன் வென்றமைகூறுதலானும், கார்த்தவீரியன் மானுடனன்றிப் பிறனன்றாதலானும் பெறப்படும்.

இருவரொன் றிகழ்ந்தனை யென்னின் யாண்டெல்லை
யொருவ னன்றே யுலகழிக்கு மூழியான்
செருவருங் காலையென் மெய்ம்மை தேர்தியால்
பொருவருந் திருவிழந் தநாயம் பொன்றுவாய்.

என்னும் ருகூம் செய்யுளில் 'அநாயம்பொன்றுவா'யென்பது 'ஆயுப் பொன்றுவா'யெனக் காணப்படுகின்றது. 'அநாயம்' என்பது பொருத்தமின்மையின் 'ஆயு' வென்பதே பொருத்தமுடைத்து.

பொற்கணன் றம்பியென் றினைய போர்த்தொழில்
விற்கொணண் பொருவுதோ ளவுணர் வேறுளார்
நற்கண நல்லறந் துறந்த நாளினு
மிற்கண விறந்தில ரிறந்து நீங்கினர்.

என்னும் ருஉம் செய்யுள்.

பொற்கணன் றம்பியென் றினையர் போர்த்தொழில்
விற்கொணண் பொருவுதோ ளவுணர் வேறுளார்
நற்கண நல்லறந் துறந்த நாளினும்
இற்கண விறந்தில ரிறந்து நீங்கினர்.

எனக் காணப்படுகின்றது. முன்னையினும் பின்னையது பொருட்பொருத்தமும் சிறப்புமுடைத்தாதல் காண்க. நற்கண் ஆம் நல் அறம் - நல்லகண்கள் போன்றதாகிய நல்லறம். அறந்துறந்த நாளினும் இற்கண இறந்திலர் என்பதற்கு பிற அறங்களைத்துறந்த காலத்தினும் பிறரில்லினவரைக் காதலித்து அவர்கண் நெறிகடந்து சென்றிலர் எனப் பொருள்கொள்க. இறத்தல் - நெறிகடந்துசேறல். இதனை "எளிதென வில்லிறப்பா னெய்து மெஞ்ஞான்றும்—விளியாது நிற்கும் பழி" என்னுங் குறட்குப் பரிமேலழகர் உரைத்த விரிவுரையிற் காண்க. இறந்து நீங்கினராகிய பொற்கணன் றம்பியென்றினையரும் வேறுளாராகிய வீரருமென மேலே கூட்டிமுடிக்க. இற்கணரென்னும் பாடத்திற்கு இல்லின்கண்ணுள்ளாரெனப் பொருள்கொள்க.

இப்பெருஞ் செல்வமின்க ணீந்தபே ரீசன் யாண்டு
மப்பெருஞ் செல்வந்துய்ப்பா னின்றுமா தவத்தி னன்றே
யொப்பருந் திருவு நீங்கி யுறவொடு மூலக்க வுன்னித்
தப்புதி யறத்தை யேழாய் தருமத்தைக் காமியாதே.

என்னும் ௫௬-ம் செய்யுள்,

> இப்பெருஞ் செல்வநின்க ணீந்தபே ரீசன்றன்பா
> லப்பெருஞ் செல்வந் துய்த்தற் கின்னுமத் தவஞ்செயாம
> லொப்பருந் திருவுநீங்கி யுறவொடு முலக்க வுன்னித்
> தப்புதி யறத்தை யேழாய் தருமத்திற் கருமம்யாதோ.

எனக் காணப்படுகின்றது. 'துய்ப்பானின்று மாதவத்தினன்றே' என்பது பொருத்தமின்மையிற் பின்னையதே பொருத்தமுடைத்து. அப்பெருஞ்செல்வம் - பேரின்பம். அத்தவம் - முன்னர்த்தவம்.

> ஆண்டவாளரக் கன்கனன் றண்டத்தை யழிப்பான்
> மூண்ட காலவெந் தீயென மூற்றிய சீற்றம்
> நீண்ட காதனீர் நீத்தத்தின் வீவுறு நிலையின்
> மீண்டு நின்றொடு தன்மையா லிவையிவை விளம்பும்.

என்னும் ௬௪-ம் செய்யுளில் 'கனன்றண்டத்தை' யென்பது 'சகதண்டத்தை'யெனவும் 'வீவுறுநிலையின்' என்பது 'வீந்ததந்நிலையின்' எனவும் காணப்படுகின்றன. மூற்றியசீற்றம் எனப் பின்வருதலானும், அந்நிலையிலெனச் சுட்டுவருதல் சிறப்புடைமையானும் பின்னையவே பொருத்தமுடைய. அந்நிலையின்மீண்டு என்பதற்கு முன்னுற்ற கோபநிலையினின்றும் மீண்டு எனப் பொருள்கொள்க.

> வென்றோரு மிருக்க யார்க்கு மேலவர் விளிவிலாதோ
> ரென்றோரு மிருக்க வன்றே யிந்திர னேவல்செய்ய
> வொன்றாத வுலக மூன்று முணர்கின்ற வொருவன் யானே
> மென்றோளா யிதற்கு வேறோர் காரணம் விரிப்ப துண்டோ.

என்னும் ௬௮-ம் செய்யுளில் 'இருக்கவன்றே' என்பது 'இருக்கயானவ்' எனவும், 'ஒன்றாத வுலகமூன்று முணர்கின்ற வொருவன்யானே' என்பது 'ஒன்றாதவுலகமூன்று மாள்கின்ற வொருவனென்றால்' எனவும், 'விரிப்பதுண்டோ' என்பது 'விரிப்பதென்னோ' எனவும் காணப்படுகின்றன. 'அன்றே' என்பதும் 'உணர்கின்ற' என்பதும் 'உண்டோ' என்பதும் பொருத்தமில்லனவாதலிற் பின்னையவே பொருத்தமுடையன, இருக்க என்பதை வியங்கோள் முற்றாகக் கொண்டு பொருள்கூறுதலும் பொருந்தும்.

பதவிய மனிதரேனும் பைந்தொடி நின்னைத் தந்த
யுதவியை யுணரநோக்கி னுயிர்க்கொலைக் குரியரல்லர்
சிதைவுற லவர்க்குவேண்டிற் செய்திறன் றேர்ந்ததென்னி
னிதநினக் கிதேயாகி னியற்றுவல் காண்டியின்னும்.

என்னும் எக-ம் செய்யுளில், 'சிதைவுற லவர்க்குவேண்டிற் செய்திறன் றேர்ந்ததென்னி—னிதநினக் கிதேயாகி னியற்றுவல் காண்டியின்னும்' என்பது 'சிதைவுற னினக்குமொவ்வா தென்பது தெளிந்தேன்பின்னு—மிதமுனக் கிதேயாகி னியற்றுவ னின்னுங்கேட்டி' எனக்காணப்படுகின்றது. முன்னையதினும் பின்னையதே பொருத்தமுடைமை காண்க.

இன்னும் இப்படலத்து அஉ-ம் செய்யுளின் பின்னர்,

தீயோர் செய்கை தானு மிராம னொருதேவி
தாயா னென்பு மாருதி கண்டே தளர்வெய்தி
மாயா தொன்றே யன்றி மனத்தே மலிதுன்பத்
தோயா துன்னிச் சோர்பவ னொன்றங் குணர்வுற்றான்.

என ஒரு செய்யுள் காணப்படுகின்றது. இதுவும் ஈண்டுப் பொருத்தமுடைத்து.

இங்ஙனம்
சி. கணேசையர்.

---

ஸ்ரீ:

# நுண்பொருண்மாலை.

(முற்றொடர்ச்சி)

உஙரு. தோன்றிற் புகழொடு......நன்று.

ந - லை:—அருத்தாபத்தி.

உரு-ம் அதி—அருளுடைமை.

உசஉ. நல்லாற்றானடி.........மஃதேதுணை.

நு - லை:—பொறிகளாற் காணுங் காட்சியும், குறிகளானுய்த் துணரும் அநுமானமும் கருத்தாமொழியாகிய ஆகமமும் என மூன்று. ஒப்புப்பற்றியுணரும் உவமையும், இங்ஙனமன்றாயின் இது கூடாதென்றுணரும் அருத்தாபத்தியும் உண்மைக்கு மாறாய இன்மையுமென்னும் மூன்றுமாக ஆறளவை என்க. இவற்றை வடநூலார் பிரத்யக்ஷம், அநுமானம், சாப்தம், திருஷ்டாந்தம், அருத்தாபத்தி, அநுபலத்தி என்பர். "அறத்தாறிதுவெனவேண்டா" (௩எ) "அன்பிற்கு முண்டோவடைக்குந்தாழ்" (எக) "உயிருடம்பினீக்கியாரென்ப" (௩௩0) "பொருளாட்சி போற்றாதார்க்கில்லை" (உருஉ) "படைகொண்டார் நெஞ்சம் போல்" (உரு௩) "தினற்பொருட்டாற் கொல்லாதுலகெனின்" (உருசு) என்பன முறையே காண்க. * ஒழிந்தது வந்தவழிக்காண்க. ஆற்றானென்பது வேற்றுமை மயக்கம்.

உருச. "அருளல்லதியாதெனிற்......தவ்வூன்றினல்.

நு - லை:—கோறலென முன்னின்றமையின் 'அவ்வூன்' எனச் சுட்டினார்; அல்லாக்கால், செய்யுளாதலிற் சுட்டு முற்கூறினார் என்பது. அஃது "ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற், காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு" (௬௪உ) என்பதனுட் காண்க. 'யாதெனின்' என்பதனை முன்னுங்கூட்டுக.

உருஎ. "உண்ணாமைவேண்டும்......பெறின்.

நு - லை:—புண்ணதுணர்வார்—ஆய்தம் விகாரமென்றது, கண்டெனக் குற்றியலுகரத்திறே உயிரேறுவதல்லது அது வென்னுஞ் சுட்டீற்றுகரம் உயிரேறாதென்பது நோக்கி; "வாளதுணர்வார்ப்பெறின்" (௩௩௪) என்பதனுட் காண்க. "விலங்கலைக் கால்விண்டு" என்னுங் கோவையாரில் (உச) 'துலங்கலைச் சென்றிதென்னோ' என்பதன் பதவுரையினுங் காண்க.

---

* "முறையே" என்றாரேனும், "அறத்தாறு"—காட்சியளவைக்கும், "அன்பிற்கு"—அநுமானவளவைக்கும் "உயிருடம்பின்"—ஆகமவளவைக்கும், "பொருளாட்சி" "படைகொண்டார்"—இவ்விரண்டும் உவமையளவைக்கும், "தினற்பொருட்டாற்"—அருத்தாபத்தியளவைக்குங் கொள்க. "ஒழிந்தது" என்றது அநுபலத்தியை என்க.

உ௬௬. உற்றநோய் நோன்றல்......தவத்திற்குரு.

ந - லை:—தவத்திற்கு உரு அற்று என்பது, யானையது கோடு கூரிது என்பது யானைக்குக்கோடு கூரிது என்பது போலும்; (இதனை) "இதனதிதுவிற்றென்னுங் கிளவியும்" (தொல். சொல். ௧௧0) என்பதனாலறிக.

உ௬௭. சுடச்சுடரும் பொன்......நோற்கிற்பவர்க்கு.

ந - லை:—சுடரும் - ஓடும். ஒளி - ஞானம்.

உ௬௮. கூற்றங்.........தலைப்பட்டவர்க்கு.

ந - லை:—குதித்தல் - கடத்தல். அர்த்தாங்கீகாரத்துள் கடத்தலும் என்றதனை எச்சவும்மையாக்கினர், முற்கவிப்பொருளைக்குறித்தென்க.

உ௭0. இலர்பல......நோவாதவர்.

ந - லை:—தவம் துறந்தார் மேற்றாகலிற் செல்வம் நல்குரவு ஈண்டு அறிவினுண்மையின்மைகளாயின; "நுண்ணூர்வின்மை வறுமை யஃதுடைமை, பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்" (நாலடி-அறிவின்மை) எனக் காட்டியதும் அதனைநோக்கி என்க.

உ௭௧. வஞ்சமனத்தான்......நகும்.

ந - லை:—பூதங்களைஞ்சுமென்றே ஓதுக. கோவையாருள் "பணங்களைஞ்சாலும்" ......... "குணங்களைஞ்சாற்பொலியும்" (திருக்கோவை-உ௩௫) என அடிப்பாடு நோக்கி வருவது (காண்க.) "விச்சதின்றியே விளைவுசெய்குவாய்" என்னுந் திருவாசகத்தில் (மெய்யுணர்தல்-௬௬.) "வைச்சுவாங்குவாய்" "பிச்சனாக்கினாய்" என வருவனவும் அது. "நிச்சனிரப் புக்கொன்றுங்கு (திருக்குறள்-௫௩உ.) என்பதுமது.

உ௭உ. "வானுயர்தோற்ற.....குற்றப்படின்."

ந - லை:—வானுயர் தோற்றமென்பது, நாலடியில் (குடிப்பிறப்பு-உ) 'வான்றோய்குடி' என்றாற்போல இலக்கணை வழக்கு. அன்றி

யும் 'வன்றோய் வன்னகுடிமை' யுமாம். (ஆதிரையான் பெயராசிரி யன் பொதுப்பாயிரம்) 'உடையானரசருளேறு' (திருக்குறள்-௩௮௧.) "உடையார் முன்னில்லார் போல்" (ஷை-௩௯௫.) "வானுயர்தோற் றம்" (உ௭உ) என்பனவற்றுள், உபசாரவழக்கும், உலகவழக்கும், இலக்கணவழக்கும் முறையேகாண்க. காமத்துப்பாலுள் "யாருள்ளி த்தும்மினீர்' (ஷை ௧௩௧௭) என்பதன்கண் மகளிர்வழக்குங் காண்க.

உ௭௩. வலியினிலைமையான்......தற்று.

ந - லை:—அதன் என்றது மனம் எ - று.

உ௯௩. தன்னெஞ்சறிவது......சுடும்.

ந - லை:—பொய்த்தபின் - பொய்த்தாலுயின் எனச் செயின் என்வினையெச்ச வாய்பாடாய் முடிந்ததால், "பின்முன் கால்கடை" (தொல். சொல். உஉ௬.) என்னுஞ் சூத்திரத்திற்கேற்பப் பின்னென் பதோர் வாய்பாடுபெற்ற வினையெச்சமென்க

உ௯௭. பொய்யாமை......நன்று.

ந - லை:—இதன் பக்ஷாந்தரத்துள் "செய்யாமை செய்யாமை"க் குச் 'செய்கை' (பொருள்) என்றார்; அது தண்டியலங்காரத்துள் இன் மையதபாவத்துக்கு (சூத்-௬0.) உதாரணங்காட்டிய "வாராமையில்லை வயவேந்தன்" என்பது வருவன் வயவேந்தன் எனப்பொருள்பட் டது போல என்க.

௩0௬. சினமென்னுஞ்......சுடும்.

ந - லை:—சேர்ந்தாரைக்கொல்லி என்பது தான்சேர்ந்த இடத் தைக் கொல்லுந் தொழிலது எனவிரியும். வடநூலாரும் தீக்கு "ஆசிருதவரி" என்று ஏதுப்பெயர் கூறுவர்.

௩௧௪. இன்னாசெய்தாரை......செய்துவிடல்.

ந - லை:—"அவ்வித்துக் காட்டிவிடும்" (திருக்குறள். ௧௬௭) என்பதுபோல 'செய்துவிடல்' இருசொல். உரையுள், 'அவ்விரண் டையும்' என்றது, அவ்விரண்டு குறட்பொருளையுமென்க.

௩௬௭. எனைத்தானு...... தலை.

நு - லை:—அறியாமற் செய்ததற்குப் பாவமில்லையென்பது காண்க; பாண்டுவுந் தசரதனும் பாவமெய்திய தென்னையெனக் கடாவுக.

௩௩௭. "ஒருபொழுதும்......மல்பல.

நு - லை:—'கருதுப' என்பது உயர்திணைப்பன்மை. பக்ஷாந்தரத்துள்ளும் 'வகரவீறுய்ப் பாடமோதி' என்னுமையால், அஃறிணைப்பன்மைக்கு "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப" (திருக்-௩௯௨) என்பதுபோற் பகரமீறுயிற்று.

(தொடரும்)

பத்திராசிரியர்.

---

# புத்தகக் குறிப்பு.

திருவுருமாமலைச் சிலேடை வெண்பா:— இப்பெயர்கொண்டதொரு சிலேடைவெண்பா, சேற்றூர் ஸ்ரீமத்-மு. ரா. அருணசலக் கவிராயரவர்களால் இயற்றி வெளியிடப்பட்டுள்ளது. திருவுருமாமலையென்பது, திருநெல்வேலி தாமிரபருணி நதியின் மத்தியிலுள்ள குறுக்குத்துறையென்னும் ஸ்தலமாகும். தென்னுடாண்ட வடமலையப்பபிள்ளையன் காலத்தே திருச்செந்தூர்க்கு, முருகக்கடவுள் திருவுருவொன்று இங்கிருந்து அமைத்துக்கொண்டுபோன காரணத்தால், இந்த க்ஷேத்திரம் திருவுருமாமலை யென்னும் பெயர்பெற்றதென்பர். இத்திருப்பதி விஷயமாகக் கவிராயரவர்கள் இயற்றியிருக்கும் சிலேடை வெண்பா தமிழறிஞரெல்லாம் படித்து மகிழத்தக்கது; ஒவ்வொரு பாடலும் மிகவழகும் பொருட்பொலிவும் பெற்றிருப்பதோடு, சிலேடைகளெல்லாம் அற்புதமான மாதிரியில் அமைந்து விளங்குகின்றன. இதற்குமுன் அமைக்கப்பட்ட சிறந்த சிலேடைமாலைகளைப் போன்றதொன்றாக இந்நூல் மதித்தற்குரியது. கவிராயரவர்கள், அச்சிலேடையின் பொருள்களை பாட்டுக்களின் அடியிற் குறிப்பிட்டிருப்பதும் உபயோகமாகும். இந்நூல், நம்மவர்க்கு ஒரு நல்விருந்தாயிருக்குமென்றே நம்புகிறோம். ப—ர்.

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-எ] சௌமிய-ஸ்ரீ சித்திரை மீ [பகுதி-சு.

## தமிழ்ப்பழஞ்சரிதம்.

:o:

(முற்றொடர்ச்சி.)

இதுகாறும் கூறிவந்தவைகளால், தமிழர் ஒருகாலத்தில், இப்பரதகண்டமுழுதும் பரவியிருந்தனரென்பதும், ஆரியர் விந்தியமலையின் வடபாக முழுதும் குடியேறிப்பரவியகாலத்தில், வடக்கிருந்த பூர்வகுடியினராகிய தமிழரிற் பலர், அம்மலையின் தென்பாகத்தே தம் தலைவரின்கீழ் அமைதியுடன் அமர்ந்து ஆரியக்கலப்பின்றி நாகரிகத்துடன் வாழ்ந்துவந்தனரென்பதும் ஒருவாறுவிளக்கப்பட்டன. இக்கொள்கைகள்வலியுடையனவென்பதை நாம் ஆங்காங்கேகூறிவரும் விஷயங்களும் மெய்ப்பிக்கும். இத்தமிழர் தென்னாடு வந்து தங்கியகாலம் இன்னதென அளவிடல் மிக அருமை. அதனை அளக்கவேண்டுமாயின், நம் சென்னையில் முன் கவர்னராயும், கலாவல்லவராயுமிருந்த ஸர் கிராண்ட்டப் துரை அவர்கள், "கான்வகேஷன்" பிரசங்கமொன்றில் "தமிழரின் புராதனத்தைநோக்குங்கால், ஆரியர் இங்கே குடியேறியகாலம், க்ஷணநேரத்துக்கு முன்பெற்ற ராய்ட்டர் தந்திச் செய்தியை யொக்கும்" என்று ஆராய்ந்து கூறியதினும் சிறப்பாகக் கூறுதல் முடியாதென்னலாம்.

விந்திடத்தின் தெற்கே வந்தேறிய திராவிடர் ஆரியரது கூட்டரவின்றி வாழ்ந்தமையால், அவரது, பாஷையும் நடையுடை பாவனைகளும் எவ்விதக் கலப்பும் பெறாமல் விளங்கின. தமிழர் தென்னாட்டிற் குடியேறுமுன்பு அந்நாட்டிலே அதன்பழைய குடிகளும் இருந்தன.

பழையர், பாணர், வள்ளுவர், பறையர், துடியர், கடம்பர் என்போரே அக்குடியினர். இதனைப், "பாணன் துடியன் பறையன் கடம்பனென், றந்நான் கல்லது குடியு மில்லை" எனப் புறநானூற்றில் வருதலால் உணர்க. இப்பழங்குடிகளைத் தமக்குத் தாழ்ந்தவராகவே தமிழர் நடத்திவந்தனராயினும், அக்குடிகளிற் சிலரைத் தக்கபடியும், சிலரைத் தமமேவற் றொழிலோராகவும் வைத்துக்காத்துவந்தனர். அவருட் பழையர் என்போர் மலைநாடுகளில் வசித்தவர். அம்மலைகளிற் றேனெடுத்து அருந்தலும் விற்றலும் இப்பழையரதுதொழிலாகும். இவர்கட்கே சிறந்த தேனெடுத்தற்றொழில் பற்றி, அத்தேனுக்குப் "பழை" என ஓர் பெயருமுண்டாயிற்று. இவர் முற்காலத்தே சிறந்த போர்வீரராக அரசர்பால் அமர்ந்திருந்தனர். பாண்டியன் படைத்தலைவனை பழையன்மாறனென்பானும் இவ்வகுப்பினனே. இப்பழைய வகுப்பினர் இன்றும் தென்னாட்டு மலைப்பிரதேசங்களில் தம்பழைய ஒழுக்கத்துடன் இருப்பதாகத் தெரிகின்றது. பாணவகுப்பினர் ஆடல் பாடல்களாலும் தூதுபோதலாலும் அரசர் முதலியோரை மகிழ்வித்து வந்தனர். அவரிற் பெண்பாலார் விறலியென்று அழைககப்படுவர். இவர்களும் அரசர் சமுகத்தில் மதிக்கப்பட்டனர். செந்தமிழரசியாகிய ஔவையாரே இந்தப் பாணவகுப்பைச்சார்ந்தவரெனின், நாம் அவ்வகுப்பினரைப்பற்றி அதிகமாகப்புகழவேண்டுவதென்னை? சுருங்கச்சொல்லின், முற்காலத்துத் தமிழரசரது பெருமதிப்புககுட்பட்டவர்களில் இப்பாணரை முதன்மைபெற்றவராகச் சொல்லலாம். இவர்களை யடுத்து வள்ளுவரும் அரசரால் ஆதரிக்கப்பட்டனர். இவர்க்கு முக்கியமாக ஏற்பட்டிருந்த தொழில் அரசனாணையை முரசுகொண்டு அறிவிப்பதேயாம். இனிக்கடம்பர் என்றவரைப்பற்றியவிசேடம் அதிகம் விளங்கிற்றில்லையேனும் இப்பெயர்கொண்ட கூட்டமொன்று 1000-வருஷங்கட்கு முன் மிகவலிமைபெற்றிருந்ததென்று சரித்திரமூலமாக அறிகின்றோம். இதுவன்றியும் அககடம்பரிற் பல்லோர் சிறந்தயுத்தவீரராயிருந்து மேற்குக் கரை நாடுகள் சிலவற்றை ஆட்சி புரிந்து வந்ததாகவும் வெளியாகின்றது. இவர்களிலே பறையர் துடியரென்போரே மிக்க தாழ்ந்த வகுப்பினராக எண்ணப்பட்டவர். அஃது அவர்களது இழிந்த ஆசாரம் பற்றிப்போலும்.

இனி, ஆரியக்கலப்பின்றி வாழ்ந்த பழந்தமிழரது வழக்க ஒழுக்கங்களைப்பற்றிச் சிறிதாராய்வோம். அவர்களுடைய புராதனவழக்கத்தை அவர் வழங்கு மொழியால் சிறிது தெரிந்துகொள்ளலாம். தமிழர் இரத்தினங்களாலும் உயர்ந்த உலோகங்களாலும் செய்தணியும் காதணிகளுக்கு ஓலை, தோடு, குழை, கொட்டை என இன்றும் வழங்குதல் அவர்கள் பழங்காலத்தில் காதில் அணிந்துவந்தவை, ஓலைகளும் பூவிதழ்களும், தழைகளும், கொட்டைகளுமாகவே யிருந்தன என்பதைக் குறிக்கும். கழுத்தணியைக் கொடியென வழங்கியிருத்தல் தமிழர் ஆதியில் படரும் கொடிகளை அணிந்தவரென்று காட்டும். கைவளைக்குப் பெயராகிய சங்கு என்பது, தமிழர் முற்காலத்தில் கடற்சங்கினை அவ்வாபரணமாக்கி யணிந்ததை விளக்குவதாம். அரைப்பட்டிகைக்கு மணவு எனச் சிறுசங்கின் பெயர் வழங்கலால், அவ்வணி, அச்சங்குகளினால் முற்காலத்தமைந்தவையென்றாம். இவ்வணி "அக்குவடம்" என இக்காலத்தும் வழங்குவது. ஆபரணங்களுக்கு வழங்கும் பழந்தமிழ்ப்பெயர்கள், இவ்வாறு தமிழரின் ஆதிசரித்திரத்தைக் குறிப்பிக்கின்றன. இவ்வண்ணமே பழஞ்சொல்லாராய்ச்சியில் தமிழ்ச்சரித்திரம் ஒருவாறு விளங்கத்தக்கதாயினும், இங்கு அவற்றை விரிப்பிற் பெருகுமாதலின் அறிஞர் அவற்றை ஆராயவல்லர். இவற்றையன்றித் தமிழ் வழக்கவொழுக்கங்களை யறிதற்கு அவர்கள் அநாதியாகவே கொண்டுவரும் அகப்பொருட் புறப்பொருட்டிணை துறைகள் நமக்கு ஏற்ற கருவிக ளென்னலாம். இத்திணை துறைகளிற் சில, ஆரியக்கலப்பிற்குப் பின்னர் உண்டானவையாயினும் பெரும்பாலன தமிழரது பழையவழக்க ஒழுக்கங்களை நன்குணர்த்துவன. ஆரியாசாரங்கட்கும் இவ்வழக்க வொழுக்கங்கட்கும் எவ்வகைத்தொடர்புமில்லை யென்பது, அவ்விரண்டையும் ஒப்ப ஆராய்வார்க்குத் தெளிவாகும். அகத்திணை விஷயங்கள், தமிழ்த்தலைவனுந் தலைவியுந் தம்முட்கூடுகின்ற காலத்தும் கூடியபின்னரும் நிகழும் செய்திகளை யெல்லாம் கூறுவன. புறத்திணை விஷயங்கள், அவையல்லாத தமிழரது அரசியல், போர் முதலிய பல வழக்கங்களை விரித்துரைப்பன. இனித், தமிழர் தாம் ஆதியிற் றென்னாட்டிற்குடியேறித் தங்கியதற்கேற்பக், குறிஞ்சி நிலமக்கள், முல்லைநிலமக்கள், மருதநிலமக்கள், நெய்தனிலமக்கள் என நான்கு பிரிவினராயினர். இப்பூமி முழு

தும் இந்நான்குவகுப்பில் அடங்குதல் கண்டவரும் அத்தன்மைபற்றி "நானிலம்" என்னும் பெயர்க்குறியை இந்நிலவுலகுக்கு இட்டுவழங்கினவருந் தமிழரொருவரே. "பாலை" என்பதையுஞ் சேர்த்துப்பிற்காலத்தார் நிலமைந்தெனக் கொண்டனரேனும், அந்நிலம் முல்லையுங்குறிஞ்சியுங் கலந்தவொன்றுதலால், பழந்தமிழர் அதை ஒன்றாகக் கருதினாரில்லை. முன்னாளில் தமிழர் பூவில் அதிகப்பிரியம் வைத்துப் போற்றிவந்தவரென்பது அவர்கள் மலைமுதலிய அகத்திணைக்கருப்பொருளை அவ்வந்நிலத்திற் சிறந்த குறிஞ்சி, மருதமுதலியவற்றாலும்; நிரைகோடல், நிரைமீட்டல் முதலிய புறத்திணைகளை வெட்சி, கரந்தையென்பனவற்றாலும் பூககளைவைத்தே பெயரிட்டிருத்தலால் விளங்கும். மேற்கூறிய நிலங்களில் வசித்த தமிழ் மக்களுள், மலைப்பிரதேசத்தில் வசித்தவர்க்கு மறவர்இறவுளரென்று பெயர். இவரது ஊர்கள் குறும்பொறை சிறுகுடி எனும் பெயர்கொண்டு வழங்கும். இவர் வழங்கிய வாத்தியங்கள் தொண்டகப் பறை, வெறியாட்டுப்பறை, துடிஎன்பன. அவர்களின் தலைவர்—பொருநன், சிலம்பனென்றும், தலைவியர்—மறத்தியர்,கொடிச்சியர் எனவும் வழங்கப்படுவர். இவரது சிறந்த தொழில்கள், தேனெடுத்தல், கிழங்ககழ்தல், குன்றமாடுதல், தினைக்கிளி கடிதலென்பன. இவர்கள் உணவுப்பொருளாகக்கொண்டவை தினையும் மூங்கிலரிசியு முதலியன. இனி,நெய்தனிலத்து ஆண்மக்களுக்குப் பரதர், நுளையர், உமணர் என்றும், பெண்மக்களுக்குப் பரத்தியர், நுளைச்சியர், உமண்டியர் என்றும் பெயர். இவர் வசிக்கும் ஊர்கள் பட்டினம், சிறுகுடி, பாக்கம் என வழங்கும். (இப்பட்டினம என்னும் வழக்கு இப்போது மசூலிபட்டினம், விசாகபட்டினம், சென்னபட்டினம், நாகபட்டினம் எனத் திராவிட நாட்டுக் கடற்கரை ஊர்கட்கு வழங்குகின்றது.) இவரது தலைவர் துறைவன் கொண்கன் சேர்ப்பன் எனபபடுவர். இவர்களது வாத்தியம் மீன்கோட்பறை, நாவாய்ப்பறை என்பன; இவர் தொழில்கள் மீன்விற்றல் உப்புவிற்றல் முதலியன. இனி, மருதநில ஆண் பெண் மக்கட்கு முறையே உழவர், உழத்தியர், கடையர், கடைசியர் என்று பெயர். இவர் வசிக்குமிடங்கள் ஊர் பேரூர் என வழங்கும். இவரது உணவு செந்நெல் வெண்ணெல் முதலியன. தொழில் நடுதல், களைகட்டல், அரிதல், கடாவிடுதன் முதலியன. இவர் தலைவர், ஊர

ன், மகிணன் எனப்படுவர். இவரது வாத்தியம் மணமுழவு, நெல்லரிக்கிணை யென்பன. இனி, முல்லைநிலமாக்கள் இடையர், ஆயர் எனப் பெயர் பெறுவர். இவரூர் பாடி என வழங்கும். இவருணவு வரகு சாமை, முதிரை என்பன. நிரை மேய்த்தல் முதலியன இவர் தொழில்கள். இவர் தலைவர் மருதத்தலைவர்பெயரே யுடையர். இவர் வாத்தியம் ஏறுகோட்பறை யென்பது.

இந்நான்கு நிலத்துமக்களுள் முதல் மூவரும் தமிழ் நாட்டில் முற்பட்டகாலத்தே வந்தேறியவர்களென்று தெரிகின்றது. முல்லை நிலமாக்கள் பாண்டியன் தென்னாடடைந்த காலத்தே அவருடன் கூடவந்தவரென்று சங்கநூல்களிற் சொல்லப்படுகின்றது. இதனால் இறுதியிற் கூறப்பட்டவர் சிறிது பிந்தியவரென்று தோற்றும். இவ்வாயர், புராணங்களில் ஆபிரரென்று கூறப்பட்டிருத்தலன்றி, வட இந்தியாவில் இன்றும் "ஆஹிர்" என்று அழைக்கப்படுகின்றனர் என்பர். தென்னாட்டில் இவ்வாறே தமிழ்ப்பழங்குடியினரை வில்லவர் மீனவர் என்னும் பெயர் புனைந்து வழங்குதல்போல, இராஜபுதனத்திலும், கன்னடதேசத்திலும் இப்பெயர்கள் முறையே பில்லர் (Billar) மீனர் (Meanr) என வழங்கப்படுதல் இக்குடியினரது பழங்கால ஒற்றுமையை விளக்குகின்றது. தென்னாட்டிலிருந்த தமிழ்க் குடிகளுடன் காலாந்தரத்தில் வடபாலிருந்து வந்துகலந்த தமிழ்க் குடியினர் பலர். மேற்கூறிய நான்குநிலத்துமக்களில் ஒவ்வொருவர்க்குமுரிய பொது விஷயங்கள் சில ஒத்திருப்பினும், அவ்வவர்க்குள் அவாந்தர பேதங்கள் பலவுமிருந்திருக்கலாம். அவற்றை இப்போது எண்ணுதல் முடியாது. இந்நானிலமக்களில் நாகரீகவளர்ச்சியுடைய மருத நிலமக்களே பெரும்பாலும் தமிழர்க்குத் தலைவராயினர். குறிஞ்சி நிலப்பெண்கள் உருவழகிற்சிறந்தமையால் மருத நிலத்தலைவர்கள் அப்பெண்களைக் கந்தருவமுறைப்படி மணம்புரிவதுண்டு. நெய்தனிலப் பெண்களும் மருதநிலத்தலைவரால் சிறுபான்மை மணம்புரியப்பட்டனர். ஆனால், முல்லை நிலத்தாராகிய ஆயரது பழைய விவாகமுறை வேறு விதமாகும். வலிமையும், கொல்லுமியல்புமுடைய ஆனேறொன்றைப் பலர்முன் வெளிப்படவிடுத்து, அதைத் தழுவிப் பிடித்தானுக்கே மகட்கொடுக்கும் வழக்கம் இவ்வாயர்க்குள்ளே இருந்ததென்று பழைய நூல்களிற் சொல்லப்படு

கின்றது. ஆனேறு தழுவி மணம்புரியும் இவ்வழக்கம் நப்பின்னைப பிராட்டியை மணந்த காலத்து ஆயர்குலபதியாகிய கண்ணபிரானு னுங் கையாளப்பட்டதாகப் புராணகதை வழங்குகின்றது. இவ் வாயரைப் பற்றிய விவாகமுறை இவ்வாறு சொல்லப்படினும், பழங் காலத்தில் வழங்கிய விவாகமுறை கந்தருவவிவாகமேயென்று பழைய இலக்கணங்களும் இலக்கியங்களும் குறிப்பிக்கின்றன. இது களவுப்புணர்ச்சி என்று தமிழில் வழங்கும். அஃதாவது—தலை மகனுந் தலைமகளுந்தமியராய் ஒரு பொழிலகத்தெதிர்ப்பட்டு வேட் கைமிகுதியாற் புணர்ந்து பின்கூடிவாழ்வது. ஆரியர் தென்னாட் டிற்புகுந்து கலந்தபின் ஏனையாசாரங்களில் மாறுபாடுநேர்ந்தது போலவே, இக்கந்தருவ முறையும் பிற்காலத்து மாறலாயிற்று. ஆசி ரியர் தொல்காப்பியனார், "மேலோர் மூவர்க்கும் புணர்த்த காரணம், (ஆரிஷமணச்சடங்கு) கீழோர்க் காகிய காலமு முண்டே" என்னும் சூத்திரத்தில் முத்திறப்பட்ட ஆரியரை மேலோரென்றும், அவ்வா ரியரல்லாத தமிழ்ப் பூர்வகுடிகளைக் கீழோரென்றுங் கூறி ஆரியர்க்கு விதித்த ஆரிடமணச்சடங்கை அவரல்லாத ஏனையரும் ஓர்காலத் துத் தழுவலாயிற்றென்று கூறுதலால், ஆரியக்கலப்புக்கு முன் கந் தருவமுறையே தமிழராற் கொள்ளப்பட்ட தென்பது நன்குவிளங் கும். * அவ்வாறு கொள்ளப்பட்ட விவாகமுறை, ஆதிக் காலத்தே தமிழருக்குள் மிக ஒழுங்காக நடை பெற்றதென்பதையும், பின்னர், அம்முறையில "பொய்யும் வழுவுந்தோன்றி" யதனால் ஆரிடமண முறை எடுத்துக்கொள்ளப்பட்ட தென்பதையும், "பொய்யும் வழு வுந் தோன்றிய பின்னர், ஐயர் யாத்தனர் கரண மென்ப" என்னுங் கற்பியலின் றொடக்கத்திற் றொல்காப்பியனார் குறித்திருக்கின்றார். இக்கற்பியல், விதிமுறையே செய்யப்படும் ஆரிடமணநிகழ்ச்சியைப் பற்றியது. இதனால், இம்மணமுறை ஆரியரால் விதிக்கப்பட்ட

---

* சீவக சிந்தாமணி, பதுமையாரிலம்பகத்தில், "தேவர் பண்ணிய தீந் தொடை யின்சுவை, மேவர் தென்றமிழ் மெய்ப்பொரு ளாதலிற், கோவத் தன்னமென் சீறடிக் கொம்பனாள், பூவர் சோலை புகுவனென் றெண்ணினாள்". (கசுரு) எனவும், ஷெ சுரமஞ்சரியிலம்பகம் சுகூ-ம் பாட்டில், "இலைபுறங் கண்ட கண்ணி யின்றமி ழியற்கை யின்பம்"எனவும் வருவனவற்றால், தமிழ் மக்கட்கேயுரியது இக்கந்தர்வமுறையான களவுப்புணர்ச்சி யென்பது நன்கு விளங்கும்.

தென்பதும், இதற்கு முன்பு களவியன்முறையே தமிழர்கையாண்ட தென்பதும் நன்கு போதரும். இக்களவியன்மணத்தில் வேறு பல செயல்கள் நிகழ்தல் அகத்திணைத்துறைகளால் அறியப்படுகின்றது. பண்டைக்காலத்தில் இத்துறைகளைப் பற்றியே புலவர்கள் மிகுதியாகப்பாடி வந்தனர். பழைய தமிழ்த்தலைவர்கள் களவியன் முறையிற் குறிஞ்சி நிலப்பெண்களை மணந்துவாழ்ந்த செயல்கள் பல துறைகளாகப் பகுத்துப் பாடப்பட்டு வந்ததோடு, முன்னாளில் அவை பலர்முன்பு நாடகமாக நடித்துங் காண்பிக்கப்பட்டு வந்தன. கோவைகளெல்லாம் முத்தமிழுள் நாடகப்பகுதியின்பாற் பட்டதென்று கூறப்படுதல் காண்க. நாடகங்களும் கூத்துக்களும் ஒரு தேசத்தின் வழக்கத்தை யொட்டியே நடைபெறுமென்பது திண்ணம். இப்போதுள்ள அகப்பொருளிலக்கணங்களும் இலக்கியங்களும் தமிழரது ஆதிவாழ்க்கை முறைகளைக் குறிப்பிக்கின்றனவேனும், அந்நூல்களெல்லாம் ஆரியக்கலப்புக்குப் பின்பெழுந்தவையாதலால் ஆரியாசாரங்களும் அவற்றிற் புகுந்துவிட்டன. ஆதலால், பழந்தமிழரது ஏனை வழக்கங்கள் இன்னின்னவையென்று சிலசெய்திகள் அறியப்படுகின்றனவேயன்றிப் பெரும்பாலவும் ஐயத்திற்கிடமாகின்றன. (தொடரும்)

பொ. பாண்டித்துரை.

---

உ

திருச்சிற்றம்பலம்

# தனிச்செய்யுட் கோவை.

ஏட்டு புகழ்நந்தி பாணநீ யெங்கையர்தம்
வீட்டிருந்து பாட விடியளவும்—காட்டிலழும்
பேயென்று ளன்னை பிறர்நரியென் றார்தோழி
நாயென்றாள் நீயென்றேன் நான். (க)

இச்செய்யுள், பாணன் தலைவனைக் காதற்பரத்தையிடஞ் சேர்த்ததால் உண்டாய வெகுளிகொண்டு தலைவி பாணனைப் பார்த்துக் கூறியது.

புள்ளலம்பு தார்க்கண்டன் பூம்புகார் வாழ்களியேம்
கள்ளலம்பு கள்ளுண்பேம் சோர்வறியேம்—உள்ளபடி
சொல்லவா வாலி திரௌபதையை மூக்கரிந்த
தல்லவா மாபா ரதம். (உ)

இது கள்ளை உண்ணினும் தான் சோர்வுபடுத லிலனாகத் தற்புகழ்ச்சிசெய்து மயங்கிக்கூறியது.

ககரம் பிறந்தசொல் லான்கரு மாணிக்கன் கப்பல்வெற்பி
லுகரம் படைத்திருந் தோமில்லையே யுன்னைப் பெற்றபின்பு
வகரம் பிடித்தும்வந் தாரிலையே யென்ன மாயஞ்செய்தா
யகர விகரந் தனமாக்கி வைத்த வருமகவே. (ங)

இச்செய்யுள், பாலனைப்பழித்தற்றுறை.

ககரமென்பது தமிழ் எண்ணில் ஒன்றைக் குறிக்குமாதலால், ஒன்றேயன்றி மாறுபாடவன் சொல்லிலில்லையென்பதை விளக்கி நின்றது. உகரம் படைத்திருந்தோமில்லை - இரண்டுபட்டிருந்ததில்லை. (உகரம் எண்ணில் இரண்டு.) வகரம் பிடித்து - காலைப்பிடித்து. (வகரம் எண்ணிற் கால்.) அகர விகரந்தனமாக்கி - நாலும் தனம்; அல்லது, அரையை யெட்டியதனம். (அகரவிகரம் - எட்டரை.)

முன்னவனைப் பாம்பிரவி கொரொகிற் புகுதுமென மொழியும்வேத
மன்னவனைச் சிறுகாலோ திமம்பழனஞ் சேண்கயிலை யடைவானேனுங்
கன்னல்வளஞ் செறிந்தோங்கு மாடானைப் பதியில்வளர் கருத்தன்பேரை
யின்னிலத்திற் கீர்த்திநெல்லி தரித்திடுமோ வென்றுமடி யேற்குத்தானே.(

பாம்பு - பணி, இரவி - ஆதவன், பாம்பிரவி - பணியாதவன். சிறுகால் - வந்து, ஓதிமம் - அன்னம், பழனம் - செய், சேண்-வான். சிறுகா லோதிமம்பழனஞ் சேண் - வந்தனஞ்செய்வான். கீர்த்தி - இசை, நெல்லி - ஆமலகம். கீர்த்திநெல்லி தரித்திடுமோ - இசையாமல் அகம் தரித்திடுமோ.

(இன்னும் வரும்.)

பொ. பாண்டித்துரை.

# "இயல்வது கரவேல்."

(முற்றொடர்ச்சி.)

இனிக்; கரவேல் என்பது, காத்தல் புதைத்துவைத்தல் அல்லது மறைத்துவைத்தல். 'மறைவும் புதைவுங் கரவெனப்படுமே.' இஃதுரைச்சூத்திரம். பொருட்குப் புதைத்தலு மறைத்தலும், ஏனையவற்றிற்கு மறைத்தலொன்றுமேயாம. புதைத்தற்குச் சொல்லுங்கால் தனக்கும் பிறர்க்குமென விருவகைப்படும், தனக்கென்பதைத் தான்றுய்த்தற்கேற்றபொருளைத் துய்ங்காது காத்தலெனவும், பிறர்க்கென்பதை ஈதற்கேற்றபொருளை அல்லது ஈதற்குக்கூடியதைக் காத்தலெனவுங் கொள்க. எனவே இவ்விருவகையினு மியல்வது கரவேலென்பது பெறப்படும். இதனைத் 'துய்த்துக் கழியான் றுறவோர்க்கொன் றீகலான் வைத்துக்கழியு மடவோனை—வைத்தபொருளு நகும்—அருளு நகும்.' எனப் பிறருங் கூறுமாறு காண்க. இதில் துய்த்தல்-தானனுபவித்தல். வைத்தல்-புதைத்துவைத்தல். இவர் அறிவும் அருளுமிலாரென்பதாம். எனவே தானனுபவித்தலும் அறமென்பதாயிற்று; உடலோடு கூடியவழி யல்லது அறஞ்செய்ய வியலாமையி னவ்வுடலை நிலைபெறுத்தற்கு உண்டிமுதலிய அனுபவமும் வேண்டப்படுதலாலென்க இனி, மறைத்தற்குச் சொல்லுங்காற் பிறர்க்குப் பொருளீதலை மறைத்தலும், உண்மையை மறைத்தலுமெனைப் பலதிறப்படுமாறு காத்தலைக்காண்க. இவையிற்றிற்கியைய வியல்வதென்பதற்குப் பொருந்திய அல்லது இசைந்த வொன்றையெனப் பொருள்கொள்க. எவ்வாற்றானு மியல்வது கரவாமை வேண்டுமென்பதாம். இனிக்; கரவென்பது ஏமாற்றலென்னும் பொருட்டாயொளித்தலென்பதுமாம். இதனை 'ஒள்ளிது னுணர்வு மின்னே யுன்னையா ரொளிக்கு மீட்டார்' எனக் கம்பர் கூறுமாறுணர்க. ஆயின் இயல்வதென்பதனோடு மூன்றனுருபொன்றுங்கூட்டி உனக்குள்ள வன்மையால் அல்லது ஒண்மையால் ஒருவரைக் கள்ளஞ்செய்து மேம்பட நினையாதேயெனப் பொருள்கொள்க. இனிக், கரவென்பதனைப் பிறர்க்குத் தீங்கெய்துமாறின்றியு முனக்குத்தீங்கெய்துமாறு மறைத்துவைத்தலென்னும் பொருளில்வைத்துக் கூறலுமொன்று

இது காமநோய்கொண்ட தலைவனுந் தலைவியுந் தாமுற்ற காமநோயைப் பாங்கற்குந் தோழிக்கு நாணுடைமையி னுணர்த்தாதிருக்கையும், அதன்பாற்படும் வேறுநோய்கொண்டார் உலகம் பழிக்குமென்றெண்ணித் தாமுற்றநோயை மருத்துவற்குணர்த்தாமையும், குடியோம்புங் கிழவனுங் கிழத்தியுங் குடும்பநலத்தின்பொருட்டுச் செய்யத்தகும் அல்லது ஒருவர்க்கொருவ ருசாவத்தகு நற்கருமங்களையல்லது நல்லாலோசனையை மறைத்துவைக்கையும், வினைஞர்தாந் தொழில்செயுமுறையி னறிதற்பாலவாகிய வையங்களைத் தம்மையொத்தார் அல்லது தம்மின்வல்ல வினைஞர்பா லுசாவாது மறைத்திருக்கையும், மாணாக்கன் றனக்குநிகழுஞ் சங்கை தன்னோடொத்த மாணவர்க்குத் தெரியின் இகழ்வுண்டாமென்றுகருதி யன்னோரையும் ஆசிரியரையுமுசாவாது பொதிந்துவைத்தலுமெனப் பலவகைப்படும். இவற்றிற்கேற்ப வியல்வதென்பதனை எத்துணையளவா னுணர்த்தினோலேதமின்றி நன்மை யெய்துமெனத்தெரியுமோ அத்துணையளவிற் பொருந்துமாறென்று பொருள்கொள்க. இன்னவாறு கரவற்கவென்பதாம். கரக்குமேற் காரியங்கெட்டுத் தனக்கேதீங்கெய்தும். இவற்றுட் காமநோய்கொண்ட தலைவனுந் தலைவியுந் தாமுற்ற காமநோயைப் பாங்கற்குந் தோழிக்குங் கரப்பரேல் அந்நோயிருவர்க்கும் புலப்படாமையாற் பிரிவுநீண்டுப்புணர்ச்சியெய்தாது மனத்துயருறுவர். தலைவனிருக்க; தலைவி தான்றனக்குற்ற காமநோயைத் 'தாமுறு காமத்தன்மை தாங்களே யுரைப்பதென்ப, தாமெனலாவதன்றோ லருங்குல மகளிர்க்கம்மா' வென்பதுபோலப் பிறர்க்குணர்த்தல் பழுதாமன்றோவெனின்; சேட்படுக்கப்பட்டுக் கழிபெருங் காமமுழந்தார்க்குக் 'காமமுழந்து வருந்தினார்க்கேம, மடலல்ல தில்லைபிற'வென்பதனான் நாணந்துறக்கப்படுதலானும், நாணுள்வழியு மந்நோயைக்குறிப்பானுணர்த்தன் மரபாதலானும், கூட்டமெய்துதற்கு அது வேண்டியிருத்தலானும், அச்செய்யுள் தனதியல்பைக்கரந்து கூறும் அரக்கிகூற்றுமாகலானுங், கரந்துகூறும் அக்கூற்றும் உலகின் மகளிர்க்குப் பொருந்துமாயினுந் தலைவன்மாட்டு நேர்நின்றுமொழிதற்கண் அமையவேண்டுதலாற் பாங்கனிடத்துந் தோழிகளிடத்துங் குறிப்பானுணர்த்துதல் பழுதாகாதென்க. மற்றவையு மிவ்வாறேயேற்ப விரித்துக்காண்க. விரிக்கிற்பெருகும்.

இனி; இயல்வது கரவேலென்பது ஈயென்னும் பொருட்டெ ன்க. ஆயி னீகவென்றது கரவேலென்ற தெற்றிற்கெனின்; ஈவார் சிலர், கரப்பார் பலரே. பலர்க்கேயன்றிச் சிலர்பொருட்டாக வொ ன்றைச்சொல்லுமாறில்லை; அன்றி ஈகையுடையார்க்குச் சொல்ல வும்வேண்டா. அஃதிலாத பலர்பொருட்டே யிதுசொல்லப் புகுந்த தாகலின் அவர்தஞ்செயலை மறுத்தபடியாமென்க. அதுபற்றியே இயலுவதீகவெனச் சூத்திரிக்கச்சொல் லியைபிருந்தும் அங்ஙனமி ன்றி யியல்வது கரவேலென வெதிர்மறையை மறுத்தன்முகத்தா னீதலையுணர்த்தினாரென்பது காண்க. அல்லதூஉம் உலகம் பொரு ண்மயக்குடையதாகலானும், பொருளின் மயங்கியவழிச் சுயநன்மை யே கவனிக்கப்படுதலானும், சுயநன்மையிற் கவனம்பற்றியவழிப் பொருளழிவுக்கஞ்ச வருதலானும், அவ்வச்சத்தாற் கரத்தலெய்து மாகலானும், கரத்தலை மறுத்தால் ஈகையுணர்ச்சி தானே யமையுமா கலானும், அஃதமைந்தவழியும் எத்துணையா னீவதென்னு மைய நிகழுமாகலின், அவ்வைய நீக்குதற்பொருட்டு இயல்வது எனவும், ஈதற்பொருட்டுக் கரவேலெனவுஞ் சொற்களியைத்து எத்துணையா னுமீக வென்பார் இயல்வது கரவேலெனக் கூறினாரெனலும் பொரு ந்துமென்க. அன்றி, நீதிநூலுடையாரெல்லாம் மக்களை யறநெறியி னிறுத்தற்பொருட்டு மறநெறியின் விலக்குதலையே பெரிதுங்கூறு தன் மரபு. இது கருதியன்றே பின் 'ஈவது விலக்கேல்' 'ஊக்கமது கைவிடேல்' முதலாக வெதிர்மறையை மறுத்தன்முகத்தாற் சூத்திரி த்து அறத்தினிறுத்துமாறும், ஈகைகூறிய திருவள்ளுவருள்ளிட்ட மற்றையாசிரியரெல்லாம் ஈகைகூறி ஈயாமையும் உடன்கூறுமாறும், ஈகைகூறிய வதிகாரத்திற் கரத்தலிற்கேடுங் கரவாமையினலமுங் கூ றியவாறும், 'கற்கக் கசடறக் கற்பவை'யென விலக்கு முற்கூறிப் பின், 'நிற்கவதற்குத்தக' வென விதிகூறியதூஉம், இன்னாமையே கூறு நாற்ப தெழுந்ததூஉம், அதுபோன்ற பலநூல்கள் பிறந்தவா றும், 'அறவினை யாதெனிற் கொல்லாமை' என்னுங் குறளுட் பரிமே லழகர் 'விலக்கிய தொழிதலுஞ் செய்தலோடொக்கு மாதலிற் கொ ல்லாமை அறவினையாயிற்று' என்றவாறும், 'அருங்கேட னென்பத றிக மருங்கோடித், தீவினை செய்யா னெனின்' என்று குறள் கூறு மாறும்; அறியாமை மறையவே யறிவு பிறப்பதும், அறியாமையை

ப்போக்க ஆசிரியனமைந்தபடியுங் கண்டுதெளிக. பிரதியோகி நியோ கியோடே ஒக்குமென்பதே கருத்து' என்றார் பிரயோக விவேகமு டையாரும். அற்றேல்; பின்னையறத்தை யுடன்பாட்டிற் கூறவுங் காண்கின்றேமே? யென்னெனின்; மறநெறி நின்றாரை யந்நெறியின் விலக்கவே அன்னோர் மறநெறியின்மாறுபட்டுச் சிறந்ததோர்நெறியி துவெனத் தெளிந்துகோடற் பொருட்டென்க. எனவே அறநெறி வேறு மறநெறிவேறு என்பதூஉம், மறநெறி நீக்கமே அறநெறியினைத் துமன்று பலவகைப்பட்ட அறநெறிகளுள் அதுவுமொன்றென்பதூஉம் பெறப்படும்; மறநெறி நீக்கமொன்றே யறநெறியாயிடின் வேறுபல அறங்கள் வேண்டப்படாவாகலின். மறநெறியிற் றவிர்ந்தான் அற நெறியி னுடன்பற்றும். அறநெறி யுணர்ந்தாரன்றே யந்நெறியில் நிற்பார், அன்னோர்க்கதனை யுணர்த்துத லெற்றிற் கெனின்; அறநெ றியுணரா மறநெறிமாந்தர்க்கே யறங்கூறுவதன்றி யறநெறியாளர்க் கன்றென்க. நிற்க; 'விலக்கிய தொழிதலும் விதித்தது செய்தலேக்' கிளக்குமென் றறிவர் கிளந்தன ருரையே' 'வடநூலாரும் வழங்குவ ரதுவே' இவை யுரைச்சூத்திரம்.

இனி; இயல்வது கரவேல் எனப்பாடமோதி யுனக்குள்ள தன் மையினொளியாதே யென்பதூஉம் பொருந்தும். இயல்பதென்பதில் இயல்பு மக்கட்டன்மை, ஆண்டன்மை யெனவும்படும். அது பகுதி ப்பொருள் விகுதி. ஆண்டன்மை வீரத்தின் வழாமையுங், கருணை யின் மறாமையும், ஒழுக்கமுடைமையும், நாணின்மையும், வினைத்தி ட்பமு முதலாயின. 'வழுக்காவூறு மறாக்கா வருளும், ஒழுககமு நாணி னுறுதியு மென்றிவை, யாண்டன் மைச்செய லாகுந்தானே' இஃதுரைச்சூத்திரம். இதைச் சாதிதருமமென்ப. மகளிர்க்குநாண மடமச்சம் பயிர்ப்புப்போல. இவ்வியல்பினைததுங் கரவேலெனவே மக்கட்டன்மை யுடையனுபிற மென்பதுபெற்றாம். ஈண்டுக் கரவே லென்பது மறாமைப் பொருட்டென்க. கரவு ஒன்று மற்றொன்று ஆறுதலுமாம். அவ்வுடைவே பொருட்கேட்டுக்கும் பொருந்தும். இயல்பது சாதியொருமை. இரப்பார்க்கு இல்லையெனலும் ஆண்ட ன்மைக் கிழுக்கென்பர். ஈயென்றிரப்பார் ஆண்டன்மை யிழந்தா ரென இரவச்சங்கூறுநிற்கும். இரப்பா ராண்டன்மை யிழந்தாரென

வே ஈவாரஃதுடையராயினர். 'ஈவா ராணிய லெய்தியராவர்' 'இரப் பாரதனை யிழந்தன ரென்பர்' இஃதுரைச் சூத்திரம். சிறப்புப்பற்றி யாடவர்க்குக் கூறுமாயினும் இனம்பற்றி மகளிர்க்கு மொக்குமெ ன்க. பெண்ணியலென்று கூறுமாறுங் காண்க. தலைமைபற்றிப் பெரும்பாலும் ஒழுக்கங்களெல்லாம் அரசர்மேலேற்றிக் கூறுமாறு போல. அவ்வுடைமையை யிழத்தலே ஈண்டுக் கரத்தலென்பது. 'சிற்றறஞ்செய்தார் தலைப்படுவர்' என்ப. தலைப்படுதல் ஆண்டன் மை பெறுதல். இனி இயல்பென்பதனைப் பண்டுதொட்டு வரூஉம் பழக்கமெனவும், மரபெனவும், வழக்கெனவுங் கொளலும் பொருந் தும். இவ்வாறு வருவதனை வடநூலார் சகஜம் என்ப. சகஜம் பொ ருளொடும் பிறந்து யாண்டும் பிரிவின்றி யுடனிகழ்வது; தீயிற் சூடு போல. எனவே நெஞ்சினியல்பு மேற்கூறிய செய்தியனைத்து மென்ப தாயிற்று. இதற்கியையக் கரவேலென்பதனை மறுதேயெனக்கொள்க. பண்டுதொட்டு வரூஉம் பழக்கமுதலியன ஆன்றோரா னியமிக்கப்ப ட்ட வொழுக்கநெறிகளைக் கடைப்பிடித்தொழுகுஞ் செயலென்பது. புராணமென்பது மது. ஒருவன் அல்லது ஒரு கூட்டந்தொடங்கிய செயல் தீதாயின் ஆன்றோரானும் அன்னோரான் முற்கூறிய நூலா னும், அரசரானும் அது அப்பொழுதே கண்டித்தொழிக்கப்படுதலா னும், புகழையும் பயனையுந் தருதலின் நன்றாயின வழிமுறையிற் பின்பற்றப்படுதலானும் பண்டுதொட்டு வரூஉம் பழக்கமெல்லாந் தகுதியெனப்படூஉ மியல்பாமென்க. இவ்வியல்பு நெஞ்சினியல்புஞ் சொல்லினியல்பும் பிறவுமெனப் பலவகைப்படும். ஈண்டு நெஞ்சினி யல்பென்பது உள்ளத்திற் கள்ளமில்லாமை. அகத்தூய்மை யெனப படும். அகத்தூய்மையின் மறுதேயென்பது. அகத்தூய்மையிற் கர ப்பாவது உள்ளத்தினொன்று கிடக்கச் சுயநலங்கருதிய மேம்பாடு குறித்தும் அதனை வேறொருவகையான் வெளியிடுகை. மெய்ந்நூற் பொருளை யுணராதானொருவன் நல்லாசிரியன்பாற்சென்று வழிபாடு செய்தலின்றி அறிவினைப்போல இதற்கு நீவிர் யாதுபொருள் கொண்டீரெனக் கரவானுசாவி யவ்வகையேவரும் பொருளுணர்ந்து கோடல் உள்ளத்தாற் கள்ளமுடைமையாம். இதனை "எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங், கள்ளாமை காக்க தன் னெஞ்சு" என்புழி 'மெய்ந்நூற் பொருளையேனும் ஆசிரிய

ஊ வழிபட்டன்றி வஞ்சித்துக் கொள்ளி னதுவுங் களவா மென்பார் 'எனைத்தொன்றுங் கள்ளாமை காக்கதன் னெஞ்சென்றார்' என்று பரிமேலழகர் உரைவிரித்தவாறு கண்டுதெளிக. இனி; 'யாண்டுத் தீயுண்டு ஆண்டுப் புகையுண்டு' 'எஞ்ஞான் றுளமிருளஞ்ஞான் றுளதே' 'நெல்லுக்குமியுண்டு' 'புல்லிதழ் பூவிற்குமுண்டே' யென்பனபோல நல்லன வுள்வழி யெல்லாம் அல்லனவுமுளவாமன்றே, யங்ஙனமாக நெஞ்சினியல்பிற் கள்ளமு முளவாதலொக்குமே, கள்ளமில்லாமை நெஞ்சினியல் பென்ற தென்னையெனின்; இயல்பு மக்கட்டன்மையெனவும், அதுதான் வீரத்தின் வழாமையுங், கருணையின் மருமையும், நாணின்மையும், ஒழுக்கமுடைமையும் வினைத்திட்பமு முதலியன வெனவு முற்கூறினும். ஆகவே இயல்பென்பது மக்களுயிர்க்கு உறுதிபயக்கு நற்செய்தியாகலானுந், தீயிற்புகை முதலாயினவற்றுட் புகை முதலாயின வெறுக்கப்படுபொருள்களாகலானும், அவைதாம் உடனமைந்திருப்பினுந் தீமுதலியனவே சிறந்து போற்றப்படுதலானும், அவற்றுண் மற்றவை யடங்கி யமைதலானும் அவைபோன்ற சிறப்புப்பற்றி ஈண்டு நெஞ்சினியல் பென்றது நற்செய்தியே யாமெனக் கொள்க. இது கருதியன்றே இவ்வாசிரியர் மற்றோர் நூலுள் 'நெஞ்சிற் கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார், கரவிலாநெஞ்சத்தவர்' என நெஞ்சினியல்பைக் கூறினர். நெஞ்சம் ஈண்டு அதனியல்பை யுணர்த்திற்று. கரப்ப ரென்றதனால் அவ்வியல்பு நற்செய்தியாயிற்று. நெஞ்சிற் கரவு நெஞ்சினியல்பன்று. அதுபற்றியே கரவுடைமை யென்றார். 'நஞ்சுடைமை தானறிந்து நாகங்கரந்துறையும்' எனவுதாரணங் கூறுமுகத்தானும அவ்வுடைமையை இயல்பிற்குப் புறம்பாக்கியவாறும், கரவிலார்க்கு 'அஞ்சாப்புறங்கிடக்கு நீர்ப்பாம்பு' எனவுதாரணங் கூறுமுகத்தாற் கரவிலா நெஞ்சம் நற்செய்தியையே இயல்பாகக் கொண்டதென விளக்கியவாறுங் கண்டுதெளிக. அற்றாக; இயல்பென்பது இயற்கையின்பாற்பட்டு ஒருவற்குப் பண்டுதொட்டு வரூஉம் பழக்கங்களுட் டீயனவு முளவெனப்படுமா. அவை ஆண்டன்மைக்கிலக்காவன. செபபிற் களிம்புபோல. களிம்பொழிந்தவழிச் செம்பு தங்கமாவதுபோலத் தீயன தவிர்கவே நல்லனவாகிய ஆண்டன்மைப் பகுதியெல்லாங் கொள்ளப்படுமென்க. இனிச்; சொல்லி

னியல்பென்பது மெய்யுடைமை, உண்மையை ஒளியாமற் பேசுக வென்பதாம். எனவே அறிவுடையோராற் புகழப்படுஞ் சொல்லி யல்பை அஃதாவது சொல்லினுறுதி நல்லொழுக்கத்தை யாதோர் பயன்குறித்தேனும் வேறுபடுத்திச்செல்லற்கவென்பது பெறப்படும். பிறவுமன்ன. விரிக்கிற்பெருகும். இனி; இயல்பு நல்லொழுக்கமு மாம். 'இயல்பாகு நோன்பிற்கு' என்றார் பிறரும். நோன்பு-சீலம். நல்லொழுக்கமுடைமை கரத்தலாற்கெடும். வேறு எத்துணை நல் லொழுக்க முடையாரேனுங் கரவொன்று முடையராயின் மற்றை யொழுக்கங்களெல்லாம் இலவாய் முடியும். ஆகவே கரவின்மையே நல்லொழுக்கங்களுளெல்லாந் தலையென்பது பெறப்படும். இதனை 'இயல்பினு னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான், முயல்வாருளெல் லாந் தலை' என்பதனு னுணர்க. இயல்பு, பழக்கம், மரபு, வழக்கு, ஒழுக்கம், விதி, இயற்கை, இயல் என்பன ஒருபொருட்கிளவி. 'இயல் பே பழக்கம் மரபு வழக்கம், இயற்கை யொழுக்க மியல்விதி யென்ப' இஃதுரைச் சூத்திரம்.

இனி; இயலது கரவேல் எனப் பாடமோதுதலுமு ஒன்று. அஃ மதல்; இயல், தகுதி, தன்மை, இலக்கணம், ஒழுக்கம், நன்மை, அழகு, ஒண்மை முதலியவாகப் பலதிறப்படும், 'இயலே தகுதி யொ ழுக்க மிலக்கணம், மயறரு மழகொளி தன்மை நன்மை, யெனப்பல வாகுமா றெண்ணுவர் புலவர்' இஃதுரைச் சூத்திரம். இவை தம்மு ளுஞ் சிறு சிறு வேறுபாடுண்டு. ஈண்டும அது பகுதிப்பொருள் விகுதி. இவையெல்லாவற்றானுங் கரவேலென்பது. கரத்தல ஈண்டு மாறுபடுதல். இவற்றுட் டகுதியென்பது ஈண்டு நடுவுநிலைமை. நடுவு நிலைமை, செப்பம், செம்மை, சமன் என்பன ஒருபொருட்கிளவி. நடுவு நிலைமைக்கு எதிர்மறை கரவு, சாய்வு, கோடு, வளைவு என்பன. 'தகுதி நடுநிலை செப்பஞ் செம்மை, சமமென மொழிப சாலபுணர்ந் தோரே' 'அதுவே, கரவே சாய்வே கோடே வளைவே, யெனவே பலவெதிர்மறையுரைபெறுமே' இவை யுரைச்சூத்திரம. எனவே தகு தியெனப்படும் நடுவுநிலைமை முதலியவற்றிற் கரவாமை, சாயாமை, கோடாமை, வளையாமை முதலிய வேண்டுமென்பதாம். இத்தகுதி நெஞ்சினிகழ்வதுஞ் சொல்லினிகழ்வதுஞ் செயலினிகழ்வதுமென

மூவகையாம். ஆகவே மூன்று கரணங்களானும் ஒருவன் நகுதி யுடையனாதல் வேண்டுமென்பது பெறப்படும். இதனை 'நெஞ்சத்துக் கோடாமை சான்றோர்க்கணி' எனவும், 'சொற்கோட்டமில்லது செப்பம்' எனவும், 'தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற், பாற்பட் டொழுகப்பெறின்' எனவும் பிறர் கூறுமாறு காண்க. சொல்லினாற் செப்பம் பேசி நெஞ்சிற் கரவுடையரா யிருத்தலுங் கூடாதென்பார். 'சொற்கோட்டமில்லது செப்பமொருதலையா, வுட்கோட்ட மின்மை பெறின்' என்றார். ஆகவே மூன்று கரணங்களுந் தம்முளொத்துக் கரவாதிருத்தல் வேண்டுமென்பது பெற்றாம். விரிக்கிற் பெருகும். தன்மை ஆண்டன்மை பெண்டன்மை யென்பது. 'பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்' என்பதில் பெண்ணியல் பெண்டன்மையாம். இதன் வரலாறு முற்சொல்லப்பட்டது. இனி; இலக்கணம் எழுத்துமுதலாகச் சொல்லப்பட்ட ஐந்துமாம். ஈண்டுக் கரத்தன் மயக்கமாம். இனி; ஒழுக்கங், கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, வெகுளாமை முதலியவற்றைக் கடைப்பிடித்தொழுகு நடை. இவற்றைக் கரத்தலாவது இவை தம்மிடத்து உள்ளனபோலக்காட்டி நெஞ்சில் அவையிலராதல். அஃது 'கொல்லாமை மறைந் தொழுகு மமண் சமயக்குறுகினார்' என்பதனானுணர்க. ஏனையவற்றிற்கு மேற்கோள் கண்டுழிக் காண்க. இனி நன்மைசெய்யத்தகு நற்செய்தி. அஃது 'இயல்வாய்ப்பச் செய்தவை நாடாச் சிறப்புடைமை' எனவும், 'இழுக்கானியனெறி யரசாண்டு வெல்வான்' எனவும் வருவனவற்றானுணர்க. இனி; அழகு உடலழகுஞ் செயலழகுமென விருவகைப்பட்டு முறையே சாயல் நலம் என இருபெயருங் கொள்ளுமென்க. இவற்றுள் உடலழகு 'அசையியற் குண்டாண்டோரே ளர்' எனவும் 'சாயலுநாணு மவர்கொண்டார்' எனவும் வருவனவற்றாற் கண்டுகொள்க. சாயலு நாணு மவர்கொண்டார் என்பதனாற் கரத்தலு முடன்பெற்றாம். பொலிவழிந்திருந்தா ளென்பது. எனவே தன்றோணலத்தை யவன்றுய்த்தலிலனாக மற்றியாவர்க்கே கொல் இச்சாயல் என அதனைப்பேணாதொழிந்தனள்.

(தொடரும்.)

கோ. வைத்தியலிங்கம்பிள்ளை.

திருச்சிற்றம்பலம்.

# பெரியபுராண அரும்பத விளக்கம்.

[பழைய ஏட்டினின்று எடுக்கப்பட்டது.]

(முற்றொடர்ச்சி.)

(சுளஉ) கருங்குவளை மலர்களையுடைய வயல்செறிந்த தமிழ்நாடு பழியையொடும்படி பரந்தமானமில்லாத அமணென்கின்ற வலிய இருள்போயழிவதற்கு இயைந்தபேரொளிப்பரப்பால் அண்டமெல்லாவற்றையும் கொண்ட ஒப்பற்ற அழகிய ஞானதீபமெழுந்து வருவதுபோல.

(சுளரு) கழுத்திடுகயிற்றையுடைய வெற்றிபொருந்திய டாளைப்படையையுடைய பாண்டியர்களுடைய தமிழ்நாடுசெய்த தவப்பயன்விளங்கச் சைவவழிதழைத்தோங்க உரைக்கப்படும் திருநாமங்கள் பலவற்றையும் ஊதுகின்ற முத்துச்சின்னங்கள் பரசமயகோளரிவந்தாரென்று ஊத.

(சுளசு) பிரமன் வழிபடுஞ் சீகாழியிலவதரித்த.

(சுஅஅ) வந்த பார்ப்பனப் புதல்வனை நாம் பலாத்காரஞ்செய்து போக்குதல் புத்தியன்று; அச்சிறிய பார்ப்பனப்புதல்வன் இருக்கும் மடத்தில் கொடிய அக்கினிபற்ற மந்திரத்தொழிலால் உண்டாக்கினால்.

(எ0௩) என்பொருட்டவர் செய்த தீங்காயினும், சிவனடியாருக்கெய்துமோ என்று, பின்னருமச்சம் முன்புபொருந்தப் பின்னர் கோபம்பொருந்தத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் அரசன் காக்கும் மெய்ம்முறை வழுவென்று.

(எ0ரு) சிவபத்தியிற்சிறந்த பாண்டிமாதேவியாருடைய அழகோடுபொருந்திய பெருமைதங்கிய திருமங்கலியத்தைக் காத்தல்

வேண்டினமையாலும், குலச்சிறை நாயனாருடைய அன்பினாலும், அரசன்மாட்டு டபராதமுறுதலானும், திரும்பச் சைவசமயத்துட்புகுவிதி யுண்மையாலும்.

(எ0க) திருமடப்புறத்தின் பக்கத்தே தீதின்மையால் மனந்தெளிந்து.

(எகக) அரசனுக்கு உடம்புநடுங்க வெதுப்புகின்ற வெம்மையானது காந்துகின்ற கொடிய அக்கினியைப்போல உடம்பு முழுதையுங் கவர்ந்துபோய் மாளிகைப்புறத்தின் நின்றார்களும் புலர்ந்து தீந்துபோமாறு.

(எகஉ) அறிவும் ஆன்மாவும ஒழிவதற்காக ஒரு பக்கத்தே ஒதுங்க, சமீபத்திலணைந்தோர் அருகே தூரத்திலகல, வாழை இளங்குருத்தோடு தளிரைப் பக்கத்திலே கொண்டுவந்தாலும் சுருங்கி அவை நுண்ணியதுகளாக.

(எகரு) வந்த வியாதியின் மூலவழியை அறியாது தங்களுடைய தேவர் அருளிய நூலிலுட்சொல்லப்படும் மந்திரங்கொண்டு.

(எகசு) இருளான குற்றம்பொருந்திய உடம்பையுடைய தீயோர்கள்.

(எகஅ) இதன்கொடுமை இந்த வஞ்சகர் முப்புரங்களையுமழித்த சிவபிரானுடைய அன்பர் மாட்டே செய்த தீங்காம, அது அரசன் மாட்டே முதிர்ந்தது.

(எஉ0) உடம்பும் மனமும் அழுக்குக்கழுவுதல்செய்யார் செய்யும் மாயமும்.

(எஉக) பாண்டியனுடைய செவியினூடே மெய்யுணர்வைத்தருவோர் கூற, திருஞானசம்பந்தரென்கின்ற நாமமாகிய மந்திரமும்.

(எஉ௩) விரகுண்டேல் - அவரை அழைத்ததற்கு உபாயம் உண்டானல், அழையுமென்று கூற, அன்றைக்கவர் மகிழ்ச்சிபொங்கி ஆர்வத்தோடு அணையை அலைத்துச்சென்ற நீர்வெள்ளம்போலும்.

(எஉ௮) ஞானத்தினுகிய உருவை, நான்குவேதங்களினுைப் பற்றதுணையை, ஆகாயத்தின் மீகன்றிப் பூமியில் வளர்கின்ற இளம் பிறையை, தேன்விளங்குகின்ற கொன்றை மலரை பணிந்த சிவபிரானுடைய கீர்த்தியைத் தொடுக்கும் ஏழிசையின் பிறப்பிடத்தை.

(எ௩௧) தேற்றவுஞ்சுழன்று தெளியாதவர்களைப் பார்த்துச் சிறப்பைத்தந்து அருட்செல்வத்தையுடையீரே உங்கள் மாட்டுத் தீதுளதோ என்று வினவ.

(எ௩உ) திருமேனிக்கு அது அடாது என்று.

(எ௩௩) கொடுந்தொழிலையுடைய சமணராகிய கீழ்மக்கள் உண்டாக்கவருகின்ற வெதுப்பு அவர்செய்யும் மிக்க மாயைகளால் நீராமையால் சுரநோயாகுமயக்கத்தைப்பொருந்து மரசன்முன்னே அவர்களை வென்றருளினால்.

(எ௩௫) முத்துச்சிவிகையின்மேல் பாண்டியநாடுசெய்ததவத்தால் எழுந்தருளப்பெற்ற பேற்றையுடையோம்; இனி என் பெறுமென்று வணங்குதலும்.

(எ௩௬) ஆதலும், அழிதலும் எல்லாம் சிவன்செயல்; சமணராகிய பாவிகளைப் பார்க்கும் பழுது உடனே நீங்கவும், அவர்களை வெல்லவும்.

(எ௩௮) பார்க்க விதியிலாரைப் பார்த்துயான் தருக்கஞ்செய்ய.

(எ௪௧) பழைய மதில்சூழ்ந்த கதவுநீண்ட.

(எ௪௪) கண்ணுக் கழகாயுள்ளாருடைய எழுச்சியில் காட்சியைப்பெற்றோரான தொண்டர்கள் பாண்டியனை ஏதுவாகக்கொண்டு திருஞானசம்பந்தப் பிள்ளையார்வந்து மதுரையிற்புகுதப், பொருந்திய சமயம் வேறு நம்பினரெனினும், முன்னரே செய்த தவங்களென்னைகொலென்றார்.

(எ௪௬) முன் துயர் சிறிதேநீங்கி முழுத்த மணிகளழுத்திய பொற்பீடத்தை அவ்வரசன் தன்முடியின் பக்கத்திடுகவென்று கூறவல்லவனாயினன்.

(எ௪எ) செயலையான் - அருகன்; செயலை - அசோகு.

(எ௪அ) அரசனே உன்னுடைய தருமவழியை நீயே காத்தல் வேண்டும், ஆனால் அவரை இங்கே அழைத்தாய் உன்னுடையநோயை அவரும் நாமும் ஒருங்குதீர்க்கும்படி கூறி.

(எ௫0) பவனம் - அரண்மனை.

(எ௫௨) கண்ட அப்பொழுது அரசன்கையையுயர்த்திப் பொருந்தப்பார்த்துக் குளிர்ந்த பூங்கொத்துக்களையுடைய முடியின் பக்கத்தே பொற்பீடத்தைக் காட்ட.

(எ௫௩) அழிகின்ற மனம் நேர் நிற்க.

(எ௫௪) காவிரியானது வளந்தருகின்ற நாட்டையுடைய நீர் செறிந்த வயல்களையுடையபுறத்தே மருதநிலஞ்சூழ்ந்த.

(எ௫௫) பொருந்தும் மனத்திலுள்ள அச்சத்தைமறைத்து.

(எ௫௬) உதயகாலத்துதிக்குஞ் சூரியனைப் பக்கத்தே சூழுங் கரிய முகிலைப்போல, பீலியோடு சமண்கையர் ஆளுடைய பிள்ளையாரைச் சூழ்ந்தவராய் முன்னரே வாதினால் வெல்லுதற்கெண்ணித் தாங்கற்பித்த நூல்களை எடுத்தோதித் தலைவிரைக்க உரப்பினார்கள்.

(எ௬அ) இனிய அருளையுடைய பிள்ளையார் (பாலகர்) திருமேனி எளியர்போலும்.

(எ௯௨) ஒரு புடையாகிய வாமபாகத்தை முன்னரேமந்திரித்துத் தெய்வமுயற்சியினால்.

(எ௯௯) குற்றம்பொருந்திய உடம்புங்கன்றி அருகேவிட்டுத் தூரத்தேநிற்பவராய் அறிவில்லாவழியினின்றார் அறிவுடையாரைப் போன்றார்.

(எ௯எ) விளங்குகின்ற வேற்படையையுடைய பாண்டியனது உடம்பானது வலப்பக்கத்தும் இடப்பக்கத்தும் பொருந்திப் பெரிய உலகிலுள்ள தண்மையும், வெம்மையும் ஒதுங்கினாலொத்தது.

(எ௬அ) பாண்டியன் கூறுவன் இது என்னை மதித்த இக்கால மொன்றில் கொடிய நரகத்துன்பம் ஒருபாலாகும், மோக்ஷஇன்பம் மற்றொருபாலாகும், நெருங்கியநஞ்சு ஒருபாலாகும், சுவையையுடைய அமுது மற்றொருபாலாகும் துன்பவின்பமாகிய இருதிறங்களினியல்பை என் வடிவொன்றிலேயே பொருந்தினேன்.

(எ௭௧) பிறந்தனமாகிய நாங்கள் இன்றே பிறந்த பெருமையைப் பெற்றோம்.

(எ௭௪) சைவமைந்தருடைய சொல் வெற்றியைச் சந்த இன்பம்பொருந்திய இன்சொற்பாமாலையாலே பாண்டியனுடைய வெப்பொழித்த தன்மையைக் கண்டு அறிந்தோம். மெய்ம்மைதெரிந்த தருக்கவாதத்திலே வெல்லலாவதன்று.

(எ௭௫) தள்ளப்படும் நீர்மையை உடையார்கள் வேறாகத் தருக்கவாதத்தி னுத்தரங்கொள்ளும் வென்றியேயன்றி.

(எ௭௬) உமக்கென்ன வாதென்று கூற; சில்லிவாயர் - ஓட்டைவாயர்.

(எ௭௭) அரசன் "என்ன வாது செய்வ"தென்றுரைத்ததையே வினாவாகச்சொன்ன வாசகமாகத்தொடங்கி.

(எஅ0) இயைந்த மாந்தரும் விறகைக் குறைத்து உடனே அடுக்கி அக்கினியை அமைத்தலும் சிகையைவிடுகின்ற புகை ஒழிந்து எழுந்து சுடுகின்ற அக்கினிதேவனும் படர்ந்த ஒளியைக்காட்ட.

(எஅக) முறை - புத்தகம். காப்பு நாணையவிழ்த்தார்.

(எஅ௨) சொல்லப்படும் மெய்ப்பொருளைத் தருகின்ற திருமுறையைத் தாமே விபூதிபொருந்திய அழகிய கையால் திருப்புதலும் சிவபெருமானுடைய திருநள்ளாற்றின்மேலதாகிய "போகமார்த்த" என்னும் பதிகம் வந்து நேர்ந்தது.

(எஅ௩) பிள்ளையார் அத்திருப்பதிகத்தை விரும்பித் திருநள்ளாற்றைவிரும்பி அஃது எழுதப்பட்ட மெய்ம்மையானநல்ல திருவேட்டைக்கழற்றித் திருக்கரத்திற்கொண்டு.

(எஅச) நன்மையை உய்க்கும் மெய்ப்பதிகத்தில் நாதனென் றெடுத்து என்னை அடிமையாகவுடைய சிவனுடைய நாமமே எந் நாளும் நிலையான பொருளாமெனக்காட்ட அக்கினியிலாகுக என்று.

(எஅகூ) பட்ட - வளர்க்கப்பட்ட.

(எகூ௩) துப்புரவு - ஐம்புலநுகர்ச்சி.

(எகூச) மூக்காலில் ஒருதரமாயினும்.

(எகூகூ) ஒழுகாது அங்கே ஆராய்ந்து முன் தங்கும் ஏடு நல்ல பொருளைத் தாங்குவதென்றார்கள்.

(அ0உ) பால் மணங்கமழும் சிறியகுதலை மொழியைப்பகரும்.

(அ0கூ) பருப்பொருளுணர்ந்தார் தாங்கள் படுவன நுண்பொருளை யறியாதார் படுவனவற்றை.

(அக0) ஞானங்குழைத்த வட்டிலேந்திய அழகியகையின்.

(அகஉ) கார்காலம் வாய்ப்ப விரும்புகின்ற பெண்களுடைய மனம் சிறப்பு விளங்குகின்ற நாயகன்மாட்டே விரவச் செல்லுமாறு போல, நீர்பொருந்திய கடலைநோக்கி நிரையாகத் திரையொலித்துச் செல்கின்ற நாயகர் நாயகிகண்மாட்டு எஞ்ஞான்றும்விருப்புடையரே னும், சீதளகாலமாய கார்காலத்தில் விசேடமாக விருப்புடையர் என்னும் பொருணூலார் மதம்பற்றி இவ்வாசிரியர் இங்ஙனம் கூறி யருளினர்.

(அக௩) குருபிகளாகிய அருகரே நீரும் விதித்த ஏட்டை இடுக எனறான். முன் தோற்றார் பின் தோலார்களென்று துணிந்தார்கள்.

(அகச) உண்மைப் பொருளின்றி நெல்லிலுள்ளபதர்போல உள்ளீடில்லாதவராகிய சமணர்கள் உண்மைப்பொருளை அழிப்பவ ராய்த் தம்மந்திரத்தை (அத்தி நாத்தி) என்று எழுதி ஆற்றில் வி ரைந்துசென்ற நீரைக்கண்டும் ஆசையாற் கையிலுள்ள ஏட்டை விடு தலும், விரைந்து கடல் மேற்படர்ந்தது.

(௮௧௫) அழிவைத்தரும் அப்பொருளைமேற்கொண்டதோணி (ஏடு) எட்டாது அவ்விடத்தே நூறுவிற்கிடைக்குமுன்னேபோனது. உருவக அலங்காரம்பற்றி ஏட்டைத் தோணியாகக் கூறினார். பட்டிகை - தோணி.

(௮௧௬) நட்டாறு - நடுவழியுமாம்.

(௮௧௭) மாறுகொண்டவர்களை நீருமிட்டால்.

(௮௧௮) புத்தியில் மயங்கிக்கூற குற்றமற்ற வழியிற்சேர்ந்த அரசனும் அவர்களைவிட்டு.

(௮௨௦) உயர்ந்தோர் இயல் வேதநூல் ஒழுக்கமென்பதும், விளங்குகின்ற மெய்ந்நெறி சிவநெறியென்பதும், மூதேவி பொருந்திய வாயையுடைய சமணர்கள் காணாதவர்களாயினும், பலர் புகழ்கின்ற பாண்டியனறியும் பான்மையினால்.

(௮௨௨) "வாழ்கவந்தணர் வானவரானினம்" என்றருளிச் செய்த இந்த மெய்ம்மொழியின் பயன்:—உலகமின்பம் பொருந்த அழகிய யாகங்கண்முதலாகச் சிவபெருமானுக்கு அருச்சனையும் வழிபாடும் நிலைபெறவாம்.

(௮௨௩) யாகத்தின் பயனாகிய "வீழ்கதண்புனல்" என்று அருளிச்செய்தது நாடோறுமர்ச்சனைக்கு நல்ல உறுப்பாம். ஆதலான் ஆளுகின்ற அரசனை "வேந்தனுமோங்குக" என்று அருளிச்செய்தது, அருச்சனையையும் காக்குமுறைமையாம்.

(௮௨௪) "ஆழ்கதீயது" என்றருளிச்செய்தது, அயனெறிவீழ்க என்றதாம். "அரனாமமேசூழ்க" என்றது பழைய உயிர் எவையும் வாழ்வைத்தரும் பஞ்சாக்கரத்தை ஓதிவளர்தற்காம்.

(௮௨௫) "வையகமுந் துயர்தீர்கவே" என்றருளிச்செய்தது இம்மை மறுமைத்துயரை நிலையாய்வாழ்கின்ற உலகத்தோர் மாற்றும்படி கூறியதாம்.

(௮௨௬) "அரியகாட்சியராய்த் தமதங்கைசேர் எரியரேறுகந் தேறுவர் கண்டமுங்கரியர் காடுறைவாழ்க்கையர்" என்றருளியது

அம்முதல்வனைத்தேடி யறிதற்கரியநிலையால் தெரியாரென்று, உரிய வன்போடு காண்பவர்க்கு உண்மையாம்பெரியநல்ல அடையாளங்களைப்பேசியதாம்.

(அ௨எ) "ஆயினும் பெரியார்" என்றருளியது பொருந்திய இவ்வியல்பேயன்றி, ஆகாயம் முதலாகப்பரந்த பூதங்களும், பல்லுயிர்களும், அண்டங்களும், இயைந்த எவையும் இவருடைய வடிவென்றதேயாம்.

(அ௨அ) "ஆரறிவாரவர்பெற்றி" என்றருளியது எவருணர்வாலுஞ் சென்றறிதற்கரிய நிலையான பெருந்தன்மையாரென வாழ்த்தியதாம்.

(அ௨கூ) "வெந்தசாம்பல் விரையெனப்பூசியே" என்றருளியது, விபூதியே சந்தனமாகப்புனைந்த தமது திருமேனி நிறங்கூறியதாம்.

(அ௩௬) "தோன்றுகாட்சி சுடர்விட்டுளன்" என்றருளியது, நிறைந்த அக்கினிபூதவொளி ஆராய்கின்ற அன்பினூன்ற உள்ளே எழுஞ்சோதியாய் நின்றனன் என்பதாம்.

(அ௩௯) "ஆடும்மெனவாங்" திருப்பாட்டி னமைக்கப்பட்ட மூன்றும் மிக்கபுகழோ பிறருடைய துன்பத்தை நீக்குதற்கோஎன்று தேடும் அறிவீரே சிவபெருமான் கருணைத்திறமாம்.

(அ௪0) "கருதுங்கடி" என்ற திருப்பாட்டில் சிவனுடைய பூசையை மறுத்தவரைக்கொல்லுதல் முத்தியைத்தருதன்மையதாதலைச் சண்டேசருடைய செய்கையை மேலோர் பெரிதுஞ்சொலக் கேட்டேமென்று கூறினர்.

(அ௪௧) மதுரையிற் சங்கம்வைத்தவன் றெளியத்தெளியாதனர்களுடைய எல்லைக்காக ஏடு நீருக்கு எதிர்ந்து செல்லில்.

(தொடரும்.)

ஜி. சதாசிவம் பிள்ளை.



திருச்சிற்றம்பலம்.

# இரட்டைப்புலவர் சரிதம்.

இப்புலவர்கள் வரலாறு ஒருவாறு "செந்தமிழ்"த்தொகுதி 3. பகுதி 12-ல் பத்திராசிரியர் ஸ்ரீமத்-ரா. இராகவையங்காரவர்களால் வெளியிடப்பட்டுள்ளது. அவை "தமிழ்நாவலர் சரிதை"யிற் கண்ட சிலசெய்யுட் குறிப்புகளும், புலவர்கள் இன்னகாலத்தவர்களென்பதை விளக்கக்கூடிய இரண்டோரம்சங்களுமன்றிப் புலவர்களின் விசேடவரலாறுகளை விளக்குவனவாகக் காணப்படவில்லை. தமிழ்நாவலர் சரிதையிற்கண்டவரலாறுகள் மறைந்தொழியாதுலகிற்பரவியிருத்தல் வேண்டுமென்னுமோராவல் கருதி, நமது பத்திராசிரியர்வெளியிட்டிருப்பதாக விளங்குகின்றது. புலவர்களின் சரிதவிஷயங்களில் விசேடக்கவலைகொண்டிருந்த வெமக்குக் காஞ்சி ஸ்ரீமத்-பி. சே. முருகேசமுதலியாரவர்களால் வெளியிடப்பட்டுள்ள "தில்லைக்கலம்பகத்திலும்," மதுரை 'விவேகபாநு' பத்திராசிரியர், ஸ்ரீமத்-மு. ரா. கந்தசாமிக்கவிராயரவர்களால் வெளிவந்த "தமிழ்ச்செய்யுட்சிந்தாமணியிலும்" "செந்தமிழ்ப்பத்திரிகை" யிற்கண்ட "தனிச்செய்யுட்கோவையிலும்" இரட்டையர்வரலாறு சிலகாணப்பட்டன. இவைகளும் முன் செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளிவந்த விஷயங்களும் ஒழுங்குபெறத் திரண்டு ஓர் கோவையாகிச் சரிதவடிவாகச் செந்தமிழ்ப் பிரதியின்கண் வெளிவரின் நந்தமிழகத்தோர் கண்டுமகிழ்தற் கேதுவாமென்னுமோர் காரணங்கருதி இரட்டையர் வரலாற்றை இம்முறைப்பகுதியில் வெளியிடலாயினேம்.

இனி, இரட்டைப்புலவர்கள் வரலாறு வருமாறு:—

சோழமண்டல சதகத்தில்,

யோகாம் பெரிய சோழியர்வாழ் வுடையா ரீகை யுடையாராய்ப்
பாகாம் பழைய கல்வியினும் பயின்முன் றொன்னும் பரிசறிந்தோர்
ஏகாம் பரனுர் கச்சியுலா விசைக்கும் புலவ ரிரட்டையர்கள்
வாகாம் பதியா மிலந்துறையால் வழங்குஞ் சோழ மண்டலமே.

எனவருதலால, இப்புலவர்கள் சோழநாட்டிலுள்ள "ஆமிலந்துறை" என்னுந் தலத்துத்தோன்றியவர்களென்பது அறியப்படும். முற்ற வமுதிர்ச்சியாற்றெய்வீக மமைந்த மூதுணர்புலவர்களாய் எங்கும்புக ழ்பெற்ற "செங்குந்தமரபின்"கண், சிவனடிமறவாச் செல்வர்களாய்ச் சிறந்த இவ்விருபுலவர்களும் உறவின் முறைமையில் அத்தைமகனுக வும், அம்மான்மகனுகவும் அமைந்தார்கள். இவர்கள்பெயர் முறை யே "இளஞ்சூரியர்" முதுசூரியரென்று தமிழ்நாவலர்சரிதை"யால் தெ ரிகிறது. ஆயின், இவர்களுள் ஒருவர் "முடமாகவும்" ஒருவர் "குரு டாகவுமிருந்தமையின், இவர்களுக்குள்ள ஒற்றுமையால், குருடராயு ள்ளவர்மேல் முடமாயுள்ளவர் ஏறிக்கொண்டு உலாவிவருவர். அத னுலவர்களுக்கு ஆதிநாள்முதலாக "இரட்டையரேனப்"பெயர்வழங்க லாயது. அக்காலத்தே இப்புலவர்களை அபிமானித்தாக்காத்த வள் ளல்கள், சனியூர் வில்லிபுத்தூரரைப பாரதவிருத்தம் பாடுமாறு வே ண்டிய வக்கபாகை ஆட்கொண்டானுகிய "கொங்கர்கோனும" உச்சி யிலிருந்த "சம்பராயன்" என்பானும், மற்றோர் பாண்டியனுமெனத் தெரிகிறது. இவ்வரலாறுகள் தமிழ்நாவலர் சரிதையில்,

இரட்டையர் திருவக்கைக் கொங்கராயனை அசனம் இடுவித்தபோது பாடிய கவி.

* சாணர்க்கு முன்னிற்கு மாட்கொண்டநாயன் றமிழ்க்கொங்கர்கோ
பாணுற்ற வரிவண்டு சேர்வக்கை நகராதி பக்கத்திலே
யூணுக்கு வாரா திருப்பாய் விருப்பாகி யுயர்வானிலே
வீணுக்கு நின்ருகு மெலிகின்ற தெவ்வாறு வெண்டிங்களே.

சம்பராசன் விகடச் சமுத்திபாடச்சொல்லப் பாடியது.

எறிக்கும் புகழ்க்கச்சி யேகாம்ப ரன்சம்ப னெண்டிசைக்கும்
பொறிக்கும் புலிக்கொடி யான்புயம் வேட்டபின் பூவையன்ன
வெறிக்குங் குமக்கொங்கை மீதே விழிசொரி வெள்ளந்துளித்
தெறிக்குந் துவலை பழிக்குஞ்சிந் தூரத் திலகத்தையே.

இதனைத், தொண்டமண்டல சதகமுடையாரும்,

---

* சாணர்—சதுரர்; விழுப்புண்பட்ட தழும்புடைமைபற்றி வீரர் எனி மமையும். சாணம்-தழும்பு.

மேதைப் புலவரெண் ணேகாம்பரச் சம்பு மெய்ச்சநெடுங்
காதைப் புலவ ரிரட்டையர் பாடுங் கலம்பகமு
மோதற் கரியநல் லேகம்ப வாண ருலாவுமந்த
மாதைப் பனுவலும் பாராட்டிடுந் தொண்ட மண்டலமே.

எனச் சிறப்பிக்கப்பட்டிருப்பதுங் காண்க.

## படைவீடு முற்றியிருந்த பாண்டியனுக்குப் பாடியது.

காற்று லலைப்புண்டு கண்ணன் கடல்கடைந்து
மேற்று னெடுத்து வளைத்தெய்து —மாற்றுத்
செம்பொன் மலையில்லைச் சேனுக் கிடங்கொடுக்கச்
சம்பன் மலைகை தவா.

என்னுந்தலைக் குறிப்போடுவரும் பாடல்களால் இவற்றினுண்மை கண்டறிக.

கலைமகளாரின் கருணைவிசேடம் சிறக்கப்பெற்ற இப்புலவர்களின் இளமைக்காலத்தே இவர்களின் தாய்தந்தையர் உயிர்நீத்தமைக்கு ஆற்றுவருந்தி அவர்களுக்குத் தாங்களியற்றவேண்டிய கடன்களை முடித்து அதுமுதல் சிவதலயாத்திரை செய்வானெண்ணிப் பிரதமத்தில் பூலோககைலாயமெனவும், கோயிலெனவும் புகழ்பெற்றுவிளங்கும் சிதம்பரக்ஷேத்திரத்தை யடைந்து சபாநாயகரைத் தரிசித்தார்கள். அக்காலத்தில், சிதம்பரத்துள்ள அடியார் குழாங்கள், அங்கே தரிசனத்திற்குவந்த இரட்டையர்களைநோக்கி, திருப்பாதிரிப்புலியூருக்குத் தொல்காப்பியத்தேவரியற்றியதுபோலச் சிதம்பரத்திற்கு நீங்கள் ஒருகலம்பகமியற்றியருளவேண்டும் என்றுவேண்டினர்.

இரட்டையர்கள்,

கோச்சக்கலிப்பா.

* தொல்காப பியத்தேவர் சொற்றதமிழ்ப் பாடலன்றி
நல்காத் திருச்செவிக்கு நாமுரைத்த தேறுமோ
மல்காப் புனறதும்ப மாநிலத்துக் கண்பிசைந்து
பல்காற் † பொருளழற்கும் பாற்கடலொன் றீந்தார்க்கே. ‡
(தமிழ்நாவலர் சரிதை

* தொல்காப்பியத்தேவர்—இவரொருபுலவர்.

† பொருளழற்கும்—பிள்ளையழுதற்கும்.

‡ இச்செய்யுள் திருவாமாத்தூர்க்கலம்பக ஏட்டுப்பிரதிகளிலும் காணபடுகின்றது; 'நானுரைத்தது' எனவும், 'பொருமினர்க்கு' எனவும்பாடம்.

என்னும் செய்யுளைக்கூறி, 'சிவபெருமான்மீது கலம்பகம் பாடுதற்கு யாம் வல்லேமல்லேம்' என்றார்கள். கேட்டவர்கள், அதனால் தடைபடலின்றி, அங்ஙனங்கூறினமை பற்றியே நன்குமதித்துக் கலம்பகம் பாடும்படி பின்னும் வற்புறுத்த, அவர்கள் அப்பொழுதுந் துணிவின்றித் திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகத்திற் கயிறுசார்த்திப்பார்த்தார்கள். பார்த்தபொழுது,

"பாடுவார் பாடும் பரிசில் வரிசையெல்லா
மாடுவா ரன்றி யயலா ரறிவாரோ
தோடுவார் காதன்றே தோன்றாத் துணையையர்
பாடுவா ரோரிருவர்க் கிட்ட படைவீடே." (16)

என்னும்பாடல் அகப்பட்டது. அதனைக்கண்ணுற்ற இரட்டையர்கள் அச்செய்யுளின் பின்னிரண்டடியின் பொருளையறிந்து மனமுருகி, தம்மைப்பாடும்படி ஸ்ரீ ஆநந்தநடராஜர் கட்டளையிட்டருளியதாகவே நினைந்து துணிந்து செய்யத்தொடங்கிப் பலபாவினங்களமைந்ததாய் அம்மானை, புயவகுப்பு, மதங்கம், காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் என்னும் பதினெட்டுறுப்புகளுமியைந்த கலம்பகமென்னும் ஓர் பிரபந்தம்பாடி அரங்கேற்றியருள் பெற்றார்கள். அதன்பின், மற்றொருநாள் சபாநாதரைத் தரிசிக்கவேண்டிக் கோயிலுட்செல்லுகையில் ஒருவன்மிகவாடம்பரத்தோடு தமக்கெதிரில்வர அவனைப் புகழ்ந்து பாடினார்கள். அவன் கல்வியறிவில்லாதானாகையால் இவர்களைச் சம்மானியாது இறுமாந்திருப்ப, அதுகண்ட முடவர்,

"மூடர்முன்னே பாடன் மொழிந்தா லறிவரோ
வாடெடுத்த தென்புலியூ ரம்பலவா"—

என்றுரைத்தனர். அது கேட்டுணர்ந்த குருடர்,

ஆடகப்பொற்

"செந்திருவைப் போலணங்கைச் சிங்காரித் தென்னபயன்
அந்தகனே நாயகனா னால்."

எனமற்றதையுமுரைக்க, இவையெல்லாங்கேட்டு அவனருகிலிருந்த ஓரறிஞன் அவனுக்கிப்புலவர்கள் பெருமையைக்கூறிப் பரிசில்தரச்

செய்ய அதுபெற்றவிவர்கள் பின்னரங்குநின்றும் நீங்கித் "திருவாமாத்தூர்" என்னும் தலத்தையடைந்து அங்கெழுந்தருளிய அழகியநாதரைத் துதித்துத் திரும்புகையில், அத்தலத்துள்ள சிலர், இப்பெருமான்மீது ஓர் கலம்பகம் இயற்றியருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அன்னோர் பிரார்த்தனைக்குவந்த புலவர்கள், "திருவாமாத்தூர்க்கலம்பகம்பாடி" அரங்கேற்றுவதானார்கள். அக்காலப் பிரபந்தத்துள்ள ஓர் பாடலிற் பம்பையாற்றிற்கு மேற்கரையிலுள்ள கோயிலென்று கூறியிருப்பதை அச்சபையிலுள்ளோர்கள் கேட்டுநகைத்து இப்பம்பையாறு மேற்கேயோடி யிருப்பதை இவ்விருவருள், கண்ணில்லார் காணாவிடினும், கண்ணுள்ளாரேனுங் காணவில்லையா? என்று பரிகசித்தார்கள். அஃதுணர்ந்த புலவர்களிருவரும் நமது வாக்கில் விளக்குவித்தருளிய திருவருட் செயலையுணர்ந்த பிறகே இப்பிரபந்தத்தை அரங்கேற்றி முடிப்போமென வெழுந்து போனார்கள். அன்றிரவு சிவபிரான் திருவருளால் சத்தமேகங்களும் ஆரவாரித்து அதிவிருஷ்டியாய்ப் பொழிந்தமையின், † அந்நதி முன்னோடியிருந்த வழியைத்தடுத்துத் தென்றிசையாயோடி வடதிசையாய்த் திரும்பும்படிசெய்தது சூரியோதயமாவதற்குமுன் இவ்வாறுயினமையின் அன்றுமுதல் இப்புலவர்களருளிய "மேற்கரைக்கோயில்" என்பதே மெய்யாய்விட்டது. அது கண்ட அத்தலத்தாரும் ஏனையரும் அதிசயமும் அச்சமுமுடையவர்களாகி இப்புலவர்களை வணங்கி யாங்களியற்றிய அபராதத்தை மன்னித்தருள்வீராகவென்று வேண்டினார்கள். உடனே திருவுளமிரங்கினவர்களாய் இவ்விருவரும் முன்னாளில் நிறுத்தியபாடலைத் தொடங்கிவாசித்து அரங்கேற்றிமுடித்துச் சிவபிரான் அருள்பெற்றனரென்ப. தமிழ்நாவலர்சரிதையின்கண், ஆறுவிலகியபாட்டு என்னுந் தலைப்பின்கீழ்,

---

† இதனைப் புலவர்புராணமுடையாரும்,

இன்றுமந்தநதியவ்வாறெழுகுதலும்பெருவெள்ளமெய்துமாயின்
முன்றலங்குவழியினும்போய்மாதைநகர்ச்சூழ்தலுமுறையிற்காண்மின்
குன்றுறழுமாணவங்கொண்டிகலுமிளம்புலவீர்காள்கோடிகோடி
யென்றுபஞ்சாக்கரஞ்செபித்தாயினுமரன்பாலருள்பெறலேபேற்றமாமே.

எனக்குறிப்பிடுவதையுணர்க.

* ஆற்குழையோ வரவோ வாயர்பாடி யருமனேயோ
பாற்கடலோ தம்பமோ தங்குமாவலம் பலபலவா
மாற்கழு மாகிநின் முர்மாதை நாதர்வலங் கொள்பம்பை
மேற்கரை க்காயில்கொண் டார்புரஞ்சீறிய வெங்கணைக்கே.

எனவருவதே இவற்றிற்குச் சான்றாகக்கொள்ளத்தக்கது.

பின்புலவர்கள், "தெண்ணீர்வயற்றொண்டை நன்னாடு சான்றோருடைத்து" என ஔவைப்பிராட்டியார் அமுதவாக்காற் பாடல்பெற்றுள்ள அந்தமிழ்நாடாகிய தொண்டைநாட்டையடைவானெண்ணிவருகையில், இடையிலுள்ள "நாங்கூர்" எனனும் க்ஷேத்திரத்தைக்கிட்டினார்கள். அக்காலிருவருக்கும் பசிநோய் வருத்தலால், அத்தலப்பெருமானைக்குறித்து முடவர்,

"தேங்குபுகழ் நாங்கூர்ச் சிவனேயல் லாளியப்பா
நாங்கள் பசித்திருக்கை ஞாயமோ"—

என்றோதினர். உடனே குருடர்,

போங்காணும்
"கூறுசங்கு தோல்முரசு கொட்டோசை யல்லாமற்
சோறுகண்ட மூளியார் சொல்."

என்றோதினர். இப்படியிருவரும் பாடியவளவில் அப்பெருமான் அருள்சுரந்து ஓரந்தணவடிவாய்வந்து பொதிசோறளித்தருள, அதனை இவர்களுண்டுகளித்து அப்பெருமான்மீதும் ஓர்பிரபந்தம்பாடி அருள்பெற்று அங்குநின்றும் நீங்கித்தொண்டைநாடென்னும் உருவமைந்த பெண்ணிற கொளியமைந்தவதனம்போல் விளங்கும், ஸ்ரீ காஞ்சிமாநகரத்தையடைந்து "ஏகாம்பர" நாதரைக்குறித்தோர் கலம்பகம்பாடியரங்கேற்றி, அத்தலம சிறந்தவற்றினுஞ் சிறந்தனவான கச்சபாலயம், திருவேகம்பம், திருமயானம், திருக்காயாரோகணம், மகாகாளேசம், திருமேற்றளி, அனேகபேசம், கடம்பை, பணாதரேசம், மணீசம், வராகேசம், சுரகரீசம், பரசுராமேசம், வீரட்டகாசம், வேதநூபுரம், உருத்திரர்கா, இந்திராலயம், சதுர்முகசங்கமம், திருமாற்பேறு, திருவோத்தூர் என்னும் இத்திருப்பதிகள் இருபதுடை

---

* ஆற்குழை—ஆலந்தளிர்.

யதாயும், "காமகோட்டமும், குமரகோட்டமும்" விஷ்ணுவாலயங்க ளும் உடையதாயும் விளங்கலின், அத்தலத்தை நீங்கற்கருமையாய்ச் சிலகாலம் வசித்திருந்தனர். அக்காலேயில் சிவபிரான் திருவிழா நடக்கையில் பவனிவரும்போது அப்பவனியைச்சிறப்பித்து "ஏகாம் பரநாதருலா" எனவோர் பிரபந்தம்பாடினார்கள். அதையரங்கேற்று கையில், விநாயகர் துதியெடுத்து.

> " சாற்றிய வாயிரக்கான் மண்டபத்தின் சார்வாக
> வேற்ற மூடனே யினிதிருந்து—போற்றும்
> விறல்விகட சக்ர விநாயகனை யேத்துந்
> திறல்விகட சக்ரா யுதம்."

எனக்கூற, அரசனும், அங்குவந்திருந்த சபையோர்யாவரும், ஆயிரக் கான்மண்டபமும், விகடசக்ரவிநாயகரும் இங்கில்லேயேயென, அதற்கி வர்கள் நாமும் அறியோம் அவலுப பொய்சொல்லார் எனக்கூறி அவ்விரண்டும் வெளிப்படுங்கால் அரங்கேற்றுவோமென்று மீண்டும், தென்றிசையாய்ச் செல்லும்வழியில்; மாங்காடென்னு ஊரின்கணு ள்ள ஓர் வேளாள் தன்பெண்ணை மாப்பிள்ளையினூர்க்கு அழைத்து க்கொண்டு செல்லுமிடையில் காடடர்ந்துள்ளவிடத்தில் மகளொடு கலந்து நிற்றலேக்கண்டு இரட்டையரில் முடவர் வியந்து,

> " மாங்காட்டு வேளான் மகளை மருமகன்பாற்
> போங்காட்டி லின்பம் புணர்ந்தானே"—

என்று கூறக்கேட்ட குருடர், விஷயத்தையறிந்து தக்கணமே மிகு ந்த சமத்காரமாக,

ஆங்காணும்

> " மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
> சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு."

எனமுடித்தனர். இங்ஙனம் வழியைக்கடந்து சென்று அங்குகனிக ளுயுள்ள 'ஓமளநாத'னென்னும், வேளாளனிடஞ்சென்றார்கள். அவ னிவர்களைக் காண்டலும் பெரும்புலவர்களென் றறிந்திருந்தும், தன தைசுவரிய கருவத்தனல் சற்றுமதியாதுகிப் பலவாறுவைது வெ ளியிற்றுரத்த, அவனது அயல்வீட்டுக்காரனும் அங்ஙனமே சற்று

மதியாது சிற, இப்புலவர்கள் மனம்வருந்தி வீதிக்கண்வந்து இருவரு ளொருவர்,

" ஒருகாவித் தண்டலம்வா ழோமனா தன்வீ
டிருகாலும் பற்றி யெரிக.''—

என்றோதினர். இது கேட்டமற்றொருவர்,

அருகாருங்
" கம்பத் தான்வீடுங் கலந்தெரிக மற்றிவர்கள்
சம்பத்தெல் லாமொழியத் தான்''

எனவோதி அப்பாற்சென்றார்கள். உடனேயவ்விருவர்வீடுந் தற் செயலாய்த்தீப்பற்றிச் சகலசெல்வத்தோடு மழிந்தன.

அவணின்றப்பாற்சென்ற புலவர்கள், பாண்டியதேசத்தினை நோக்கித் "திருநெல்வேலிக்குச்"சென்றார்கள். அங்கேமூங்கிற்காடு நெருங்கிமேலே தழைபடர்ந்து, வழியுங்குறுகியிருக்கின்ற விடத்தே தினந்தோறும் பாற்குடங்கொண்டுசெல்லும் ஓரிடையன், அடியிற் சிவலிங்கமிருப்பதையறியாது செல்ல, அங்குவரும்போதெல்லாம பாற்குடமிடறிப் பால் சிதருண்டுவருதலை ஒருநாள் அவ்விடையன் கோபங்கொண்டு அவ்விடத்தைக் கோடரியால் வெட்டத்துணிய, அதை முடவராகிய புலவர்கண்டு,

" வேயீன்ற முத்தர்தமை வெட்டினு னோரிடையன்
றாயீன்ற மேனி தயங்கவே"—

எனப்பாட, அதைக்கேட்ட குருடராகிய புலவர்,

நேயாகே
"ளெத்தனை நாளென்றே யிடறுவான் பாற்குடத்தை
யத்தனையும் வேண்டு மவர்க்கு."

எனப்பாடி முடித்துச்சென்றார்கள். இதனையவ்வூரின்கணுள்ளாரறிதலும், இவர்கள் வாக்குவிசேடத்தால் அவர்களுக்குச் சிவபுண்ணியத்திற் சிந்தைசெல்ல, அக்காலத்தரசாண்டிருந்த பாண்டியராசனைக்கொண்டு அச்சிவலிங்கப்பெருமானுக்கோர் ஆலயம்புதுக்கி நித்தியநைமித்தியங்கள் நடத்திவருவதானார்கள். பின், புலவர்கள் "திருவாலவா'' யென்னும் மதுரைமாநகரமடைந்து சோமசுந்தரக்கடவுளைத் தரிசிக்

கக்கருதிப் பொற்றாமரைத் தடத்துட்சென்று, முடவர்மேற்படித் துறையிலிருக்கக் குருடர் கீழ்ப்படித்துறையிலிருந்து தங்கள் வஸ்திரத்தைத் துவைப்பாராயினர். அக்காலவ்வஸ்த்திரம் அலசியெடுத்துச் சேர்த்துப் பிழியுஞ் சமயத்தில், தற்செயலாய் அவர்கையினின்று நழுவிநீரில்விழுந்தமிழ, அது கண்டமுடவர்,

" அப்பிலே தோய்த்திட் டடுத்தடுத்து நாமதனைத்
தப்பினு னம்மையது தப்பாதோ"—

என்றோதிப் பரிகசித்தனர். அது கேட்ட குருடர்வெட்கி,
அப்படியே

" யானாலுங் கந்தை யதினுமோ ராயிரங்கண்
போனான் மயிர்போச்சுப் போ"

என்றோதிமீண்டனர். அப்போது முடவர் சற்றுவருந்தி,

" கண்ணா யிரமுடைய கந்தையே யானாலுந்
தண்ணார் குளிரையுடன் றாங்காதோ."—

எனக்கூறினர், அதுகேட்ட குருடர்,

(தொடரும்)

சி. கு. நாராயணசாமிமுதலியார்,
கோ-வை.

---

௨

# கலிங்கத்துப்பரணியாராய்ச்சி.

(முற்றொடர்ச்சி)

## காடுபாடியது.

௧௭-வது தாழிசை.

சிதைந்தவுடற் சுடுசுடலைப் பொறியைச் சூறை
சிரத்தடிப்பச் சிதறியவப் பொறியார் செம்மை
புதைந்ததனிற் புகைபோர்த்த தழலே போலும்
போலாவேற் பொடிமூடி தழலே போலும்.

என்பது,

> சிதைந்தவுடற் சுடுசுடலைப் பொடியைச் சூறை
> சீத்தடிப்பச் சிதறியவப் பொடியாற் செம்மை
> புதைந்தமணி புகைபோர்த்த தழலே போலும்
> போலாவேற் பொடிமூடு தழலே போலும்.

எனக் காணப்படுகின்றது. முன்னதற்குப் பொருள்புலப்பட லரிதாகலானும், இறந்த பிரேதகணத்தின் சாம்பற்பொடியை, சூறைக்காற்று, அடியோடுகிளப்ப, அப்பொடியாற் றனது செம்மையான நிறம் மூடப்பட்டரத்னங்கள், புகைபோர்த்த தழல்போலவும் நீறுபூத்தநெருப்புப்போலவும் விளங்கின என்னும் பொருட்சிறப்புடைமையானும் பின்னையதே சுத்தமெனக.

## ௬-ம் தாழிசை.

> அறிஞர் தம்பிரா னபயன்வாரண
> மரசர் மண்டலத் தரண றப்பறித்
> தெறித ரும்பெருங் கருணை யம்புகொண்
> டெழுது மெனைத் தாமி யற்றியே.

என்பதில், "எறிதரும்பெருங்கருணை யம்புகொண்டு" என்பது— "எறிதரும்பெருங் கணைமரங்கள்கொண்டு" எனக்காணப்படுகின்றது. யுத்தத்திற்பட்ட பொருள்கள்கொண்டு இயற்றப்பட்ட காளிகோட்டத்தைக் கவிபுனைந்து வருணிக்கின்றாராதலானும், "கருணையம்புகொண்டு" என்பதற்குப்பொருட்பொருத்தமும் சமயப்பொருத்தமுமின்மையானும் பின்னையதே பாடமென்க. கணைமரம் - யுத்தக்களத்தில் யானைவராமற்றடுக்குமரம்.

## எ-ம் தாழிசை.

> துங்க பத்திரைச் செங்க ளத்திடைச்
> சோள சேகரன் வாளெ றிந்தபோர்
> வெங்க தக்களிற் றின்க டத்தி னால்
> வெளிய டங்கவே மிசைக வித்தவே.

என்னுஞ் செய்யுளில், "வெங்கதக்களிற்றின்கடத்தினால்" என்பது— "வெங்கடக்களிற்றின்படத்தினால்" எனக்காணப்படுகின்றது. களிற்

றின் கடத்தால், விதானங்கவித்தல் கூடாமையின் 'களிற்றின்படத்தி னால்' என்பதே பொருந்தும்.

௨௦-ம் தாழிசை.

படை வலங்கொடு பசுந்தலை யிடங்கொடணைவார்
இடைமொழிந்திடை நுடங்கவரும் யோகினிகளே.

எனும்பாட்டில், "இடைமொழிந்திடை நுடங்கவரும் யோகினிகளே" என்பது-"உடையொழிந்திடை நுடங்கவரும் யோகினிகளே" எனக்காணப்படுகின்றது. "இடைமொழிந்திடை நுடங்கவரு" மென்பதினும், இப்பாடம் யோகினிகளதியல்பை நன்குவிளக்குதல் காண்க.

## ௫. தேவியைப்பாடியது.

[இது "காளிநிலை" என்று காணப்படும்.]

௨-ம் தாழிசை.

ஒருமலை மத்துவலத் துலவு கயிற்றினுமற்
றுலகு பரித்தபணத் துரக வடத்தினுமப்
பருமணி முத்துநிரைத் துமெணி தைத்தவினைப்
பரிபுரம் வைத்ததளிர்ப் பதயுக ளத்தினளே.

என்னும் செய்யுளில் முதலிரண்டடியும் "ஒருமணி மத்துவலித் துலவுகயிற்றினுமற் - றுலகு பரித்தபணத் துரக படத்தினுமப் - பருமணிமுத்தநிரைத்து" எனக்காணப்படுகிறது. வாசுகியிடத்தும், ஆதிசேடனிடத்துமுள்ள ஜீவரத்னங்களாகியமுத்தை அரியாகப்பெய்த பரிபுரமென்பது கருத்தாகலின், 'உரகவடம்' என்றல்வேண்டாமையும் 'மத்துவலத்' தென்பதினும், 'மத்துவலித்' தென்பதேசிறந்ததாதலும் கண்டுகொள்க. அரி - காற்சிலம்பின்மணிகளினுள்ள பருக்கைக்கல்.

௩-ம் தாழிசை.

அருமறை யொத்தகுலத் தருணெறி யொத்தகுணத்
தபைய னுதித்தகுலத் துபய குலத்துமுதற்
றிருமறை யொக்குமெனத் தினகர னொக்குமெனத்
திகழ்வத னத்தினிடைத் திலக வனப்பினளே.

என்னுந் தாழிசையில், "அருமறையொத்த.........அபயன்" என்பது, "அருமறையொத்துலகத் தருணெறி யுய்த்தகுணத் தபையன்" எனக்காணப்படுகின்றது. இப்பாடம், முன்னையதினும் மிகச்சிறத்தல் உய்த்துணர்க.

௧௧-ம் தாழிசைக்கும், "அண்டமுறு" என்னும் ௧௨-ம் தாழிசைக்குமிடையில்,

" ஓங்காரத் துட்பொருளா யொருவாது நடத்தானை
நீங்காம னின்றானை யெவ்வண்ணம் நிகழ்த்துவாம்.

என்னும் பாட்டுக்காணப்படுகின்றது. இப்பாட்டினின்றியமையாமை, இதன் பின்வரும் பாடல்களை நோக்குமிடத்து விளங்கும்.

## ௬. பேய்களைப்பாடியது.

[இது "கழுதுநிலை" என்று காணப்படும்.]

௧௧-ம் தாழிசை,

துஞ்ச லுக்கணித் தாமென முன்னமே
சொன்ன சொன்ன துறைதொறும் பேயெலா
மஞ்ச வித்தொரு காலக லாமலவ்
வணங்கி னுக்கரு கார விருக்கவே,

என்பது,

துஞ்ச லுக்சணித் தாயின மென்பது
சொல்ல வஞ்சியச் சொல்லிய பேயெலா
மஞ்ச வித்தொரு காலக லாமனின்
றவ்வ ணங்கி னருகே யிருக்கவே.

இது, முன்னையதினும் சிறந்ததாகல் காண்க.

௧௬-ம் தாழிசை.

ஆனைசாய வடிபரி யொன்றுகைத்
தத்தடைப்பரு வத்தப யன்பொருஉஞ்
சேனை வீரர்நின் முர்த்திடு மார்பினிற்
றிமிரி வெங்களத் திற்செவி டானவும்.

என்னும் பாட்டில், 'அத்தலைப்பருவத்தபயன் பொரூஉஞ் சேனை வீரர்' என்பது, "ஐம்படைப்பருவத்தபயன் பெறுஞ்சேனைவீரர்" எனக்காணப்படுகின்றது. 'அத்தலைப்பருவ மென்பதினும் ஐம்படைப்பருவமென்பது மிகச்சிறத்தல்காண்க. இப்பாட்டிற்கூறிய சேனைவீரர் அபயனைச்சார்ந்தவரென்பது, அவரார்ப்பாற் சில பேய்கள் செவிடானமை கூறுதலான் விளக்கமாதலின், அபயன் பொரூஉஞ் சேனைவீரர் என்னுங் கவர்பொருட்டொடரினும், அவன்பெற்றசேனைவீரர் என்னும்பொருள்கொண்ட பின்னையபாடமே பாடமென்க.

இன்னும், காடுபாடியது, ௧௯-ல் "மேன்மேற்பொடித்த வியர்ப்புள்ளிகளே" என்பது, "மெய்மேற்பொடித்த" எனவும், கோயில் பாடியது, ௫- ல் 'பழுவயானையின்' என்பது 'பருமயானையின்' எனவும், ஷை ௯-ல் 'ஓரிரண்டு கீழ்நாட்டி' என்பது 'ஓரிரண்டு காணுட்டி' எனவும், ஷை ௧௪-ல் "சொல்லரிய வோமத்தீ" என்பது "சொல்லரியவீமத்தீ" எனவும், ஷை ௧௮-ல் 'பசுங்குருதியின்றுதலைவீ' என்பது "கொண்டுதலைவீ" எனவும், ஷை ௨௧-ல் "வீங்குதலை நெடுங்கழிபின்" என்பது, "வீங்குதலை நெடுங்கழையின்" எனவும், 'சுழற்கட் குர்ப்பேய்' என்பது "சுழல்கட் குறற்பேய்" எனவும், ஷை ௨௩-ல் "குழவிக்கு, நல்வாய்ச்செய்யதசைதேடி" என்பது, "நல்வாய்செய்யத் தசைதேடி" எனவும், தேவியைப்பாடியது ௪-ம் பாட்டில், "அரவொருதிக்கயமெப்பொழு" தெனவும், ஷை ௬-ல் 'கரடதடக்கடவுள்' என்பது 'கரடதடக்கவுளக்' எனவும், 'விட்டபரித்திறலவ' னென்பது, 'விட்டவரித்திறலவ' னெனவும் காணப்படுகின்றன.

இவற்றிற் சிலபாடங்கள் மிகச்சிறந்தும் சில ஒத்தபாடமாகவும், சில ஓசைநய முதலியவுடையனவாகவும் இருத்தல் நோக்கிக் கொள்க.

(தொடரும்)

பத்திராசிரியர்.

# சாதுரிய வசனங்கள்.

ஸ்ரீமத்-மு. ரா. அருணுசலக்கவிராயர் அவர்கள் பலப் பல வித்வான்கள் சமயம் நேர்ந்துழியெல்லாம் கூறிய விநோத வார்த்தைகளைத்திரட்டி செந்தமிழ் 5, 6, தொகுதிகளில் ஒருவாறு எழுதிவிடுத்தனர். அவர்களைப்பின்பற்றி ஸ்ரீமத்-சேதுராமையர் அவர்களும், சிற்சிலருடைய சாதுரியவசனங்களை யெடுத்தெழுதி விடுத்தனர். அவர்கள் எடுத்த முயற்சி பலராலும்புகழத்தக்கதே. அப்படிப்பட்ட வார்த்தைகளெல்லாம் பொன்ரு வண்ணம் அவர்கள் சொற்றவண்ணமே யானும் அடியில்வரும் வசனங்களை எழுதுகின்றேன்.

1. வையாபுரிநாடென்று வையம்புகழும் பழனுபுரியில் சுமார் 30-வருடங்களுக்குமுன்னர் பிரசித்திபெற்றிருந்த ஸ்ரீமத்-மாம்பழக் கவிச்சிங்கநாவலரவர்கள் ஒருமுறை மதுரைஜில்லா இராமநாதபுரத்தில் கியாதிபெற்றிருந்த கவியுகவள்ளல் என்னும் ஸ்ரீலஸ்ரீ:பொன்னுசாமித்தேவரவர்களிடம் சென்று சிலநாள் தங்கியிருந்தனர். தேவரவர்களும நாவலரவர்களும் அத்தியந்தநேசத்தையுடையவர்கள். அப்படியிருக்கும் நாட்களில் ஒருநாள் தேவரவர்கள் கவிராயரைத் தம் அரண்மனையில் எண்ணெய் தேய்த்துக்கொள்ளும்படி சொல்லித் தம் அரண்மனையில் வழக்கமாக எண்ணெய்தேய்க்கும் மல்லகசெட்டிக்கு உத்தரவுசெய்தார்கள். மல்லகசெட்டி, கவிராயருக்கு எண்ணெய் தேய்க்கச்சென்று கவிராயரிடம் தெரிவித்துத்தேய்க்க ஆரம்பிக்கும் சமயத்தில் ஷை மல்லகசெட்டியைக் கவிராயர்பார்த்து, "நீ எனக்கு எண்ணெய்தேய்க்க உன்னுடைய இரண்டு கைகள் பற்ருது" உன்னுடைய எஜமானராகிய தேவரவர்களிடம் சொல்லிவிட்டுவா என்று அனுப்பினுர். உடனே மேற்படி மல்லகசெட்டிபோய் "மஹாராஜாவே, கவிராயருக்கு எண்ணெய் தேய்க்கப்போனபோது, அவர் இரண்டுகைபற்ருது என்று சொல்கிருர்" என்று விண்ணப்பித்தான். மஹாராஜாவானவர் நுண்ணறிவும் சாமர்த்தியமுமுள்ள பிரபலவித்வானுகையால் அதிக சந்தோஷப்பட்டு அந்த மல்லகசெட்டியைவிளித்து "பலகை" எடுத்துக்கொண்டுபோய்க் கவிராயருக்குக்கொடுக்கும்படி ஆஞ்ஞாபித்தார். இதுவன்ரே வித்வான்களுடைய சாமர்த்தி

யம் (பலகை என்பது பலகைக்கும் பல கைகளுக்கும் பொருந்துவது கவனிக்கத்தக்கது.)

2. ஓர்காலத்தில் பிரபலவித்வானொருவர் சீட்டுக்கவியொன்று எழுதிக்கொண்டு தியாகம்பெறும் ஆசை மீதூர ஒரு ஜமீன்தாரிடம் சென்றனர். ஜமீன்தாரவர்கள் சீட்டுக்கவியைக்கேட்டு அகமிக மகிழ்ந்து புலவர்க்குத் தியாகங்கொடுக்கக்கருதி ஒரு வெள்ளித்தட்டில் கறுப்புநிறம் பொருந்திய பட்டுச்சால்வையொன்றும் வைத்து அதன்மேல் ரூபா 50-வைத்துப் புலவரிடம் கொண்டுவந்தார். சன்மானம்செய்தது புலவர்க்குத் திருப்திகரமாக இல்லை. இன்னும் அதிகமாய்ப் பெறவேண்டுமென்னும் கருத்துட்கொண்டு "இதென்ன காரித்துப்பட்டா" என்றுகூறினர். உடனே ஜமீன்தாரவர்கள் புலவருடைய சாதுரியத்தை அறிந்து தக்கபடி சன்மானம் செய்தார்கள். (காரித்துப்பட்டா என்பது கறுப்புச்சால்வைக்கும் காரித்துப்புதல் என்ற அசங்கியமான செய்கைக்கும் ஆவதைக்கவனிக்க.)

3. ஒரு ஊரில் இலக்கண வித்வானொருவனும், இலக்கணந்தெரியாத வித்வானொருவனும் இருந்தார்கள். இன்னும் இலக்கணந்தெரியாத அநேக வித்வான்களும் அவ்வூரில் இருந்தார்கள்.

"எழுத்தறியார் கல்விப் பெருக்கமனைத்தும்
எழுத்தறிவார்க் காணின் இலையாம்"

என்ற நீதிநெறிவிளக்க வாக்கியத்தின்படி அவ்விலக்கண வித்வானைக் கண்டால் ஏனையவித்வான்களுக்கெல்லாம் நடுக்கந்தான். அப்படியிருக்க இலக்கணந்தெரியாத வித்வான்களிலொருவர் ஒரு செல்வன் பேரில் பிரபந்தம் ஒன்று இயற்றி, அச்செல்வன் வீட்டில் பிரபந்தத்தை அரங்கேற்ற நிச்சயித்துக் குறித்தநாளில் ஒரு சேவகனைக் காவல்வைத்து இலக்கணவித்வானை உள்ளேவிடக்கூடாதுஎன்று திட்டம் செய்து பிரபந்தம் அரங்கேற்றுதல் நடத்திக்கொண்டிருந்தார். இலக்கண வித்வான் இந்தச்சமாசாரம் எப்படியோ தெரிந்து மாறுவேடம்புனைந்து உள்ளேநுழைந்து வாளாவிருந்தனர். அப்பிரபந்தத்தில் ஓரிடத்தில், "வீதியெல்லாம் மாடஞ்சிறந்திட" என்ற வாக்கியத்தை யுள்ளிட்டகவியை வாசித்துப்பொருள் கூறிவரும்பொழுது இலக்க

ணவித்வான் எழுந்து, "ஐயா, இப்பாட்டுடைத்தலைவனுக்கு வீதியெல்லாம் மாடு அஞ்சு இறந்திட்டால் வாழ்வதெப்படி" என்று கூறினார். உடனே பிரபந்த வித்வான் ஏட்டைக்கட்டிவிட்டுச் சும்மா இருந்துவிட்டார். பிறகு எல்லாரும் கேட்டுக்கொண்டதன்மேல் இலக்கண வித்வான், "வீதிதோறும் பொன்மாடம் விளங்கிட" என்று திருத்திக்கொடுக்க அரங்கேற்றி முடித்தனர். (வீதியெல்லாம் மாடஞ்சிறந்திட - வீதியெல்லாம் மாடு அஞ்சு இறந்திட என்று பிரிக்கலாம் என்பதைக் கவனிக்க.)

(தொடரும்.)

இங்ஙனம்,

துடிசை. அ. சிதம்பரம்.

---

ஸ்ரீ:

# நுண்பொருண்மாலை.

(முற்றொடர்ச்சி)

௩௩அ. குடம்பைதனித்......நட்பு.

நு - லை:—நட்பென்பது ஈண்டுக் குறிப்புமொழியாய் நட்பின்றிப் போதலுணர்த்திநின்றது; "கற்கறித்து நன்கட்டாய்" என்பதுமது.

௩௫௧. பொருளல்லவற்றை......பிறப்பு.

நு - லை:—மாணாப்பிறப்பு—இன்பமில்லாப்பிறப்பு; நால்வகைப் பிறப்பு—நரகர், விலங்கு, மக்கள், தேவர்; இவற்றை வடநூலார் தேவர் மக்கள் திரியக்கு ஸ்தாவரம் என வேறோதுவர்.

௩௫௨. இருணீங்கியின்பம்......யவர்க்கு.

நு - லை:—நீங்கி எனத் தொடைநோக்கி மெலிந்தது. நச்சினார்க்கினியரும், பெரும்பாணாற்றுப்படையுள், (அடி-௩எ௨-௩) "காந்தளஞ்சிலம்பிற் களிறுகிடந்தாங்குப்,பாம்பணைப்பள்ளியமர்ந்தோன்" என்பதற்குக், காந்தளென்பதற்கேற்பப் "பாம்பணை" என மெலித்த

னரென்றுரென்க. * பிறப்பினை நீக்கி எனப் பிறவினையாக்கியது காண்க. நீங்க என்பதன் றிரிபெனினும் அமையும்.

௩௫௯. சார்புணர்ந்து......நோய்.

நு - லை:—அழித்துச் சார என இயையும். "ஓர்த்துள்ளம்" (௩௫௭) என்பதனுள், "ஒருதலையா ஓர்த்து" என்பதுமது. சஞ்சித மாகாமியங்கள் கெடுமென்பதும், பிராரத்துவங் கெடாதென்பதுங் காண்க.

௩௭௨. "பேதைப்படுக்கு.....முற்றக்கடை.

நு - லை:—உற்றக்கடையென்பது முன்னுங் கூட்டப்பட்டது. )ழவூழ் ஆகலூழ் என இரண்டும் வேற்றுமைத்தொகை. "வேற்றுமைத்தொகை" என்றது; இழத்தற்கேதுவாகிய ஊழ், ஆதற்கேதுவாகிய ஊழ் என நான்காம் வேற்றுமைத் தொகையை.

௩௭௩. "நுண்ணிய..........மிகும்."

நு - லை:—மற்றும்-பின்னும், பொருளது நுண்மைதான்மேலே ்றப்பட்டது. உண்மையறிவு—ஊழாகிய பேதைமையுணர்வு.

௩௭௫. "நல்லவை........செயற்கு."

நு - லை:—ஊழ் அதிகாரத்தால் வந்தது. இது வருத்துக்கொண்ட வதிகாரமென்க. அன்றியு முற்கவியிலொன்றதிகாரப் பட்டால் அது பிற்கவிக்கு வருவதுமாம். எல்லாஅமென வளபெடுத்துச் சொல்லுக.

௩௭௬. "பரியினு........போகாதம"

நு - லை:—பால்-ஊழ்; அஃததிகாரவரவிலொரு பொருட்கிளவியுட்காண்க.

௩௭௭. "வகுத்தான்........துய்த்தலரிது."

---

* "கூம்பலங்கைத்தலத்து" என்னும் (௧௧) திருக்கோவையாரிற் "பாம்பலங்காரப்பரன்" என்பதற்குப் பேராசிரியரும் இவ்வாறே உரைத்தார்.

ஞு - லே:—"இசைத்தலு முரிய வேறிடத் தான." (தொல். சொல்-௬௦.) என்னுஞ் சூத்திரத்துள், வேறுவாய்பாடென்றுரைத் துக் காலமுலகமென்பவைக்குக் காலன்கொண்டான், உலகத்தார்பசி த்தாரெனக்காட்டியதாற் றெய்வமென்பதற்கு வகுத்தானென உயர் திணையாய் முழுதும் வேறுபட்டது.

௩௭௮ "துறப்பார்மற்........கழியுமெனின்."

ஞு - லே:—துறப்பார் ஆரீற்றெதிர்காலமுற்று வினைச்சொல். அஃ தொரு தொழிற்சொல்லே தன்னெச்சப்பொருள்கொண்டு முடியும் அது பெயராகிய வெழுவாயாதலும் வேற்றுமையேற்றலும் பெறுமெ ன்க; அது 'களித்தானை' 'குளித்தானை' (திருக்-௯௨௯.) "இரப்பார்க் கொன்றீவார் மேனிற்கும் புகழ்" (ஷை-௨௩௨.) எனவரும்.

௩௮௦. "ஊழிற்பெருவலி........முந்துறும்."

ஞு - லே:—பெருவலி-பெருவலியையுடையன; பண்புத்தொகை ப்புறத்துவந்த வன்மொழித்தொகையென்னு ஆகுபெயரென்றார். "பாயிரும்பனிக்கட" லென்னும்பரிபாட்டினுட், "கயந்தலைக்கும்." பண்புத்தொகைப் புறத்துவந்த அன்மொழி; ஈண்டாகுபெயரென்றார் இவ்வுரையாசிரியர். முன்னர், கனங்குழைக்கும் (ஷை-௧௦௮௧.) இவ் வாறுரைத்தார். இனித்"தொடலைக்குறுந்தொடி"(ஷை-௧௧௩௫.)என் பதனை உவமைத்தொகைப் புறத்துவந்த அன்மொழித்தொகையெ ன்றாராதலால், "ஐம்பா லறியும் பண்புதொகு மொழியு, மெய்யொ ருங் கியலுந் தொழிற்றொகு மொழியும்" மென்னுஞ்சூத்திரவிதியாற் பண்புத்தொகை வினைத்தொகைகளை யொருமொழியாக்கி யஃதாகு பெயராய் வருமெனவும், "முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலு, மிருமொழிமேலு மொருங் குடனிலையலு, மம்மொழி நிலை யா தன்மொழி நிலையலும்" (தொல், சொல், ௩௮௮.) என்னுநிய மவிதியாற்றொகை நிலைத்தொடர் மொழியாகிய இருமொழிக்கணன்றி ஒருமொழிக்கண் அன்மொழித்தொகை வாராதெனவுங் கொள்வது இவ்வுரையாசிரியர் கருத்துப்போலும். இனிப்பண்புத்தொகை வினை த்தொகைகளின் புறத்து அன்மொழிவருமென்னுஞ் சூத்திரத்திற் கெவ்வாறு கொள்வரோ? எம்மனோர்க்கறிதலரிதென்க. "வேயின

மென்றோள்''(உ௮உ) என்னுங் கோவையாருட், 'பாயிணமேகலை' என்பதனை, இச்சொற்கள் ஒரு சொன்னீர்மைப்படுதலின் ஆகுபெயரெனப்படுமென்றும், "இயல்மன்னுமன்பு'' என்னுங்கோவையாருள், (௩௯௫.) மன்னுமன்பென்பதனைப் பெயரெச்சத்திற்கும் பெயர்க்குமொரு சொன்னீர்மைப்பாடுண்மையின் ஒரு சொல்லென்றும், "மாறுற்றமேனி" ஆகுபெயரென்றும் பேராசிரியருமுரைத்தார்; அவை, தொகாநிலைத் தொடர்மொழியாகலானும் ஆகுபெயரேயாகவேண்டுமென்க.

முதிராமுலை, முற்றுமுலை, உண்ணாமுலை, குடங்கையினகன்ற விழி, கைபரந்து வண்டிசைக்குங் கூந்தலென்பன முதலியனவுந் தொகாநிலைத்தொடர்மொழியாய் ஒரு சொன்னீர்மைப் பாடாய் வருதலினாகுபெயராமென்பது.

இனித், தொல்காப்பியத்துள், மக்கட்சுட்டென்பதனைப் பண்புத்தொகைப் புறத்துவந்த வன்மொழித்தொகையென்ற சேனாவரையருரைக்கு வழுக்காட்டி இருபெயரொட்டுப் பண்புத்தொகை யாகுபெயராயிற்றென்ற நச்சினார்க்கினியரும், உயர்திணை யஃறிணையென்பவற்றை வினைத்தொகை பண்புத்தொகை யாகுபெயராயினவெனக்கூறினரல்லாது, ஆகுபெயரன்மொழித்தொகை யொருசொல்லிருசொல்லென்று மாகுபெயர்க்கு மன்மொழித்தொகைக்குந் தம்முள்வேறுபாடின்ன தென்றும் வரையறைகூறிற்றிலராகையால் அவர்கருத்து எம்மனோர்க்கறிதலரிதென்க.

அறத்துப்பால் பரிமேலழகரையனுரையுள்,
இரத்தின கவிராயரெடுத்துச் சேர்த்த
"நுண்பொருண்மாலை''
முற்றிற்று.

---

## இறைமாட்சி.

முறைசெய்தென்பதனுள், இறை கடவுளாதலால் கடவுளது நற்குணநற்செய்கை.

௩௮௧. "படைகுடி.........ளபசருளேறு.

ரு - லை:—அமைச்சு நாடரண்பொருள்படை நட்பென்பது மு றையாயினு மீண்டுச்செய்யுளுேக்கிப் பிறழவைத்ததென்பது, அரசிய லின்பின் அமைச்சியலும் நாடுமரணும் பொருளும் படையு நட்பு மென அதிகாரம் வருதலாலென்க. "நெடுநீர்" (திருக்-௬0ரு.) என் பதனுட் பிறழவைத்தல் அவ்வதிகார நோக்கியென்க.

௩அ௩. "தூங்காமை.........பவற்கு."

ரு - லை:—முதற்கவிக்குண் நான்கையுங் கூட்டியதா னன்கு மெ ன்பது முற்றும்மையாகாதிறந்தது தழீஇய எச்சவும்மையாயிற்று.

௩அ௪. "அறனிழுக்கா.........முடையதரசு."

ரு - லை:—அரசு அரசனது தன்மை; உரையுட் டாழ்வின்மையை யுடையதரசென்றது, உடையா "னரசெனவுரைத்ததா"லுபசாரவ ழக்கால் அவன்மேனின்றது. "மேலுடைய தரசருளேறென்றது" "உடையானரசருளே"றென்றதா லாகுபெயராக்கா துபசாரவழக்கெ ன்றூர். இனி "ஒற்றும் வேந்தும்" "குடிமையாண்மை" (தொல்- சொல்-௫ஏ.) என்னுஞ்சூத்திரவிதியாலஃறிணைக்கண்வந்த வுயர்திணை ச்சொல். அவை "நின்றாங்கிசைத்தல்" (ஷை-ஷை-௫௧.) என்னும் விதியால் உரையுள், "வேந்தன்கொடியன்" (திருக்-௫௫௧.) "ஒற்றனு வான்" (ஷை-௫அ௪.) என்றூர்; இனியரசுமமைச்சுந்தூதுமொன்று.

௩அ௫. "இயற்றலு.........வல்லதரசு."

ரு - லை:—இயற்றல் - பொருள்வரும் வழிகளை மேன்மேலுள வாக்கல்; மற்றமூன் ...ட்பொருளை செயப்படுபொருளாக வருமாத லால், ஈட்டல் காத்தல் வகுத்தலென்பவைக்கேற்ப இயற்றலென்பதற் குஞ் செயப்படுபொருள் வருவிககப்பட்டதென்றூர். பதவுரையுள் அதனுல் வந்தவற்றை என்றதனுலறிக. இனிச்செயப்படுபொருள்வரு விப்பது, "சென்ற விடத்தாற் செலவிடா" (திருக்-௪௨௨.) "சுழலு மிசைவேண்டி" என மிகவும்வரும்.

௩௯0. "கொடையளி.........கொளி."

ரு - லை:— முறை செவ்விய கோல்போறலிற் செங்கோலென உவமையின் பெயர் பொருள் மேனின்றது. ஒளி - விளக்கு.

௩௯௧. "கற்க.........தக."

நு - லை:— அதற்கு - அக்கல்விக்கென்றதனாற் கற்பவை பன்மையொருமை மயங்காது.

௩௯௨. "எண்ணென்ப.........முயிர்க்கு."

நு - லை:— என்ப, முன்னது அஃறிணைப்பன்மைப்பெயர்; பின்னது, உயர்திணைப் பன்மை வினையாகிய முற்றுச்சொல்; "ஆதி முதலொழிய" "எழுத்தறியத் திரு" மென்னு மிரண்டு பாட்டுங் காண்க. எண்- கணிதம். எழுத்து- எழுத்துஞ் சொல்லும். எழுத்தெனவே பதனொ டொற்றுமையுடைய சொல்லுமடங்கிற் றென்றுராதலிற் பொருள் அவ்வாறு சிறந்த லல்ல வென்க.

௩௯௫. "உடையார்மு.........தவர்."

நு - லை:— ஏக்கறுதல் - ஆசையாற் றாழ்தல். கடையரென்றதனால், மறுதலைப் பெயர் வருவிக்கப்பட்ட தென்றார்; இவ்வாறுரையாத "பிறவிப் பெருங்கடற்"கு மிவ்வாறு வினவுக.

௩௯௬. "தொட்டனைத்.........மறிவு."

நு - லை:— தொட்டல்- தோண்டல். "தோட்கப்படாத செவி துளைக்கப்படாத (திருக்-௪௧௮.) ஆகலால், தொட்டலுந் தோட்டலும் வேறு.

௪0௧. "அரங்கின்றி.........கொளல்.

நு - லை:— கோட்டி கொளல்- அவையின்கணொன்றைச் சொல்லுதல்.

௪0௨. "கல்லாதான்.........பெண்காமுற்றற்று.

நு - லை:—சொற் சொல்லுதல் முதனிலைத் தொழிற் பெயர். முலை யிரண்டுமென்பது,"இனைத்தென வறிந்த சினை முதற் கிளவிக்கு, வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்." (தொல்-சொல் - ௩௩.) என்னுஞ் சூத்திர விதி.

௪0௪. "கல்லாத.........ரறிவுடையார்."

நு - லை:—ஒட்பம்- அறிவுடைமை. ஏரலெழுத்துப் போல்வது; ஏரல் - நத்து. * வட நூலார் குணாக்ஷரமென்பர்.

௪0எ. "நுண்மா.........யற்று.

நு - லை:—எழில் - எழுச்சி. "எழுச்சிய தொப்பு முருபும் வெறுப்பும்" என்னும் பொருளியற்சூத்திரத்திற் காண்க. "இல்லமிளமை யெழில் வனப்பு" என்றார் நாலடியாரில்.

௪௧0. "விலங்கொடு.........யவர்."

நு - லை:—எதிர்நிரணிறை. "சாயலு நாணு மவர் கொண்டார்" (திருக்-௧௧௮௩.) என்பது மது; நன்மையை யொத்த தீமையென்றதனாற் கொடுப்பதூஉம. (௯௨-௧௫.) இழி வறிந்துண்பான் (௯௪௬-௯௪௪.) என்பனவும் அவ்வாறும்.

௪௧௩. ',செவியுணவிற்.........கிலத்து."

நு - லை.— உணவாகிய கேள்வி யென்றுரைத்து இன்சாரியை அல்வழிக்கண்வலிந்து நின்றதென்றார். கவர் பொருட்பாடு நோக்கி. "அக்கின்ற வாமணி"யும் (திருக்கோவை-௯௮.)

௪௧௪. "கற்றிலனாயினுங்.........துணை."

நு - லை:—ஒற்கம் - தளர்ச்சி. ஊற்று - ஊன்றுகோல். ஊன்றென்னுமாகுபெயர் னகரந்திரிந்தது.

௪௧௫. "இழுக்க.........சொல்."

நு - லை:—ஊற்றாகியகோலென இருபெயரொட்டாகியது,முன்னதுபெயரானது பற்றியென்க. இயங்குவார்க்குக் காவற்சாகாடுகைப்பார்க்கெனவுரைத்ததற்கு அவாய் நிலையால் வந்தவுவமையடையால் வருவிக்கப்பட்டது. பொருளடைகாவற் சாகாடுகைப்பார்.

௪௧௬. "நுண்ணிய...............லரிது."

---

* இதனால் நீர் மேலெழுத்தென்பது பாடமல்லாமையும் கல்லாதானொட்பத்துக்கு உவமை யாகாமையும் தெள்ளிதி னுணரப்படும்.

நு - லை:—அல்லாரென்றாரிவ்வுரையாசிரியர் நச்சினார்க்கினியார், அல்லாலெனவினையெச்சக்குறிப்பாக்கினார். பொருளினுண்மைகேள் விமேலேற்றினார்.

௪௨0. "செவியிற்..............வாழினுமென்."

நு - லை:—குணவலங்காரம் பத்துஞ்சொற்சுவை. "வீர மச்சமி ழிப்பொடு வியப்புக் காம மவல முருத்திர நகை சாந்தம் பொருட் சுவை." கைப்பு காழ்ப்பு புளிப்பு உவர்ப்பு துவர்ப்பு தித்திப்பு அறு சுவை.

௪௨௪. "எண்பொருள............தறிவு."

நு - லை:—எண்மை - எளிமை. செல்லச்செல்ல மனங்கொளச் சொல்லல். காண்பவனறிவுடைய னென்றுமையால் உடையவன் றொழி லறிவின்மே லேற்றப்பட்டது.

௪௩0. "அறிவுடையா..............மிலர்."

நு - லை:—என்னெனும் ம்மைசெய்யுட்டொடை காரணமாக விகாரத்தாற்றொக்கது. என்னும் "பயன்றாக்காதியார்க்கும் வரை யா" தென்பது மிப்பொருட்டு.

௪௩௮. "பற்றுள்ள............றன்று."

நு - லை:—எவற்றுள்ளு மெற்றுள்ளுமெனச் செய்யுட்டொடையு மடிப்பாடு நோக்கியிடைக் குறைந்தது. இவறன்மை, இவறற்றன் மை, காதன்மையும் வள்ளன்மையுமவ்வாறாம்.

௪௪௨. "உற்றநோப்............கொளல்."

நு - லை:—பெற்றி - தன்மை. இங்கிதம்-குறிப்பாணிகழுமுறுப பின்றொழில். ஆகாரங்குறிப்பின்றி நிகழும் வேறுபாடுகள்.

௪௪௮. "இடிப்பாரை..................கெடும்."

நு - லை:—இல்லாதவேமராவென்பன பெயரெச்சவடுக்கு, "மூவா முதலாவுலக" மென்பது மது. (சிந்தாமணி)

௪௫௧. "சிற்றினை.................... விடும்.

ரு - லை:—பெருமை - பெரியோரியல்பு. சிறுமை - சிறியோரியல்பு. பெரியோரஞ்சுவரென்றது, பெருமையஞ்சு மென்றதனுற பொருளின் றொழில் பண்பின்மேனின்றது. "பணியுமாம்" (திருக்-கசஅ.) அற்ற மறைக்குமென்பனவுமவ்வாறும். இதற்கு மறுதலை "யாகாறள விட்டிதாயினு" மெனபதனு னளவிட்டிதாயினுமெனப் பண்பின்றொழில் பொருண்மேனின்றது. பண்பின்மே னிற்குங்கா லாகாற்றள வென்னவொற்று மிகும்.

சருஎ. "மனநல..........தரும்."

ரு - லை:—தருமென்னுமிடவழுவமைதிச் சொல்முன்னுங் கூட்டப்பட்டது.

சருஅ. "மனநல........புடைத்து."

ரு - லை:—"நன்குடையர் நல்வினையாற்றுமேயுடைய" ரென்றமையான், மூன்ருவது செய்யுட்டொடைகாரணமாக விகாரத்தாற் றொக்கது. மனநலஞ்செய்யப்படுபொருளாதலான் நன்கு கருவியாக ஞேக்கியென்க.

சகூ௦. "நல்லினத்தி...........மில்."

ரு - லை:—ஐந்தனுருபுறம்பொருவின்கண் வந்தது. ஊங்குமகன பது பின்னுங்கூட்டி யதனிடை நின்றவும்மைதுணையு மில்லையென மாற்றியுரைக்கப்பட்டது.

சகூகூ. "செய்தக்க..........கெடும்."

ரு - லை:—செய்தக்க செய்யத்தக்கவென்றதனுற் செய்யென் முதனிலையாகாது செயவென்னெச்சமானது. சூழ்கிடந்தவென்பது மது. "பாலொத்த நீற்றம்பலவ" னென்னுங்கோவையாருள், மண வாயென்பது அறிவு ஆண்மை பெருமையென மூவகையாற்றல் க ண்க. அவற்றுட் பெருமை பொருள் படை.

(தொடரும்.)

பத்திராசிரியர்.

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-எ] சௌமிய-ஹு வைகாசி-மீ [பகுதி-எ.

## தமிழ்ப்பழஞ்சரிதம்.

(முற்றொடர்ச்சி.)

தமிழில் ஆரியரது கலப்புக்கு முன்பே, இயல் இசை கூத்து முதலிய கலைகள் செவ்வையாக அமைந்திருந்தன. பிற்காலத்தில் அகஸ்தியர் அவற்றை ஆரியக்கலப்புப்பெறப் புனைந்தனராயினும், அதற்கு முன்பு வேறு கலப்பின்றி அவை தமிழிலிருந்தனவென்பதில் ஐயமில்லை. அகத்தியத்துக்கு முன்பு 'குமரம்' என்னும் முத்தமிழ் இலக்கணநூல் இருந்ததென்று தெரிகிறது. இக்குமரமே அகத்தியத்திற்கு முதனூலாயிருந்ததென்பதற்குக் குமரக்கடவுளைச் செந்தமிழ்ப் பரமாசாரியனெனக்கொள்ளலும், அகத்தியரைக் குமரக்கடவுளது மாணாக்கரென வழங்கலும் உற்றசான்றாகும். இனித் தமிழர் பழங்காலத்தில் நடத்திவந்த அரசியன்முறை, போர்முறை முதலிய பல செய்திகள் புறப்பொருளிலே கூறப்படும். இவற்றில் போர்முறைமட்டும் மிகுதியாக வழங்குகின்றது. தமிழரதுபோர் மாற்றரசரது ஆநிரையை வலிந்துகொள்வதினின்று தொடங்குவது. இது வெட்சியென வழங்கும். அடுத்தது கரந்தை:—அஃதாவது பகையரசன் கவர்ந்த நிரைகளை மீட்டல். இனி, வஞ்சியென்பது அதனையடுத்து நிகழ்வது; இது மாற்றரசன் பூமியைக் கைக்கொள்ளக் கருதிப் போர்க்குச்செல்லும் நிலை. தன் காவலிடத்தைப் பகையரசர் அணுகத் தன் இடத்தைக் காப்பதற்குக் காஞ்சியென்று பெயர். பகையரசர் கைப்பற்றுவண்ணம் தன் கோட்டைமதிலைக் காவல்பூண்டிருத்தற்கு நொச்சியென்று பெயர். மதிலரணை யெதிர்த்தழித்து அவர் காவலிடத்தைக் கைப்பற்றுஞ் செயல்கள் உழிஞை என

ப்பெயர்பெறும். அரசரிருவர் போர்க்களத்துக் கடும்போர்புரியும் நிலை தும்பையென வழங்கும். இவருள் வென்ற அரசன் செய்லககள் வாகையாகும். இப்புறத்திணையின் பெயர்களெல்லாம் ஒவ்வொரு பூக்களைக்குறிப்பன. போரில் அவ்வந்நிலைக்குத்தக அவ்வப்பூக்களை அடையாளமாகப் புனைந்துகொள்ளும் வழக்கம் தமிழர்க்குள் இருந்தமையால் அப்பூக்களின் பெயர்களே போர்முறைகட்கும் வழங்கலாயின. பழங்காலத்தே யுத்தவீரத்தில் தமிழர் இணையற்றவராயிருந்தனரென்பதற்கு, பழைய நூல்களில் அது மிகுதியாகச் சொல்லப்படுதலே தக்க சான்றாகின்றது. இவரது வீரம்பற்றிச்சொல்லப்படும் வழக்கங்களையெல்லாம், இங்குரைப்பின் விரியுமாதலால், அவற்றிற் பழையனவாய்ச்சிறந்த சிலவற்றைமட்டும் இங்கு குறிப்பிடுவோம்.

தமிழரசர்கள் வீரம், நியாயம், தியாகம் என்னும் மூன்று குணத்திலும் மேம்பட்டவரென்பதற்கு, அவரது முரசுகள், வீரமுரசு, நியாயமுரசு, தியாகமுரசு என மூன்று பிரிவுடையனவாக வழங்கப்படுதலே தெளிவிக்கும். பிறரை நியாய நெறிப்படுத்தற்கும், பிறர்க்கு வேண்டுவன வளித்தற்கும் வீரச்செயலே வேண்டுதலால், அஃது ஏனையவற்றினும் சிறந்ததென்பர். அரசர் போர்க்குச் செல்லும்போது புலவர்களும் பாணர்களும் கூடவே செல்வதும், யுத்தகளத்தில் பாடலாடல்களால் அவர்கள் அரசர்களையும் வீரரையும் மகிழ்விப்பதும், அப்போர்க்களத்தேயே அரசராற் பெரு வரிசைகள்பெறுவதும் போரில்வென்ற அரசர்மீது "பரணி" பாடிப் பரிசுபெறுதலும் பழைய வழக்கங்களாகும். அரசர்கள் வீரத்தைப் புலப்படுத்துவதற்கு அறிகுறியாக வீரவுடை, வென்றிமாலை, வீரவளை, வீரக்கழல் முதலியன தாங்கிநிற்பர். மேலும் வெல்லப்பட்ட அரசர் தலைகளைப்போன்று பொறித்த வீரக்கழல்களை அணிந்துகொள்வர். இவர்கள் தம் நலைநகர்களில் தம் வீரத்துக்கறிகுறியாகத் தம்மாலும் தம் போர்வீரராலும் கவலையுடன் காக்கப்படும் "காவன் மரம்" என்னும் பெயர்பெற்ற மரங்களை நாட்டிப்போற்றுவர். இக் காவன் மரங்களைப் பகைவரழியாமற் காத்தலும், பிறர் காவன் மரங் களை யழித்தலும் முற்காலத்து வீரர்களது புகழ்ச்சிக்குரிய செயல்க

ளாகக் கருதப்பட்டு வந்தன. மடிந்தவுள்ளத்தோனையும், மகப்பெருதோனையும், மயிர்குலைந்தோனையும், அடிபின் வாங்கினவனையும், படையிழந்தோனையும், ஒத்தபடைபெறாதோனையும், பிறவும் இக்தன்மையுடையாரையும் கொல்லாது விடுதலும், கூறி எச்சரித்துப் பொருதலும் இவ்வரசரது போர்வீரர்கள் கையாண்ட வழக்கங்களாகும். இவ்வீரர்களது மகளிரும் மறத்தில் மிக்கவரென்று புகழப்பட்டனர். இம்மகளிரது மக்கள் கணவர் முதலிய ஆண்மக்கள் போர்க்குச்சென்று அங்கண் வீரச்செயல்காட்டி மடியினும் அவர்களையிழந்தமைக்கு வருந்தாது அவர்களது வீரச்செயலையே நன்குமதித்து மகிழ்தலும் வீரச்செயலின் மாறுபட்ட செய்திகேட்கின் அதுபற்றித் தம்முயிரையும் விட்டொழியத்துணிந்து வருந்தலும் பழந்தமிழ் நூல்களுள் மிகுதியுங் கூறியுள்ளவாற்றால் விளங்குகின்றன. இவர் படையின், முத லிடை கடையென்னும் பகுதிகள் தூசி, இடை, கூழை எனவழங்கும். அரசர்கள் நீரரண், நிலவரண், காட்டரண், மலையரண் என்னும் நால்வகையரணுமுடையராயிருந்தனர். இவையன்றிக் கடலரணும் பழங்காலத்தே இவர்கள் உடையராயிருந்தனரென்பது, பழைய இலக்கியங்களால் அறியக்கிடந்தது. போரில் இறந்த வீரரைப் புதைக்குமிடத்தில் அவரது போர்ச்செயலை ஒரு நெடுங்கல்லிலெழுதி நட்டு, அதன்கண்ணே அவரைப்பொறித்து, மாலை பீலி முதலியன சூட்டித் தெய்வமாக வழிபாடுபுரிதல் பழைய தமிழரது வழக்கமாகும். இதனை, "வீரக்கல்" என்னும் பெயருடன் இப்போது அகப்படும் சிலைகளால் நன்றாக அறியலாகும். இச்சிலைகளிரண்டை. ஸ்ரீமத்-து. அ. கோபிநாதராயரவர்கள் அரிதிற்கண்டு "செந்தமிழ்"ல் வெளியிட்டிருத்தலைப் பலரும் அறிவர்.

(தொடரும்)

பொ. பாண்டித்துரை.

# ஒளிவீசும் ஜீவஜெந்துக்கள்.

## PHOSPHORESCENT ANIMALS.

[ஸ்ரீமத்-வே. நரசிம்மஐயங்காரவர்கள், M. A., B. L., எழுதியது.]

மின்மினிப்பூச்சியெனப் பெயர்கொண்ட ஒரு சிறுபூச்சி, இராக்காலங்களில் சிலமரங்களைச் சுற்றிக்கொண்டு கூட்டங்கூட்டமாய் ஒளிவீசுவதை நாம்யாவரும் பன்முறையும் பார்த்திருக்கிறோம். இளைஞர்கள் அவற்றைப்பிடித்துச் சிறுபெட்டிகளில் அடைத்தும், ஒளியுண்டாம்பாகத்தைத் தொட்டுப்பார்த்தும், இன்னும் வெவ்வேறுவிதமாக அதைத் தொந்தரவுசெய்வதும யாவருமறிந்தவிஷயம். எனினும், அங்ஙனம் அது ஒளிவிடுதற்குக்காரணம் யாதென்று யோசித்தாவது, பிறரைக்கேட்டாவ திருக்கமாட்டார்கள். பிறரைக்கேட்டிருப்பினும், அவர் "அது அப்படித்தானிருக்கும், அது ஈஸ்வரசிருஷ்டி" என்று விடைபகர்ந்திருப்பார்கள். அவ்வண்ணம் ஒளியுண்டாவதற்குக் காரணம் அதனுடையபின் நுனிப்பாகத்தில் "பாஸ்பரஸ்" என்ற மேற்றிசைப்பேர்கொண்டதும், "நிபாக்கினி" என்ற சுதேசப்பேர்கொண்டதுமாய ஒருவகைத் தாதுப்பொருளடங்கிய அங்கமொன்றிருப்பதினாலும், அப்பொருளுக்குத் தீயினுதவியின்றித்தானே யொளிவீசுந்திறமுள்ளதாலும், என்று கண்டறியப்பட்டிருக்கின்றது. இவ்வித சம்பவத்துக்குச் "சூடற்ற ஒளிவீசல்" எனப்பெயர் கொடுக்கலாம். மின்மினிப்பூச்சியைக் கையால் தொட்டுப்பார்த்திருப்பவர் ஒளியுண்டாமிடம் சுடாமலிருப்பதைக் கண்டிருப்பார்கள். சிலபொருள்களை மிகுந்த வெளிச்சத்தில் அதிகநேரம் போட்டுப் பின்பு அவற்றை இருட்டிற்கொண்டுபோக அப்பொருள்கள் ஒளிவீசும். அத்தகைய சக்திக்கு, பூதபௌதிக சாஸ்திரங்கற்றோர் அப்பெயர் கொடுத்தனர்.

இங்ஙனமே, தீயின் சம்மந்தமின்றி மின்மினிப்பூச்சிபோல் தாமேயொளிவீசும் உலோகங்களும், தாதுப்பொருள்களும், தாவரங்களும், ஜீவப்பிராணிகளும் பலவுள. உலோகங்களிற் பிரதானமாய் அவ்விதம் ஒளிவிடுவது அப்பிரகமாம் (Mica) அதை இரண்டுதுண்டாவுடைக்குங்கால், பிளக்கப்பட்ட பாகத்தினின்று ஒளிவரும். அத

ற்குக்காரணம் அவ்விடத்திருக்கும் மின்சாரம் இரண்டுவகையாய்ப் பிரிவதினாலேயே. இம்மாதிரியே, தண்ணீரானது பனிக்கட்டியாய் உறையும்போது ஒளிவீசுமாம் அவ்விதமே வேறுசில தாதுப்பொருள்கள் ஜலரூபத்திலிருந்து கட்டியாக அல்லது ஸ்படிகமாகமாறும்போது ஒளிவீசுகின்றன. இனி, இத்தகைய மினுமினுப்பு உயிருள்ளவற்றிலுமுண்டென்பது பின்வருவனவற்றால் விளங்கும். இச்சம்பவத்தை, தாவரங்கள் சிலவற்றுள்ளுங்காணலாமென்று முதன்முதல் கண்டுபிடித்தவள் ஒருபெண்ணாம். அவளோ, தாவரசாஸ்திரத்து மிகநிபுணரும், அச்சாஸ்திரத்தை சாஸ்திரவிதிப்படி கற்கவேண்டிய முறைகளை முதன்முதல் ஏற்படுத்தியவரும், கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டில் வசித்தவரும், ஸ்வீடன் (Sweden) தேசத்துப்பிறந்தவருமாகிய லின்னியஸ் என்பவரின் குமாரத்தியாம். தனது தகப்பனாருக்காக பற்பல செடிகளினின்றும் பூக்கள் கொய்துவருங்காலத்து, அத்தேசத்துச்சில சிகப்பு அல்லது பொன்னிறம்பெற்ற மலர்கள் தாமே ஒளிவீசுவதைக் கண்டுபிடித்துத் தன் தந்தையிடஞ் சொன்னாள். அங்ஙனமே, ப்ரஸீல், இத்தலிமுதலிய தேசத்துள்ள சில காளான்களும் ஒளிவீசுவதாக உயிர்நூற்புத்தகங்களிற் கண்டிருக்கிறது. ஆயினும், வெவ்வேறு நிறத்துடன் அற்புதமாக ஒளிவீசுவன சில ஜீவப்பிராணிகளே.

இவை வீசும் ஒளி வெவ்வேறு நிறத்தது. மின்மினிப்பூச்சி, சிலவகைப்பூரான், சிலவகைப்புழுக்கள் பசுமையாகவும், இத்தலிதேசத்துள்ள மின்மினிப்பூச்சி நீலமாயும், கடலின்மேற்புறத்தும், பாதாளத்தும வசிக்குஞ்சில ஜீவஜெந்துக்கள் நீலமும் பசுமையுங்கலந்தும ஒளிவீசுகின்றன. "திரதியின் அரைஞாண்" என்று விநோதப்பேர் பூண்டு கடலின் மேற்புறத்துவசிக்கும் ஒருமெல்லிய ஜீவப்பிராணி வீசும் ஒளிமிகச்சிவந்தது. இதன் வனப்பேவனப்பு! இதைப்பார்ப்போர் இரதிக்கேற்ற ஆபரணமென்றே மெச்சுவார்கள். இங்ஙனமே ஆங்கிலத்தில் ஸால்பா என்ற பெயர்கொண்டு கடலில்வசிக்கும் மற்றொரு ஜீவப்பிராணி வீசும் ஒளியுஞ்சிவந்தது. வேறொரு ஜீவப்பிராணி முதன்முதல் சிவப்பாயும், பின்பு நீலமாயும், அதன்பின்பு பசுமையாயும் மாற்றிமாற்றி மிகஅற்புதமாய் ஒளிவீசும்.

இனி, ஒளிவீசுமங்கங்கள் இன்னின்னவெனச் சற்றுகவனிப்போம். "களிமீன்" முதலியவற்றைப்போன்ற மிகத்தாழ்ந்த ஜீவப்பிராணிகளுள் ஒளிவீசுவது ஒரு தனி அங்கமன்று. அவற்றினுடம்பு முழுதினின்றும் மினுமினுப்புண்டாகும். வேறுசிலவற்றுள், உடம்பின் சிற்சிலவிடங்களினின்றும், வரிசையாக விளக்கேற்றி வைத்தாற்போல் ஒளியுண்டாகும். புழுக்கள், பூரான்கள் இவற்றைப்போன்ற வேறுசிலவற்றில், அவற்றின் கால்களினின்று பிரகாசமுண்டாகும். மின்மினிப்பூச்சியிலும் அதைப்போன்ற மற்றவற்றிலும் வாலின்புறமிருந்து ஒளியுண்டாம். மெக்ஸிக்கோ என்னுந் தேயத்து மின்மினிப்பூச்சியில் மார்பினின்று ஒளிபிறக்கும். கடலின் பாதாளத்து வசிக்குமீன்களுக்குள், அவற்றின் கண்ணுக்கருகாமையிலாவது, உடம்பினிருபுறத்திலுமாவது ஒளிவிடுமங்கங்கள் உண்டு. இறந்தழுகுஞ்சவங்கள் சிற்சிலசமயத்து ஒளிவீசுவதுமுண்டு. ஆனால் இதினுமாச்சரியம், உயிரோடு வாழுஞ்சில மனிதர்களே அங்ஙனம் ஒளிபரப்பினின்றதாக எழுதிவைத்திருக்கிறார்கள். அதற்குக்காரணம் சிலவியாதிகள் தாமென்று மேனாட்டு வைத்தியநிபுணர் சாதிக்கிறார்கள். அஃது எவ்வளவு உண்மையோ யாமறியோம். சிற்சிலசமயத்து இராக்காலத்துக் கடலில் பற்பலவிடங்களில் திட்டுத்திட்டாய் வெளிச்சந்தோன்றுவதைக் கடற்கரையோரத்தில் வசிப்போர் கண்டிருக்கலாம். அவ்வெளிச்சத்திற்குக் காரணம கடலின்மேற்புறங் கூட்டங்கூட்டமாய்த்தோன்றும் சிறியசிறிய பிரதம ஜீவிகளும் ஓட்டுச்செந்துக்களும வெளிவிடும் ஒளியே.

இங்ஙனம் ஒளிவிடுவதால் அவ்வப்பிராணிகட்கு உண்டாகும் பயனென்ன? அப்பிராணிகட்கேயாவது மற்றவைகட்காவது அதனாற் பயனுண்டென்பதற்கு ஐயமின்று. கடல்வாசிகளிற்சில ஒளிவீசுகின்றனவென்று முன்னமே சொன்னோம். இவற்றை மற்றப்பிராணிகள் தீனியாகக்கொள்வதில்லை. என்னை? அவற்றிடம் ஏதோவொரு துர்க்குணமோ விஷமோ இருத்தலினாற்றான். அத்துர்க்குணத்தைத் தம் வெளிச்சத்தால் பிறஜெந்துக்களுக்குப் பகிரங்கப்படுத்துகின்றனபோலும். இப்படி வெளிச்சமேற்ற ஜெந்துக்கள் சிக்கியவலையில் மீன்கள் சிக்குவதில்லையென்று செம்படவர் பலர் சொல்லக்

கேட்டிருக்கிறோம். ஆகவே வேறுபிராணிகள் கொம்பென்றும், பல்லென்றும், நகமென்றும், விஷமென்றும் பற்பல உறுப்புக்கள் தற்காப்புக்காரணமாகப் பெற்றிருப்பதுபோல், இவையும் அக்காரணங்கொண்டே ஒளிவிடுமுறுப்புகளைக் கொண்டிருக்கின்றனவாம். கடலினடிப்புறத்துவாழுஞ் சிலமீன்கள் இவ்வித உறுப்புக்கொண்டிருக்கின்றனவென்று முன் சொல்லப்பட்டது. அங்கு இரவானாலும் பகலானாலும் இருண்டேயிருக்குமாதலால், கடலடியில் அங்குமிங்கு மோடிவாழும்பொருட்டு இவ்வுறுப்புக்கள் அவற்றிற்குப்பெருந்தீபம் போல் கொடுக்கப்பெற்றிருக்கின்றன. இன்னுஞ்சில ஆண்பெண்ணென்ற வேற்றுமைதோன்றும்பொருட்டு, இவ்வுறுப்புக்களைக் கொண்டிருக்கின்றன. மின்மினிப்பூச்சியே அதற்குதாரணமாம்.

---

## "இயல்வது கரவேல்."

(முற்றொடர்ச்சி.)

அது கழிபெருங்காதல் கொண்ட தலைவன்மாட்டுக் காமப்பேரன்பை யுணர்த்தா நிற்கும். அக்குறிப்பை யுலகங்காணின் அலர்தூற்றா நிற்கும்; அது அகத்தின்கண் நிகழவேண்டிய மறைபொருளாகலின். இதுபற்றியே காமவின்பத்தினை யகமென்றதுமாமென்க. இன்ன தன்மைத்தெனை வுணர்த்தக் கூடாததும், உணர்த்தற்காகாததுமாய அக்காமக்குறிப்பினைச் சாயலாற் கரந்து வெளிப்படுத்தற்கமென்பது. இனி நலம், இது செய்கையிடத்ததாய்த் தலைவனோர் வெளிப்பட்டுத்தோன்றும் உவகைமிகுதி. இன்பங் கூடுதற்கு இதுவும் வேண்டுவதாகலின் நாணத்தால் அவன்மாட்டு ஒளியாதே யென்பதாம். இவ்விரண்டழகுந் தலைவற்குஞ் சிறுபான்மை யொக்கும். இனி; ஒண்மையென்பது அறிவுடைமை, அதனைக் கரத்தலாவது பிறரது திருவிற் பொறாமைகொண்டு அவரைக் கெடுக்குநெறியே தீமையை நன்மைபோலக் காட்டிபுணர்த்துதலும், அவரது தீநெறியுணர்வைக் கண்டுவைத்துந் திருத்தமுயலாதிருத்தலும், தலைவன்றன் மடமையைக்கண்டும் அவர்க்கு உறுதி கூறாதிருத்தலும் பிறவுமாம். இதனை

‘அறிகொன் றறியா னெனினு முறுதி யுழையிருந்தான் கூறல் கடன்’ எனவும் ‘மானத்தார் குற்றங் கடிந்த வொழுக்கமும்’ எனவும் வருவன வற்றானுணர்க. அற்றேல்; ‘வெளியார்முன், வான்சுதைவண்ணங் கொளல்’ ‘நன்மொழியைச் சிற்றினமல்லார்கட் சொல்லல், கற்றறிந் தார் பூண்ட கடன்’ ‘செல்லிடத் தல்லதொன் றுரைத்தல் செல்கலா, நல்லறிவாளரி னவிந்த நாவெலாம்’ எனப்பிறரெல்லாம் ஒண்மையிற் கரவுகூறினரே யெனின்; அவர்கூறும் ஒண்மைமொழி அக்கீழ்களது உணர்விற் படாவாகலின் அவர்க்குப் பயனிலையாகவே கூறவேண்டா வாயின வென்பது. அது கரவுமன்று. கரவென்பது ஒருவனவேண் டியதொன்றை புதவாமை. வேண்டாதும் மேற்கொள்ளாது மிருப் பார்க்கு ஒன்றைச்சொல்லாதிருக்கை கரவாகாதென்ப. இவற்றுள் வெளியார்- வெளிற்றறிவுடையார். வெளிறு-உள்வயிரமில்லாமரம். ஒண்மை (அறிவுடைமை) யுடையார் ஒளியாரெனப் படுதல்போல வெண்மை (அறியாமை) யுடையார் வெளியா ரென்றாயினர். அதற் கேற்பச் சுதைத்தன்மை பெறுகவென்றார். அவரவர்க் கஃதியலா யிற்று. ஆகவே ஒண்மை ஈண்டு இயல் என்பது பெற்றாம். உலகி யல் எனககூறப்படுவதுங் காண்க.

இனி; இயல்வது கரவேலெனக் கரத்தலை மறுததனால இயல வது கரத்தலாற் றீங்குண்டென்ப துணரப்படும். அத்தீங்கு தனக் கும் பிறர்க்கு மெய்துந் தீங்கென்றிருவகையாம. பிறரென்றதுவறி யரா யிரப்பாரையென்க. வறியராயினார் இரத்தலின்றி யிருத்தல ரிது. இரக்கப்புகுந்தும் இரக்கப்படுவார் கரப்புடையராயின் அவர் என் செய்வர்! இரக்கப்படுவார் கரப்புடைய ரல்லராயிருத்தல் வே ண்டுமென்பதாம். இதனைக் ‘கரப்பிலார் வையகத்துண்மையாற்கண் ணின் - றிரப்பவர் மேற்கொள்வது’ என்பதனானுணர்க. கரப்பிலா ரைக் கண்டபொழுதே இரப்பார் துன்பம் இருந்தவிடந் தெரியாமற் றொலைந்துபோம். இரப்பார்க்குக் கரப்பாரை யுலகமேயன்றி யறக் கடவுளும வெறுக்கும். ‘இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி - னிலமென்னு நல்லா ணகும்’ என்றார் பிறரும்.

இனி; இயல்வது கரவேலெனக் கூறி ஈதலை யுணர்த்தியதனால் அதனானெய்து நன்மையுங் கருதப்படும. ஈவார் - செல்வராயினார்.

அச்செல்வம் முன் ஈதலைச் செய்ததனான் எய்தியது பின்னுமவ்வாறு செல்வம் எய்தவேண்டுமாயின் இயல்வதுகரவேலென்றனர். எனவே யாண்டும் பொருள் சேரற்குக் கரவாதீதல் வேண்டுமென்பதாயிற்று. கரவாது கொடுப்போர் மறுமைக்கட் பொருளுடைய ராவரென்பதை 'அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன், பெற்றான் பொருள்வைப் புழி' எனவும், 'ஒளியான் விருந்திற்கு...... ஏதன்மின் மண்ணுண்டுகொள்வான் குடிவாழ்க்கை கூர்ந்து' எனவும், 'நசைஇ யவர்க்குக் கூடுவ தீவானை, நாடுவ விண்ணோர் நயந்து' எனவும் பிறர்கூறுமாறு கண்டு தெளிக. இதற்கு இரப்போரே சான்றாவர். முன் ஈயாதாரன்றே பின் இரக்கப் புகுந்தார். அவரைக்கண்டு வைத்தும் இரப்பார்க்குக் கரக்கவிசைந்த தென்கொலோ! இரப்பார்க்குக்கரவாது ஈவாரையுண்மையாள ரெனவும், உறுதியாளரெனவும், தூய்மையுடையா ரெனவும், ஆண்மையுடையாரெனவும் உலகம புகழ்தலேயன்றி அவர்க்கெய்திய செல்வம் 'பொத்தினின்றிக் காழ்த்தமர' மெனவுங் கூறப்படும். பொத்தின்றிக் காழ்த்தமர மென்பது பொந்தில்லாமல் வயிரம்பற்றிய மரமாம். விரிக்கிற் பெருகும்.

இனி; இயல்வது கரவேலென்றதனை னியலாதது காத்தல் கூடுமென்பதுங் கருதப்படும். கருதப்படுமேனுங் காத்தல் பொருண் மேலதாகலிற் பொருளிலாதார்க் கியல்வதில்லையாதல்வேண்டும். ஆகவே யக்கருத்து வேண்டப்படாமையுணர்க.

இனி; இயல்வதுகரவேல் என்பதற்கு (இரப்பவர்க்கு உன்னாற் கொடுக்கக்கூடுமான) சத்தியை ஒளியாதே. ஒளித்தால் அது தீரப்பழியாமென்பது கருத்து எனப் பொருளுரைத்தாருமுளர். சத்தியென்பது வன்மையல்லது ஆற்றலெனப்படுமாகலானும், ஆற்றலைப்பகைப் புலத்திற் காட்டுவதேயன்றி இன்மை துரப்பவந்தெய்தும் இரப்பவர் மாட்டுக் காட்டன் மரபும் ஆண்மையுமன்றாகலானும், இரப்பவர்க்கு ஈகையே வேண்டப்படுவதாகலானும், சத்தியையென்பதனை 'அருளென்ப சத்தி......' யென்பவாகலின் அருளைக் கரவேலெனக் கொள்ளலாமெனிற்; கூடுமான வென ஒரு சொல்லை யவர் முற்பெய்தமையின் அருள் கண்டிக்கப்படாத வியல்பிற்றாகலின் அச்சொல் வேண்டப்படா வாகலானும், பொருள் என வொன்று பெறப்படுதலின்

அருள் பகுக்கப்படலாமெனின்; பகுக்கப்படுமேனுங்கடவுட்கே யன்றி யேனைமக்கட்கு அப்பெயர் செல்லாதாகலானும், சத்தியென்பது யோகரூடியாய்ச் சிவபிராட்டிக்கே செல்லுமாகலானும், 'அவற்குக் கொடுக்கச் சத்தியில்லை' யென்பதுபோலச் சத்தியைப் பொருண்மேலதாக்கிக் கூறலாமெனின் அதுதானும் ஆகுபெயர்த்தன்மைபெற்று அவ்வாறு பேசப்படுமேயன்றி நேரானபொருளில் வாராதாகலானும், கொடுக்கக்கூடுமானது பொருளேயாய்ச் சொல்லெச்சமாய் நிற்றலானும், சூத்திரப்பொருளிலைபு மதுவேயாகலானும், பலபொருட்குஞ் செல்லுமாறு நுண்பொருளினமைந்தது இயல்வதெனக் கூறினமையானும அவ்வுரைபொருந்தாதெனக. இது கருதியே இயல்வது என்பதற்குக் 'கொடுப்பதற்கிசைவாதது' யெனப்பொதுப்பட மற்றொருவர் உரைதந்தனர். இது முழுதும் பொருந்துமென்க.

இனி; இயல்வது என்பது இயல் என்னு முதனிலைமீதே ஈதற்பொருளுணர்த்தும் துவ்விகுதியும், அகரச் சாரியையும், எதிர்காலங்காட்டும் வகரவிடைநிலையும்வந்து புணர்ந்து இயல்வது எனமுடிந்த தொகுதியொரு சொல் எனக்கொண்டு இனி ஈயும் பொருளைக்கரவேலென இளைஞர்க்குக் கூறியதெனலும் பொருந்துமென்க. கையிலுள்ள பண்டங்களை பொளித்து இல்லையென்று சொல்லுதலே இளைஞரெல்லார்க்கு மியல்பு. அவ்வியல்பாற் பிறர்க்குத் தீங்கில்லையாயினும் நாளடைவில் அவ்வழக்கம் முதிர்ந்தால் அவ்விளைஞர் குமாரராகும் பருவத்து இரப்பார்க்குக் கரக்குந் தன்மையிற் கொடுவந்து விடுமென்பது கருதி இளம்பருவத்திற்றானே யதனையொழிக்கும் பொருட்டு அவ்வாறு கூறினாரெனலுமாமென்க.

இனி; இயல்வது கரவேலெனக் கூறியது முயற்சியுடையார்க்கே யன்றி யேனை மடிகட்கன்று. முயற்சியுடையார் பொருணிலைமையும், பொருள் செயல்வகையும், அது வந்தவாறும், அது பயன்படுநெறியும், அதனானெய்தும் பயனும உணர்வர். உணர்ந்து பொருளளவிற்கேற்பத் தாமுந் துய்த்துப் பிறர்க்கும் வழங்குவர். அவர் தாளாளரெனவும் வேளாளரெனவுஞ் சொல்லப்படுவர். 'தாளாளனென்பான் கடன்படா வாழ்பவன், 'வேளாளனென்பான் விருந்திருக்க வுண்ணுதான்' என்ப. அவர் 'இரவாரிரப்பவர்க்கொன் றீவார்

கரவாது, கைசெய்தூண் மாலையவர்' என்ப. ஏனை மடிகளோ வெளிற் பொருள் செயல்வகை யுணராது சோம்பிக்கிடந்து கடனுண்டு வாழ்வர். அவர்க்கேது இயல்வதும் கரவா தீவதுமென்க. அன்றிப், பெற்றோர் ஈட்டிவைத்த பொருளைப் பூதம்போற்காத்துத் தாமுந் துய்க்க வகையறியாது பிறர்க்கும் வழங்க மனமிசையாது பயனின் மக்களாய் நடைப்பிணம்போ லுழலா நிற்கும் வச்சைமக்களும் மடியினத்தவரே யாவர். அன்னோர்க் கறிவுறுத்துமாறும் இது சொல்லப்பட்டதென வுணர்க.

இனி; முதற் சூத்திரத்து அறந்தான் அகத்தூய்மையும், இரண்டாஞ் சூத்திரத்து வெகுளாமையான் அதற்கு உறுதிப்பாடு முணர்த்தி, அஃதுறுதிப்படவே யதனை யிவ்வளவிற் செய்கவென மூன்றாஞ் சூத்திரத்து ஈகையினளவு கூறுதலிற் சூத்திரவியைபு விளங்கும். இவ்வாறே திருவள்ளுவரும் அகத்தூய்மையி னுறுதிபெற்ற வுயர்ந்தோர் நடையை யொப்புரவாற் கூறி, மறுமையைக் குறித்த ஈகையை இம்மைக்கண்ணதாகிய அவ்வொப்புரவின்பின் உணர்த்தி யதிகார வியைபு வைத்தவாறுங் காண்க.

> "ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
> றீத லியல்பிலா தான்."—திருவள்ளுவர்.

கோ. வைத்தியலிங்கம்பிள்ளை.

---

உ

திருச்சிற்றம்பலம்.

# பெரியபுராண அரும்பத விளக்கம்.

———— :o: ————

[பழைய ஏட்டினின்று எடுக்கப்பட்டது.]

(முற்றொடர்ச்சி.)

(அறு௩) கணுக்கள் பக்கத்தே தறிக்கப்பட்டு நீண்ட.

(அறு௫) வைகையாற்றில் சமணர்களுடைய சமய எல்லை அழிவால் ஆர்ந்ததம்பம்.

(௭௭0) திருவிய மகத்திலுள்ளும் - அழகிய மகத்தினுள்ளும்.

(௭௭௭) கண்விடுத்த - கண்ணைவிடுத்த. காழியிலுள்ளாருடைய இளஞ்சிங்கம் தங்குமிடம், திருநீற்றுத்தொண்டருடைய குழாஞ்சாருமிடமாகிய இலக்குமி வீற்றிருக்கின்ற மடம்.

(௭௭௯) சார்வு - சார்ச்சி; வருதல்.

(௭௮0) பெரிய தவத்தையுடைய அவருக்குமுன்னே இரண்டாகிய தாமரைமலர்போன்ற கையைக்குவித்தருளி, அரியதவத்தையுடைய அப்பரே, என்னை அறியாதபருவத்தேயெடுத்து அடிமைகொண்ட பெருந்தகை எம்பெருமாட்டியுடனே இருந்ததே என்று.

(௭௮௧) அண்ணலார்தமை - சிவபெருமானை.

(௭௮௩) பொருளிணிலக்கணத்தை நூலின்கட்பாடிச் சங்கப்புலவர்க்கீந்தானை.

(௭௯௨) மந்திரியாருடைய பதி.

(௭௯௪) இங்கே நான் கூறியதனுக்கிசைந்தீராகிற் சிவனுடையசமயத்தைப் போற்றியிருப்பீரென்று.

(௭௯௭) நாவலமே - நாவெற்றியே.

(௯0௭) இத்தகைய செயற்கிவரைக் கொல்லாது இதனைப்பொறுக்கில் தங்கணிலேமேலெடுப்பரென்று.

(௯0௭) வருமிடத்திலழகாம் நமக்கு, தருக்கத்தில் இவர்களுடைய பொருணிலைமையை, மாறுதபடி வாதிக்குமிடத்தில் வருமுறை சொல்கின்ற திருப்பதிகம் எழுதும் தொண்டராய சம்பந்தசரணலயர் திருஞானசம்பந்தப்பிள்ளையாருடைய திருவாக்காலே இடியிடித்துவிழப் பௌத்தனுடையதலை உருண்டுவீழ்க என்று மனம்பொறுதவுரையை முன்னேவிட்டார்.

(௯0௯) சிவபெருமானுடைய சைவநெறியாணையைச்செலுத்த எதிரேவிலக்கும் இடையூற்றை எறிந்து நீக்குகின்ற.

(௬௧௦) அத்திரவாக்கதனால், "புத்தர் சமண்கழுக்கையர்" என்கின்றதேவாரமாகிய இத்திருவாக்கால். நெறி - வழி.

(௬௧௧) அவர் தம் சைவவாய்மையோ எனமருண்டு எஞ்சலின் மந்திரவாதமன்றி எம்மோடெதிர்ந்து பொருள்பேசுதற் கிசைவதென்று மனத்திற்கொள்வாராய்.

(௬௧௩) சத்திரமண்டபம்—சத்திரத்துள்ளமண்டபம்.

(௬௧௪) எவ்விடங்களினு நிகழ்கின்ற திருச்சின்னத்தைத் தடுத்த புத்தனுடைய பெரிய தலையைப் பொடியாக்கும் உவமையற்ற சம்பந்தசரணாலயர், உங்கடலைவனையும் பொருளையும் உரைக்குகஎன்று கூறப், பொருந்திய தருக்கத்தை மேற்கொண்டு கூறுகின்றான்.

(௬௧௫) கற்பகாலங்களிலெல்லாம் பிறந்திறந்து பதவிமாறும் கணபங்க இயல்புதன்னால் அழகையுடைய தானந்தவம் தன்மைபுரிந்த நிலைமையையுடைய யோகமென்னுமிவற்றைப் பொருந்தச்செய்தால் உற்பவிக்கின்ற ஒழிவின்றி அறிந்த ஞானத்தையுடைய ஒழியாதபேரின்பம் பொருந்திய முத்தியைப்பெற்றான்; ஆரெனில், பற்பலரும் பிழைத்துய்யுமாறு தருமத்தை முன்கூறின பான்மையானாகிய யாங்கள் வணங்கும் பரம்பொருள் என்றான். தன்னில் முத்திபெற்றானென வியையும்.

(௬௧௬) என்று கூறிய சாரிபுத்தனெதிரே வந்தெதிர்த்த பெருந்தவத்துப் பெருந்தன்மையையுடைய அன்பரும் நன்று உமது தலைவன் பெற்றானென்று நாட்டுகின்ற முத்திதான் யாவது என்றார். நின்ற உரு, வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என நிகழ்ந்த ஐந்தும் ஒன்றிய கந்தங்களினீக்கமே முத்தியென்று கூறினான்.

(௬௧௭) அச் சாரிபுத்தன் கூறியதைக்கேட்ட சம்பந்தசரணாலயர் அதனை அனுவாதித்து அவனைப்பார்த்துப் பொருந்திய விஞ்ஞானத்துடனாகின்ற பஞ்சகந்தங்களுந் தாமவிந்து கெட்டனவாயின், "அப்பொழுது நுந்தலைவனுமிறந்தான். அங்ஙனமாகவும்" தலைவனிங்குளனென்று அவனுக்குவிடையமாக எவற்றையும் முன்செய்த

தற்கு விகாரமாக்கி உயர்ந்தவடிவையுண்டாக்கி விழவெடுக்கும் பூசையைக் கொள்பவர் யார், சொல்வாயாக என்றுகூற உரைக்கலுற்றான்.

(௬௧௮) கந்தமாம் வினையுடம்புநீங்க எந்தலைவன் முத்தியிற்கலந்துளன் என்றான்; அவனங்ஙனங்கூறக், காண்கின்ற இந்திரியங்கண் முதலான கரணங்களுமில்லையே, அவனுக்கு உணர்ச்சியும் இல்லையென்றார். பழைய அறிவிலனாகி நித்திரைசெய்தோனை நிந்தனைசெய்து அவனுடம்பின்மீது ஏறிவிளையாடினோர்க்கு வந்தவினைப்பயனைப்போல நந்தலைவனை வழிபட்டார்க்கும் நன்மைவருமன்றோ எனமறுத்துக் கூறினான்.

(௬௧௯) சொன்னவார்த்தையைக்கேட்டருளி அன்பருடதொடர்ந்த வழிபாடு பலவற்றைக்கொள்வோனுக்கு அவற்றினுடன்பாடும் வெறுப்பும் இல்லை, ஆனபொழுது வழிபாடுசெய்தோன் பெறுதவில்லை என்றார். முன்னவைகளுள் விருப்பும் வெறுப்புமின்றி மிக்க நித்திரையிற்கிடந்தோனைக் கோபித்துக்கொன்றால் உயிர்போய்க்கொலையாகி முடிந்ததன்றோ.

(௬௨௦) இப்படி இயையும் என இசைந்து நீ இங்கே எடுத்துக்காட்டிய நித்திரைசெய்யுமியல்பினன்போல, உடம்பினுள்ள கரணங்களையும் உயிரையும் இங்கே வேண்டுகின்றாய் நந்தலைவனுக்கவையானபொழுது சொல்லிய அக்கந்தத்தின் விளைவிலதாய்த் திரிபில்லாத மோக்ஷத்திற்சென்றிலனுமாயினான்.

(௬௨௧) அவ்வார்த்தையைக்கேட்டு எதிர்வசனமறைவதின்றி முத்தியிலடைந்தானென்னு மதுவும்பாழாம். வருத்தத்தோடு நின்றவனை எதிரேநோக்கி ஞானத்தையுடைய கடலமுதம்போன்ற ஆளுடையபிள்ளையாரது அடியார் பொய்பாசு முத்தியிற்போன நுந்தலைவன்முன்னமே பொருளெல்லாவற்றையும் உணர்ந்துரைத்துப்போனானென்று கூறினை? எங்ஙனம் அவனெல்லாவற்றையுமுணர்ந்தது, இதையும இல்லதுரைத்தியாயினும் ஏற்போம் என்றார்.

(௬௨௨) உணர்வு, பொதுச்சிறப்பென இரண்டினுள் முன்னது உளவான மரப்பொதுமையையுணர்த்துதல், ஒழிந்த சிறப்புமரங்களில் வைத்தின்னதென்றல்.

(௯௨௩) சொன்ன அக்கினியோ வடிவினதாம்.

(௯௫௪) "உற்றுமைசேர்வது" என்னுந் திருவியமகத்தை மகிழ்ச்சியா லெடுத்தோதி "வெற்றியாகமீ னவனையெதிர்நதி மிசை வரு கரனென்" ஈற்றுத்திருப்பாட்டைப்பாடி முடித்தருளினார். வெற்றியாகவருகின்ற அபாயஹஸ்தத்தையுடையாரே என்பது பொருள்.

(௯௬௩) கன்னியினுடைய. காப்பு - இடம்; அல்லது ஊர்.

(௯௬௫) அணைபவருக்கு முன்னே, பூதங்கள் பாடும்படி. நின்றுநின்ற சிவபிரான் திருநடனத்தைப் புலப்படும்படி காட்ட.

(௯௭௪) ஓத்து—வேதம்.

(௯௭௮) அடைவு—தகுதி.

(௯௮௮) கம்பலைத்து—ஒலித்து; கம்பலைஎன்னும் பெயரடியிற்பிறந்த வினையெச்சம்.

(௧0௧௧) திகழ்ந்த காலை—விளங்கிய உதயத்தில்.

(௧0௧௨) புராதனரும், மூங்கிலிலேதோன்றின புனிதரும்.

(௧0௧௫) ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய இந்திரனுடைய குலிசாயுதத்தால் வெட்டுண்ட சிறையைப்பெற்று அதன்பின் அவன்மேல் எதிர்க்குமாறு சிறகையடித்துப்பறக்க முயன்று உயர்ந்தன போலும் உயர்ந்த குறிஞ்சி நிலத்தில் எழுந்தருளிச்சென்றார்.

(தொடரும்.)

ஜி. சதாசிவம் பிள்ளை.



# * ஈகை.

ஈகை என்றது பொன், கொடுத்தல் என்பன ஆதிய பலபொருள் கூறுவர். இவண் எடுத்துக்கொண்டது கொடுத்தல் என்பதுவே.

ஒருவர்தம்மிடத்துள்ள யாதானுமொரு பொருளைப் பிறிதொருவருக்குத் தருவது அனைத்தும் ஈகையென்றே கூறப்படும். அது மகனுக்கு அரசுகொடுத்தல் ஆகிய உரிமையிற்கொடுத்தலும், மருமகனுக்கு மகளைக்கொடுத்தல் ஆகிய வழக்கத்திற்கொடுத்தலும், அரசனுக்குத்திறை கொடுத்தல் ஆகிய அச்சத்திற்கொடுத்தலும், வாய்க்கரிசியிடுதல் ஆகிய அவலத்திற் கொடுத்தலும், சேரன் சோழனுக்கு விருந்துசெய்தல் ஆகிய ஒப்போர்க்குக் கொடுத்தலும், பெருமுடிவேந்தர்க்குக் குறுநிலமன்னர் குதிரைகொடுத்தல் ஆகிய உயர்ந்தோர்க்குக் கொடுத்தலும், வறியார்க்குப்பொன்கொடுத்தல் ஆகிய இரக்கத்திற் கொடுத்தலும் முதலியவாகப் பலதிறப்படும் என்பர். இவ்வாறு பலதிறப்பட்டு நிற்குமேனும் ஈற்றிற்கூறிய இரக்கத்திற்கொடுத்தல் ஒழிந்தபிறவெல்லாம் ஓர்வித பரிவர்த்தனையேயன்றி ஈகையாகா.

“வறியார்க்கொன்றீவதேயீகை மற்றெல்லாம்-குறியெதிர்ப்பை நீரதுடைத்து.” என்பர் திருவள்ளுவர். ஆகவே உண்மையான கொடை அல்லது, ஈகையென்பது கொள்வாரால் எவ்விதபயனுங் கருதாது, தம்முள்ளத்தெழுந்த கருணைமேலீட்டினானே காலமிடமாதிய ஒன்றுங்குறியாது பிறர்க்குதவுவதேயாம்.

இதனை,

“ இம்மைச்செய்தது மறுமைக்காமெனும்
அறவிலைவாணிகன் ஆஅய் அல்லன்
பிறருஞ்சான்றோர் சென்றநெறியென
ஆங்குப்பட்டன்று அவன்கை வண்மையே.”

---

*இவ்வியாசம் மதுரைத் தமிழ்ச்சங்கத்து எட்டாம் வருஷோற்சவ தினங்களுள் ஒன்றாகிய 1909-ஹு மேமீ ௨௫௨ ஸ்ரீமாந்-பொ. பாண்டித்துரைத் தேவரவர்கள் அக்கிராசனம் வகித்த வித்துவச்சபையில் ஸ்ரீமத்-எம். கே. அப்துல்காதிறுராவுத்தரவர்களாற் படிக்கப்பட்டது.

என்னும் ௧௩௭-ஆம் புறப்பாட்டாலும், அதனுரையானும், "ஆற்றுநர்க் களிப்போர் அறவிலைபகர்வோர்" என்னும் மணிமேகலை கூடு-பக். ௧௦௨-ஆம் வரியானும் தெளியலாம்.

மானிடராகப்பிறந்த ஒவ்வொருவரும் புகழ் அடைய வேண்டும். புகழ்பெறாதவர் பிறவாதிருத்தலே நலம் என்பதையும், ஒவ்வொருவரும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த்தங்களையடைதற் குரியார் என்பதையும் மறுப்பவரிலர். இத்தகைய புகழைத்தருவதும் புருஷார்த்தங்கள் நான்கினும் பின்மூன்றையும் தரவல்லதாகிய முன்னிற்கும் தலைமைப்பாடுற்ற அறமாவதும் இந்தக்கொடையே யல்லதில்லை. இதனை—

" தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.
உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
றீவார்மே னிற்கும் புகழ்.
ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு."

என்னும் திருவள்ளுவரானும் ஈகையதிகாரத்தின்கீழ் புகழ் என்னும் அதிகாரம் அமைத்தமையானும் கொடையானே புகழ் பெறலாகும் என்பதூஉம்,

ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காத லிருவர் கருத்தொக்க—ஆதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு."

என்னும் ஔவைப்பிராட்டியார் திருவாக்கால் ஈகையேயறமாகும் என்பதூஉம் நன்கு தேறலாம்.

இன்னும் கொடையே புகழ்பயப்பதாதலை தொல்காப்பியம் பொருளதிகாரம் புறத்திணையியலுள் (சூ-௨௧) "இடையில் வண்புகழ்க் கொடைமை." எனக்கூறுதலானும், அதனுரைகாரர் "கொடைப்புகழுடையான் மூப்புப்பிணி சாக்காட்டுக்கு அஞ்சாமையின் அது வாகையாம் எனக் கூறுதலானும், கொடுப்போரை யேத்தலும் கொடா

தாரைப் பழித்தலும் வழக்காருதலே அவர் அவ்வியலின் கண்ணே "கொடுப்போரேத்திக் கொடார்ப் பழித்தலும்" என்பதனாற் கூறுதலானும், கொடையானது புகழைத்தருவதுபோலவே கொடாமை பழிப்பைத் தருவதாகுமென்பதும் புலப்படும். புருஷார்த்தங்கள் நான்கையும் ஓரோர் மொழியாற் கூறவந்த மூதாட்டியார் ஈதலறம் எனக்கூறியது எவ்வளவு சிறந்த பொருளைத்தருவதாகின்றது. ஆகவே, அறமும் ஈகையும் சொல்வேறுபடுதலன்றிப் பொருள் வேறுபட்டதாக இல்லை. அறம் செய்தல் அவசியம் என்பது எல்லா மதத்தருக்கு மொப்ப முடிந்ததொன்றேயாம். அறத்தை வடநூலார் இஷ்டம், பூர்த்தம, தத்தம, என மூன்று வகுப்பாகக்கூறுவர். அவற்றுள்,

**இஷ்டமாவது.**—உலகமெல்லாம் வாழக்கருதித் தெய்வங்களைப் பராவுவது. தென்புலத்தார்ப்போற்றல், மந்திரம், யாகம் முதலியன இதிலடங்கும்.

**பூர்த்தமாவது**—எல்லா உயிர்களும் இன்புறுமாறு செய்யும் பொது நிலைத்தன்மம், அன்னசத்திரம், வித்தியாசாலை, நீர்ப்பந்தல், மருத்துவசாலை முதலியன இதிலடங்கும். இதையே ஒப்புரவு என்பர் வள்ளுவர். ஒருவரைக்குறியாது பலர்க்கும் பயன்பட நிலைக்கச் செய்வதாகலின்.

**தத்தமாவது:**—பசித்தோர்க் கமுதளித்தல் முதலாக வறியோர்க்கு ஈகை.

இந்தத் தத்தமென்பதுவே நாம் இப்போது எடுத்துக்கூறும் கொடையென்று கொள்ளவேண்டும்.

கொடை, ஈகை, தானம் என்பன ஒருபொருட் சொற்கள்.

தமிழ்நூலார் இக்கொடையைப்பற்றிப் பலவாறு விதந்து பிரித்துக் கூறுகின்றனர். அறம்பொருளின்பம் அச்சம் நாணம் அவலம் இவற்றினடியாகவே கொடைக்குணம் பிறக்குமென்பர் ஒருசாரார்.

(1) ஒருவனுக்கு ஒருவன் தன்னால் ஏதேனும் உதவிசெய்யக் கூடுமாயின் தானே முற்பட்டு வலியச்செய்தல் தலைக்கோடை.

(2) அதனைப்பெறுவான் வந்து கேட்டபின் செய்தல் இடைக் கோடை.

(3) பெறுவான் கேட்டபின்னும் பல்காலலைத்துப் பின்ன ராற்றுவது கடைக்கோடை. இப்பகுப்புக் கந்தபுராணக்காரரது.

“ என்னுனு மோருதவி யாரானும் யார்க்கெனினுந்
தன்னால் முடியுமெனிற் றானே முடித்தறலே.
சொன்னால் முடித்த லிடையாகுஞ் சொல்லுகினும்
பன்னாட் கழித்துப் புரிதல்கடைப் பான்மையதே.”

என்பது அவர் கூற்று. (பன்னூற்றிரட்டு ௫௬௪.)

(1) முற் றமக்குச் செய்த நன்றிக்காக அன்றியும், பின்பொன் றைப் பெறுங்கருத் தன்றியும், உரியகாலத்தே உரிய இடத்தே தக் கார்க்கீவது சாத்துவிகதான மெனவும்.

(2) இது நாம் செய்யத்தக்ககடமையென்றும், கருத்தின்றி முற் றமக்குச் செய்நன்றியைக் கருதிச்செய்வதும், இதனாலினி நமக் கொரு நலமுண்டெனக் கருதிச்செய்வதும் இராசததானமெனவும்,

(3) பொருந்தலுறாத பொருளொன்றைக் காலம், இடம்பொ ருந்தாமலுற இழிந்தார்க்கு அறிவின்றி வெறுப்புடன் கொடுத்தல் தாமததானம் எனவும் கூறுவர் பகவத்கீதைகாரர். பின்வருஞ்செ ய்யுட்களாலுணர்க.

“முன்செய்கா ரியப்பொருட்டு மின்றியே முடித்திதனாற்
பின்பொருநற் பொருள்விளையு மென்பதுவும் பேணாதே
நன்குடைய காலத்தே நல்லிடத்தே நல்லவர்க்குத்
தன்பொருளைக் கொடுக்குமது சாத்துவிக தானமே.”

கொண்டுசெயத் தருங்கரும மெனுங்குறிப்பொன் றின்றியே
பண்டுசிலர் செய்ததற்காப் பரிவோடு பண்ணினவு
முண்டிதனால் மேல்விளைவொன் றுணர்வோடிச் செய்வனவு
மெண்டிசையும் நிறைபுகழா யிராசதமாந் தானமே.

வாயாத தொருபொருளை வழங்காத காலத்தே
யேயாத நிலத்திடையே யிழிந்தகுலத் தவர்களுக்கே

யாயாத வறிவினொடு மப்பிரியத் தொடுங்கொடுத்தல்
சாயாத பெருந்திறலோய் தாமதமாந் தானமே.

(பன்னூற்றிரட்டு-௩௪௯-முதல் ௩௫௧-வரை.)

"ஆதுலர்சாலை யைய மறுசமயத் தோர்க்குண்டி
யோதுவார்க் குணவுசேலை யூடிமேறுவிடல் காதோலை
மாதுபோகம் மகப்பால் மகப்பேறு மகவளர்த்தல்
வேதைநோய் மருந்து கொல்லா விலைகொடுத் துயிர்நோய்தீர்த்தல்.

கண்ணாடி பிறரிற்காத்தல் கன்னிகாதானங் காவே
வண்ணார் நாவிதரே சுண்ணம் மடந்தடம் கண்மருந்து
தண்ணீர் பெய்பந்தல் கோலத் தலைக்கெண்ணெய் சிறைச்சோறோடு
பண்ணுண விலங்கூணல்கல் பசுவின்வா யுறை கொடுத்தல்.

அறவையாம் பிணமடக்க லறவைத்தூரியம் வருந்தா
திறுவியே யிடம்விடாயம் நிறையத்தின் பண்டம் நல்க
லூறுதி யாவுரிஞ்சுகின்றதறி யிவையோது மெண்ணான்
கறநிலை யபிதானங்க ளம்பிகை செய்யுமாறே."

என முப்பத்திரண்டு வகையாகக் கூறுவதொரு சாரார்கொள்கை. எமது மார்க்கவேதத்தில் தானத்தை ஸக்காத்தென்றும் சதக்காவென்றும் இருவகைப்படுத்திக் கூறியுள்ளார். ஸக்காத்தென்பது மூஸ்லீமாகிய ஒருவன் தன் சொத்திலிருந்து வருஷமுடிவில் நாற்பதிலொன்றெடுத்து மூஸ்லீமாகிய ஏழையெளியோர்கட்கே ஈதல். (இது ஒவ்வொரு மகமதியனுடைய கடைமையாகும்.) இதை வேதபாடையார் பறுலு என்று கூறுவர்.

சதக்காவென்பது மூஸ்லீமாகிய ஒருவன் தன்மதத்தின்பொருட்டு தன்னிடம்வந்து யாசிப்பவர்களெவர்களாயினும் அவர்கட்குவேண்டுவ அளித்தல். இது ஒவ்வொரு மகமதியனுடைய இஷ்டத்தைப் பொறுத்ததாக விருக்கும். இதை வேதபாடையார் சுன்னத்துஎன்று கூறுவர். இப்பிரிப்புகளெல்லாம் ஒவ்வொரு காரணம் பற்றி உலகியல் நடத்தற்குவேண்டப்படுவனவேயாம். இங்ஙனம் பிரிப்பு நோக்காது பொதுமையாக நோக்குறற்றுழித்தன்னினின்று ஒருபொருளைப் பிறர்க்கு விடுப்பதனைத்தும் தானமே என்பதும், இத்தானம் சுருங்கியபோதுதான், பாகுபாடுகள் தோன்றுமென்பதும், மனத்தில்தான

சக்தி அதிகரித்தபோது பாகுபாடுதோன்றல் சிறிதுமின்றிக் கரை கடந்து யார்யார் எதை எதை விரும்பினாலும், அக்குறிப்பறிந்துழி மனமகிழ்ந்து கொடுக்கநேரிடும் என்பதும் பண்டை நூலாராய்ச்சியுடையார் யாரு மறிவர்.

பாத்திரமறிந்து பிச்சையிடு, கோத்திரமறிந்து பெண்ணைக் கொடு என்பது வழக்கேயாயினும், இரக்கம் பெருகிய இடத்துப் பாத்திர ஆராய்ச்சி சிறிதும் சித்திக்காதாம். இங்ஙனமாகவே, பெறுவான் றன்மையைக் கருதாது கொடுத்தலைக்கொடைமடம் என்றுகூறுவர். பேகன் என்னும் வள்ளலைக்கூறும் பின்வரும் புறப்பாட்டில் இக் கருத்து விளங்குமாறு காணலாம்.

"அறுகுளத்துகுத்தும் அகல்வயற்பொழிந்தும்
உறுமிடத் துதவா துவர்நில மூட்டியும்
வரையாமரபின் மாரிபோலக்
கடாஅ யானைக் கழற்காற்பேகன்
கொடைமடம் படுத லல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே."—(புறநா-கசஉ)

எனவரும். இத்தகைய கொடைமடத்தாலே பேர்பெற்றுச் சிறப்பெய்தியவர் எல்லாமதத்தினருள்ளும் பல்லாருள்ளார். இவ்வாறு கொடைமடம் என்று கூறத்தக்க பெருங்கொடையே எல்லா நூலாராலும் மிகப்புகழ்ந்து பாராட்டப் படுகின்றது.

"இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள."

என்னுந் திருக்குறளுக்குப் பரிமேலழகர் "யான்வறியன் என்று இரப்பான் சொல்லும் இளிவரவைத்தான் பிறர்கட்சொல்லாமையும், அதனைத் தன்கட்சொன்னார்க்கு மாற்றுநீதலும், குடிப்பிறந்தான் கண்ணே இரண்டுமுளவாவன" எனத்தாம ஒருபொருள்கூறி, இலன் என்னும் எவ்வம் உரையாமையீதல் என்றற்கு, இலனென்னுமெவ்வத்தை யொருவன் றன்பாற்சொலலுமுன் அவன் குறிப்பறிந்து ஈதல் எனவும், அதனைப்பின்னும் பிறனொருவன் பாற்சென்று, அவனுரையாவகையால் மிகக்கொடுத்தல் எனவும், யானிதுபொழுது பொருளு

டையேனல்லேன் எனக்கரப்பார் சொல்லும் இளிவரவைச்சொல்லாது கொடுத்தலெனவும், மூன்றுபொருளைப்பிறர் கூற்றாகக்கூறுவாராயினர். விநாயகபுராணக்காரரோ இந்நான்கு பொருளுடன், ஏற்கின்றவனும் தான் பிறர்க்கு இலனென்னாதுகொடுக்க மிக்கசெல்வம் தருதலும் என ஐந்தாவது ஒருபொருளமைத்துக் கூறுவாராயினர்; அவர்கூறிய கவிகள் இரண்டும் படிக்குந்தோறும் இன்பம் விளைப்பன ஆதல்பற்றி அவற்றை மீண்டுக்கூறத் துணிகின்றேன்.

இரப்பவன் வாளாதேக விலனெனு மெவ்வங்கூறு
திரப்பினை நிரப்பனன்று மிதனினன் றுவதாகு
மிரப்பவ னிலனென்றூர வியம்பிய வெவ்வஞ்சொல்லேன்
றிரப்பினும் பிறர்பாற்கூறு திரக்கமோ டீதன்மைந்தா.

அருத்தியி னிலனென்னுமுன் னளித்தலு மிலனென்றப்பா
லுரைத்தில னகச்சால வுதவலு மேற்கின்றானும்
வருத்துற விலனென்னுமை வழங்கிட வொழிவில்செல்வம்
பொருத்தலு மொன்றிஞென்று புகழ்மிக விளங்கித்தோன்றும்.

என்னும் அற்புதக்கவிகளைநோக்கில் "பாத்திரமறிந்து பிச்சையிடு" "வளவனாயினும் அளவறிந்தளித்துண்" என்பன முதலிய வரையறைமொழிகள் எதிர்நிற்குந் தரத்தனவோ? இங்கே. "குலனுடையான்கண்ணேயுள" என்பதுவும், "இட்டார்பெரியோ ரிடாதார் இழி குலத்தோர்" என்பதுவும, "நல்லகுடிப்பிறந்தார் நல்கூர்ந்தாரானாலும், இல்லையெனமாட்டார்" என்பதுவும் எவ்வளவு பொருத்தமுடையனவாகின்றன. கொடையுடையாரே நற்குடிப்பிறப்புடையாரென்பது இவர் கருத்தாகின்றதல்லவா?

ஒரு பொருளினிடத்தே தமக்குளதாய பற்றுவிட்டாலன்றி அப்பொருளை விடுதல்முடியாது. ஒருவனுக்கு ஈகைக்குணம் மேலிடுமாயின், அவன மனத்தில் பற்றுதல் முற்றும் அற்றுப்போவதாகும். இங்ஙனம் பற்றற்றவனே ஞானியாவான். வீடுபேற்றையுறுவான். ஆகவே யுயிர்க்குறுதிபயப்பது ஈகையேயாகும். இக்கருத்தையமைத்தன்றோ காஞ்சிப்புராணககாரர்,

"கொடையே யெவர்க்கு மெப்பேறுங் கொடுக்கு நெறியிற் பிறழாத
கொடையே யாருந் தன்வழியி னொழுகச் செய்யுங் குறைதீர்ந்த

கொடையே பகையை யுறவாக்குங் கூவும் பூத மனைத்தினையும்
கொடையே புரக்கு மென்றுள்ளங் கொள்ளப் புகன்றான் கௌதமனே.

என்று கூறினர். வேட்டவர்கள் வேட்டவெல்லாம் விலக்காமற்கொடுத்தலாகிய கொடைமடத்தினால் இம்மைப்புகழ் மட்டுமேயுளதாமென்றும், பாத்திரமறிந்து செய்யுந்தானவகையினால் மறுமைப்பயனுஞ் சித்திக்குமென்றும், ஆதலின் இருமைப்பயனுந்தருவதாகிய கொடையே சிறப்புடைத்தென்பது பண்டும் இன்றும் பல்லார்கொண்டுள்ள கொள்கையாகின்றது. இதுபற்றியன்றே,

"நன்றாற்ற லுள்ளுந் தவறுண்டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை."

என்றருளினர். இதுமட்டோ காசிகாண்டக்காரர்

"மூகனெதிரொன்றும்பிரியின் மற்றொன்றுமொழிபவர்விழைவுறுதூதா
ரகன்றகேள்வியிலாரருமருத்துவர்களரும்பொருள்கவருநர்தூர்த்தர்
புகலருந்தீமைபுரிபவர்மல்லர்செருக்கினர்புன்றொழிற்றீயோ
ரிகழ்தருமிணையரொன்பதுபேர்க்குமீந்திடல்பழுதெனவிசைப்பார்."

என்று வரையறைசெய்து இன்னவர்கட்குக்கொடுத்தலாற் குற்றமுளதாமெனக் கூறுவாராயினர். இப்பாகுபாடெல்லாம் பொருத்தமுடையனவேயாயினும், கொடுத்துக்கொடுத்துப் பழகித்தேர்ந்து பற்றுவிட்டுநிற்கும் மனத்தினையுடையார்க்கு இவையொரு பொருட்டாகத்தோன்றுவாம்.

யுத்தகளத்தேசென்று அமர்செய்யும் வீரனுக்கு எதிர்ப்பட்டு நிற்பவர் தந்தையாயினும், சோதரராயினும், குருவாயினும் பொருது கொல்வதன்றி, அங்கே பிதுர்ஹத்தி, சகோதரஹத்தி, குருஹத்தி என்னும் மஹாபாவம் வருமென்னும் உணர்ச்சி தோன்றாதவாறு போல, இரப்பவருக்கு எதையும் கொடுக்கவேண்டுமென்ற கோட்பாடுமுறுகிய மனத்தினர் இரப்பாளைக்காண்டலும், ஈவதுதோன்றுமேயன்றி ஏற்பானது குணதோஷ ஆராய்ச்சியில் மனஞ்செல்லற்குக் காலங்கிட்டாதன்றே.

இங்ஙனமாகக் கொடுக்குங் குறிப்பல்லது பிறிதொன்றுங்கொள்ளா நிலையனவாய கொடையே **கோடைவீரம்** அல்லது **வீரக்கொ**

டை என்று கூறத்தகும். கொடையினிடமாகவும் வீரம் நிகழும் என்பதை,

"கல்வி தறுகண் ணிசைமை கொடையெனச்
சொல்லப் பட்ட பெருமி தநான்கே."

என ஆசிரியர் தொல்காப்பியர் வகுத்தமையானும், அதனுரைகாரர் "கொடையென்பது - உயிரும் உடம்பும் உறுப்பும் முதலாகிய எல்லாப்பொருளுங்கொடுத்தல்" என உரைகூறுதலானும் காணலாம்; அன்றியும் ரகுவென்னும் இரவிகுலவேந்தன் பெருமகம்புரிந்துபொருளனைத்தும் அந்தணர்க்களித்து வறியனாய் மட்கலங்களே தனக்கு பகரணங்களாகக் கொண்டுள்ளகாலைத் தன்பாற்போந்து பொன்வேண்டிய பிரமசாரிக்கு இல்லையென நாணிப் பொன்பெற்றளிப்பக் கருதிக் குபேரன்பாற் போர்க்கெழுந்தனனென்று கூறுதலானும், இராமன் மாற்றலன்வசத்துள்ள இலங்காபுரியைத் தான் கைப்பற்றுமுன்னரே, வீடணற்கு அளித்தனனெனக்கூறுதலானும், கொடைக்குணமுறுக்கெய்தி வீரச்செயலாகிப் பிறிதோருணர்ச்சி தோன்றுமாற்செய்தல் காணலாம்.

இக்கருத்தை "ஒன்னாரெயிலவர்கட்டாகவும், நுமதெனப்பாண்கடனிறுக்கும்வள்ளியோய்" எனவரும் புறப்பாட்டும் வலியுறுத்துவதாமென்க. இதனை "உழி"ஞைத்துறையுள் "கொள்ளார்தேஎங் குறித்தகுற்றம்" என்பர் ஆசிரியர் தொல்காப்பியர்.

(தொடரும்.)

எம். கே. அப்துல்காதிறு ராவுத்தர்.

ஸ்ரீ:

# நுண்பொருண்மாலை.

(முற்றொடர்ச்சி)

சசுஎ. "எண்ணித்.........திழுக்கு."

நு - லை:—உபாயம், அவாய்நிலை; சாம பேத தான தண்டத்துக்கு வகைகாண்க.

சசுஅ. "ஆற்றின்...........படும்."

நு - லை:—பொத்துப்படல் என்பதனை நீட்டல் விகாரமாக்கிப் "போத்தருர் புல்லறிவின" ரென்றார் நாலடியாரினும்.

சஎ௦. "எள்ளாத.........துலகு."

நு - லை:—"ஓஒதல்வேண்டும்," (திருக்-சுருரு) "புகழ்ந்தவை பொற்றிச் செயல்வேண்டு" (ஷை-ருருஅ) மென்னுங் குறள்களிற் போல, அல்லீற்றுவியங்கோள்முடிபாக வேண்டுமென்பதொரு சொன்னீர்மைத்தாய் முடிந்தது. இனிப் "பல்லோர்படர்க்கை" (தொல்-சொல். உஉசு) என்னுஞ் சூத்திரத்துள், "ஓஒதல்வேண்டு" மென்பதனையு மீற்றுவியங்கோளாக்கினர் நச்சினார்க்கினியரென்க.

சஎரு. "பீலிபெய்...... பெயின்."

நு - லை:—சினைவினை முதன்மேனின்றது, சினைமேனிற்கிற் சாகாட்டச் சிறுமென ஒற்றுமிகும். பிறிதுமொழிக லென்னுமலங்காரம்; இதனை, நவலாநவற்சி, ஒட்டென்பாருமுளர்.

சஎசு.—"நுனிக்கொம்ப.........விடும்."

நு - லை:—ஏறினுரென்னும் பன்மை அறிவின்மைபற்றிப்பிழித்தற்கண் வந்தது. "பேதை பெருங்கெழீஇ நட்பி" னறிவுடையார் (அசுசு.) என்னும பன்மை உயர்த்தற்கண்வந்தது.

சஅஎ. "பொள்ளென......யவர்."

நு - லை:—பொள்ளென வென்பது செயவெனெச்ச வாய்பாடு பெற்ற குறிப்புமொழி. கதுமெனவென்பது மது. காரணத்தைக் காரியமாக்கி வேர்த்தல் வெகுளியாயிற்று.

சஅஅ. "செறுநரைக்.........தலை."

நு - லை:—சுமத்தல் - பணிதல். கிழக்கு - கீழ்.

சகூஉ. "முரண்சேர்ந்த.........தரும்."

நு - லை:—முரண் - மாறுபாடு. முரணொடுசேர்ந்தாரை, அரணைச்சேர்ந்தென மூன்றுமிரண்டுமா யுருபுவிரிந்தது காண்க.

சகூரு. "நெடும்புனலுள்.........பிற."

நு - லை:—நெடும்புனல், கடலோடாவென்பன மேலையலங்காரம். நெடுந்தேர் - நெடியதேர். (சகூசு.) நெடும்புனல் - தாழ்ந்தபுனல் (சகூரு.) நெடுங்கடல் - ஆழமுடைய கடல். (கஎ.)

ரு00. "காலாழ் களரி.........களிறு."

நு - லை:—கண்ணஞ்சாமை - பாகர்க்கடங்காமை. கண்ணஞ்சாவுமாய் முகத்தவுமாய வென்றுரைத்ததனால் ஆகார அகரவீற்றுப் பலவறிசொல்லாயின.

ரு0க. "அறம்பொரு......... படும்."

நு - லை:—உபதை - பரிசோதனை. அது வான்மீக ராமாயணத்திற் கச்சித்சருக்கத்திற் காண்க. *

ருகச. "எனைவகையாற்.........பலர்."

நு - லை:—கட்டியங்காரன் கதையைப் பிரமாணமாக வெழுதினதாற் சிந்தாமணி கட்டுக்கதையன்றென்க. எனைவகை எவ்வகையென எகரவினா மாத்திரையாய் நின்றது.

* வான்மீகத்தில், பாலகாண்டத்து க00-ம் ஸர்க்கம் "கச்சித்" என்ற முதலையுடைய சுலோகங்களுடைமைபற்றி, "கச்சித்சருக்கம்" எனவழங்கும். இச்சருக்கத்தின், உசு-ம் சுலோகத்தே, இவ்வுபதை குறிப்பிக்கப்பட்டுளது.

௫௨௨. "விருப்பரூச்.........தரும்."

ந - லை:—அருப்பு - அடிப்பாட்டுக் காரணவிகாரம். அரும்பு- முதனிலைத்தொழிற்பெயர்.

௫௨௩. "அளவளா.........தற்று."

ந - லை:—அளவளாவு மிகுதிக்கணிரட்டித்தது. "அன்புமிகுதி யினளவளாயவளோ" (திருக்கோவை - ௧௬௫.) என்னுங் கொளுவுட் காண்க. குளவளா - குளப்பரப்பு.

௫௨௪. "சுற்றத்தாற்.........பயன்."

ந - லை:—பெற்றதனாலென்பதனுள் அகரமும் அன்சாரியையும் விகாரத்தாற் றொக்கன. பெற்றத்தாலெனத் தகரவொற்று மிகல். "மேகேழுவரையு மில்லோன்" (திருக்கோவை-௨௬௬) என்னுங்கோ வையாருள், வருட்டியென்பதுமது.

௫௩௬. "இழுக்காமை.........தில்."

ந - லை:—வாய்க்குமாயி னெனப்பொருள்பட்ட வாயினென்ப து முதனிலைத்தொழிற் பெயரடியாக வந்த வினையெச்சம். முதனி லைத் தொழிற்சொல்லாய் வந்த வினையெச்சமாகில் வாய்க்கினென்றி ருக்கும்."பூண்பதென்றேகொண்ட"(௩௨௩) என்னுங்கோவையாருள் 'எழில்வாய்' என்பதுமது. *

௫௪௧. "ஓர்ந்து.........முறை."

ந - லை:—இறைமை இறையெனவும், செய்வது செய்வஃதெனவுநின்றன. ஈண்டாய்தல் பெறாதற்கு விதியின்மையி னவ்வாறுரைத்தார். செய்யுட்டொடைகாரணவிகாரம்.

௫௪௨. "வானோக்கி.........குடி."

ந - லை:—நோக்கிவாழ்தல் - இன்றியமையாமை. மூன்றன் சூத்திரத்துள் (தொல். சொல்-௬௩)நோக்கலாத நோக்கமென்பதுமது.†

* இதனால், "எழில்வாய்த்த" என்பது பாடமன்மை விளங்கும்.

† "கண்ணானோக்கும் நோக்கமின்றி, மனத்தால் நோக்கும் நோக்கம்" எனப்பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.

௫௪௬. "வேலன்று...... ...தெனின்."

ந - லை:—கோடானென்பது பாடமாயின், கருவியின்றொழில் வினைமேனின்றது. இனி, எழுத்தாணியெழுதுமென்பது வினைமுதலின்றொழில் கருவிமேனின்றது. "மரப்பாவை நாணாலுயிர்மருட்டியற்று" (௧0௨0) என்பதுமது.

௫௫0. "கொலையிற்.........நேர்."

ந - லை:—களைகட்டல் - களையைக்களைந்து காத்தல்.

௫௫௧. "கொலைமேற்.........வேந்து."

ந - லை:—கொண்டாரிற்கொடிது வேந்தென்றதனாற் பன்மையுமொருமையும் பால்மயக்கு, உறழ்ச்சி இன்னுருபு—இரண்டிலக்கணமுங் கூடவெழுதினார். "அறனழீஇ" (௧௮௨) யுள்ளுமது. "குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம்" (௯௫௭) என்பதனைப் பால் மாறுபட்டதென்றதனானுமறிக. வேந்தென்ப துயர்திணைப்பொருட்கண் வந்த அஃறிணைச்சொல்; அரசு, அமைச்சு, ஒற்று, தூதுமது. 'குடிமையாண்மை' (தொல். சொல்-௫௭) என்னுஞ் சூத்திரவிதியால் வேந்து அஃறிணைச்சொல்லாய், "தின்றுந் திசைத்த திவணியல் பின்றே" (ஷை-௫௯) என்னும் விதியால் கொடியனென் றுரையிட்டார் போலும். அவர் கருத்தெம்மனோர்க் கறிதலரிதென்க.

௫௫௭. "துளியின்மை.........முயிர்க்கு."

ந - லை:—பாற்றுளி நெய்த்துளியென்றுமாமாகலிற், சிறப்புப்பற்றித் துளி மழைமேனின்றது.

௫௫௮. "இன்மையி.........படின்."

ந - லை:—உடைமை, எழுவாய்; கட்டியிறக்குதல் கிட்டிகட்டுதல் முதலாயினகாண்க.

(தொடரும்.)

பத்திராசிரியர்.

திருச்சிற்றம்பலம்.

# இரட்டைப்புலவர் சரிதம்.

(முற்றொடர்ச்சி)

எண்ணாதீ

" ரிக்கலிங்கம் போனாலென் னேகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்க முண்டே துணை."

எனக்கூறி யுட்கார்ந்தனர். உடனே யச்சொக்கலிங்கப் பெருமானுடையகிருபையால், நீரிலமிழ்ந்த கந்தைவஸ்திரம், நூதனவஸ்திரமாகி, யெழும்பிக் கரையின்கணொதுங்கியிருக்க, அதுகண்டமுடவர், குருடராலதனைக்கொணர்ந்து வரச்செய்துலர்த்தி யுடுத்துக்கொண்டு, இருவருந் தங்கள நித்திய நியதிகளை முடித்துச் சோமசுந்தரக்கடவுளைத் தரிசித்துமீண்டவர்களாய் ஓர்நாள் பாண்டியராஜன் சமுகஞ்செல்ல, அவனிவர்களைக் காண்டலுந் தக்கபரிசில் தரவெத்தனிக்க, அதுகண்ட ஓர் துர்மந்திரி அதைத்தடுக்க, உடனேயிவர்களுட் கண்ணுள்ளவர்கண்டு கோபித்து,

† " புராதன மான கவிப்புல வீரிந்தப் புன்குரங்கு
மராமரம் விட்டிங்கு வந்த தென்னே"—

என்றுபாட, அதுகாரணம் கண்ணில்லார் அறிந்துகொண்டு,

வந்த வாறுசொல்வேன்

" தராதல மன்னுந் தமிழ்யா றனையுந்தன் றம்பியையு
மிராகவ னென்று மிலக்குவ னென்றும்வந் தெய்தியதே."

எனப்பாடிமுடிக்க, இவையெல்லாமுணர்ந்த பாண்டியன், புலவர்மகிழும்படி பரிசில் கொடுத்தனுப்பினன். அவன் பரிசிலாகக்கொடுத்த பொருளையும், தமதுணவுக்காக வேண்டுவனவற்றையும், ஒருவஸ்திரத்தில் முடிந்துகொண்டு, வழிநடக்கையில், மலவிசர்க்கத்திற்காக அம்மூட்டையை ஓர் பிள்ளையார்கோயிலில் வைத்துச்சென்று கழித்

† இது தமிழ்நாவலர்சரிதையில், சித்திரத்தனுமனைப்பாடச் சொல்லப் பாடியது. எனக்காணப்படுகின்றது

துச் சௌசமுடித்துமீண்டு அம்மூட்டையை யெடுக்கப்போயினர். அப்போ தம்மூட்டை யவிழ்ந்திருந்ததன்றி அதில் முடிந்துவைத்திருந்த பொருள் மாத்திரமில்லாமற் போனமையால் அங்கெழுந்தருளியுள்ள விநாயகக்கடவுளைநோக்கி, ஒருவர்,

* "தம்பியோ பெண்டிருடி தாயா ருடன்பிறந்த
வம்பனே நெய்திருடு மாமாயன்"—

என்று கூறினர், உடனே மற்றொருவர்;

நம்பியவிழ்
"மூத்தவனே நம்பான் முடிச்சவிழ்ப்பா னென்செயலாங்
கோத்திரத்துக் குள்ள குணம்."

என்றோதி, யதனைமுடிந்து தலையின்கீழ் வைத்துக்கொண்டு இருவருமங்ஙனே சிலநேரம் சயனித்திருந்து, பின்னரெழுந்துசெல்ல, அம்மூட்டையையெடுத்தனர். அப்போது முன்னிருந்த பாரத்தினும், பதின்மடங்கதிகமாயிருத்தலைக்கண்டு வியந்து முடிச்சவிழ்த்துப்பார்க்க, அதனுள் முன்னர்க்காணமற்போனபொருள் விசேடமாயிருக்கக் கண்டு மகிழ்ந்து, சிலநாளங்கிருந்து அதன்பின்றை நாள் அந்நாட்டிலேயே கொடையாளனாகிய "திருவேங்கடமென்பவனையடுக்க, அவனிவர்களுக்கிரங்கிச் சம்மானம்பண்ணப் போந்தருணத்தில், அவன் தமையனாகிய "கண்ணுக்கினியா" னென்பவன் றடுக்க, அதுகண்ட முடவர் சினந்து,

"தேன்பொழியும் வாயான் றிருவேங் கடத்துடனே
யேன்பிறந்தான் கண்ணுக் கினியான்காண்"—

என்றோத, அதுகேட்ட குருடர் விடயமின்னதென்றறிந்து கொண்டவராய்,

யான்சொலக்கேள்
"ஸ்ரீதேவி யார்பிறந்த செய்யதிருப் பாற்கடலுள்
மூதேவி யேன்பிறந்தாள் முன்."

---

* இவ்விஷயம் "புலவர்புராண"த்திலும் வருவதைக்காண்க.
"தம்பியொருபெண்டிருடி தாயினுடன்பிறந்தவனைச்சாற்றுமாமன்
கொம்பியவாய்ச்சியர்குலையநெய்திருடினோனனதுகுலத்துக்குள்ள
வம்பிதெனநானறிவேனீயுமெந்தம்பணந்திருடல்வழக்கோவென்று
தும்பிமுகப்பெருமான்றன்மடிபிடித்தோர்புழுப்பாட்டுஞ்சொன்னனன்றே

என்றேதிமுடித்துமீள, இளையானதுகேட்டு வருந்தியுடன்சென்று சமாதானங்கூறித்தந்த பரிசில்களைப்பெற்றுக்கொண்டு நடுநாட்டை நோக்கிச்சென்றனர். அங்கே "திருவண்ணாமலையில்," சாத்தேய மதசித்தாந்தியான "சம்பந்தாண்டா"னென்பவன் தன் றலைமுண்டிதமாகச் சௌளம்பண்ணிக்கொள்ளும் சமயத்தில், இவர்களவன்பாற் செல்ல, அவனிவர்களைக்கண்டு பெரும்புலவர்களென்றறிந்திருந்தும் தனது வித்தியாகர்வத்தினால் மரியாதைசெய்யாமல் ஓர் வெண்பா "மன்னென்"றெடுத்து "மலுக்கெ"ன்று முடிக்கவல்லீரோவென்றனன். அதுகேட்டவிவர்கள் நகைத்து, ஒருவர்,

† " மன்னுதிரு வண்ணா மலையிற்சம் பந்தனுக்குப்
பன்னு தலைச்சவரம் பண்ணுவதென்"—

என்று கூறினர். உடனே மற்றொருவர்,

மின்னி
" னிளைத்த விடையடவா ரெல்லாருங் கூடி
வளைத்திழுத்துக் குட்டா மலுக்கு."

என்று கூற. அதுகேட்ட "சம்பந்தாண்டான்" கர்வமடங்கினவனாய்த் தக்கபரிசில்கொடுத்துவந்திப்ப, அதுபெற்றபுலவர்கள், மீண்டும் அண்ணாமலைநாதரைத் தரிசித்துக்கொண்டு "கொங்குதேய"த்தினை நோக்கிச்சென்றார்கள். அத்தேயத்திலிவர்கள் ‡ "கொடிமாடச்செங்குன்றூ"ரின்கணெழுந்தருளிய அர்த்தநாரீஸ்வரரைத் தரிசிக்கக் கடைமார்க்கமாகச்செல்லுகையில், அவ்வீதியிலிவர்களை யிடித்துக்கொண்டுசென்ற கொங்குவேளாளர்களுடைய பெண்டிர்களைக்கண்டு ஒருவர்,

" செங்குன்றூர் வேளாண் சிறுமியரெல் லாங்கொழுத்தே
யங்காடிக் கண்வர் தலைகின்றார்"—

† இது காளமேகப்புலவர்பாடியதாகத் தனிப்பாடற்றிரட்டிலும், விநோதரசமஞ்சரியிலுள்ள காளமேகப்புலவர் சரிதத்திலும், இக்காலத்து வழங்குகின்றதாயினும், பழையவழக்கு இரட்டையர்க்கே காணப்படுகிறது.

"சொன்னவரைப் பார்த்துமுன்பி னின்னசொற்க ளியைதரப்பாத் தொடுமி னென்றார், னன்னவர்தா முடன்மன்னு மருணைநகர் வாழ்சம்பந் தாண்டா னுக்கீண், டென்னவிதத் தினுக்காகத் தலைச்சவரம் பண்ணுகின்ற தென்ன மின்னார், மன்னவனைக் காந்தளங்கை கொடுகுட்டா மலுக்கென்றும் வகுத்திட் டாரே.

எனவரும் புலவர்புராணத்தையும், தமிழ்நாவலர்சரிதையையும் பார்க்க.

‡ கொங்குநாடேழினிலொன்று.

என்றுகூற, மற்றொருவர்,

தங்கொழுநர்

"போதா மளவுநன்செய் புன்செய்க் குழைத்துறஙகு
மேதா விடிப்பவ ரற்றே."

என்று கூறினர். இப்பாலிவர்கள் சிவதரிசனஞ் செய்துகொண்டு, கொங்குநாட்டிலிருக்க மனமின்றிச் சோழநாடு செல்லக்கருதித்திரும்புகையில், மலையுமலைச்சாரலுமாகிய கடுவழியிற்சென்று வருந்துங்கால், ஒருவர்,

"குன்றும் வனமுங் குறுகி வழிநடந்து
சென்று திரிவதென்றுந் தீராதோ"—

என்றனர். அதுகேட்ட மற்றொருவர் மனஞ்சலித்து,

வொன்றுங்

"கொடாதாரைச் * சங்கென்றுங் கோவென்றுஞ் சொன்னு
விடாதோ வதுவே யிது.

என்று கூறிநடக்க இருவரும் சோழநாடுகுறுகி வழியில் தம்மைப் போனறருள்பெற்று ஆசுகவிப்பெருமாளாகிய, காளமேகப்புலவனைக்கண்டு தம்முடனழைத்துக்கொண்டு கமலாலயமென்னும் திருவாரூரையடைந்து $ தேவாசிரியனைவணங்கிப் புற்றிடங்கொண்ட வன்மீகநாதரையும், வீதிவிடங்கப்பெருமானையும சர்வலோகநாயகியாராகிய பிராட்டியாரையுந் தரிசித்தனர். அப்போது மேலிருக்கும் குருடர்,

† "நாணென்றால் நஞ்சிருக்கு நற்சாபங் ‡ கற்சாபம்
¶ பாணந்தான் ....................."—

* சங்கநிதியென்றும், காமதேனுவென்றும்.

$ கோயில்வாயிலிலிருக்குமண்டபம்.

† இப்பாடலின்பொருள் அக்கினிஸ்தம்பமாய் விளங்கியிருப்பவனே! சிறப்புப்பொருந்திய திருவாரூரில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானே! திரிபுரதகனஞ்செய்தகாலத்தில் உன்கையிலேந்தியவில் நாரியோ நைந்திருந்தது. அவ்வில்லோ வளைக்கப்படாத கல்லாயிருந்தது. அம்போ மண்தின்னப்பட்டிருந்தது. இப்படி உனக்குக்கிடைத்த யுத்தாயுதமெல்லாம் ஒன்றுக்கும் உதவாமற்கேவலம் அவலமானவைகளாயிருக்க, சத்துருக்களுடைய நகரத்தை நீ எரித்தாயென்பது எப்படியோ? யோசிக்குமிடத்திற் சிரிப்பாயிருக்கிறதென்பாம்.

நாண்நஞ்சிருக்குமென்றது - விஷம்பொருந்திய ஸர்ப்பமென்றும்.

‡ கற்சாபம் - மேருவில்லென்றும்.

¶ மண்தின்றபாணம் - பூமியுண்ட விஷ்ணுவென்றுமாம்.

எனப்பாடி அவ்வடியை முடிக்க நாவெழாதிருக்க, அக்கால் அருகிலிருந்த காளமேகப்புலவர், "மண்டின்றபாணமே" எனக்கூறினர். அதுகேட்டுக் கீழிருந்தமுடவர், தம்மால் முடிக்கமுடியாத சீர்களை ஆச்சரியப்படத்தக்க பொருளமைதியுடன் முடித்ததற்கு வியந்து, பாட்டின் எஞ்சியபகுதியை,

தாணுவே

"சீராரூர் வாழுஞ் சிவனே சிரிப்பன்றோ
நேராரூர் செற்ற நிலை."

எனப்பாடி முடித்துப்பின், காளமேகப்புலவரை மெச்சி,

"விண்டின்ற கீர்த்தி விளைகாள மேகமே
மண்டின்ற பாணமென்ற வாயினிக்க—கண்டொன்று
பாகொடுதேன் சீனியிடும் பாக்கியம்பெற் றேமிலையே
யாகெடுவோ மூக்கிங்கெனை ஞும்."

என்று கூறினார்கள். அதுகேட்ட காளமேகப்புலவர் மகிழ்ந்து நம்மையிவர்கள் துதிக்க, நாம்வறிதேயிருத்தல் மரபல்லவென்று கருதி,

"பூண்டான் முறையிற் புவியுணுந்தா தன்மகனு
மாண்டான் மகனும்போனன் றனைவுமக்—கீண்டெதுதான்
வாய்க்கா § தயிந்தலத்தீர் வானமுது முங்கண்மொழிக்
கேட்க்காதே லென்மொழிக்கிங் கென்."

என்றுகூறித் துதித்து அவர்களிடத்தினின்றும் விடைபெற்றுக் குடிதில் நீங்கிப் பலவிடங்கள்தோறுஞ் சென்று பாடல்பாடிப் பரிசில்பெற்றுவருங் காலத்துத் தமக்கெதிர்ப்பட்ட ஒரு மங்கையைக்கண்டு அவளதிடையை வியந்து,

"நடையொன்று போதகங் கோடொன்று மென்முலை நாட்டமிரு
கடையொன்று நீல விழியிணை யாலங் கமலமுகப்
பெடையொன்று தேமற் பிறைசூடு நாதன் பிரமன்வெற்பி
விடையொன்று மில்லைமற் றெல்லா வுறுப்புமுண் டேந்திழைக்கே."

"பாதாதிகேச முதலா விவளைப் படைத்தமலர்
வேதா மருங்குல் வெளிவைப்ப னேவிந்த மேதினியி

---

§ செங்குந்தமரபிலுதித்தீர்.

லா தார மின்றி யிரண்டிள நீரந் தரகிற்குமோ
ஏதா யினுங்கொஞ்ச மில்லா திராதிடை யேந்திழைக்கே."

எனப்பாடியும்,

"ஓங்கிய செந்தமிழ்த் தாதற் கடிமையவ் வூரதனு
ளுங்கவி சொல்வது மில்லையென் றேசம்ப நாடன்சொல்ல
வாங்கவ னேறுஞ் சிவிகை சுமந்து மடப்பையிட்டுந்
தாங்கவி கொண்டதுங் கூவந்தி யாக சமுத்திரமே."

"மட்டாருஞ் செங்கழு நீர்மணி மார்பனை வாழ்த்துமந்தக்
கிட்டாத யாசகர் கிட்டிவந் தாலதைக் கேட்டுமுன்னுட்
பட்டோலை வாசித் தவரவர்க் குள்ள பரிசையெல்லாந்
தட்டா தளிப்பது கூவந் தியாக சமுத்திரமே."

எனக் கூவத்தின்கண், பெருங்கொடைவள்ளலாகிப் புகழ்பெற்றுத் திகழ்ந்த நாரணனென்பானைப்பாடி மகிழ்ந்திருந்தனரென்ப. இவை, தொண்டமண்டல சதகத்தின் மேற்கோளில்,

"இடுவார் சிலரு மிடாதார் பலரும்
வடுவிலா வையத் திருக்கப்—படுபாவி
கூவத்து நாரணனைக் கொன்றாயே கற்பகப்பூங்
காவெட்ட லாமோ கறிக்கு."

எனவருவதைக்கண்டுகொள்க. அன்றியும், வீரசம்பு என்பவர்க்கும் இவர்க்கும் நடந்த சமபாஷணையிலும், கூவராயன் ஈகைதனைப்புகழ்ந் திருப்பது வருமாறு:—

வீரசம்புவினு.

"பதிவீர சம்புவென்று பாராமற் கல்விக்
கிதமுளவி ரட்டையரே யீகை—யுதவில்வலக்
கைத்தலத்திற் கொண்டு களிக்காம லும்மிடக்
கைத்தலத்திற் கொள்ளுவதேன் காண்."

இவர்கள்விடை.

"கூவரா யன்றியாகங் கொள்வோம் வலக்கைமுடி
யாவர் தரினுமிடக் கைகொள்வோம்—பூவுலகின்

மின்பணிமின் னார்மதனே வீரசம்பு வேயினிநா
மின்பமுறு நேரே மினி."

## வீரசம்புவினு.

"என்னுடைய பேரும் புகழு மிருஞ்சீரு
மென்னுடைய வீகையுங்கண் டெப்படிநம்—முன்னவனை
யாவலுட னேயதிகஞ் சொன்னீ ரிரட்டையரே
கூவரா யன்னியல்பென் சொல்."

## இவர்கள்விடை.

"மாதாபி தாவுமவன் மன்னுகுரு தெய்வமவன்
றாதா வவனே தருங்கீர்த்திக்—காதாரன்
றியாக சமுத்திரன் றண்கூவ ராயன்றன்
னீகைதனைச் சொல்லவெளி தே."

## வறுமைவந்தடைந்து வருந்தியபோது, தெய்வங்களை நோக்கி யுரைத்தது.

"கேட்ட வரமளிக்குங் கீர்த்தியுள்ள தெய்வங்காள்
கூட்டோடே யெங்கே குடிபோனீர்—பாட்டாய்கேள்
செல்கால மெல்லாஞ் செலுத்தினோ மல்காலங்
கல்லானோஞ் செம்பானோங் காண்."

## இரட்டையர் பாடிய வெண்பா.

"கண்ணாடி காட்டுங் களிறுஞ் சுரைப்பழத்தி
னுண்ணாடு புக்க வுறுபொருளு—மண்ணை
கனங்குறைந்த வாறென் கயவர்பாற் சென்று
தினந்தெரிந்த வாறெனவே செப்பு."

தெரிந்தவாறுவது, கயவரை முன்காட்சியிற் கனமாகநினைத்துப்பின் இலேசாகத்தெரிந்தவாறுமென்க.

இனிப், புலவர்களிருவரும் காளமேகப்புலவரை மீண்டுங்காண வேண்டுமென்னும் விருப்பால் அவருடைய வாசஸ்தானமான திருவானைக்காவுக்குவர, அப்போது தெய்வகதியால் அப்புலவர் தேகவி

யோகமெய்தி அவரது திருமேனிமயானத்தில் வேகக்கண்டு இவ்விரு புலவர்களுந் துக்கித்து,

" ஆசு கவியா லகில வுலகெங்கும்
வீசு புகழ்க்காள மேகமே—பூசுரா
விண்டின்ற செந்தழல்வாய் வேவதே யையையோ
மண்டின்ற பாணமென்ற வாய்."

எனப்பாடிச் சோழநாட்டிலுள்ள பிறதலங்களையுந் தெரிசித்துக்கொண்டு மீளவு முன்விட்டுவந்த தொண்டைநாட்டைநோக்கி நடந்துவருங் காலையில், காஞ்சிமாநகரத்தில் அரசாண்டிருந்த சோழவமிசத்தினன் ஓர்நாள் யாதுகருதியோ யாகஞ்செய்தற்கெண்ணிப் பூமியைத் திருத்துகையில், மண்மேடாயிருந்தது கரைந்து "ஆயிரக்கான்மண்டபமும், விகடசக்கர விநாயகராலயமும" விளங்கக்கண்டு, ஆனந்தக் கடலிலாழ்ந்து பரவசனாய் இவ்விருபுலவர்களையும் ஒற்றரைக்கொண்டு வரவழைத்து அவர்கட்கு வந்தனைவழிபாடு புரிந்து ஓ! தெய்வீகப்புலவர்களே! தாங்களுலாவிற்குறித்தபடியே நிகழ்ந்தன. அதியற்புதமே! தங்களுலாவுந்தெய்வீகவுலாவே எனப்புகழ்ந்து அரங்கேற்றல்செய்வித்துப் புலவர்களுக்குக் கனகமழைசொரிந்து சந்தோஷப்படுத்தினன்.

(தொடரும்)

சி. கு. நாராயணசாமிமுதலியார்,
கோவை.

---

## விவசாயக் குறிப்பு.

[சென்னை விவசாய டிபார்ட்மெண்டிலிருந்து.]

தென் ஆற்காடுஜில்லா நெல்லிக்குப்பம் ஸ்டேஷனுக்கு அடுத்த பாலூரில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் சர்க்கார் விவசாயபண்ணையில் நெல் விருத்தியைக்குறித்துச்செய்த பரிட்சைகளின் சில அனுபவங்களையும் நெல்விதையைப் பொறுக்கியெடுத்துப் பயிர்செய்ததால் அது எவ்வளவு விருத்திக்குக் கொண்டுவரப்பட்டதென்பதையும் நான் சுருக்கமாகச் சொல்லுகிறேன்.

பாலூரைச் சுற்றிலுமுள்ள சமுசாரிகள் தங்களுடைய இரு போக நன்செயில் முதற்போகத்துக்காக சுவர்ணவாரி என்னும் நெல்லையும், இரண்டாம் போகத்துக்காக கருடன்சம்பா (கிருமணி) என்னும் நெல்லையும் பயிரிட்டுவருகிறார்கள். முதற்போகத்தில் சுவர்ணவாரியை நாற்றுவிட்டு நடாமல் விதைப்பு நடந்துவருகிறது. ஏகரா ஒன்றுக்கு 22-முதல் 30 பட்டணம்படி விதை வைகாசியில் விதைக்கிறார்கள். இந்தக்காலத்தில் வாய்க்கால்களில் அதிகஜலம் கிடையாது. அநேக நிலங்கள் ஜலம் எட்டாமல் தரிசாகக்கிடக்கும். ஜலம் அதிகம் வேண்டாததும் அதிகமாய்க் கிளைக்கக்கூடியதாயுமுள்ள பங்கு என்னும் ஒருவகை நெல்லை ஷை பாலூர் பாரபண்ணையில் ஏகராவுக்கு 7½-படி விதைவீதம தெளிவாக நாற்றுவிட்டு 30-நாளுக்குள் நாற்றுக்களைப்பிடுங்கி ஒவ்வொரு நாற்றாக இரண்டு ஏகராவில் நட்டார்கள். ஆனால் ¼ ஏகராவில் 4 அங்குலத்துக்கு ஒருநாற்றும், ¼ ஏகராவில் 6 அங்குலத்துக்கு ஒருநாற்றும், மற்றவைகளில் 8 அங்குலத்துக்கு ஒருநாற்றும், மற்றொருதுண்டிலும் சாலையிலும ¼ ஏகராவில் சொர்ணவாரியும் இப்படிப்பலவிதமாக நட்டார்கள். (சாலை நடவைப்பற்றிக் கீழேகொஞ்சம் விவரமாய்ச்சொல்லுகிறேன்.) ஒற்றை நாற்று நட்டபோதிலும் ஒவ்வொன்றும் 10-முதல் 20, 30-வரையில் கிளைப்புவிட்டுப் பயிர்கள் நன்றாய்வளர்ந்து நல்ல கதிர்களுடன் பார்த்தவர்கள் ஆச்சரியப்படும்படி விளைய, அறுவடைசெய்து இரண்டு ஏகராவுக்கும் கணக்கெடுத்துப் பார்த்ததில் சராசரி ஏகராவுக்கு 1077¾ படி வீதம் கிடைத்தது. சாலையில் நட்ட நடவு எல்லாவற்றிலும் அதிகம் கண்டுமுதலைத் தந்தது. செய்நேர்த்தி முதலியவை எல்லாம் பக்கத்துச் சமுசாரிகள் செய்வதுபோலவே நான் செய்ததேயல்லாமல் வேறில்லை. இது நிற்க,

இரண்டாம் போகமாகிய சம்பாப்பயிரையும் விருத்திக்குக் கொண்டுவரக்கருதி அவ்வவ்விடங்களில் மிகுதியாகப் பயிரிட்டுவரும கருடன்சம்பாவென்னும நெல்லைவாங்கி நாற்றங்காலில் ஏகராவுக்கு 6 பட்டணம்படிவீதம் தெளிவாக நாற்றுவிட்டுச் சென்ற 1907-௵த்தில் ஒற்றைநாற்றாக நட்டார்கள். நாற்றுக்கள் 30 நாளைக்குள் தூறுவெடித்துக்கிளைப்பி பூமியை மூடிக்கொண்டன. இத்தக்

காலத்தில் நடும்பொழுது பார்க்காதவர்கள் ஒற்றைநாற்று நடவு என்று சொல்லமுடியாது. பக்கத்துச் சமுசாரிகள் வழக்கப்படி நட்டநடவுகள் கொஞ்சம் வெளுத்திருக்க ஒற்றைநாற்று நடப்பட்ட பயிர்கள் பசுமையாயிருந்தன. இரண்டுமாத காலத்தில் ஒற்றைநாற்று ஒவ்வொரு தூறிலும் 10-முதல் 20 கிளைகள் வெடித்து நன்றாய் வளர்ந்தன. சமுசாரிகள் பயிரில் சராசரி 3 அல்லது 4 தூறுக்குமேல் இல்லை; சமுசாரிகளுக்குக் கிடைத்த மாசூலைவிடப் பாரத்தில் மாசூல்கொஞ்சம் அதிகமாகவேயிருந்தது. தங்கள் பயிர்செழிப்பாயும் கதிர்கள் நன்றாய் வராமலிருந்தபோதிலும் குடியானவர்கள் தங்கள் தங்களுக்கு மறுவருஷத்துக்குவேண்டிய நெல்விதையைத் தங்கள் மாசூலிலிருந்து வழக்கப்பிரகாரம் எடுத்துவைத்துக்கொண்டார்கள். ஆனால் பாலூர் சர்க்கார் பாரத்திலோ ஒவ்வொரு வயல்களிலும்போய் மிகுதியாகக் கிளைத்தபயிர்களிற் செழிப்பான கதிர்கள்வேறாகவும் மணிநெருங்கின கதிர்கள்வேறாகவும் பொறுக்கியெடுத்து விதைக்காகத் தனித்தனியே வைத்துக்கொண்டார்கள்; இப்படி ஒற்றை நாற்றிலிருந்து நன்றாய்க்கிளைத்து நீண்ட கதிர்களிலிருந்து பொறுக்கியெடுத்த விதைநெல்லை 1908-ம வருஷத்தில சம்பா நடவுகாலத்தில் நாற்றங்காலில் ஒரு செண்டு நிலத்தில் ஒரு பட்டணம்படி விதையாக ஓர் ஏகராநட 6 பட்டணம்படி வீதம் நாற்றுவிடப்பட்டது. இப்படி விதையை நாற்றங்காலில் தெளிவாகவிடுவதால் நாற்றுக்கள் (கேழ்வரகு) கேப்பைபோல் பட்டை உறப்பாயும் செழிப்பாயும் வந்தன. இந்த நாற்றை சுமார் 39-வது நாளிலிருந்து 40 நாளைக்குள் 6 அங்குலத்துக்கு ஓர் ஒற்றைநாற்றாக நட்டார்கள். இப்படிப் பொறுக்கியெடுத்த விதையைத் தெளிவாக நாற்றுவிட்டு 40 நாளுக்குள் ஒற்றைநாற்றாக நடப்பட இந்த நாற்றானது அதற்கு முந்தியவருஷம்போல் அல்லாமல் ஒவ்வொரு தூறிலும் சராசரி 20-முதல் 40-வரை கிளைகட்டி ஏகரா 1-க்கு சுமார் 1200 படிவரை கண்டுமுதல் கிடைத்தது. அக்கம்பக்கத்திலிருந்த சமுசாரிகளுக்கு ஏகராவுக்கு சராசரி 600 படி கிடைத்திருக்கிறது. முதல் வருஷத்தில் பாரத்தில் ஒற்றைநாற்று நட்டுப் பயிர்செய்து பலன்தந்ததை அறிந்தும் பூமிக்கு அதிக உரம் போட்டதினால் சர்க்கார் பாரத்தில் அதிகம் விளைந்தது என்று சொல்லிக்கொண்டு பாரத்து உத்தியோகஸ்தர் சொல்லை நம்பாமல் சமுசா

ரிகள் மோசம்போனார்கள். அதற்காகச் சென்றவருஷம் உரம்போடும்போதெல்லாம் அந்தக்காலத்தில் ஏற்ப்படும் ஒரு சமுசாரியையோ அல்லது சமுசாரிகளையோ வைத்து வயல்களுக்கு எருவிடப்பட்டது. பாரத்தில் எருவிடுவதெல்லாம் அவ்விடத்தில் சமுசாரிகள் செய்வதுபோலவேதான். அவ்விடத்தில் நன்செய்க்கு பலர் பலவித எருக்கள் உபயோகப்படுத்துகிறார்கள். அவர்கள் நன்செய்க்கு இடும் எருக்களில் எதுசிலாக்கியம் என்றறியும்பொருட்டு ஒவ்வோர் எருவையும் கால் கால் ஏகராவில் பரிசோதனை செய்யப்பட்டது.

அந்த எருக்களாவன:—

1. முத்துக்கொட்டைப் பிண்ணாக்கு ஓர் ஏகராவுக்கு ஒருபாரம் வீதம்
2. மணிலாக்கொட்டைப் பிண்ணாக்கு.
3. அவுரிச்சக்கை.
4. மாட்டுச்சாணி.
5. மணிலாக்கொட்டைக்கொடி.
6. எருக்கந்தழை.
7. பூவரசுமுதலான இதர தழைகள்.

மேற்சொன்ன எருக்களின் தாரதம்மியங்கள் அறியும்பொருட்டு எருவில்லாமல் கால் ஏகராவிலும் சாகுபடி செய்யப்பட்டது.

இதில் அவுரிச்சக்கையில் ஏகராவுக்கு 1144; எருக்கந்தழை போட்டதில் 1072; எருவிடாத பயிரில் சராசரி 764.

இந்த எருப்பரிசோதனைகள் இரண்டு வருஷகாலமாய் நடந்துவருகின்றன. அஃதாவது எருவிடாத நிலத்தில் இரண்டு வருஷகாலமாக எருவில்லை. அப்படி எருவில்லாமற்போனபோதிலும் எருவிட்டுச் சமுசாரிகள்செய்த பயிரிலிருந்துவந்த மாசூலைவிட விதையைப் பொறுக்கியெடுத்து நாற்றங்காலில் விசாலமாக நாற்றுவிட்டு ஒற்றை நாற்றாக நடப்பட்ட பயிரிலிருந்து கிடைத்தமாசூல் மிகுதி. ஆனால், சிலபேர் ஒற்றை நாற்றை நட்டு இவ்வளவு கண்டுமுதலிருக்க இரண்டு நாற்று சேர்த்துப்போட்டால் ஒருவேளை கண்டுமுதல் இரண்டு மடங்கு ஆகாமற்போனாலும் கொஞ்சமேனும் மிகுதியாகக் கிடைத்தாலும் அப்படி நடுவது நலமல்லவா என்று கேட்கவுங்கூடும். அப்படி இரண்டு நாற்றுச் சேர்த்தும் 3 நாற்றுச் சேர்த்

தும் சர்க்கார் பண்ணையிலேயே சமுசாரிகள் பயிரிடுமாதிரி 6 அல்லது 8 நாற்றுச் சேர்த்தும் நட்டார்கள். இப்பொழுது அறுவடையான வருஷத்திலும் பரிசோதித்தோம். தவிரவும் ஒற்றை நாற்றுக்காக 6 அங்குலத்துக்கும் 9 அங்குலத்துக்கும் நட்டும் பரிசோதிக்கப்பட்டிருக்கிறது. மேலும், பாருங்கள், ஒரு நாற்றானது தனிமையாகக் காற்றோட்டமாயிருக்குமேயானால் அது பெரியபுற்றாகி அதிகக் கிளைப்புடன் நல்ல கதிர்களுடன் வருவதை நாமெல்லோரும் பார்த்திருக்கிறோம். அதை அனுசரித்து காற்றோட்டங்கொடுக்க நெற்பயிர் சாலைசாலையாய் நடப்பட்டது. இதிலும் கால் ஏகராவில் நெருங்கிய சாலையும (அதாவது 8 அங்குலத்துக்குச் சாலைகளும்) மற்றொரு கால் ஏகராவில் ஓர் அடிக்கு ஒரு சாலையாகவும் நாற்று நடப்பட்டது. ஆனால், சாலையில் நெற்பயிர் இரண்டு அல்லது மூன்று அங்குலத்துக்கு ஒரு பயிர் நடப்பட்டது. இது எல்லாவற்றிலும் அரை அடி உயரமாய்வளர்ந்து நீண்ட கதிர்களுடன் வந்தது. இதில் களை எடுப்பது மிகவும் சுலபம். இதிலிருந்து ஏகராவுக்கு 1200 படிக்குமேல் கிடைத்திருக்கிறது. ஆனால் இரண்டு மூன்று சேர்த்து நட்ட நடுகையிலிருந்து சராசரி ஒரு ஏகராவுக்கு 900 படிக்குமேல கிடைக்கவில்லை. இவ்வாறு நாற்றுக்களை அதிகப்படுத்தி நடுவதினால் ஏன், தூறுகட்டுகிறது குறைகிறது என்று யோசிப்போம். ஒவ்வொரு பயிரும் தனது வேரைத் தன்னைச்சுற்றிலும் பரவவிட்டு ஆகாரத்தை எடுத்துக்கொள்ளுகிறது. நிலத்திலுள்ள ஆகாரத்துக்குத்தக்கபடியும் ஒரு பயிருக்கும் மற்றொரு பயிருக்குமுள்ள இடைவெளிக்குத் தகுந்தபடியும பயிர்கிளைத்துத் தூறுகட்டுகிறது. ஒரே இடத்தில் இரண்டு நாற்றுச்சேர்த்து நடும்பட்சத்தில் அந்தவிடத்திலுள்ள ஆகாரத்தை அந்த இரண்டு நாற்றுக்களும் பாகஞ்செய்துகொள்ளுகின்றன. இம்மாதிரி நாற்று அதிகப்பட அதிகப்பட ஒவ்வொரு பயிர்க்கும் கிடைக்கும் ஆகாரம் குறைகிறது. ஆகாரம் தகுந்தபடி கிடைக்காததால் பயிர் கிளைக்கிறதில்லை. தவிரவும் ஒவ்வொரு பயிர்க்கும் தகுந்த காற்றோட்டம் இருந்தால்தான் அதன்வேர் பரவும். அடர்த்தியாய் நட்ட முடியின் மத்தியில் காற்றுச்செல்வதற்கு வழியில்லை. ஆகையால் அதிகநாற்றுச்சேர்த்து நட்டவிடத்தில் கிளைப்பு குறைந்து பயிரும் மெலிந்து இருக்கும். ஆகையால் அதிக

நாற்றைச்சேர்த்து அடர்த்தியாக நடுவதில் பலன் இல்லையெனத் தெரிந்துகொள்ளலாம். இப்படி ஒற்றை நாற்றுநடுவதில் மாசூல் லாபம் என்று தெரிந்தபிறகு இதனால் மற்றமுள்ள குணதோஷங்களையும் ஆராய்ந்துபார்ப்போம். ஓர் ஏகராவில் ஒற்றை நாற்றுநட எவ்வளவு படிநெல் வேண்டியதென்பதை கவனிப்போம்; ஒருஏகராவில் ஒரு அடிக்கு ஒரு நாற்றுநட 4840×9=43560 அஃதாவது 45000 நாற்று வேண்டியது; அரை அடிக்கு ஒன்றுநட 45000×4=180000 நாற்று வேண்டியது. ஒன்று தப்பாமல் முளைப்பதாயிருந்தால் 180000 நெல்வேணும்; ஒருபடி கருடன்சம்பா நெல்லை எண்ணிப்பார்த்ததில் 54400 நெல் இருக்கிறது. 6-அங்குலத்துக்கு ஒருநாற்று நடவேண்டுமானால் 3½-படி நெல்விதை போதுமானது. இதற்குமேல் அவரவர்கள் நெல்விதையைப் பொறுத்தும் சில சேதங்களை உத்தேசித்தும் 6-படி விதைவரை ஒரு ஏகராவுக்குப் போடலாம். நெல் சிறியதானால் 3½-படியும் வேண்டியதில்லை. ஆகையால் ஒற்றைநாற்று நடுவதினால் அந்தந்த ஊர்வழக்கத்துக்குத் தக்கபடி விதை லாபம் இருக்கிறது. அதாவது ஏகராவுக்கு 36 - 40 படி விதையில் விதை எப்பொழுது குறைகிறதோ விதைக்க நல்ல விதைகளைப் பொறுக்கியெடுக்கவும் நன்றாகக்காயவைத்துக்கொள்ளவும் இடமுங்காலமுங்கிடைக்கும். விதைகளைப் பொறுக்கி வைப்பதிலுள்ள குணகுணங்கள் எல்லோருக்கும் தெரிந்தவிஷயமே. ஆனபோதிலும் அதில் சமுசாரிகள் கொஞ்சமேனும் கவனம் செலுத்தாததினால் பலவகைகளிலும் நஷ்டம அடைகிறார்கள்.

ஆகையால் நல்லபயிரைத் தெரிந்தெடுத்து அதில் நல்ல திறமானகதிர்களிலிருந்து விதையை எடுத்துவைத்துக்கொள்ளவேணும். ஒற்றைநாற்று நடுவதற்கு முடிகள் குறையுமாகையால் நாற்று பிடுங்குவதிலும் லாபமுண்டு. நாற்றுப் பட்டை உறப்பாயிருப்பதால் கேப்பை நடவுமாதிரி ஒவ்வொரு நாற்றாக நடுவதில் பிரயாசையில்லை. ஆகையால் ஒவ்வொரு நாற்றாக நட்டுப் பயிர்செய்வதில் அநுகூலமேயொழியப் பிரதிகூலம் கிடையாது. எவ்வளவு தூரத்துக்கு ஒருநாற்று நடவேணுமென்ற சங்கதி பூமிசாரம் முதலான அநேக காரணங்களைப் பொறுத்திருப்பதால் தங்கள் தங்கள் பூமியில் நாற்றை கிட்டவும் எட்டவும் நட்டுத் தீர்மானித்துக்கொள்ளவேண்டியது. தற்காலம் நாட்டு நடவுமாதிரி நடுவதினாலேயே எனக்கு ஏகராவுக்கு 1200 படி கண்டுமுதல் கிடைக்கிறது. நான் ஏன் ஒற்றைநாற்று நடவேண்டுமென்று சிலபேர் கேட்கலாம். விளைவு பூமிசாரத்தை ஒத்தது. பாலூரில் சமுசாரிகளுக்கு 700 அல்லது 800 படி கிடைத்தலால் ஒற்றைநாற்று நடுவதில் கண்டுமுதல் அதிகப்பட்டிருக்கிறது. பூமி சாரத்தினால் நாற்று நடவினாலே 1200 படி கிடைக்கக்கூடுமானால் ஒற்

றைநாற்று அந்தப பூமியில் நட்டால் கண்டுமுதல் அதிகப்படும் என்பதற்குச் சந்தேகமுண்டோ ?

தவிரவும் கருடன்சம்பா ஒற்றைநாற்றாகப் பயிரிட்டோமென்று சொன்னேன், அதுபாத்திரமல்ல.

மிளகுசம்பா, சின்னச்சமபா, முத்துச்சம்பா, மல்லிகைச்சம்பா, சீரகச்சம்பா, வெள்ளைச்சம்பா, வெள்ளைச்சிறுமணி, ஆனைகொம்பன், பூப்பாளை, கோணமணி, சடைச்சம்பா, சினனகுசுமா முதலான 12 நெல்வகைகள் அநேக ஊர்களிலிருந்து தருவித்து 9 அங்குலத்துக்கு ஒரு நாற்றாக நட்டுப் பயிர்செய்ததில் விதை பொறுக்கியெடுக்காமலிருந்தபோதிலும் நல்ல நாற்றுகளை மாத்திரம் நட்டதால் நல்லபலனையே கொடுத்திருக்கிறது. இந்த வகைகளிலும் சமுசாரிகளுக்கு விதைக்காகக்கொடுக்க நெல் எடுத்துவைக்கப்பட்டிருக்கிறது; பங்கு நெல் புதிதானபடியால் தபால்சார்ஜ் உள்பட ஒரு ரூபா நெல் சமுசாரிகளுக்குக் கிரயமில்லாமல் கொடுக்கும்படிக்கு டிபார்ட்மெண்டார் உத்தரவு செய்திருக்கிறார்கள். ஒற்றை நாற்றுப்போட்டு அனுபவமில்லாத சமுசாரிகள் எல்லோரும் தங்களுடைய அபிவிருத்தியைக் கருதி அவரவர்களுடைய பூமியில் விஸ்தீரணத்துக்குத் தகுந்தது போல் பொறுக்கியெடுத்த விதையைககலக்க நாற்றங்காலில் விதைத்துக் கார்நெல்லானால் 18—20 நாளுக்குள்ளும் சமபாவானால் 35—40 நாளுக்குள்ளும் நொஞ்சப்பூமியில் ஒற்றைநாற்றாக நட்டு முதலில் பரிசோதனைசெய்தால் அதன் அனுகூலம் தெரிந்து அபிவிருத்தியடைவார்களென நம்புகிறேன்.

CAMP—KOILPATTI, 17th March 1909. (Signed) S. SUBRAMANIA AIYAR, *Manager.*



உ

திருச்சிற்றம்பலம்.

# தனிச்செய்யுட்கோவை.



## திருவள்ளுவர் பாடல்.

இதனடியிற் காட்டியுள்ள செய்யுட்கள் ௯-ம் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரால், இயற்றியுள்ளனவாகக் குறிக்கப்பெற்று நம் சங்கத்துள் உள்ள சைவசமய சாத்திரங்கள் பலவற்றையெழுதிக்கோத்துள்ள ஓர் ஏட்டினிடையே கண்டனன்.

இவற்றின் முதற் செய்யுள் மட்டுமே தனிப்பாடற்றிரட்டுப் புஸ்தகத்துட் கண்டதன்றி, அதன்றொடர்பாயுள்ள மற்றைச் செய்யுட்கள் இதுவரை வெளிவந்தனவாக எற்குத் தோற்றவில்லை. இச்செய்யுட்கள் திருவள்ளுவநாயனார் கடைச்சங்கத்திற்குச் சென்ற காலத்து அவரை அச்சங்கத்திலுள்ள புலவர்கள் நீர் "எந்த ஊர்" என்றுகேட்க, திருவள்ளுவர்;

எந்தவூ ரென்றீ ரிருந்தவூர் நீர்கேளீர்
அந்தவூர்ச் செய்தி யறியீரோ—அந்தவூர்
முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்
அப்பாழும் பாழா யறும். (௧)

என்னும்பாடலைக் கூறியருளினர்; அதுகேட்ட புலவர்கள் இவர் "ஞானி"யென்றனர். அதற்கு விடையாக வள்ளுவர்;

ஞானவா னென்றீ ரென்னை நாதவிந் துவுங் கடந்து
கானிலை வரையுஞ் சுட்டுக் கடுவெளி பரமா னந்தந்
தானெனு மறிவு தானுந் தவிர்ந்துதன் வசமுங் கெட்டு
மோனமுங் கடந்திட் டப்பால் முடிந்தவர் ஞானி யாவார். (௨)

என்னும்பாடலைக் கூறியருளினர். உடனே புலவர்கள் இவர் "ஐய" ரென்றனர். அதற்கு விடையாக வள்ளுவர்;

ஐயரென் றுரைக்க நாயேற் கடுக்குமோ வருளி லான்மா
உய்யமும் மலங்க ளைந்திட் டுயிர்பர வெளியி லாக்கிப்
பொய்யொடு களவு மற்றைம் புலன்களை யொடுக்கி வானின்
வெய்யவன் மதியம் போல விரவுவ ரைய ராவார். (௩)

என்னும் பாடலைக்கூறலும் புலவர்கள்கேட்டு மிகமகிழ்ச்சியுற்று "இரு"மென்று உபசரித்தனர்; அதற்கு உத்தரமாக;

இருமென வுரைத்தீ ரென்னை யேற்குமோ வேழை யேற்குத்
தருபொரு ளுணர்ந்து சைவ சமயமு மளைந்து நீங்கி
மருட்டரு வினையும் போக்கி மாசிலா வுண்மை ஞானம்
பெருகின ரிருப்ப ரீது பெறுதல ரிருப்ப ரோதான். (௪)

என்னும்பாடலை வள்ளுவர் நுண்ணுணர்ச்சியாலே கூறியதைக்கேட்டுப்புலவர்கள் "போம்" என்று சொல்லினர்; அதற்கு அத்தியற்புதமாக வள்ளுவர்;

போமென வுரைத்தீ ரென்னைப் பொறியொடு புலன்க ளைந்து
மாமெனு மசபை யோடு மங்ஙனே நிறுத்திக் கொண்டே
யேமமும் யாம மற்றே யிரவொடு பகலு மற்றுச்
சோமனுர் பதியை விட்டுத் துறந்தவர் போவ ரன்றே. (ரு)

என்னும்பாடலைக் கூறியருளினர். பின்னும் புலவர்கள் "நில்லும்" எனச்சொல்லினர். அதற்கு விடையாக,

நில்லுமென் றுரைத்தீ ரென்னை நேசபா சங்க ளைந்து
புல்லறி விடும்பாங் காரம் புலைகொலை களவு மற்றுச்
சொல்லிய வுண்மை ஞானச் சுழுமுனை முடிவின் மீதே
யெல்லையுங் கடந்திட் டப்பா லேகமா னவர்க ணிற்பார். (சு)

என்னும்பாடலை வள்ளுவர் கூறி முடித்துப்பின்னர்த் தாம் கொண்டு வந்திருந்த தமிழ்வேதமாகிய திருக்குறளை அப்புலவர் முன் னரங்கேற்றினரென்பது கர்ணபரம்பரைக்கேள்வி.

பொ. பாண்டித்துரை.

---

உ
சிவமயம்.

# திருவள்ளுவர் பரிமேலழகருரை.

திருவள்ளுவரையும், பரிமேலழகருரையையுஞ் சுட்டிச் சென்ற பங்குனிமாசச் செந்தமிழ்ப்பத்திரிகையிலே பத்திராதிபர் எழுதிய குறிப்புரைகளை விருப்பொடும் நோக்கினும். அவ்வுரைகளுள்ளே சில, திருக்குறளுரை படிப்பவர்க்குப் பயன்படத்தக்க நயம்பொருந்தி விளங்குறினும் சிலபல, தடைநிகழ்ச்சிக்கிடனாய் நமக்குப் புலப்படுகின்றன. அவைகளை ஈண்டே எழுதுதும். இதனால் அவர்க்கும் நமக்கும் வரக்கடவதோர் இழுக்கில்லை! "தெரியுங்கா-லின்மையரிதே வெளிறு" என்னுந் திருக்குறட்பாகத்தை அறிஞராயுள்ளார் யாவரும் அறிவர்.

க. பத்திராதிபர் ஏலேலசிங்கன் செயல்கூறிச் "சிங்கன் என்பது சிங்களத்தையாண்ட அரசர்புனைந்த சிறப்புப்பெயர்களுள் ஒன்றும். இதனை அவ்வரசர் கூட்டத்தில்வரும் பரராசசிங்கன், இராஜசிங்கன் முதலியவற்றால் உணர்க" என்றார். இதற்குப் பிரமாணம் யாது? பரராசசிங்கன் என்பது "இகலரசரேறு" என்புழிப்போலப் பகைத்திறந்தெறும் பெருவலி புலப்பட இட்டுக்கொண்டதோர் இயற்பெயர். சிங்கன் என்பதனைச் சிறப்புபபெயர் என்று கொள்ளுங்காற் பரராசன் என்பதே இயற்பெயராய் முடியும். முடியவே வழக்குடன் முரண்படலும் வரும். இராஜசிங்கன் என்பதுமது. பரராசசிங்கனுவான் யாழ்ப்பாணத்திருந்து அரசியல்புரிந்து தமிழ்மொழியையும் வளர்த்துவந்த அரசர்குழாத்துள் ஒருவன்.

## கட்டளைக்கலித்துறை.

இன்னங் கலைமகள் கைம்மீதிற் புத்தக மேந்தியந்தப்
பொன்னம் புயப்பள்ளி புக்கிருப் பாளென்ன புண்ணியமோ
கன்னன் களந்தைக் கவிவீர ராகவன் கச்சியிலே
தன்னெஞ்ச மேடெனக் கற்றூ னெருமுத் தமிழையுமே.

(தமிழ்நாவலர் சரிதை)

## விருத்தம்.

விரகன் முத்தமிழ் வீர ராகவன்
வரகவி மாலையை மதிக்கும் போதெலாம்
உரகனும் வாணனு மொருங்கு தோன்றினுற்
சிரகம் கம்பிதஞ் செய்ய லாகுமே.—(தமிழ்நாவலா சரிதை).

இவையிரண்டும் அந்த அரசர்குழாத்துள் ஒருவர்பாடிய கவிகள். அப்பொழுதைப் புலவர் பலர் தமிழரசர் என்றே இவரைப்பாடுவர். இவர்மேற் பிரபந்தம்பாடிப் பொற்பந்தம்பெற்ற தொண்டைநாட்டுக் கவிவீர ராகவமுதலியாரும் தமிழரசர் என்றே இவரைக்கொண்டார். இவரெல்லாம் சிங்களவரசர்கூட்டத்தவராகச் சேர்த்து வழங்கப்படுவாரல்லர்.

"வள்ளுவன் றனக்கு வளர்கவிப் புலவர்முன் - முதற்கவி பாடிய முக்கட் பெருமான்"என்று கல்லாடத்திலே இறையனுரைக்

கூறலால் இறையனார்கவி வள்ளுவமாலைக்கு முதற்கவியாகி வரல்வேண்டும் என்றார். இறையனார்கவி இப்போது யாண்டு நிற்கின்றது? இடைகடைகளுள்ளே ஒன்றிலே நிற்கின்றதா? சங்கப்புலவர் கவி வரிசையிலே தலைக்கணின்று முதற்கவியாகவில்லையா? "புலவர்முன் முதற்கவி" என்பதும் அதனையே அறிவுறுத்திற்று. அல்லதூஉம் "முதற்கவி" என்பது ஏழாவது விரித்தற்கும் இசையும். அசரீரியும், நாமகளும் கூறிய கவிகள் புலவர்கவிவரிசையிற் சேர்க்கப்படுவனவும், இறுதியிலே வைக்கப்படுவனவுமல்ல. அவையும் மாலையிற் கோவையாதற்பாலன. ஆதலின் அங்ஙனமாயின.

௩. "௪௩-வது குறள் விசேடவுரையிலே— "விருந்தொக்கலு னென்றாங்கு" என்பதன்கணுள்ள "என்றவென்பது விகாரமாயிற்று" என்பது அச்சுப்பிரதியிற் காணப்படுகின்றது. இவ்வாக்கியம் ஏட்டுப்பிரதிகளில் இல்லை. ௨௭-ம் குறளில் "சுவையொளியூறோசை நாற்றமென்றைந்தின்" என்புழி "என்றைந்தின்" என்னும் இடத்தும் இவர் இங்ஙனம் எழுதாமை காண்க." என்றார்.

"பாலொடுநீர் கலந்தற்றே" என்பதனுரையிலே "கலந்ததற்று என்பது விகாரமாயிற்று" என்றவர் இங்கே "என்ற என்பது விகாரமாயிற்று" என்னாரோ? இவ்வாக்கியம் நிற்றலால் வருங் குற்றம் யாது? "அரங்கின்றி வட்டாடியற்றே" என்புழி வாளா சென்றவர் "இறந்தாரை யெண்ணிக்கொண்டற்று" என்புழிக் "கொண்டால் என்னும் வினையெச்சம் கொண்டு எனத் திரிந்து நின்றது" என்று கூறவில்லையா? "வட்டாடியற்று" என்பதும், "கொண்டற்று" என்பதும் ஒருவகை முடிபுடையனவல்லவா? ஒருவகை முடிபுடையவைகளை வேண்டுங்கால் தனித்தனி கூறலும் முன்னாக பின்னாக ஒன்றிற்கூறி மற்றைய உய்த்துணரப்படும் என்று வாளாவிடுதலும் இவர்க்கு வழக்கென்க. சில பிரதிகளிலில்லாமை சிலபிரதிகளில் இருத்தலை விலக்காது. பொருந்துமாறு அவசியம். தமிழ்நாட்டிலுள்ள ஏட்டுப்பிரதிகளும் பலவகை. அவையெல்லாம் ஒருவர் பார்வைக்கு அகப்படல் அரிது.

௪. "இனி ௧௧௮-ம் குறளின் விசேடவுரையிலே "சான்றோர் சீர்தூக்கலாவது தடைவிடைகளாற் கேட்டவற்றை ஊழான் உள்ள

வாழுணர்தலாகவும்'' என அச்சிற காணப்படுகின்றது. எட்டுப்பிரதிகளிலே "தொடைவிடைகளாற் கேட்டவற்றை'' எனக்காணப்படுகின்றது. இதுவே மிகப்பொருத்தமானதும், பரிமேலழகர் கருத்தும் என்பதை—புறப்பொருள் வெண்பாமாலை, வாகைப்படலம் அவையமுல்லையில் வரும் "தொடைவிடையூழாத் தொடைவிடைதுன்னித் - தொடைவிடையூழிவை தோலா" என்னும் பாட்டானும், அதனுரையானும நன்கு தெளியலாம்'' என்றார்.

எட்டுப்பிரதிகளிலும், வெண்பாமாலையிலும் "தொடைவிடை'' என்றிருத்தலால் "தடைவிடை" என்னும் பாடம தவறென்பதே இதன் சுருக்கம்.

"தடை - ஆக்ஷேபம, விடை - சமாதானம்"என்பது ஆறுமுக நாவலரவர்கள் குறிப்புரை. தடைவிடைஎன்பது சித்தியார் முதலாஞ் சூத்திரம். ௩௧-ம கவியுரையிலுஞ் சிவஞானமுனிவரால் பிரயோகிக்கப்பட்டிருக்கின்றது. ஆசாரிய தண்டிகள் காவ்யாதர்சத்திற் கூறிய "ஆக்ஷேபம்" என்னும ஆரியபதம் வீரசோழியகாரராலே "தடைமொழி'' எனவும், தண்டியலங்காரகாரரால் "விலக்கு" எனவும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றது. விலககு எனினும் தடை எனினும் ஒக்கும். தொல்காபபியரும் "விடுத்தலும விலக்கலும்'' என்பர். எழுச்சிக்கு எழல் என்பதும எழில் என்பதும் பெயர். "நுண்மாணுழைபுலமில்லானெழினலம்'' என்புழி நோகக எழல் என்பது விலக்கப்படுவதன்று. திதலை என்பதனை நோக்கித் "திதனி'' என்பதனை விலக்கலாமா? திதனி என்பதுந தேமல், "அலர்முலையாகத்தாரெழிற்றிதனி" (கலி. பாலை. ௩௬) "சாகஞ்சிலீமுகஞ் சார்ந்தன்றே விற்கணையும - வேகமபகக்கழிந்து'' என்னும் வண்டுவிடுதூது சரகம என்பதனைத் தடுக்குமா? சரகம் என்பதும வழக்கு. இரண்டும வண்டு. இங்ஙனம் உறப்பாலொத்து மயக்குவ பல. "தொடைவிடை'' என்பது மயக்கினுந் "தடைவிடை" என்பது தடைப்படற்பாலதன்று. மகாசன சம்மதம்.

௫. "௩௯-ம் குறளின் விசேடவுரையிலே "ஐம்புலனின்பங்களாரத்துய்க்கும் "எண்மையுடைய" என்றிருக்கற்பாலது "துய்க்கும் மேன்மையுடைய" என்றுள்ளது" என்றார்.

அவர் சொல்லிய நெடின்முதலுடைய "மேன்மை" என்பது நாம் வைத்திருக்கும் அச்சுப்பிரதியிலே மென்மை எனக் குறின்முதலுடையதாய் நிற்கின்றது. நம்பிரதி ஆறுமுகநாவலரவர்கள் புவறு அச்சிட்டது. பத்திராதிபர் வைத்திருக்கும பிரதியை அச்சிட்டவர் யாவர்? அச்சிட்டவர் பெயர்கூறாது "அச்சுப்பிரதி" என்று பொதுப்படச் சொல்லுவது ஐயம் விளையாதா? துறவறத்தை நோக்க இல்லறம் மெல்லியதாகுமன்றி எளியதாதலில்லை; துறவே வலியது. "நற்றவம் பரவஞால நாமுடனிறுப்பின் வைய - மற்றமி றவத்திற்கென்று மையவியனைத்துமாற்றாது" (சிந். முத். துறவுவலி) ஆதலின் எண்மை என்பது பொருந்துமாறு எங்ஙனம்? எண்மை - இழிதகவு; இல்லறம் இழிதகவுடையதன்று.

சா. ௰௬-ம குறளுரையிலே "கவானின்கட்கண்ட பொதுவுவகையினும்" என்ற பாடம் "கவானின்மகற் கண்டபொழுதையுவகையினும்" என ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகின்றன. "கவான்மகற் கண்டதாய் மறந்தாங்கு" என்னும் நாலடியின் சொல்லையும் பொருளையும் இப்பாடம் நன்கு தழீஇநிற்றல் உய்த்துணர்க" என்றார்.

உய்த்துணருங்காற் பத்திராதிபர் கொண்டபாடம் பொருந்தாது. நாலடியில்வருஞ் சொல்லையுந் தழுவினாராயின்; கவான் என்றுது "கவானின்" என்றெழுதார். சுருங்கக்கூறும் இவர்க்கு மகன் என்பது மிகைபடக்கூறலாகும். ஒருகால் விளங்கககூறினும் வாக்கியம் வழுவாமல் "மகனைக் கவானின்கட்கண்ட" என்றே எழுதுவர். பொதுவுவகையின்றிச் சிறப்புவகையுங் கூறார். உரையோடு சேர உய்த்துணர்க.

எ. "எஅ-ம் குறளில் "வன்பாற்கண்" எனவும், உரையில் வன்பால் - வன்னிலம் எனவும் காணப்படுகின்றன. ஏட்டுப்பிரதிகளிலே "வன்பார்க்கண்" என்றே உள்ளது. பால் - நிலம் என்பதினும் வன்பார் வன்னிலம் என்பது பொருத்தமாகத் தோன்றுகின்றது" எனறார்.

வன்பால் என்பது வன்னிலங்களாகிய குறிஞ்சியையும் பாலையையும் குறிக்கும. "வன்பால் குறிஞ்சியும் பாலையு மாகும்" என்னுந் திவாகரமும் உண்டு. ஆயினும் பொதுவே வன்னிலம் என்றார்,

அவற்றுள் கடுநிலம் குறித்தற்பொருட்டு. கொடிய பாலைநிலத்துள்ளவற்றன் மரந்தளிர்த்தல் அரிதேயன்றோ! கந்தபுராணகாரரும் "வன்பாலதான வடபால்" என்றார். பால் என்பது பகுதி என்னும் பொருட்டு. இனிப் பார் எனனுஞ் சொற்கும் நிலம் என்னும் பொருட்கும ஆற்றலும் இல்லை. சார்பு முதலிய இயைபினால் அப்பொருள் பயப்பினும ஈண்டைக்கு ஏலாது.

௮. "௩௮-ம் குறளிலே "வீழ்நாள்படாமை" என அளபெடுக்கற்பாலது பிழைப்பட்டுக் காணப்படுகின்றது" என்றார்.

எம்முடைய பிரதியிலே அது பிழைப்பட்டுக் காணப்படவில்லை. "படாஅமை" என அளபெடை அறிகுறியாகிய அகரம் புலப்பட நன்கு விளங்குகின்றது. தவறிய பிரதிகளுள் அச்சுப்பிழை எய்து கொள்ளற்பாலன.

௯. "௨௨௫-ம் குறளில் "ஆற்றுவாராற்றல்" என்பது "ஆற்றுவார்க்காற்றல்" எனவுமுள்ளது. "ஐந்தவித்தானாற்றல்" என்பதில் நான்கனுருபை விரித்தவர் "ஆற்றுவாராற்றல் என்புழியும் விரியாமற் போகாராகலின் பின்னைய பாடமே பாடம்போலும். இவ்வாறே மற்றுஞ் சிலவுள" என்றார்.

ஆற்றுவாராற்றல் என்பது, நான்காவதாயினும், ஆறாவதாயினும் தோன்ற நின்ற பொருட்டொகை; நான்கும் ஆறும் "சாத்தன் மகனிவன்" என்றாற்போல ஈண்டு வேறல்ல. உரைகாரர் நான்கு தோன்ற விரித்தார். தொகையால் வேறு பொருடோன்றி மயங்குமாறு நிற்பதுவே உருபு விரித்துக் கூறற்பாலது. இஃது அங்ஙனம் இல்லாமையால் "உருபு விகாரத்தாற்றொக்கது" என்பது கூறாராயினர். "ஐந்தவித்தானாற்றல்" என்பதுவோ தொகையாலே மயக்கம் கொடுக்கின்றது. ஆதலின் உருபுவிரித்தே கூறல்வேண்டும். "மயக்கங்கொடுக்கு மத்தொகையிருவகை வழக்கினுமாகா" என்று இலக்கணக்கொத்து நூலாரும் கூறுவர். (இலக்கணக்கொத்து. ஒழிபி. ௬) விரிக்கவேண்டிய உருபினை விரியாமையால் வரும் வழுவிற்குப் பரிகாரமாகவே ஆண்டு உருபு விகாரத்தாற்றொக்கது என்றார். இவ்வேறுபாடு நோக்காமல் ஈண்டும் அங்ஙனம் கூறாமையால் "ஆற்றுவார்க்

காற்றல்" என உருபு விரிந்து நிற்கும் பாடமே உள்ளபாடம் என்று கொள்ளுதல் நன்றுதானே? அன்றியும் "ஆற்றுவார்க்காற்றல்" என்னும் பாடம் பின்வரும் "மாற்றுவாராற்றல்" என்னும் எதுகை நயத்தையுங் கெடுத்துச் சந்தபங்கமும் வருவிக்கும். உருபு தொக்குழியெல்லாம் விகாரத்தாற்றொக்கது எனலும் வேண்டும். ஆதலின் முன்னையபாடமே உள்ள பாடமாகும். இன்னும் கூறுதும்.

பரிமேலழகர் "ஐந்தவித்தானாற்றல், என்புழியும், "ஆற்றுவாராற்றல்" என்புழியும் நான்கனுருபு விரித்தாராகவும், "விரியாமற்போகார்" என்றது புலப்படவில்லை. இவ்விரண்டினுங் குவ்வுருபு விரியுமாயினுந் தனிநிலை கெடாது சந்திப்படும். இங்ஙனமாகவும் இன்றொலி காரணமாக "ஐந்தவித்தானாற்றல" என்புழிக் குவ்வுருபை மறைத்துக்கூறிய நூலாசிரியர் "ஆற்றுவாராற்றல்" என்புழி விரித்துக் கூறுவாரா? ஈண்டும் இன்றொலி வேண்டுமே. "தூதுரைப்பான்பண்பு" என்புழியுரையையும் நோக்குக.

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

---

ஸ்ரீ:

## பத்திராசிரியர் குறிப்பு.

ஸ்ரீமத்-அ. குமாரசுவாமிப்பிள்ளையவர்கள், திருவள்ளுவரைப் பற்றிய என் குறிப்புக்களிலே ஏற்பவற்றைக்கொண்டு, ஏலாதவெனச் சிலவற்றில் தம் ஆக்ஷேபங்களைக் குறித்துவிடுத்த விஷயம் மேலே பிரசுரிக்கப்பட்டது. என் குறிப்புக்களுள்ளே, பிள்ளையவர்களால் மிகுதியுந் தடைநிகழ்த்தப்பெற்றவை, பரிமேலழகருரைப் பாடபேதங்களாக யான் குறித்தனவே. அத்தடைகளிலே சில வியவகாரச்செறிவால் விளக்கம்பெற்றிருப்பினும், வேறு சில அங்ஙனமின்றி ஆக்ஷேபித்தற்கு இடனாகின்றன. அவை வருமாறு:—

பிள்ளையவர்கள் விஷயத்தின் ௪-ம் குறிப்பு:—"சமன்செய்து" என்னுங் குறளின் விசேடவுரையிற் "சான்றோர் சீர்தூக்கலாவது,

தடைவிடைகளாற் கேட்டவற்றை ஊழான் உள்ளவாறுணர்தலாக வும்" என்று அச்சுப்பிரதிகளில் உள்ளபாடம், "தொடைவிடை" என இச்சங்கத்துள்ள பலநாட்டுப் பிரதிகளிலும் காணப்படுவதைக் குறிப்பிட்டு, 'இதுவே மிகப்பொருத்தமானதும் பரிமேலழகர் கருதி யெழுதியதும்' என்பதற்கு மேற்கோளுங் காட்டினேன். இப்படி எழுதியதனால், "தடைவிடை" என்றபாடம் தவறென்பதே என் கருத்தெனக்கொண்டு, தடைச்சொல்லின் வழக்கைப் பிள்ளையவர் கள் பெரிதும் வலியுறுத்தினார்கள்.

என் கருத்து, தடையென்னுஞ் சொல்வழக்கை ஆக்ஷேபிக்க வந்ததேயன்று; "தொடையென்பதே மிகப்பொருத்தம்" என்ற எனது முன்வாக்கியமே இக்கருத்தைப் புலப்படுத்தும். ஆயின், யான் கூறவந்ததாவது—பரிமேலழகர் அக்குறளுரையிற் கருதியது "தொடை" என்னும் வழக்கு என்பதேயாம். "சமன்செய்து" என்னுங் குறள் அவையத்தாரை நோக்கிக் கூறியதாகக்கொண்டு, உரையில், "சான்றோர் சீர்தூக்கலாவது, தொடைவிடைகளாற் கே ட்டவற்றை ஊழான் உள்ளவாறுணர்தலாகவும்" என எழுதிய உரை காரரது தொடர்மொழி, வெண்பாமாலையில், அங்ஙனமே அவைக்க ளத்துச் சான்றோர் தன்மைகூறும் "அவையமுல்லை" என்னுந் துறைக்குக்காட்டிய

"தொடைவிடை யூழாத் தொடைவிடை துன்னித்
தொடைவிடை யூழிவை தோலாத்—தொடைவேட்
டழிபட லாற்ற லறிமுறையேன் றெட்டின்
வழிபடர்தல் வல்ல தவை."

என்ற பாட்டில்வருஞ் சொல்லையும் பொருளையுந் தழுவிநிற்றல் காணலாம். இவ்வாறு, பரிமேலழகர், தம்முரையிலே, "முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற் றிக்"கொள்ளும் பெருவழக்கமுடையரென்பது ககo, கஉ0, கரு0- முதலாய திருக்குறளுரைகளால் அறியப்படும். இங்ஙனம், முன் னோரது சொற்பொருள்களை உரைநடைப்படுத்தும் இவரதியல் பும், இங்குள்ள பலநாட்டுப் பிரதிகளிலும் "தொடை" யென்றே காணப்பட்டதும், வெண்பாமாலை அவையமுல்லையில் "தொடை

விடையூழா" என்றுள்ள சொற்பொருள்களே பரிமேலழகர் வாக்கியத்தில் அமைதலும் ஆகிய இவற்றை நோக்குமிடத்து "தொடை" என்னும் பாடமே பரிமேலழகர் கொண்டதென்பது தெள்ளிதாகின்றது. தொடைவிடை என்பவற்றுக்கு - அநுயோகமும் உத்தரமுமென்று பொருள்கூறுவர் வெண்பாமாலை உரைகாரர். அநுயோகம் - வினு, விசாரணை. இதனால் தடைப்பொருளுந் தொடைப்பொருளும் வேற்றுமையுடையதாமாறு காண்க. இங்ஙனம் வினு அல்லது விசாரணைப்பொருளில் தொடை என்ற அரிய சொல்வழக்கு முண்மை தெரியவருதலால், அதனை நாம் எளிதிற் றள்ளிவிடுதல் முறையன்று.

௫-ம் குறிப்பு:—௪௯-ம் குறளுரையில் "ஐம்புலவின்பங்களாரத்துய்க்கும் மேன்மையுடைய இல்வாழ்க்கை" என்பது, பிரதிகளிலே "துய்க்கும் எண்மையுடைய" எனக் காணப்படுவதைப்பற்றிக் குறிப்பிட்டேன். பிள்ளையவர்கள் "மேன்மையுடைய" என்ற பாடம் யாவர் அச்சிட்டதென்பதை யான் விளக்கவில்லையென்றும், நாவலரவர்களது பதிப்பில் "மென்மையுடைய" என்பதே உள்ளதென்றும் கூறினார்கள். சென்னையிற் சில வருஷங்கட்குமுன், பரிமேலழகருரையைப் பொருள்விளக்கத்துடன் விரிவாக அச்சிட்ட பிரதியை நோக்கி "மேன்மை" என்னும் பாடம் குறிக்கப்படலாயிற்று. இப்பாடம் சிறந்ததன்றென்பது எம்மிருவர்க்குமே ஒத்தது. ஆனால், "துய்க்கும் எண்மையுடைய" என்று யான் குறித்த பாடம் தவறென்பதும் "மென்மையுடைய" என நாவலரவர்கள் பிரதியிற்கண்டதே பொருத்தமென்பதும் பிள்ளையவர்கள் கருத்தாகவுள்ளன. இவ்விஷயமாக அவர்கள் எழுதுவன:—

"துறவறத்தை நோக்க இல்லறம் மெல்லியதாகுமேயன்றி எளியதாதவில்லை; துறவே வலியது. "நற்றவம் பாவ ஞால நாமுட னிறுப்பின் வையம் - மற்றமி றவத்துக் கென்று மையவி யனைத்து மாற்றுது." ஆதலின் எண்மை என்பது பொருந்துமாறு எங்ஙனம்? எண்மை - இழிதகைமை இல்லறம் இழிதகவுடையதன்று" என்பனவை.

பிள்ளையவர்கள் குறித்த இக்கருத்து முழுதும், ஆராயுமிடத்து விவாதத்துக்கிடமாகும். "துறவறம், மனத்தையும் பொறிகளை

யும் ஒறுத்தடக்கவல்ல அருமையுடைத்தாயவழியே, அவற்றை ஒறுக்கவேண்டாது ஐம்புலவின்பங்களாரத் துய்க்கும் எண்மையுடைய இல்வாழ்க்கை” என்பது யான் எழுதியபடி, பரிமேலழகர் நடை. இந்நடை, “துறவறத்தை நோக்க இல்லறம் மெல்லியதாகுமேயன்றி எளியதாதலில்லை: துறவே வலியது” என்ற பிள்ளையவர்கள் கருத்துக்கிசைய அமையவேண்டுமாயின், “துறவறம், மனத்தையும் பொறிகளையும் ஒறுத்தடக்கவல்ல வன்மையுடைத்தாய வழியே” என விருத்தல்வேண்டும். ஐம்புலவின்பங்களாரத் துய்க்கும் இல்லறத்தின் மென்மைக்கெதிராக, அங்ஙனந் துய்த்தலரிய துறவின்வன்மையைவைத்துக் காட்டுதலே பரிமேலழகர் போன்றார் நடைமுறையன்றி, அருமைச்சொல்லுக்குமுன் மென்மைச்சொல்லை விரோதிக்கவைத்தல் முறையன்றாம்.

ஆகவே, “மென்மையுடைய.” என்ற பிள்ளையவர்கள் பாடம் பொருந்துமாறெங்ஙனம்? இவற்றால், பரிமேலழகர் வாக்கிய முறையை நோக்கின், அருமைக்கு “எண்மை” என்னுஞ்சொல்லே இயைபுடையதென்பது தெள்ளிதாகும். அருமைக்கு எதிர்மொழி எண்மை அல்லது எளிமையென்பது, “சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ், சொல்லிய வண்ணஞ் செயல்” “எண்பொருள வாகச் செலச்சொல்லி” “எண்பதத்தா லெய்த லெளிதென்ப” என்னுங் குறள்களினுரைகளிலே குறிக்கப்படுதல் காண்க. எளிமை எண்மைகள் - வலிமை வன்மை, அளிமை அண்மைகள் போன்றன. இனி, பிள்ளையவர்கள் “துறவறத்தை நோக்க இல்லறம் மெல்லியதாகுமேயன்றி எளியதாதலில்லை, துறவே வலியது” என்றதுடனமையாது, எண்மை - இழிதகைமை; இல்லறம இழிதகவுடையதன்று” எனவும் எழுதினார்கள். இதனால், எளியது என்பதற்கு இழிதகவன்றி வேறு பொருளில்லையென்பது பிள்ளையவர்கள் கருத்தாதல் விளங்கும். அங்ஙனமாயின், “எண்பொருளவாகச் செலச்சொல்லி” “எண்பதத்தா லெய்த லெளிதென்ப” என்பன முதலிய இடங்கட்கு, இழிதகவுடைய பொருள், இழிதகவுடைய செவ்வி என்னும் விரோதப்பொருள்களன்றோ புலப்படும். “எண்மை பரிபவ மிழிதக வெளிமை” என்பது பிங்கலந்தையாதலின், எளிமைக்கு இழிதகவன்றி எண்

மைப்பொருளும் பெருவழக்கிற்றுமெனை அறிக. "துயகருமெணமை" என அமையும் ஏட்டெழுத்து முறையில், ணகரனகரங்களின் பேதம் நன்கு புலப்படாமையே, "துய்க்கு மென்மை" என்று படிக்கப்பட்டதற்குக் காரணமாதல்வேண்டும்.

௬-ம் குறிப்பு:—"ஈன்றபொழுதின்" என்னும் ௬௯-ம் குறளுரையில் "கவானின்கட்கண்ட பொதுவுவகையினும்" என்பது "கவானின் மகற்கண்ட பொழுதையுவகையினும்" எனக் காணப்படுவதைப் பிள்ளையவர்கள் ஆக்ஷேபித்தார்கள். "ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும்" என்பதற்கு, "தான்பெற்ற பொழுதைமகிழ்ச்சியினும் மிகமகிழும்" என்றெழுதியதற்கேற்ப விசேடவுரையில் வரும் "கவானின் மகற்கண்ட பொழுதையுவகையினும்" என்ற பாடம், "கவாஅன் மகற்கண்டு தாய்மறந்தாங்கு" என்னும் நாலடியின்சொல்லையும் பொருளையுந்தழுவியதாகல் கண்டு அஃது எழுதப்பட்டது. பிள்ளையவர்கள், "நாலடியில் வரும் சொல்லையுந் தழுவுவதாயின் "கவான்" என்றெழுதாது 'கவானின்' என்றெழுதார்" என்றார்கள். பரிமேலழகர் முன்னோரது சொற்பொருள்களைத் தழுவுமிடங்களிலே உரைப்பாயிரத்தில் "ஒப்பநாடி அதற்குத்தக வொறுத்தல்" என்று எழுதிய நடை, "ஒப்ப நாடி யத்தக வொறுத்தி" என்னும் புறப்பாட்டடியின் சொல்லையும் பொருளையுந் தழுவியதாம். இதனில் 'அத்தகவு' என்பதனை 'அதற்குத்தக' என விரித்திலரோ? இங்ஙனமாக, 'கவானின்' என்றெழுதார்" என்றதென்னை? "ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும், மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும், பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்" எனவரும் புறநானூற்றடிகளை "ஆன்முலையறுத்தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும், பார்ப்பார்த்தப்புதலும்" எனப் பரிமேலழகர் உரைநடையாக்கி எழுதியதிலே, உருபுகள் தொக்கும் விரிந்துங் காண்டலால், பிள்ளையவர்கள் கருத்துப்படி இதனிடையும் வாக்கியவழுவுண்டாயிற் றென்னல் வேண்டுமே? இதுபோன்றதே "கவானின் மகற்கண்ட" என்பதும் எனக் கொள்வதில் இழுக்கென்னை? முன்னோரது சொற்றொடர்களைத் தம் நடையமைதிக் கேற்பக்கொண்டு எழுதிச்செல்லுதலே பரிமேலழகரியல்பென்க. இனி, இங்குள்ள எல்லாப் பிரிதிகளினும், "பொழுதை

யுவகை" என்ற பாடமே உள்ளது. "பொதுவுவகை" என்ற பாடங்கொண்ட பிரதியும் இருந்திருத்தல் கூடும். அன்றி, ஒருநயம் பற்றித் திருத்தியிருத்தலுமாம். "தவாளின் மகற்கண்ட பொழுதை யுவகை" என்பதே பொதுவுவகை என்னும் பொருளைக்குறிக்குமாதலால், இப்பாடங் குற்றமுடையதன்று. இஃதெவ்வாறாயினுமாகுக; "தவாளின் மகற்கண்ட" என்னும் பாடம் உரைநடையெழுதும் பெருவழக்குடைய பரிமேலழகரியல்புக்கு இயைந்ததென அறிக.

எ-ம் குறிப்பு:—"அன்பகத்தில்லா" என்னும் எஅ-ம் குறளில் "வன்பாற்கண்" என்பது "வன்பார்க்கண்" எனப்பிரதிபேதங் காணப்படுதலைப் பிள்ளையவர்கள், ஆராய்ச்சிகாட்டி, மறுத்தார்கள். அவர்கள் குறித்தபடி, "வன்பால் குறிஞ்சியும் பாலையு மாகும்" என்ற நிகண்டொன்றைக் கொண்டே, பரிமேலழகர் தெளிவாக "வன்பால் பாலை" எனப் பதவுரையினும் விசேடவுரையினும் விளக்கிவிடலாமன்றோ? அங்ஙனமின்றிப் பதவுரையில் வன்பால் எனவே விடுத்து, விசேடவுரையிலே "வன்பால் - வன்னிலம்" என்றெழுதிப் போதற்கு ஏற்ற காரணம் வேண்டும். முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலென்னும் நானிலமும், வன்பால் மென்பாலெனப் பகுக்கப்படும். இப்பகுப்பு, வன்புலம் மென்புலமென வழங்குதலுண்டு; "வன்புலக்கேளிர்க்கு வருவிருந் தயரு, மென்புல வைப்பினன் னாட்டுப் பொருந" எனவருதல் காண்க. (புறம்-சஉ.) இவ்வடிகட்கு எழுதப்பட்ட விசேடவுரையை நோக்கின், குறிஞ்சியையும் பாலையையும்வன்புலமென்பது போலவே, முல்லை குறிஞ்சிகளை வன்புலமென்றலும் வழக்கென்பது தெரியவரும். இனி, "வன்பாற்கண்" எனின், வற்றன் மரந்தளிர்த்தற்குரிய அம்முல்லைகுறிஞ்சிகளிடத்துஞ் சென்று, அன்பகத்தில்லா வுயிர்வாழ்க்கைக்கு ஏற்ற உவமையாகாமையின், அச்சொல்லைப் பெய்யாது, "வன்பார்" என ஆசிரியர் கூறினாரென்க. பார் என்பதும் வன்னிலமென்பதும், புற்பூண்டுகள் முளையாததும் ஈரப்பசையற்றதுமான ஒரு நிலவிசேடத்துக்கு வழங்கும் மொழிகள்.* இதனை "பார்தாக்கப்பக்குவிடும்" என்றவிடத்தே, பரிமேலழ

* இவ்வன்னிலத்தைப் பாரென்னும் வழக்கு பாண்டிநாட்டில் இன்றும் உள்ளது.

கர், பாரை வன்னிலம் என்ற சொல்லால் வழங்குதலான் அறிக. "பாருடைத்த குண்டகழி" என்னும் புறநானூற்றடியினும் அதனுரைகாரர் பார் - வன்னில மென்றார். எனவே, இக்குறளுரையிற் பரிமேலழகர் வன்னிலமென்று வழங்குதற்கேற்ப, மூலத்திற் பாரென்ற பாடமிருத்தலே பொருத்தமென்னத்தடையில்லை. பாரென்பதே வன்னிலமாதலின், வலிய வன்னிலமென்பது மிகையாமெனக் கருதி, "வன்பால் வன்னிலம்" என விசேடவுரையிற் கருத்தைக் குறிப்பிட்டாரென உணர்க.

இதுகாறும், பரிமேலழகருரைப் பாடபேதங்களாக என்னாற் குறிக்கப்பட்டவைகளிலே, பிள்ளையவர்கள் நிகழ்த்திய தடைகள் சிலவற்றுக்குச் சமாதானங்கூறப்பட்டது. இதனால், அவர்களது மற்றத்தடைகளில் எனக்கு விவாதமின்மை விளங்கும். பிள்ளையவர்களும் இவ்வாறே என் குறிப்புக்கள் சிலவற்றில மகிழ்ச்சியுடன் சம்மதமளித்தலை அவர்கள் விஷயத்தின் தலைப்பிற் கண்டுகொள்க. இத்தகைய இழுக்கற்ற ஆராய்ச்சிகள் செந்தமிழில் வெளிவருதல் பேருபகாரமேயாம். இன்னும், திருக்குறளுரையிற்காணும் பாடபேதங்களைச் சமயநேரும்போது எழுதிவரும் எண்ணமுடையேன். இங்ஙனம் எழுதுவது, நாவலரவர்கள்போன்ற தமிழ்ப்பெருமக்களைக் குறைகூறலாகுமென்று அறிஞர் கருதாதிருக்க வேண்டுகிறேன். தமிழறிந்தாரும் நிறுத்துமிடங்கூட்டுமிடமறிந்து எழுதப்படிக்கவரிய ஏட்டுப்பிரதிகளை ஆராய்ந்து தம் ஞானவன்மையால் எத்தனையோ விவாதச்சிக்கல்களை அறுத்துத் தெளிவாக்கி, அச்சுப்பதிப்பின் ஆரம்பகாலத்தே பல அரியநூல்களைப் பதிப்பித்துபகரித்த அம்மகானது அருமைபெருமைகள் நாமெல்லாவுள்ளங்களும் நன்கறிந்தவை. ஆயின், அவர்கட்கு அப்போது கிடையாத வேறுபிரதிகளிற் சில அரியபாடங்களுமிருப்பின், அவற்றைத் தள்ளிவிடல் முறையன்றே; அதுபற்றி எழுதுவதன்றி வேறுகருத்தின்றென்க. இங்ஙனம் இனியெழுதும் பாடங்களிலும், பிள்ளையவர்கள்போன்ற நல்லறிஞர் ஆராய்ச்சிகாட்டி, ஏற்பனவற்றைத் தமிழுலகம் கொள்ளவும் ஏலாதவற்றைத்தள்ளவும் செய்வார்களென்று நம்புகின்றேன்.

உ
கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-எ.] சௌமிய௵ ஆனிமீ [பகுதி-அ.

## திருக்குறளைப்பற்றிய கதைகள்.



இந்நிலவுலகில் தமிழ்மொழியைச் சிறப்பிக்கின்ற நூல்கள் பலவற்றுள்ளுஞ் சிறந்து நிற்பது திருக்குறளென்பது பலர்க்கும் ஒப்பமுடிந்ததோர் துணிபேயாம். இந்நூற்குப் பின்னெழுந்த இலக்கண இலக்கிய சமயநூல் முதலியவற்றுள் இத்திருக்குறளை யெடுத்தாளாத நூல்களை அறிதல் அரிதேயாம். இதுவன்றியும், உலகவழக்கில் இக்குறளைப்பற்றி யெழுந்த கதைகள் பலவுள. அவற்றைக் கர்ணபரம்பரையில் அறிவதேயன்றி, பிறவாற்றால் அறிதல் கூடாமையின் அதனை நம் "செந்தமிழ்" வாயிலாக வெளியிடில் பலரும் அறிந்து களிப்பாரெனுந்துணிபு பூண்டு என் சிற்றறிவிற்கெட்டிய சில கதைகளை இங்ஙன் வெளியிடலாயினேன். அவற்றுள் ஒன்று வருமாறு:—

ஒருவன் ஆறலைத்தலையே தன்றொழிலாகப்பூண்டு அக்கொடுந்தொழிலாற்கிடைக்கும் பொருள்கொண்டு தன் மனைவிமக்களைக் காப்பாற்றிவந்தான். ஒருநாள் வழியிலொருவரும் நெடுநேரம் வராதிருந்தமைகண்டு, மிக்க ஆவலோடு எதிர்பார்த்திருக்குமமையத்தே, ஒரு சந்நியாசி ஒரு மூட்டையுடன் அவ்வழிச்செல்லுதலறிந்து ஓடோடியுஞ்சென்று அச்சந்நியாசியின்றலையிற் புடைப்பான் கருதித் தன் கையிலுள்ள தடியை யோச்சக்கண்டு, சந்நியாசி அப்பா! நீ என்னை அடிக்கக்கருதும் காரணம் யாதோ? உன்மாட்டு யாதும் தொடர்பற்ற என்னை உன் சிற்றத்திற்கு இலக்காக்கியதென்னை என வினவக், கள்வன் இன்று ஒருவருமிவ்வழிச் செல்லமையால் என்றொழிலாயுள்ள வழிப்பறியைச்செய்து இதுவரை

பொருள் ஈட்டக்கூடாமையாயிற்றென்றும், உமது மூட்டையிலுள்ளபொருளைக்கொடுத்துவிடில் உமக்கு யாதுந்துயர்செய்யாது விட்டுவிடுவேனென்றுங் கூறினன். அதுகேட்டுச் சந்நியாசி அப்பா! என் மூட்டையில் யாதும் பொருளின்மைக்கு யான் மிகவும் கவல்கின்றேன் என்று புகன்று அதில்வெறும் காஷாயத்துணிகளேயன்றி யாதும் பொருளின்மையைக் கள்வன் நன்கு அறியுமாறு அவிழ்த்துக்காட்டி இத்துணியும் உனக்கு உபயோகமில்லாத காஷாயமானதுபற்றி விசனிக்கின்றேன் என்று புகன்றனர். இவர் வார்த்தையைக்கேட்ட கள்வன் இவரிடத்து மிக்க மதிப்புடையவனாய் அவரை வணங்கி விடைகொடுக்க, அதனையறிந்த சந்நியாசி அப்பா! உலகத்தில் பொருளீட்டற்கு எத்தனையோ தொழில்களிருக்க, இக்கொடுந்தொழிலை நீ மேற்கொண்டனையே. இதனால், மிக்க பாவம் உனக்குண்டென்பதை நீ யறிந்திலையா என்று வினவ, அதற்குக் கள்வன் ஐயா யான் என்செய்வேன். என் மனைவிமக்களைக் காப்பாற்றற்கு வேண்டும்பொருள் இன்மையால், இப்பாவமாயதொழிலை யான் மேற்கொண்டு அவர்களைக் காப்பாற்றுங்கடமை பூண்டேன் என்றான். சந்நியாசி அப்பா! மனைவிமக்களைக் காப்பாற்றுவான்கருதி நீ இப்பாவத்தைச் செய்யத்துணிந்தாயேல், அவர்களை வேண்டிச்செய்யப்படும் இப்பாவத்தில் அவர்கட்குப்பங்குண்டா எனக், கள்வன் இப்பொருளை அவர்களும்பாகித்து அனுபவிப்பதால் பாவத்தில் அவர்களுக்கும் பங்குண்டென்பதே தன்றுணிபெனக்கூறினன்.

சந்நியாசி உன்றுணிபால் யாதும் பயனில்லை. உன் வீட்டிற்சென்று உன் மனைவிமக்கள் உன்பாவத்தைப் பகிர்ந்துகொள்ளற்குச் சம்மதிக்கின்றார்களா என்று கேட்டறிந்து வாவென்ன, நல்வினைப்பயன் கிட்டியதால் கள்வன் சந்நியாசியை வணங்கி அவ்வாறே நும்மாணையை நிறைவேற்றுவேன் அதுவரை இம்மரத்தடியிற் றங்கியிருக்கவெனச் சந்நியாசியைவேண்டிப் பின்னர்த் தம்மனையைநோக்கிச் சென்றான். தம்மனையையடைந்து மனைவியையழைத்து உன்பொருட்டும் உன் பிள்ளைகள்பொருட்டும் யான்செய்யும் பாவத்தில் உனக்கும் பிள்ளைகட்கும் பங்குண்டா என வினவ, மனைவி என்னையும் பிள்ளைகளையும் காப்பாற்றுங்கடமை பூண்ட நீ

நல்வழியில் பொருளீட்டிக் காப்பற்றற்கு எங்களால் என்றேனுந் தடையில்லையாதலால், நீசெய்யும் பாவத்தில் ஒருசிறிது மெங்கட்குப்பாகமில்லையென, மக்களும் தனித்தனியே யவ்வாறுகூறக்கேட்டுக் கள்வன் மிக மனவருத்தத்துடன் சந்நியாசியை வந்தடைந்து சுவாமிகளே! என் மனைவிமக்களைக் காப்பற்றற்கென்றே அதிபாதகங்களை யான்செய்து ஈட்டியபொருளனைத்தையுங் கைக்கொண்டு என் பாவத்தில் ஒருசிறிதும் தமக்குச்சம்பந்தமில்லையென என்மனைவியும் மக்களும் மறுத்துவிட்டனர். ஆதலால், யான் பெரும்பாவியாயினேன். யான் இனியேனும் உய்யுமாறு உபதேசித்தருளல்வேண்டும் என மிக்க வணக்கத்துடன் பிரார்த்தித்து நின்றான்.

அருளுடைமையையே பொருளாகக்கொண்ட கல்வி கேள்வியுடைய உண்மைத்துறவி யாதலின், அவன்பால் மிக்க இரங்கியவுள்ளத்தவராய்க் கள்வனே! இவ்வாறலைக்குந் தீத்தொழிலேயன்றி உன் குடும்பத்தைக் காப்பாற்றக்கூடிய வேறெத்தொழிலேனும் கற்றிருக்கின்றனையா என வினவக், கள்வன் ஐயனே, இக்கொடுந்தொழிலொன்றே, யான் பாலியமுதல் அப்பியசித்ததேயன்றி, வேறெத்தொழிலையும் அறியேன் எனப்புகலக்கேட்டுச் சந்நியாசி, இவனே நம்பால் மிக்க அன்புடையவனாய் நம்மாணையெதுவும் மறுக்காது கொண்டியற்று மனமுடையவனாய்த் தானுய்யும்வழியை நம்பாற்கேட்டுணரும் அவாவுற்றிருக்கின்றான். இவன் உய்யுமாறு இக்களவுத்தொழிலை விட்டொழியக்கூறி, அவன் அவ்வாறே விட்டொழியில் அவன் குடும்பக்காலக்ஷேபம் நடத்தல் எவ்வாறு முடியும்; இப்பாவத்தொழிலை விட்டொழியாது இவன் உய்தல் எவ்வண்ணங்கூடும் எனச் சின்னேரஞ்சிந்திக்கத், தாம் முன் கற்றுள்ள.

"பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று."

என்னுந் திருக்குறள் அவர் நினைவில் வந்தது. இதுவேயன்றி, அவன் உய்யுமாறு வேறில்லையென்னுந் துணிபையுடையவராய்க் கள்வனையழைத்து அப்பா? உன் குடும்பக்காலக்ஷேபத்துக்கு இக்களவுத்தொழிலையே நீ யின்னமு மியற்றவேண்டியவனாக ஆகிறாய்; ஆயினும், நீ உய்யும்பொருட்டு இதுமுதல் பொய்சொல்லா விரத

மொன்றை நீ யுறுதியாகக் கடைப்பிடித்து நடந்துவருவாயேல், உனக்கு க்ஷேமமுண்டாகுமெனக்கூறி, அவன்பால் விடைபெற்றுச் சென்றனர்.

இவ்வாறு சந்நியாசியால் உரைக்கக்கேட்ட கள்வன், அதனைக் குருமொழியாகக் கைக்கொண்டு எவ்வாற்றானும் பொய்சொல்லாத விரதமேற்கொண்டொழுகி வந்தான். இவ்வாறு சின்னாட்சென்ற பின், ஒருநாள் களவுசெய்தற்கென்றே இரவிற்றன் வீட்டைவிட்டு ஓர்வழிச் சென்றுகொண்டிருந்தான். அக்காலத்தே நகர்சோதனை செய்தற்கென்று வந்துகொண்டிருந்த அவ்வூர் அரசன் அக்கள்வனை யெதிருற்று நீ யாவன்? எக்கருமம்பற்றிச் செல்கின்றாய் என்று வினவ, இவன் பொய்சொல்லாவிரதியாதலால் உடனே தன்னைக் கள்வனென்றுங் களவுசெய்தற்கென்றே தான் செல்வதாகவும் அரசனிடம் அறிவித்தான். இதனைக்கேட்ட அரசன் மிக்க ஆச்சரியமுற்று அவனை இன்னும் அளந்தறியுமுள்ளத்தனாய் தன்னையும் ஒரு கள்வனென்றே அவனுக்கு அறிவித்துத்தானும் உடன்வரவிரும்புவதாயும் யாங்குச் செல்லலாமென்றும் கள்வனைக்கேட்க, அவன் சிலவிடங்களைக் குறிப்பிட்டுச்சொல்ல அவற்றையெல்லாம் மறுத்து அற்பப்பொருள்களைக் களவுகொள்ளலாற் பயனென்னை, அரசனது பொக்கிஷத்தில் உயர்ந்த பதார்த்தங்கள் இருக்குமாதலால் அவற்றிலொன்றை யாம் கைப்பற்றினும் நீண்டநாளைக்கு இத்தொழில் செய்யும் ஆவசியகமற்றுச் சுகமே யிருக்கலாமென்றும் அதுவே செய்யத்தக்கதென்றும் அரசன் கள்வனுக்கு அறிவித்தனன்.

கள்வன் காவலாளிகள் முதலியோரால் காவல் பூண்டுள்ள அரசனது பொக்கிஷத்தை யணுகலும் அருமையாமென அறிவிக்க, அரசன் அதனைத்தான் சுலபமாக முடிக்கும் வழியையறிந்திருப்பதாய்ச் சொல்லி யவனையும் அழைத்துக்கொண்டு காவலாளிகள் முதலியோர்கள் கண்ணிற்படாத தம் பொக்கிஷத்தை வந்தடைந்து அவ்வறையை யுடைத்துச்சென்று தம்பரம்பரையில் நீண்டநாளாக வைத்துப் போற்றிவருவதும் விலைமதிப்புக்கடங்காததும் மிகவுயர்ந்ததுமான மூன்று இரத்தினங்கள் உள்ளபெட்டியைத் திறந்து அக்கள்வனுக்கு இவ்விரத்தினங்களுள் ஒன்றை நாம் கைக்கொள்ளினும்

இக்களவுத்தொழிலை யாம் இனிக்கைவிட்டு மிக்கசௌக்கியத்தைய டையலாமென அறிவித்தனன். கள்வனும், கள்வனுக்குகூறிவந்த அரசனுக்கு ஓர் இரத்தினங்கொடுத்துத் தனக்கென்று ஒன்றையெடுத்துக்கொண்டு மற்றொன்றை அவ்விரத்தினத்திற் குரியானுக்கு ஆகுக என அப்பெட்டியிலேயேவிட்டுத் தம்முடன் வந்தோனையும் அழைத்துக்கொண்டு வெளியேவந்தனன். அரசனும் முன் உட்பிரவேசித்த வழியே ஒருவரும் அறியாதிருக்க அரண்மனையைக் கடந்து வெளியே சென்றவுடன் அவன் உறையுள் முதலியவற்றை வினவ, உள்ளவாறு கூறிப் பின்னர்க்கள்வன் தன்னிடஞ்சென்றனன். அரசனுந் தன் அந்தப்புரம்வந்து சேர்ந்தனன்.

மறுதினங்காலையில் அரசனது பொக்கிஷ அறை உடைபட்டிருப்பதை யறிந்த காவலாளிகள் முதலியோர் அதனை யரசனுக்கறிவிக்க, அரசன் தன் மந்திரியையழைத்து பொக்கிஷவறை உடைபட்டிருப்பதால் திருடர் பிரவேசித்திருக்கலாம் அதனால் அவர்கள் கைக்கொண்டு நமக்குக்காணுதொழிந்த பொருள் இவையெனக்கண்டு அதனைத் தனக்கறிவிக்க என ஆணைகொடுத்தனுப்பினன். அவ்வாறு சென்ற மந்திரி அரசன் கருவூலத்துள் தான் தனியேசென்று பரிசோதிக்க மற்றைப்பொருள்கள் யாவுமிருக்க உயர்ந்த இரத்தினங்கள் மூன்றனுள், இரண்டு காணுதிருப்பக்கண்டு இரண்டு இரத்தினங்களையும் கவர்ந்துசென்ற கள்வன் ஒன்றையிங்குவைத்துச் செல்லற்கு ஞாயமில்லையாதலால் இவ்வொன்றையும் நாம் கைப்பற்றிக்கொண்டு மூன்று இரத்தினங்களுமே கள்வர் கைவசமாயின என்று கூறுதல் பொருத்தமுடைத்தெனத் துணிந்து அவ்வாறே யெஞ்சியிருந்த வொன்றையும் தான் கவர்ந்துகொண்டு அரசனிடம்வந்து உயர்ந்த இரத்தினங்களாக இருந்த மூன்றுமே கள்வர் கைக்கொண்டதாக அறிவித்தான்.

அதுகேட்டு அரசன் மந்திரியைத் தன்பக்கமிருக்கச்செய்து தன்முன்னின்ற ஏவலாளருள் ஒருவனையழைத்து முன்னிரவில் தாம் கள்வனிடம் அவன் வீட்டுக்குக் கேட்டிருந்த அடையாளங்களை, யவ்வாறே அவ்வேவலாளிக்கறிவித்து அவ்விடத்து வசிக்குமவனை யழைத்துவரக் கட்டளையிட்டனன். அவ்வாறு சென்ற

ஏவலாளி கள்வனைக்கண்டு அரசனாணையை யறிவிக்க அவன் றன் மனைவியை யழைத்து அரசன் அரண்மனையில் தான் முன்னிரவு செய்தகளவு வெளிப்பட்டமையால் அரசன் றன்னையழைப்பதாகவும், தான் இனி உயிருடன் மீண்டுவந்து மனைவிமக்களைப் பார்ப்பது கூடாதென்றும் அவளைத் துக்கப்படாதிருந்து மக்களைக்காப்பாற்றும்படிக்கும் சொல்லிப் பின்னர் ஏவலாளியுடன் அரசன் சமூகம் வந்தடைந்தான்.

அவனைக்கண்ட அரசன் முன்னிரவினிகழ்ச்சியை யவன்பால் வினவ, அவன் உள்ளவாறே நடந்தயாவற்றையும் சொல்லி அரசனால் தமக்கு உண்டாகும் மரணதண்டனையையும் எண்ணாது தான் கொண்ட உண்மை விரதத்தினையே சாதித்தனன். இதுகண்டவரசன் மனமிக மகிழ்ந்து நீ கவர்ந்துசென்ற இரத்தினம் எங்கே என்று கேட்க வீட்டிலிருப்பதாகவுரைத்து அரசன் ஆணைகொண்டு சென்று கொணர்ந்து அரசன்முன்னிட்டான். உடனே யரசன் உன்னுடன் வந்த கள்வன் யானே, என்பங்காகவெடுத்த இரத்தினம் இதுவே யென்றுகூறித் தன்னிடமிருந்த ஓர் இரத்தினத்தை யதன் பக்கலில் வைத்துப் பின் தன் மந்திரியைப்பார்த்து நீயுங் கள்வனாதலால் உன்பங்கிற்கு நீ கவர்ந்த இரத்தினத்தையும் இவ்விடத்தே வை யென்றுகூற மந்திரியும் திகைத்து வேறுவழியற்றவனாய்த் தன் பாலுள்ள இரத்தினத்தையும் வெளியிலெடுத்து வைத்தனன். உடனே யரசன் கள்வனுக்குரிய தண்டனையைத் தன் மந்திரிக்குக்கொடுத்து, பொய்சொல்லா விரதியாய கள்வனைத் தன் மந்திரியாக்கினன். அதுமுதல் பொய்யாவிரதியாகிய கள்வன் மிக்க நல்லொழுக்கத்தையும், சௌக்கியத்தையும், சந்நியாசியின் உபதேசத்தாலும், ஆசீர்வாதத்தாலும் தானடைந்ததென்ற வுணர்வுகொண்டு உய்வை யடைந்தான்.

இக்கதை யாம் மேற்காட்டியுள்ள "போய்யாமை பொய்யாமை" என்னுந் திருக்குறள் பொய்யாமொழியென்பதை விளக்கிநின்றமை அறிவாளிகள் உய்த்துணர்ந்து கொள்ளநின்றது.

(தொடரும்) இங்ஙனம்,

பொ. பாண்டித்துரை.

திருச்சிற்றம்பலம்.

# சைவாதீனமுந் தமிழும்.

இவ்வுலகத்திற் சைவாதீனங்களினுற்பத்தி மகிமையைப்பற்றி விசாரிப்பவர்க்குப் பெரும்பயன்றருமென்பதற் கையமில்லை; சைவ சமயவுபதேச விருத்தியும், சைவதத்துவநூல்களின் விருத்தியும், ஏனைத்தமிழ்நூல்களின் விருத்தியும், இடையறாது செய்துவருதலே சைவாதீனங்களின் முதற்கடமையாம். அன்னதான முதலியன செய்தல் அவற்றிற்குத் துணையாகிய கடமையாம். இவற்றை யாவரு மறுக்கமாட்டார்.

கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை என்னு நால்வகைப் பயிற்சிகட்கு நல்ல இடமாகிய சைவாதீனங்கள் பலவற்றுள்ளுந் தலைமையான ஆதீனம் ஸ்ரீ: கைலாயபரம்பரைத் திருவாவடுதுறை யாதீனமே.

அவ்வாதீனத்தில், உரைப்பாருரைக்கு முறையிற் சிறந்த ஸ்ரீ: நமசிவாயதேசிகமூர்த்திகண்முதலாகிய பலரும் நூல், உரை, போதகம் என்னு மூன்றினுக்கு மூன்றுவிதமான ஆசிரியராக வதிந்தருளினார் என்பதைப் பலருமறிவார்.

அவர்களிலே ஸ்ரீ: நமசிவாயதேசிக மூர்த்தி மறைஞானதேசிகருக்குந், தக்ஷிணாமூர்த்திதேசிகருக்கும், அம்பலவாணதேசிகருக்கும் மெய்கண்ட சாத்திரவுபதேசஞ் செய்தருளிய தன்றித்தசகாரியமுஞ் செய்தருளினர்; அதற்கு நமசிவாயமூர்த்தி தசகாரியமெனப் பின்பு பெயராயிற்று.

தக்ஷிணாமூர்த்தி தேசிகர் மெய்கண்ட சாத்திரக்கருத்தடங்கிய தசகாரியம், உபதேசப்பஃறொடை என்னு மிரண்டு ஞானநூல்களைச் செய்தருளினர்.

அம்பலவாண தேசிகர் தசகாரியம், சன்மார்க்கசித்தியார், சிவாச்சிரமத்தெளிவு, சித்தாந்தப்பஃறொடை, சித்தாந்தசிகாமணி, உபாய

நிட்டைவெண்பா, உபதேசவெண்பா, நிட்டைவிளக்கம், அதிசய மாலை, நமச்சிவாயமாலை, பூப்பிள்ளையென்னுமொரு பரிபக்குவர் பொருட்டாகச் செய்ததாகிய உயிரட்டவணை என்னும் பதினொருஞான நூலகளைச் செய்தருளினர். இத்தேசிகமூர்த்தியே ஸ்ரீ: நமசிவாய தேசிகமூர்த்திக்கு இரண்டாம் பட்டத்தினிலைபெற்றிருந்த மூர்த்தி.

இவ்வம்பலவாண தேசிகமூர்த்தியிடத்து வைணவப்பிராமணருங், கல்வியறிவிற்சிறந்த பக்குவருமாகிய உலகுடைய நாயனாரென்பவர் சைவசந்நியாசமும், நிருவாணதீக்ஷையும் பெற்று மெய்கண்ட சாத்திரமுங்கற்று அத்தேசிகமூர்த்தியின்மீது சைவசித்தாந்த சாத்திரக் கருத்தடங்கிய தோத்திரமாகப்பத்துத் திருவிருத்தமியற்றியிருக்கின்றார்; இதற்கு உலகுடைநாயனார் கழிநெடில் என்றுபெயர்.

இன்னுமவ் வாதீனத்தைச் சார்ந்த திருநெல்வேலி யீசானமடத்திலெழுந்தருளியிருந்த ஈசானதேசிகரென்னுஞ் சுவாமிநாததேசிகர் அத் திருநெல்வேலியில் வேளாண்மை செய்திருந்த தாண்டவராய பிள்ளையின் புத்திரராகிய மயிலேறும்பெருமாள்பிள்ளை யெனனுங் கல்விக்கடலிற் பாருகி இலைமறைகாய்போற் கிடந்தனவாகிய அரிய விதிகளை யொருங்குதிரட்டி வேற்றுமை, வினை, ஒழிபென மூவி லாக வகுத்து இலக்கணக்கொத்து எனவொரு நூலும், தசகாரி மும், திருச்செந்திற் கலம்பகமுதலிய நூலுஞ் செய்தருளினர்; அ றியும் நன்னூற்கு விருத்தியுரைசெய்த சங்கரநமச்சிவாயப்புலவருக் நல்லாசிரியராகவிருந்து பலநூல்களையுங் கற்பித்தருளினர்; இத்தே கர் கற்கப்படாதிருந்த தமிழ்நூல் ஒன்றுமில்லையென்பதை நாவ ரெல்லா நன்குபுகல்வார்.

பெரியபட்டத்திலெழுந்தருளியிருந்தபின் வேலப்பதேசிகமூ த்தி திருப்பறியலூர்ப் புராணம், பஞ்சாக்கரப்பஃறொடை முதலி நூல்களைச் செய்தருளினர்; வடநூற்கடலுந் தென்றமிழ்க்கடலுமு தொருங் குணர்ந்த முனிவராய் விளங்கிய சிவஞான முனிவருக்கு இத்தேசிகமூர்த்தியே கற்பித்தருளினர்.

இன்னும், வாதுளாகமப்படி ஞானபூஜாவிதி மொழிபெயர்ப்பு மரபட்டவணை, அநுபோகவெண்பா, வருணசிவாசாரியர் பத்ததி

படி கிரியாபூஜாவிதி முதலிய நூல்கள் அம்மரபினுள்ளோராலே செய்தருளப்பெற்று வழங்குகின்றன.

அம்பலவாணதேசிக மூர்த்தி செய்தருளிய தசகாரிய முதலிய பத்தும், தக்ஷிணாமூர்த்தி தேசிகர் செய்தருளிய தசகாரியம், உபதேசப்பஃறொடை யிரண்டும், சுவாமிநாத தேசிகர் செய்தருளிய தசகாரியமொன்றும், பின்வேலப்பதேசிகர் செய்தருளிய பஞ்சாக்கரப் பஃறொடையொன்றும் ஆகப்பதினான்கு ஞானநூல்களும் பண்டார சாத்திரமென ஆன்றோராலே வழங்கப்பட்டு வருகின்றன; வேலப்ப தேசிகமூர்த்தியின் கல்விமகிமையை வியந்துபாராட்டிச் சிவகிரி சேற்றூர் ஜமீந்தார் முதலியோர் நிலமானியம் விட்டிருக்கின்றார்கள்.

இனி, மாதவச்சிவஞான மாமுனிவர் செய்தருளிய நூல்கள் வருமாறு:—தொல்காப்பியத்திலுரையாகிய இளம்பூரணம், சேனாவரையம், நச்சினார்க்கினியம் என்பவற்றிலுள்ள ஆசங்கைகளை நீக்கித் தெளிவிக்கும்பொருட்டு, அத்தொல்காப்பியத்தின் பாயிரத்திற்கும், முதற்சூத்திரத்திற்கும், சூத்திரவிருத்தியெனப் பெயர்பெற்ற பாஷியமும், வடமொழித் தருக்கசங்கிரக அன்னம்பட்டீயங்களின் மொழிபெயர்ப்பும, நன்னூல் விருத்தியுரைத் திருத்தமுஞ், சித்தாந்தப் பிரகாசிகை மொழிபெயர்ப்புஞ் செய்தருளினர்; இந்நான்குந் திராவிடமஹாபாஷிய முதலிய சித்தாந்த சாத்திரத்திற்கு அங்கங்களெனப்படும்.

அன்றியும், கற்போரிடர்ப்படாது ஐயந்திரிபறக்கற்றுத்தெளியும்வண்ணம், சிவஞானபோதத்திற்குத் திராவிடமகாபாஷியமெனப் பெயர்பெற்ற விருத்தியுரையும், இலகுவியாக்கியானமாகிய சிற்றுரையும், சிவஞானசித்தியார் சுபக்ஷத்திற்குப்பொழிப்புரையுஞ் செய்தருளினர்.

அன்றியுங், காஞ்சிப்புராணமொழிபெயர்ப்பும், ஸ்ரீ: அரதத்த சிவாசாரியார் சிவபெருமானே பரம்பொருளென இருபத்திரண்டு ரதுக்களாலே நாட்டியருளிய சுலோக பஞ்சகத்தின் மொழிபெயர்ப்பும், ஸ்ரீ-அப்பயதீக்ஷிதர் அருளிச்செய்த சிவதத்துவ விவேகமூல சுலோகங்களின் மொழிபெயர்ப்புஞ் செய்தருளினர்.

அன்றியும், சோமேசர் முதுமொழிவெண்பா, திருவேகம்பரந்தாதி, திருமுல்லைவாயிலந்தாதி, குளந்தூர்ப்பதிற்றுப்பத் தந்தாதி கலைசைப்பதிற்றுப்பந்தந்தாதி, இளசைப்பதிற்றுப்பத்தந்தாதி, கச்சியானந்த ருத்திரேசர்பதிகம், திருவேகம்பரானந்தக்களிப்பு, செங்கழுநீர்விநாயகர் பிள்ளைத்தமிழ், அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ், செப்பறை அகிலாண்டேசுவரிபதிகம், திருத்தொண்டர் திருநாமக்கோவை நமசிவாயதேசிகமூர்த்திமாலை முதலிய பிரபந்தங்களைச் செய்தருளினர்.

அன்றியும், தருமபுரவாதீனத்தாருடன் வாதநிகழ்ந்தபோது மறுபட்டவணை மறுப்பின் மறுப்பு எனவொன்றும், திருவண்ணாமலையாதீனத்தாருடன் வாதநிகழ்ந்தபோது எடுத்தெண்ணுஞ்சொல்லுக்கிட்ட வயிரக்குப்பாயமென வொன்றும், சிவசமவாதவுரை மறுப்பெனவொன்றுஞ் செய்தருளினர்.

அன்றியும், காஞ்சிபுரத்து வைணவரோடு வாதநிகழ்ந்தபோது கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தரவிருத்தியென ஒன்றும் இலக்கணவிளக்கத்திலுள்ள வழுக்களை வெளியிடக்கருதி இலக்கண விளக்கச் சூறாவளியென வொன்றுஞ் செய்தருளினர்.

இங்ஙனம் பலநூல்களையும், பல உரைகளையுஞ் செய்ததன்றி அகத்திய மகாமுனிவர், தொல்காப்பியமுனிவர் முதலாய பன்னிரு மாணாக்கர்களுக்குக் கற்பித்தருளியவாறுபோல, கச்சியப்பமுனிவர் சிதம்பரநாதமுனிவர், தொட்டிக்கலைசைச் சுப்பிரமணிய முனிவர் காஞ்சிபுரம் சரவணபத்தர், இராமநாதபுரம் சோமசுந்தரம்பிள்ளைமுதலாய பன்னிரு மாணாக்கர்களுக்குப் பலநூலையுங் கற்பித்தருளினர்.

(இன்னும் வரும்.)

எம். எஸ். பூரணலிங்கப்பிள்ளை, பி. ஏ

# புலாலுண்ணுஞ் செடிகள்.

## PLANTS OF PREY.

[ஸ்ரீமத்-வே. நரசிம்ம ஐயங்காரவர்கள், M. A., B. L., எழுதியது.]

ஜீவப்பிராணிகளானவை ஊனைத்தின்று தம்மூனைப்பெருக்கா நிற்கத் தாவரங்களோ அத்தகைய பாவத்திற்குள்ளாகாமல் தமதுணவை மண்ணின்கீழ்க்கிடக்கும் ஜலத்தினின்றும், பற்பல உப்புக்களினின்றும் சேகரித்துக்கொள்ளும். ஆயினும் இப் பொதுவிதிக்குச்சிறப்புவிதியொன்றுளது. ஜீவப்பிராணிகளுக்குள் புலாலுண்ணுநோன்பு கைக்கொண்டு தாவரங்களையே புசித்துச்சீவிப்பன ஆடு, மாடு, குதிரைபோன்ற சில மிருகங்களே. அதுபோலவே தாவரங்களுக்குள் மண்ணிற்கலந்திருக்கும் உப்புக்களை நீக்கி மாமிசத்தையே பக்ஷிப்பன சிலசெடிகளும் இச்சிறப்புவிதிக்குககாரணமாய்ச் செடிகளுக்குப் புலாலுண்ணுஞ் செடிகளென்று பெயர்கொடுத்தழைப்போம். இவற்றிற்கே, ஸ்ரீமான்- அரங்காசாரியரால் இயற்றப்பட்டுச் சில மாதங்களுக்கு முன் வெளிப்போந்த "தாவரநூல்" என்னும் கிரந்தத்துள் (பக்கம்-240) "கீடகபக்ஷண ஔஷதிகள்" என்ற பெயர்கொடுத்திருக்கிறார்கள். அப்பெயர் எம்போன்ற தமிழர் நாவால் இசைத்தற்பாலதுமன்று. அதன்பொருள் எளிதில் அறிதற்பாலதுமன்று. இக்காரணம்பற்றியே எம்மாற்கூடியதொரு தமிழ்ப்பெயர்கொடுத்தனம். இச்செடிகள் மிகவரிதாயும் இவ்வுலகத்துத்தேசங்கள் சிலவற்றில் ஒவ்வோரிடத்திலுமேயகப்படும். இவற்றுக்கும் மற்றச்செடிகொடிகளுக்குமுள்ள வித்தியாசம் இவையுணவு உட்கொள்வதிலேயே. முன்சொன்னபடி மற்றச்செடிகள் தமது வாழ்க்கைக்கு வேண்டிய ஆகாரப்பொருள்களை, ஆகாயத்தினின்றும் பூமியின்கண் மறைந்திருக்கும் நீரினின்றும், பற்பல உப்புக்களினின்றும் சேகரித்து உபயோகப்படுத்திக்கொள்ள, புலாலுண்ணுஞ்செடிகளோ புழு, பூச்சி முதலிய சிறுபிராணிகளைத்தாங்கொண்ட சில சாதனங்களாற்பிடித்து அவற்றைத்தீனியாக்கிக்கொள்ளும். அவற்றிற்சிலவற்றைக் குறித்து இங்கு சில சொல்லுவோம்.

நாம் நம்மைச்சுற்றிலும் உற்றுநோக்க, இயற்கையமைப்பில் சில பிராணிகள் வேறுசில பிராணிகளைக்கொன்று தமக்கிரையாக் கவும், அங்ஙனங்கொல்லுவதற்குச்சாதனமாகப் பற்களையும், கொம்புகளையும், நகங்களையும், விஷத்தையும் அப்பிராணிகள் கொண்டிருப்பதையும், அவையொன்றோடொன்று எதிர்க்குங்கால் உண்டாகும் கோபாவேசத்தையும், தைரியத்தையும், தீராப்பகையையும் ஜெயவொலியையும், தோல்வியழுகையையுங்கண்டுங் கேட்டுமிருப்போம். ஆகவே, ஜீவப்பிராணிகளுக்குள்ளேதாம் இத்தகைய சம்பவங்கள் நேரிடுகின்றனவென்று நினைக்கலாகாது. இதுபோலவே, தாவரங்களுக்குள்ளும் ஓயாப்போர் நடக்கின்றது. அதை நடத்துவது புலாலுண்ணுஞ்செடிகளே. பார்க்கச் சாதுபோல் வேடம்பூண்டு, குணத்திலுஞ் செய்கைகளிலும் புலிபோல்வன இச்செடிகளே. சிலகுளங்களிலும் குட்டைகளிலும தண்ணீரின்மேல் மிதந்துகொண்டு வசிககின்றது; "நீர்ப்பைபச்செடி" (Bladerworts) என்னும் ஓரற்பச்செடி. அந்தோ! ஆனால் அது செய்யுமோசம் யாவரேய றிவர்? பொன்னிறமபோன்ற மலர்களைக்கொண்டு சிலகிளைகள் தண்ணீரின்மேற் றலைதூக்கிநிற்கும்; தண்ணீரின்கீழ்ப் பலகிளைகள் ஓட, அவற்றினிடையிடையே சிறுசிறு நீர்ப்பைகள்தோன்றும். இ நீர்ப்பைகளே இச்செடி சிறு பிராணிகளைப்பிடிக்க விரிக்கும்வலை ளாம். தண்ணீரில் அங்குமிங்குமுலவுஞ் சிறியபூச்சிகள் புழுக்கள் திறந்திருக்குமிப்பைகளுள் நுழையவே, அவைதிரும்பி வெளிவரா ண்ணம் அப்பைகள் மூடிக்கொள்ளும். முதற்சென்ற பூச்சிகளின் தில்லைமையறிய மற்றப்பூச்சிகளும், அப்பைகளுள் ஏதோ அமிர்தமி ப்பதாகவெண்ணித் தாமும் நுழைய, எல்லாவற்றையும் அச்செ பைகளிலுண்டாம் ஒருவகைத் திராவகத்தால் நீர்போலாக்கி உறி சிவிடும்.

"ட்ரோஸீரா" (Drocera) என்னும் பேர்கொண்ட சிறு செ யொன்று சற்று ஈரமான இடங்களில் முளைத்திருக்கும். அதை பார்ப்போர், அதற்கு ஜீவப்பிராணிகளைப் பிடித்துத்தின்னுந் திற ளதோவென்று வியப்படைவார்கள். எனினும், அதன் சக்தி, அ ஹல் உயிர்நீத்த ஈ, கொசுகு முதலிய கணக்கற்ற சிற்றுயிர்கட்டே தெரியும்! அச்செடியின் இலைகள் நீண்ட உரோமங்கொண்டவை

இலையின் நுனியில் ஒருவகை இரஸம் உற்பத்தியாய்க்கொண்டேயிருக்க, அதைத் தேனென்று நம்பி உண்பதற்குச் சிறுபூச்சிகள் நெருங்கி இலையின்மேல் உட்காரவே, அந்தோ! இதுவரையில் நேராய் நிமிர்ந்துநின்ற உரோமங்களெல்லாம் ஒவ்வொன்றாய் வளைந்து, தமக்கு அதிர்ஷ்டவசத்தால் வாய்த்த இரையை இறுக்கிமூடிக்கொள்ளும். பூச்சியோ, "வெளுத்ததெல்லாம் பாலென்றுநம்பி, இங்குவந்து அகப்பட்டுக்கொண்டோமே, தப்பிப்பிழைப்போம்" என்று தன் சிறகுகளையும் கால்களையும் படபடவென்றடித்துச் சண்டைசெய்யச்செய்ய உரோமங்கள் சிறிதேனும் பின்வாங்காது இரையை இறுக்கிஇறுக்கி நசுக்கும்; பூச்சியும் மாண்டுபோய் நீர் உருவமாய்மாற செடி ஊன்றின்னும். "தும்பி"யென்றும், "தட்டாரப்பூச்சி" என்றும் பேர்கொண்ட பெரும்பிராணிகள் சிற்சிலசமயத்து அகப்பட்டாலுமகப்படும். அப்பெரு விருந்தைப்பிடிக்கப் பல இலைகள் ஒன்றாய்ச்சேர்ந்து அதற்கு எமனாகும். இவ்வகுப்பிற்சேர்ந்த இரண்டுவகைச்செடிகள் ஸ்ரீமான்-அரங்காசாரியர் புத்தகத்துப்படங்களுடன் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இவையும், மேற்சொன்ன நீர்ப்பைச்செடியும் தென்னிந்தியாவி லகப்படுகின்றன. இனி விவரிக்கப்படுஞ்செடிகள் இத்தென்னிந்தியாவிலில்லை.

வட அமெரிக்காவில் "மோகினிப்பொறி" (Venus's fly-trap) என்ற பெயர்கொண்ட செடியொன்றுளது. அதன் இலைகளின் ஓரமெல்லாம் பற்கள்போன்ற முட்களநேகங்கொண்டிருக்கும். இத்தகைய இலைகளை நன்றாய்விரித்துக கவந்தனைப்போலிரைக்குக் காத்திருக்கும். ஈ போன்ற பறக்குஞ்சிறு பூச்சிகள் இலைகளுக்கு இருபுறமுமிருக்கும் மிகச்சிவந்த நிறங்கொண்ட சிறுகோளங்களால் கவரப்பட்டு, அணுகி இலையின்மேலுட்கார, இலையின்பற்கள் திடீரென்றுமூடி ஒன்றோடொன்று பின்னிக்கொள்ளவே, அகப்பட்ட பூச்சியைச் செடியானது சாவகாசமாய்ச் சீரணிக்கவாரம்பிக்கும்; சிலசமயத்துப் பெரு இரை அகப்படின், அதையுட்கொள்ள இரண்டொருவாரமும் பிடிக்குமாம். அவ்விரை சீரணமானபிறகு முட்கள் ஒவ்வொன்றாய்ப்பிரிந்து முன்போல "வருகிறவர்கள் வரலாம்" எனவுபசாரஞ்செய்வனபோல் கையைவிரித்து நிற்கும்.

"லோட்டாச்செடி" (Pitcher-plant) என்ற சாதாரணப்பெயர்கொண்டதும் "நெபந்திஸ்" (Nepanthis) எனச்சாஸ்திரப்பெயர் கொண்டதுமான ஒருசெடி உஷ்ணப்பிரதேசங்களில் வசிக்கின்றது. அதற்கு அப்பெயர் வந்ததற்குக்காரணம், அதனிலையின் நுனியில் "லோட்டா"ப்போல் ஓரங்கந்தொங்கும். சிற்சில செடிகளில் அக்கோப்பைகள் ஓரடிநீளமாகவுமிருக்கும். அக்கோப்பையின் வாயை மூடுவதற்கு ஒரு மூடியுமுண்டு. அக்கோப்பையின் வாயைச்சுற்றித் தேன் சுரந்துகொண்டேயிருக்கும். அத்தேனை விரும்பிப்பூச்சிகள் அருகிற்போகத்தவறிக் கோப்பைக்குள் விழுந்துவிடும். பின்பு திரும்பி வெளியேறமுடியாது; ஏனெனில், கோப்பையின்மூடி உட்புறம் போவதற்கு மாத்திரமே வழிதிறக்குமேயொழிய, உட்போனது வெளிவர வழிதிறவாது. அக்கோப்பையினடியில் தண்ணீரும், அதிற்கரைந்த ஒரு திராவகமுமிருக்கும்; அதில்விழுந்து பூச்சிகளிறக்கும். இங்ஙனம் மோசஞ்செய்து கைப்பற்றிய இரையைச் சிலசமயங்களில் செடியானது இழந்துவிடுவதுமுண்டு. அக்கோப்பைக்குள் இனிய தீனி விழுந்துகிடப்பதைக்கண்ட கூரிய பார்வைகொண்ட சிலபறவைகள் அந்த "லோட்டா"வைக்குத்தி அதனுள்ளிருக்குமிரையைத் தின்றுவிடும்.

புலாலுண்ணுஞ்செடிகள் இங்ஙனம் அற்பப்பூச்சிகளை மட்டும் பிடித்துண்டுகளிப்பதில்லை; பெரிய வேறுபிராணிகளையுங் கொல்லும். மத்திய அமெரிககாவில் நிக்கராகுவா என்றொரு ஜில்லாவுளது. அங்கு "சாத்தான்வலை" (Devil's noose) என்றொரு செடியுண்டு. அது தனது கறுத்தும், நீண்டும், பிசின்கொண்டுமிருக்கிற கிளைகளால் நாய் முதலிய பிராணிகளையும் பிடித்துக்கொல்லும். மனிதர்கள் யாரேனுங்கண்டு அப்பிராணியை விடுவித்தாலொழிய, அது பிழைப்பதற்குப்பின்னேது ஒன்றுமிலது. சுமாத்ரா என்னுந் தீவாந்திரத்தில் ஒருவகை அல்லிசசெடியுண்டு; அது எந்நேரமும் ஒருவித நாற்றம் வெளிவிடும்; அத்துர்க்கந்தத்தை மோந்து பார்க்கும் பக்ஷிகளும மிருகங்களும் தக்ஷணமே உயிர் நீங்குமாம்; நமது புராணங்களிற் சொல்லப்பட்டிருக்கும் நச்சுமரம் போலும் இவ்வல்லிச்செடி.

உ

திருச்சிற்றம்பலம்.

# இரட்டைப்புலவர் சரிதம்.

(முற்றொடர்ச்சி.)

அன்றுமுதல் அவ்வுலாவிற்குத் * தெய்வீகவுலாவென்று பெயரா யிற்று. இவ்வாறிப்புலவர்கள் சோழநாடு, பாண்டிநாடு, சேரநாடு, நடுநாடு, தொண்டைநாடுமுதலிய வெல்லாநாட்டினுமுள்ள சிவாலயமாதிய தேவாலயங்களைத் தரிசித்துக்கொண்டு முடிவில், கைலையங்கிரிக்கிருப்பிடமாகிய வடநாடடைந்து, அதுமுதல் தாங்கள் ஆங்காங்குதரிசித்த சிவமூர்த்தி, விஷ்ணுமூர்த்தி, முதலியவைகளில், சுயம்புமூர்த்திகளைக்குறித்துச் சுயம்புலா என்னுமோர் பிரபந்தம்பாடி, மீண்டும் அம்மூர்த்திகளைக்குறித்து அம்மானை என்னுமோர் பிரபந்தமும்பாடத்தொடங்கி, அவ்வம்மானை என்னும் பிரபந்தத்தில், ஒருவரொரு தலத் தேவதையின் திருவிளையாடல் அடியிற்காட்டியமாதிரியாக இன்னதென் றோரடியால் குறிப்பிக்க, மற்றொருவர் அதிற் ‡ பிரசினங் கற்பித்து, வேறோரடியால் வினவ, அதற்குக் கலைமகளார் சிலே டார்த்தமாகத் தனியடியால் விடைதர, இப்படியநேகம் பாடல் களை மூவரம்மானை எனவழங்குமாறு திருவாய்மலர்ந்தனர். அவை வருமாறு :—

சித்தம்பூர் வாழுஞ் சிவனளித்த பிள்ளையார்
மெத்தப் பெருவயிறு வீங்கினர்கா ணம்மானை
மெத்தப் பெருவயிறு வீங்கினரே யாமாயி
னித்தரையின் மீதவருக் கேச்சன்றோ வம்மானை
யிரவுபகல் குட்டணிக்கிங் கேச்சுண்டோ வம்மானை.

ஆதார மாங்குடந்தை யாதிகும் பேச்சுரனார்
கோதாடு மன்மதனைக் கொன்றெரித்தா ரம்மானை
கோதாடு மன்மதனைக் கொன்றெரித்தா ராமாயின்
மாதாபி தாக்கள்பழி வாங்காரோ வம்மானை
வாங்குதற்கு முன்வாயின் மண்விழுந்த தம்மானை.

---

* ஏகாம்பரநாதருலா.

‡ பிரசினம் - வினா.

இப்பூமி தன்னி லியல்பாந் திருத்தணியில்
முப்பூ விளையு முருகருக்கே யம்மானை
முப்பூ விளையு முருகருக்கே யாமாயி
னப்பவருக் கங்கே யரிதல்லோ வம்மானை
யவர்க்குமுக மாறானா லப்பரிதோ வம்மானை.

அடுத்ததிருக் காவிரிசூ ழணியரங்க ரெப்போது
மெடுத்ததிருக் கோயிலைவிட் டெழுந்திரா ரம்மானை
எடுத்ததிருக் கோயிலைவிட் டெழுந்திரா ராமாயிற்
படுக்கையில்வி டந்தீண்டிப் பட்டனரோ வம்மானை
பட்டனரென் றன்றோ பருந்தெடுத்த தம்மானை.

தெண்டிரைசூழ் தில்லைச் சிவகாமித் தாயார்க்குக்
கண்டமெலா ஞானக் கரும்பதுகா ணம்மானை
கண்டமெலா ஞானக் கரும்பதுவே யாமாயி
னண்டர்பிரா னாலைதனி லாட்டாரோ வம்மானை
யாடிப் புலியூ ரமர்ந்தனன்கா ணம்மானை.

எனவருமாற்றாலறிக. இங்ஙனம் அளவற்ற பாக்கள்பாடிப்பலவற்புதங்களை விளைத்திருந்து சிவானந்தப்பெருவாழ்வடைந்தனரென்ப.

இப்புலவர்கள் கலம்பகம் பாடுவதில் மிகச்சிறந்தவர்களென்பதை,

வெண்பாவிற் புகழேந்தி பரணிக்குச்செயங்கொண்டான்விருத்த மென்னு
மொண்பாவுக் குயர்கம்பன் கோவையுலா வந்தாதிக் கொட்டக் கூத்தன்
கண்பாவு கலம்பகத்திற் கிரட்டையர்கள் வசைபாடக் காள மேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காச லாதொருவர் பகரொணாதே.

எனப்பிற்காலத்தார் பாடியுள்ள செய்யுளே தக்க சான்றாம்.

### இப்புலவர்கள் திருவேகம்பமுடைய நயினார்பேரில் பாடிய வண்ணம்.

மறுத்தோன்ற வெளுத்தபிறை படப்பாந்த ளிடைச்செருகி
வளர்த்தோங்கி முடித்தசடையார்—காஞ்சனைமனையார்
மலர்க்காந்தண் முருக்கவிழ விதழ்த்தேன்கள் குறித்தொழுகி
மடைத்தேங்கி யுடைத்து வருநீர்—போஞ்சுழிவழியே

சிறுத்தூண்டில் முரித்தசுற வரக்காம்ப லூழக்கியொரு
சிறுசசேம்பை முறித்து வெடிபோய்—வீழ்ந்தயலருகே
திடப்பாவுகர் முடக்கமுகின் மடற்கின்று களித்துவரு
திருக்காஞ்சி புரத்தி றைவரே—காம்பாரடியே
குறித்தேர்ந்து தடிக்குளுடல் வளைத்தாம்பி மூளைத்தனைய
குடைக்காம்பு பிடித்து வரும்வே—தாந்தவிரதியீர்
குலக்காந்த ஞெருத்தனொடு குலக்காந்தி யொருத்தியிரு
குடித்தீங்கு விளைத்து மிகுமால்—பூங்கொடியனையா
ளுறச்சேர்ந்து மடித்தலையன் வளர்த்தேங்க டமக்குமல
வுயிர்ப்பாங்கி தமக்கு மலபா—தாம்புயமலரே
வுலைப்போன்ற பாற்பொதியி னடித்தீந்து விறற்கருகி
யுலக்கான்ற சுரத்தில் வருநீர்—தேர்ந்துளிர்தெரிவீரே.

இவ்வளவே, இரட்டைப்புலவர்கள் வரலாறாகத்தெரிந்தவை. இச்சரிதங்களால் இரட்டைப்புலவர் தெய்வீகப்புலமைவாய்ந்த பெரியோர்களென்பதும், ஐங்கரக்கடவுளே இப்புலவர்கள் வசைக்கவிகேட்க விருப்பங்கொண்டு வலிந்தாட்கொண்டு பாடப்பெற்ற பேரடியார்களென்பதும், பூமியில் மறைந்திருந்த ஆயிரக்கான்மண்டபமும் விகடசக்கர விநாயகராலயமும் வெளித்தோன்றப்பாடிய உத்தமகவிகளென்பதும், சிவபுராணக்கதைகள் பலவற்றையும் மிகப்புராதனமான நூல்களின் கருத்துக்களையும், தம்முடைய நூல்களுள் மிக அழகாக அமைத்துப்பாடிப் பிற்காலத்தார்க்கு வழிகாட்டிப்பெரும்புகழ்பெற்ற மகோபகாரிகளென்பதும், மற்றும் இவர்களது உத்தம குணவிசேடங்களும் நன்கு விளங்கும்.

இவர்களுக்கு வழங்கிய "இரட்டைய"ரெனும் பெயர் இப்புலவர்களுள் ஏற்பட்டிருந்த ஒற்றுமையுணர்ச்சியானும, அங்கஹீனர்களாய் நேர்ந்த காரணத்தால் ஒருவர் சகாயமின்றி ஒருவர் வாழ முடியாததானும், இப்புலவர்களுக்கு இப்பெயர் வழங்கியிருக்கலாம் போலும். இங்ஙனம சீரும் சிறப்பும் தெய்வப்புலமையும் நிரம்பி இப்புலவர்கள், திகழ்ந்திருந்தது நந்தமிழகமெனின் இதன்பெருமை அளவிடற்பாலதோ!

இனி இப்புலவர்பிரான்கள் பாடியனவாக மேலே குறித்தபாடல்களில் "அப்பிலே தோய்த்திட்" என்பது ஒப்பிலாமணிப்புலவர்

வரலாற்றுடனும், படிக்காசுப்புலவர் வரலாற்றுடனும் "மன்னுதிரு வண்ணமலை" என்பது காளமேகப்புலவர் வரலாற்றுடனும் "தேன் பொழியும்வாயான்" என்பது அந்தகக்கவிவீரராகவமுதலியார், வரலாற்றுடனும், "தம்பியொரு பெண்டிருடி" என்பது இராமகவிராயர் வரலாற்றுடனும் இக்காலத்துவழங்குகின்றன. இவற்றில் பாடபேதங்களும் சிலவுள

இனி இரட்டைப்புலவர்காலமின்னதென்பதை ஆராய்வோம்.

வில்லிபுத்தூரர் மகனார் வரந்தருவார் பாடிய பாரதச்சிறப்புப் பாயிரத்தில்,

எங்குமிவனிசைபரப்பிவருநாளில்யாமுரைத்தவிந்தநாட்டிற்
கோங்கர்குலவரபதியாட்கொண்டானென்றொருவண்மைக்குரிசிறோன்றி
வெங்கலியின்மூழ்காமற்கருடப்பேர்வெள்ளாத்துவிழாமனூன்காரு
சங்கமெனமூச்சங்கத்தண்டமிழ்நூல்கலங்காமற்றலைகண்டானே.

ஆற்றியமெய்ச்செல்வத்தாலளகையைவென்றிருங்கவிஞலமாருநை
மாற்றியபொற்றடமதில்சூழ்வக்கபாகையினறத்தின்வடிவமபோலத்
தோற்றியவக்கோங்கர்பிரான்சூழ்தமிழாளுட்கோண்டான்சுற்றத்தோடு
போற்றியவிப்புவிமுழுதுந்தன்றிருப்பேர்மொழிகொண்டேபுரந்தானம்மா.

பிறந்துய்யக்கொண்டவனிப்பேருலகம்பெருவாழ்வுகூருநாளி
னிறைந்தபுகழ்சனிநகர்வாழ்வில்லிபுத்தூரனைநோக்கிநீயுநானும்
பிறந்ததிசைக்கிசைநிற்பபாரதமாம்பெருங்கதையைப்பெரியோர்தங்கள்
சிறந்தசெவிக்கமுதமெனத்தமிழ்மொழியின்விருத்தத்தாற்செய்கவென்றான்

எனவருதலால் வக்கபாகையிற் கொங்கர்குலபதியாய்வந்த ஆட்கோண்டான் என்னும் வள்ளல் சனியூர் வில்லிப்புத்தூரரைப்பாரத விருத்தம் பாடுமாறு வேண்டினன் என்பது அறியப்படுகின்றது. தமிழ்நாவலர் சரிதையில்,

சாணர்க்கு முன்னிற்குமாட் கொண்டநாயன் றமிழ்க்கொங்கர்கோன்
பாணுற்றவரிவண்டு சேர்வக்கை நகராதி பக்கத்திலே,

என இரட்டையர் பாடுதலானும், இதிற்காணப்படும் வக்கைநகர் இவ்வக்கபாகையேயாமென்பதும், ஆண்டு ஆட்கொண்டநாயன், கொங்கர்கோன் எனப்படுவானும், இக்கொங்கர் குலபதியாகிய ஆட்

கொண்டானே என்பதும் பெயரொற்றுமைபற்றி எளிதிலறியப்படும். இதனால் பாரதவிருத்தம்பாடிய வில்லிப்புத்தூராரும், இரட்டையரும் ஒருகாலத்தவர்களாதல் நன்கு தெளியப்படும்.

அன்றியும், வில்லிபுத்தூரார்க்கும், திருப்புகழ்பாடிய அருணகிரிநாதர்க்கும, "கந்தரந்தாதி" என்னும் ஒரு நூலுக்கு உரைகாரணமும் விஷயமாகப்பெருஞ்சம்வாதம் நிகழ்ந்ததாக டிஸ்டிரிக்டு முன்சிப்பாகவிருந்து பென்ஷன்பெற்றுக்கொண்ட வடக்குப்பட்டு ஸ்ரீமத்-சு. சுப்பிரமணியபிள்ளையென்பார் வெளியிட்டுள்ள அருணகிரிநாதர் திருப்புகழ் முதற்பாகம இரண்டாம்பதிப்பில் அவர் குமாரர் ஸ்ரீ: வ. சு. செங்கல்வராயன் என்பார், "அருணகிரிநாதர் ஆராய்ச்சி" என்ற தலைப்பின்கீழ் நன்கு விளக்கியிருக்கின்றனர்.

திருவண்ணாமலையிற் பிரபலமாகவிருந்த "சம்பந்தாண்டான்" என்பானும், அவர்காலத்திருந்ததாக அறியலாவதுடன் அருணகிரிநாதர்க்கும், சம்பந்தாண்டானுக்கும், பத்திகாரணமாக ஓர்வாது நடந்தேறியதாகவும் தெரிகின்றது. அருணகிரிநாதர்க்கும், வில்லிபுத்தூரார்க்கும நடந்த சம்வாதமும், சம்பந்தாண்டானுக்கும, அருணகிரிநாதர்க்கும் நிகழ்ந்த தர்க்கவிஷயமும், நாம் தக்கசரிதமுகத்தானறிவதால், வில்லிபுத்தூரார், அருணகிரிநாதர், சம்பந்தாண்டான் இம்மூவரும் ஒருகாலத்தவராகக் கொள்ளத்தடையில்லை. இவர்கள் திருவண்ணாமலையில், இங்கிலீஷ் 1450-ம்ஹு அரசுபுரிந்த பிரபுடதேவராஜன் காலத்தவரென்பதை ஸ்ரீ: வ. சு. செங்கல்வராயன்அவர்கள் தக்கசாஸன ஆதாரங்கண்டு கருதுகின்றார்கள். அருணகிரிநாதர்காலம் இற்றைக்கு 460-ஆண்டுகட்கு முற்பட்டதென்று நிச்சயிக்கையில், இவருடன் வாதுநிகழ்த்திய வில்லிபுத்தூரார்க்கும் இக்காலமேயாமென்பது சொல்லாமலேயமையும். வில்லிபுத்தூரார்க்கு 460-வருடங்கள் ஆம்போது நமது இரட்டைப்புலவர்க்கும் அஃதே பொருந்திற்றும். காரணம், வக்கைநகர் வரபதி ஆட்கொண்டானை வில்லிபுத்தூராரும், இரட்டையரும் பாடுதலானேயாமென்க. இச்சிற்றாராய்ச்சியில் நமது தெய்வப்புலமையாளர் இற்றைக்கு நானூற்றறுபது வருடங்கட்குமுன் விளங்கியவரென்றுகொள்வதே பொருத்தமுடைத்தாம்.

இரட்டைப்புலவர் காலத்தைப்பற்றி மஹாமஹோபாத்தியாயர்-ப்ரஹ்மஸ்ரீ: உ. வே. சாமிநாதையரவர்களும், திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகத்தின் முகவுரையில், தொல்காப்பியத்தேவர் காலத்தைக் கூறவந்தவிடத்து, "இரட்டையர்களுடைய காலத்திற்கு முற்பட்டவரென்று தெரிதலால், இந்நூலாசிரியர், அவர்களாற் பாடப்பெற்ற வரபதியாட்கொண்டானென்னும் பிரபுவுக்கும், அவர் விருப்பத்தின்படி பாரதம்பாடிய ஸ்ரீ: வில்லிபுத்தூராழ்வாருக்கும் அவர்காலத்தவர்களாகிய ஸ்ரீ: அருணகிரியார் முதலியவர்களுக்கும் முற்பட்டவராக எண்ணப்படுகின்றார்." என்று கூறுவதையும் இதற்கு ஆதாரவாகக் கொள்க.

இரட்டைப்புலவர்கள் செங்குந்தமரபினரேன்பதை,

"அத்தை மகன்குரு டம்மான் மகன்முட மாகிக்கீழ்மே
லொத்துறைந் தேகூறு பாடோ டணிகொ ளுலப்பில்கவி
முத்தரி லோதியே கம்ப ருலாமுன் மொழிந்தெவருஞ்
சித்த முவப்பத் திரிவோர் செஙகுந்த சிலாக்கியரே."

எனவரும் திருவிருத்தத்தா னுமுணர்க.

இப்புலவர்கள் திருவாமாத்தூர்க்கலம்பகம்பாடிய வரலாற்றைப் பற்றிச் சுப்பிரமணியக்கடவுள் க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்ச் சிறுதேர்ப்பருவத்திற்கண்ட ஒருசெய்யுள் வருமாறு:—

"எம்பால்வந்தீரிரட்டையர்நீரெம்மைப்பாடுவீரென்றே
யெம்மானருளத்திருமுன்னேயிருந்தேகலம்பகம்பாடச்
செம்பாகஞ்சேர்கலம்பகத்திற்சிறந்தகங்கைமேற்கரையிற்
றிகழாலயங்கொண்டாரென்றுசெப்பப்புலவரதேதென்ன
நம்பாநாங்களுரைத்தபடிநதியைக்கீழ்பாற்றிருப்பென்ன
நாதனருளால்வடக்குவிட்டுநண்ணுங்கீழ்பாற்பெருகிவரும்
பம்பாநதிசூழமாத்தூர்ப்பாலாசிற்றில்சிதையலே
பச்சைமயில்வாகனனுன்னைப்பணிவோஞ்சிற்றில்சிதையலே."

இரட்டைப்புலவர்சரித முற்றிற்று.

சி. கு. நாராயணசாமிமுதலியார்,
கோவை.

# நல்லொழுக்கம்.

[ஸ்ரீமத்-இலக்குமணப்போற்றிகள் மொழிபெயர்த்தது.]

அடக்கமுடைமையென்பது வேறு ரூபத்திலுள்ள தைரியமே யாம். அது ஏறக்குறைய ஒழுக்கத்திற்கு முதன்மையான முக்யாம்சமாக மதிக்கப்படலாம். ஷேக்ஸ்பியர் (Shakespeare) அனவர் மனிதனை முன்னும்பின்னும் பார்க்கிறபிராணியாக இலட்சணப்படுத்துவது இக்குணத்தினாலேதான். மனிதனுக்கும் மற்றப்பிராணிகளுக்குமுள்ள முக்கியவேற்றுமையாவது, அதுவாகின்றது. அதுவன்றி உள்ளபடியே உண்மையான மனிதத்தன்மைகிடையாது.

தன் அடக்கமானது சகல சற்குணங்களுக்கும் மூலமாகவிருக்கின்றது. ஒருமனிதன் தன் அவாக்களுக்கு இடங்கொடுக்க அந்த நிமிஷமுதற் சன்மார்க்கசுவாதீனத்தை இழந்துவிடுகிறான். இந்த ஜன்மப்பிரகிருதியின் போக்கிலேபோய்த் தற்காலத்தில் தான்மிகவும் பலத்த இச்சைக்கு அடிமையாகின்றனன்.

சன்மார்க்கத்திற்கிணங்கச் சுவாதீனமாயிருத்தற்கு ஒரு மிருகத்தினும் மேலாகச்சுவாதீனமாய் இருப்பதற்குப் பிரகிருதித்துவத்தினின்றும் கிளர்ந்த இச்சையை அடக்கச் சக்தியுள்ளவனாயிருத்தல் வேண்டும். மனஅடக்கத்தைப் பயிற்சிசெய்வதாற்றான் இந்நிலையடையக்கூடும் இந்தச்சக்திதான், பகுத்தறிவில்லாத பிராணிகளுக்கும், பகுத்தறிவுள்ள சன்மார்க்க உயிர்களுக்கும், மெய்ம்மையான வித்தியாசமாகப் பாவிக்கப்படுகின்றது. ஒரு மனிதனுடைய சொந்த ஒழுக்கத்திற்கு முதன்மையான அஸ்திபாரமாகின்றதும் இதுவே யாம். வேதப்புத்தகத்தில், ஒரு நகரத்தைப்பிடிக்கிற பலவானுக்குப் புகழ்கொடுக்கப்படவில்லை. ஆனால் தன் சொந்த இச்சையை அடக்கும் அதிகபலவானுக்கே புகழ்கூறப்பட்டுள்ளது. அப்பியாசத்தால் இடையறாது தன் மனம் வாக்குச் செயல்களின்மீது ஆளுகையை வகிப்பவனே அதிகப்பலவானாகிறான். ஜனசமூகத்தைத் தாழ்மைப்படுத்துவதும், தன் போக்கில்விட்டால் அதற்கு அவமானத்தை உண்டாக்கத்தக்க குற்றங்கள் பெருகுவதுமான துன்மார்க்க

இச்சைகளிற் பத்தில் ஒன்பதுபாகமாவது, வீரமுள்ளமை, அப்பியாசம், தன்மரியாதை, மனஅடக்கமாகிய இவைகள் முற்படவே பயனற்று ஒதுங்கிவிடும். இக்குணங்களை ஜாக்கிரதையுடன் சாதகஞ்செய்வதால் இருதயசுத்தமும், வழக்கத்திற்கு வந்துவிடுகின்றது. ஒழுக்கமானது, சுத்தம், சற்குணம், மிதமாயிருத்தலாகிய குணங்களைப்பொறுத்து உண்டாகின்றது.

வழக்கமானது ஒழுக்கத்திற்குச் சிறந்த ஆதாரமாக எப்பொழுதும் காணப்படுகின்றது அவ்வழக்கமானது மனம் கிரமமாக அல்லது அக்கிரமமாக நடத்தப்படுகிறதற்றுத் தக்கவண்ணம நன்மையாக அல்லது தீமையாக ஆண்டுவருகின்றது. நாம் அதைநடத்தும், கர்த்தாவாயிருக்கலாம், அல்லது அதற்கு இழிவான அடிமையாயிருக்கலாம், அது நமக்கு நன்மார்க்கத்திற்கும் உதவியாயிருக்கலாம், அல்லது நம்மைத் தீயமார்க்கத்திலுங் கொண்டுவிடலாம்.

வழக்கமானது ஜாக்கிரதையான அப்பியாசத்தால் உண்டாக்கப்படுகிறது. ஒழுங்கான சிக்ஷையாலும், அப்பியாசத்தாலும், எவ்வளவுகாரியம் செய்யப்படுகிறதென்பது ஆச்சரியமாயிருக்கிறது. திருஷ்டாந்தமாக, தெருக்களினின்றும் பொறுக்கிய முரட்டாண்மாக்களையும், உழவர்களினின்றும் பிடிக்கப்பட்டபச்சையான நாகரீகமற்ற நாட்டுப்புறத்துப்பையன்களையும் போன்ற முன்னுக்கு வரத்தக்க பாத்திரமாயில்லாத கருவிகளினின்றும், ஸ்திரமானசிக்ஷையும் யுத்த அப்பியாசமும், தைரியமும், சகிப்பும், தன்னயம்பாராட்டாமையுமாகிய குணங்களை நிர்ச்சந்தேகமாக எவ்வாறு உண்டாக்கினவென்பதைப் பாருங்கள். யுத்தகளத்தில் அல்லது ஸாரா ஸேண்ட்ஸ் (Sarah sands) இன் எரிவு பெர்கென்ஹெட் (Birken head) இன் கப்பலுடைவுபோன்ற மிகவும் வருத்தமானகடல் அபாயகாலங்களில் ஜாக்கிரதையுடன் சாதகஞ்செய்யப்பெற்ற அம்மனிதர்கள், உண்மையான பராக்கிரமமும் வீரமுமான தவறில்லாத இலட்சணங்களை எப்படிக்காட்டுவார்கள் என்பதைப்பாருங்கள்.

ஒழுக்கத்தை உண்டாக்குவதிற் சன்மார்க்கசிக்ஷையும் அப்பியாசமும் குறைந்த சக்தியுடையனவல்ல. நம்வாழ்க்கையை ஒழுங்குப

டுத்துவதில் அமைவில்லையேல் சரியான சட்டமும் ஒழுங்கும் உண்டாகா. தன் மரியாதையின் உணர்ச்சி பலவார்க்கும், கீழ்ப்படியும் வழக்கத்தைக் கற்பயிற்றல், கடமையின் ஞானத்தை விருத்திசெய்தலாகிய இவற்றினுக்கு அதுவே ஆதாரமாகின்றது. ஒருவன் தன்னையே சார்பாகத் தன்னைக்கட்டுப்படுத்திக்கொள்பவன் எப்பொழுதும் சிக்ஷைக்குள்ளிருக்கிறான். எவ்வளவிற்கு சிக்ஷை பெறுகின்றதோ, அவ்வளவிற்குச் சன்மார்க்கஸ்திதி உயர்வடையும். அவன் தன் இச்சைகளை வசப்படுத்தித் தன் சுயாட்சியின் உயர்வுற்ற சக்திகளுக்குள் அடக்கிவைத்துக்கொள்ளல்வேண்டும். அவைகள் உள்ளிருக்கிற சட்டம்பிள்ளையாகிய மனச்சாக்ஷியின் அதிகாரமொழிகளுக்குக் கீழ்ப்பட்டிருத்தல்வேண்டும். மற்றபடி அவனுடைய இச்சைகள் அவர்களைக்கேவலம் அடிமையாக்கி உணர்ச்சியும் அவாவும் அவர்களை வேட்டையாடிவிடும்.

ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் (Herbert-spencer) சொல்லுகிறபடி உயர்ந்தமாதிரியான மனிதனுடைய பக்குவமான குணங்களில் மூன்று மனஅடக்கத்தின் மகத்துவமாகும். ஆசையின் வசப்படாமல் மாறிமாறி மேலிட்டுவருகிற ஒவ்வொரு இச்சையாலும் அங்கும் இங்கும் ஓட்டப்படாமல், ஆனால் ஒவ்வொரு செய்கையையும் முற்றும் விவகரித்து அமைதியுடன் நிர்மானிப்பதற்குச் சாதனங்களாகிய உணர்ச்சித்தொகுதியின் ஒன்றுசேர்ந்த நிர்மானத்தால் ஆளப்பட்டுத் தன் னடக்கமும் நிலைவுநிலைமையும் உடைத்தாயிருத்தலை உண்டாக்குதற்குச் சன்மார்க்கபோதனையானது முயற்சிப்பதாகின்றது.

சன்மார்க்க அப்பியாசம் செய்வதற்கு மேலாகச் சிறந்ததாயுள்ள கல்விச்சாலையானது நாம் முன்கூறிய குடும்பமேயாம். அப்பால் வித்தியாசாலையாகும். அதன்பின்னர், அனுஷ்டான ஒழுக்கத்திற்குரிய பெரிய கல்விச்சாலையாகிய உலகமேயாம். ஒன்று மற்றொன்றினுக்குச் சாதனமாயிருக்கின்றது. மனிதன் அல்லது ஸ்திரீயினுடைய நடப்பானது, பெரும்பாலும் அவன் பழகின ஒழுக்கத்தைப் பொறுத்துண்டாகின்றது. குடும்பத்திலாவது வித்தியாசாலையிலாவது இருப்பதால் எழுபயனாகாது, சிக்ஷைபோதனை அப்பியாசமின்றி வளரவிடப்பட்டால் அவர்களுக்கும் தூக்கம் அவர்

களை அங்கமாய் உடைத்தாயிருக்கிற ஜனசங்கத்திற்கும் நிர்ப்பாகியமேயாம்.

சிக்ஷையானது பூரணமாயிருந்து அது உணரப்படாமலே உண்டாகக்கூடிய குடும்பந்தான் எப்பொழுதும் சிறந்த ஒழுங்கினுக்குட்பட்டதாகவிருக்கின்றது. சன்மார்க்க சிக்ஷையானது பிரகிருதியில் ஏற்பட்ட பிரமாணத்தின் பலத்துடன் வேலைசெய்கின்றது. அதற்குட்பட்டவர்கள் தன்னறியாமலே அதன் வயப்படுகின்றனர். நம்முடைய நடப்பானது வழக்கத்துடன் அபேதமாய்ப் பிரகாசிக்கும்வரை நம்முடைய ஒழுக்கமுழுவதையும், அது உருப்படுத்தி உண்டாக்காநின்றபோதிலும இவ்விதமாய்ச் செலுத்தப்பட்ட வசீகரண சக்தியானது பெரும்பாலும் அதிருசியாயும உணரக்கூடாததாயுமிருக்கின்றது.

கண்டிப்பான குடும்பசிக்ஷையின் முககியத்தையைப்பற்றி மிஸ்டிரஸ் ஸ்ச்சிம்மல் பெனனிக் (Mrs. Schimmel-pennick) உடைய சரித்திரத்திற் கீழ்ககண்டபிரகாரம் ஒருவிதமான திருஷ்டாந்தம் உண்டு. ஒருஸ்திரீயானவள் இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலுமுள்ள அனேக பைத்தியசாலைகளைத் தன்கணவனுடன் போய்ப்பார்த்தனள்; அதில் அனேக நோயாளிகள் குழந்தைகளாயிருந்தனர். அவர்களுடைய சித்தங்கள் சிறுவயதில்தடுத்துச் சிட்சிக்கப்படாதவைகளாயிருந்தன. ஆனாற் பெரியகுடுபபஸ்தர்கள் சுயசிக்ஷயிற்பழகினவர்களாயிருநத வகுப்பினர் வெகு சொற்பப்பெயர்தான் அவ்வியாதிக்குட்பட்டவராயும் இருக்கக்காணப்பட்டனர்.

சன்மார்க்க ஒழுக்கமானது பெரும்பாலும் மனோசுபாவத்தையும் தேக சௌக்கியத்தையும் குடும்பத்தில் அதிபால்ய சிக்ஷையையும் கூட்டாளிகளின் முன்மாதிரியையும் பொறுத்திருந்தபோதிலும் ஜாக்கிரதையாயும் விடாமுயற்சியுடனும் செய்யப்பட்ட மனவடக்கத்தால் ஒவ்வொருவனுடைய சக்திப்பிரகாரம் அதனை ஒழுங்குபடுத்தி அடக்கிச் சிட்சித்துக்கொள்ளவேண்டியுமிருக்கின்றது. குணங்களும் பழக்கங்களும் லத்தீன், கிரீக், பாஷைகளைப்போல படிபோதிக்கத்தககனவென்றும், ஆனல் இன்பத்தினுக்கு மிகவும் முக்கியமாயினவென்று தக்கபோதகர் ஒருவராற்சொல்லப்பட்டிருக்கிறது.

(தொடரும்.)

# * ஈகை.

(முற்றொடர்ச்சி)

தமிழ்நாட்டிலே பல்லாயிரம் வருடங்கட்கு முன்னரே தமது பூதவுடல் பொன்றியும் புகழுடம்புபொன்றாது இன்றும் விளங்கப் பெற்ற வள்ளல்களும் மன்னர்களும் பிரபுக்களும் ஆகியோரெல்லாம் மேற்கூறியவாறே முறுகிய பெருங்கொடையாளிகளேயாவர். அன்னவர் சிலர்சரிதம் பின்னர்க்கூறுதும்.

கொடுத்தற்குரியார் யாவரென்றாராயுமிடத்து, அரசர்கட்கு முகிய அங்கமாகிய பத்தில் (தசாங்கத்தில்) முரசமுமொன்று. அரசவாயிலில் முழங்கும் முரசு மூன்றுவகைப்படுமெனவும், அவற்றுள் ஒன்று கொடைமுரசமெனவுங் கூறுவர். இதனை, புறநானூறு-ருஅ-ம் கவியில், "இமிழ்குரன் முரசமூன்றுட னாளுந், தமிழ்கெழு கூடற்ற ண்கோல் வேந்தே" என்புழி உரையாசிரியர் மும்முரசாவன: படைமுரசு, நியாயமுரசு, தியாகமுரசு எனப்பகுத்தோதியவாற்றாற் காணலாம். முரசமுழக்கி இரப்பாரையழைத்து வேண்டுவகொடுத்தல் வேந்தர்க்கியல்பென்பது இதனால் விளங்குவதன்றோ? அன்றியும்,

> "கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
> முடையானும் வேந்தர்க் கொளி."

> "இன்சொலா லீத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலாற்
> றான்கண் டனைத்திவ் வுலகு."

> "இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
> வகுத்தலும் வல்ல தரசு."

> "அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
> மெஞ்சாமை வேந்தர்க் கியல்பு."

எனத் திருவள்ளுவர் இறைமாட்சியின்கண் நான்கு திருக்குறள்களில் அரசர்க்கு இன்றியமையாதது கொடையென்றார். இங்ஙனமாகத் தலைமைபற்றிக்கூறினாரேனும், உடையார்யாவரும் இல்லார்க்

---

* இவ்வியாசம் மதுரைத் தமிழ்ச் சங்கத்து எட்டாம் வருஷோற்சவ தினங்களுள் ஒன்றாகிய 1909-ளு மே.ீ உருவெ ஸ்ரீமாந்-பொ. பாண்டித்துரைத் தேவரவர்கள் அக்கிராசனம் வகித்த வித்துவச்சபையில் ஸ்ரீமத்-எம். கே. அப்துல்காதிறுராவுத்தரவர்களாற் படிக்கப்பட்டது.

குக்கொடுத்தற்கு உரியவரேயென்று கொள்ளவேண்டும். இக்கரு த்தாற்றான் இல்லறவியலுள் ஈகையென ஓரதிகாரம் அமைத்தனர். அன்றியும்,

"தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கு
முண்பன நாழி யுடுப்பன விரண்டே
பிறவு மெல்லா மோரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீதல்." (புறநா-௧௮௯.)
" துய்ப்போ மெனினே தப்புந பலவே."

எனவரும் புறப்பாட்டானும்,

"ஏற்றகை மாற்றாமை யென்னானுந் தாம்வரையா
தாற்றாதார்க் கீவதா மாண்கடன்."

எனவரும் நாலடியாரானும்,

"ஆற்று மாக்க ளரும்பசி களைவோர்
மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை."

எனவரு மணிமேகலையானும், "ஈதற்குச்செய்கபொருளை" என்னும் திரிகடுகத்தானும் மானிடஜென்மம் எடுத்துப்பொருள்படைத்தோர் எல்லாருங்கொடுத்தற்கு அதிகாரிகளேயென்று கொள்ளவேண்டும். கொடைப்பயனை நன்குணர்ந்தாராயவர் இன்னபொருளைத்தான் கொடுப்பதென்று கருதார். இத்தனை முறைதான் இன்னவேளை தான் கொடுப்பதென்று நியதியுங்கொள்ளார். இரப்பார் குறிப்ப றிந்து அதையுங்கொடுத்து அவர் மகிழக்கண்டு, தாமுமகிழ்வார். நளச்சக்கரவர்த்தியிடம் இந்திரன் வரங்கேட்டபோது,

"குறிப்பறிந் தீதலே கொடைமற் றின்றெனை
மறுத்தலே கேட்டபின் வழங்கல்."

எனக்கூறி, "பெறற்கருமாவியும் பெட்பினீகுவன் - றிறப்படவிவருள ந்தெரிந்த தில்லையால்" எனக்கவலுற்றதும், விஷ்ணுகுறளுருவெடுத் து இரந்தபோது அவ்வஞ்சச்செய்தியை வெள்ளிகூறித்தடுத்துங் கொள்ளுகிலாது தத்தஞ்செய்த உத்தமவள்ளலாகிய மாவலிவேந் தன்,

"வெள்ளியை யாதல் விளம்பினே மேலோர்
வள்ளியராக வழங்குவ தல்லா
லெள்ளுவ வென்சில வின்னுயி ரேனுங்
கொள்ளுத நீது கொடுப்பது நன்றால்."

எனக்கூறியதும், குமணன் தனது தலையைக்கொடுக்கத்துணிந்ததும், ததீசிமுனிவர் தமது முதுகெலும்பைக்கொடுத்து நின்றதும், சிபிச்சக்கரவர்த்தி வேடனுக்குத் தனது மாமிசத்தைக்கொடுத்ததும், கன்னன் தான்செய்த புண்ணியமனைத்தையும் யுத்தகளத்தில் யாசித்த பிராமணோத்தமனுக்களித்ததும் இன்னோரன்ன பல சரிதங்களும்,

"சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை"

என்ற பொய்யாமொழிக்கு இலக்கியமாக விளங்குவனவன்றே.

முற்கணத்துப்பரிசில்பெற்றானே பிற்கணத்தும் வந்திரப்பினும் முற்றந்ததைமறந்து பின்னுங்கொடுத்துப்போக்கலும், தமக்கு வறுமைப்பாடுறினும், அவ்வறுமையினும் இயன்றவளவு கொடுத்து மகிழ்வித்தலும் வள்ளியோர்கடனாம்.

"இன்றுசெலினுந் தருமேசிறுவரை
சென்றுசெலினுந் தருமேபின்னும்
முன்னே தந்தனெ னென்னாது துன்னி
வைகலுஞ்செலினும் பொய்யலனாகி
யாம்வேண்டியாங்கெம் வறுங்கலநிறைப்போன்."

(புறநா-கஎக) எனவும்,

"இரப்பாதுகொடுக்குஞ் செல்வமுமிலனே
யில்லெனமறுக்குஞ் சிறுமையுமிலனே"

எனவரும் புறப்பாட்டானும்,

"ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கா லுலகூட்டும்"

என்பதனானும் இவ்வண்மைத்திறனினிதுவிளங்கும்.

எத்துணைப்பெருஞ்செல்வம்படைத்திருப்பினும் வள்ளன்மை படைத்தாலன்றிச் சிறிதும் புகழ்பெறற்குரியராகார். துரியோதனனிடத்துப்பெற்றதோர் சிற்றரசுகொண்ட கன்னன்கொடையாலன்றோ பேரிசைபெற்று இன்றும் நிலவுகின்றான். சிற்றரசர்களான வள்ளல்கள் பெற்ற பெரும்புகழிற்கு எப்பேரரசர்பேரும் எதிர்நிற்குந்தரத்தனவோ.

சைவமதத்தினர் குருவாகிய திருநாவலூரர் சிவபிரானையன்றிப் பிறதெய்வங்களையும் பாடக்கண்டிலம். அத்தகையார் பாடலில், 'கொடுக்கிலாதானைப்பாரியேயென்று கூறினுங்கொடுப்பாரிலை" என்று பாரியென்னும் வள்ளலைப் புகழ்ந்துகூறுவாராயினர். இதுமட்டோ,

வானம் வாய்த்த வளமலைக் கவாஅற்
கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திற லணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கட னுடன் பேகனும் (1) சுரும்புண
நறுவீ யுறைக்கு நாக நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பிறங்கு வெள்ளருவி வீழுஞ் சாரற்
பறம்பிற் கோமான் பாரியும் (2) கறங்குமணி
வாலுளைப் புரவியொடு வையக மருள
ஈர நன்மொழி யிரவலர்க் கீந்த
அழறிகழ்ந் திமைக்கும் அஞ்சுவரு நெடுவேற்
கழறொடித் தடக்கைக் காரியும் (3) நிழறிகழ்
நீல நாகம் நல்கிய கலிங்கம்
ஆலமர் செல்வர்க் கமர்ந்தனன் கொடுத்த
சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்
ஆர்வ நன்மொழி ஆயும் (4) மால்வரைக்
கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி
யமிழ்துவிளை தீங்கனி யெளவைக் கீந்த
வுரவுச்சினங் கனலும் ஒளிதிகழ் நெடுவே
லரவக்கடற் றானை அதிகனும் (5) கரவாது
நட்டோ ருவப்ப நடைப்பரி காரம்
முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்
துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு

நளிமலை நாடன் நள்ளியும் (6) நளிசினை
நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக்
குறும்பொறை நன்னாடு கோடியர்க்கீந்த
காரிக் குதிரைக் காரியொடு மலைந்த
வோரிக் குதிரை ஓரியும் (7) எனவாங்கு
எழுசமங் கடந்த வெழுவுறழ் திணிதோள்
எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம்''

என முறையே சிறுபாணாற்றுப்படையில் வள்ளல்கள் கொடையைப்பாராட்டியிருப்பதும், இன்னும் இவ்வாறே ஒவ்வொரு வள்ளல்களையும் ஆங்காங்கு நல்லிசைப்புலவர்கள் பாராட்டிப்புகழ்ந்திருத்தலையும் நோக்குமிடத்துக்கொடுத்து நல்லிசைப்பெற்றாரே இறந்தும் இருந்தவராரென்பது அமையும். இக்கருத்தைக் கம்பநாடார்கூறிய

"மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா
தேந்திய கைகொ டிரந்தவ ரெந்தாய்
வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனு
மீந்தவ ரல்ல திருந்தவ ரியாரே''

என்னும் இராமயாணச்செய்யுளும் வலியுறுத்தும்.

எம்மவர்க்குள்ளே சீதக்காதிமறைக்காயரைப் பிறமதத்தவர்களும் நன்குகொண்டாடுவர். அஃதவர் கொடையாற்பெற்றபேறாகும்.

இங்ஙனங்கொடுத்துப் புகழ்புனையும் பெரும்பாக்கியம் எல்லாருக்குங் கிட்டுவதரிது. தவமுடையார்க்கே அது முற்றுஞ் சித்திப்பதாகும். "தாதாகோடிக்கொருவன்" என்றார் பழமொழியில்.

"கொடையுளுமொருவன்கொல்லுங்கூற்றினுங்கொடியவாட்போர்ப்
படையுளுமொருவனென்றுபயங்கெழுபனுவனுண்ணூ
னடையுளார்சொல்லிற்றெல்லாம்நம்பிசீவகன்கட்கண்டாந்
தொடையலங்கோதையென்றுசொல்லுபுதொழுதுகிற்பார்.

என்றார் சிந்தாமணிக்காரர்.

இவ்வாறு பெருமையும் அருமையும்பெற்றுவிளங்கிய கொடையின்றன்மை நம் நாட்டுக்கே சிறந்த தருமமாகவிருந்தது. இக்காலத்தோ காலவேறுபாட்டால் கொடுப்பார் தொகை மிகச்சுருங்குவதாயிற்று. அதினும் புலவர்கட்கீவார் தொகை மிகச்சுருங்கின்

றது. தற்காலத்தில் நம் தமிழ்ச்சங்க ஸ்தாபகராகிய ஸ்ரீமாந்-பொ. பாண்டித்துரைச்சாமியவர்கள் பெருங்கொடைவள்ளலாக வீற்றிருப்பது கண்கூடாகக்கண்டும் இவ்வாறு அவர்கள் எதிரிலேயே சொல்லுதல் சாலுமோவெனின், நாமறிந்தவரை ஜமீன்தார்களிலே இவ்வொருவரேயன்றி அடுத்தபடி வேறொருவரைக் காட்டமுடியுமா? எந்தச்சமஸ்தானத்திலாவது தமிழ்ப்புலவர்கள் கூட்டத்தைக்காணமுடியுமா? ஆங்கிலம்படிக்கப்புக்கு அதையும் தேறாது சுயபாஷைஞானத்துக்குத் தூரஸ்தராகிப் புண்ணியபாவ வுணர்ச்சிகுன்றித் தம் வயிறூரவுண்டு உலகாயதமதப்பிரவேசகர்களாய் வாழ்ந்து மடிவதே பிரபுக்கள் மகார்க்கு இயல்பாக வந்துவிட்டது. ஆதரிப்பாரற்றமையால் தமிழ்ப்பாஷையைக் கற்கப்புகுவாரும் சுருங்கினர். புலவர் என்ற பெயர் கொண்டுவந்தமாத்திரையே, கேவலம் பிச்சைக்காரரைப்போல் நினைத்து அவமதிக்கப்பட நேர்கின்றது.

முற்காலத்துப் புலவோர் பல்லோர் கவிபாடிப் பரிசுபெற்றுவாழும் வாழ்க்கையை அரசர் வாழ்க்கையினும் சிறப்பாகக்கொண்டு வாழ்ந்தனர். ஓரரசன்பாற் பரிசுக்குச்சென்று அவன் தக்கபடி கொடாவிடில் அவனை வெறுத்துச்சென்று பிறிதொரு மன்னர்பாலடைந்து பெரும்பொருள்பெற்று அதனையம்மன்னனுக்குக்காட்டியறிவூட்டிப்போவர். இப்புலவர்களது மனத்துணிவும் இறுமாப்பும் எவ்வளவு கெம்பீரநிலையிலிருந்தன.

பெருஞ்சித்திரனாரென்னும் புலவர் வெளிமான்றம்பி சிறுகக்கொடுத்ததைக்கொள்ளாது சென்று குமணனைப்பாடிப் பரிசில் பெரிதுபெற்று அவனிடம்வந்து அவனையவமதித்துப்பாடிய புறப்பாட்டை நோக்குக. அது வருமாறு:—

"இரவலர் புரவலர் நீயு மில்லை
புரவலர் இரவலர்க் கில்லையும் அல்ல
ரிரவலர் உண்மையும் காண்இனி யிரவலர்க்கு
ஈவோ ருண்மையுங் காணினி நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானை யெம்பரிசில்
கடுமான் றோன்றல் செல்வல் யானே."

இக்கவியின் சொற்போக்கை நோக்குமிடத்து இப்புலவராதுமனக்கிளர்ச்சி மிகவுப் வியக்கத்தக்கதன்றோ? இம்மட்டோ! இப்புலவர் குமணன்கொடுத்த அப்பரிசிலைக்கொடுபோய் மனையாட்குக்கொடுத்து அவள்பாற் கூறுதல் மிகக்களிப்பைத் தராநிற்கும்.

"நின்னயந்துறைநர்க்கும் நீநயந்துறைநர்க்கும்
பன்மாண்கற்பி னின்கிளைமுதலோர்க்கும்
கடும்பின்கடும்பசி தீரயாழநின்
நெடுங்குறியெதிர்ப்பை நல்கியோர்க்கும்
இன்னோர்க்கென்னாது என்னொடுஞ்சூழாது
வல்லாங்குவாழ்து மென்னாதுநீயும்
எல்லோர்க்குங்கொடுமதி மனைகிழவோயே
பழந்தூங்குமுதிரத்துக்கிழவன்
திருந்துவேற்குமணன் நல்கியவளனே."

என்பதுவே அக்கவி.

பார்த்தீர்களா! இரத்தல் தனக்குரிய "தானந்துடைத்துத்தருமத்தை வேர்பறித்து - மானந்துடைப்பதோர்வாள்" எனவும், "ஆவிற்கு நீரென்றிரப்பினும் நாவிற் - கிரவின் இளிவந்ததில்" எனவும் மிகக்குறைவாகக்கூறப்பட்டிருக்கின்றதே. இப்புலவர் பெருமக்கள் இரத்தலை மேற்கொண்டொழுகுவோரேயாயினும் இவர்கள் மனப்போக்கு எவ்வளவு கெம்பீரமாகச்செல்கின்றது.

இந்த இரவலர்கட்கு வேண்டியாங்கீயும் வள்ளன்மையாளர் பல்லாரிருந்தமையாலன்றோ இவர்கள் உள்ளந்துயரமுறாது எழுச்சிபெற்று நிலவுவதாயிற்று.

இக்காலத்துச்செல்வர்களோ, யாரேனும் இரபபோர்வந்தால் ஏற்பதிகழ்ச்சி யென்பதையறியீரா என்று பரிகசிக்கின்றாரேயன்றி ஐயமிட்டுண் என்பதைக்கற்றவராகவில்லை. இவறன்மையானது எல்லா நன்மையையும் சிதைப்பதெனபதையறிந்திலர். ஈயாத லுத்தர் இருந்தென்ன என்பதையும்,

"ஈயென விரத்த லிழிந்தன் றதனெதி
ரீயே னென்ற லதனினு மிழிந்தன்று."

(புறநா உ0ச) என்பதையும்,

"இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று"

என்பதையும்,

மாசித்திங்கண்மாசினசின்னத்துணிமுள்ளின்
ஊசித்துன்னம்மூசியவாடையுடையாகப்
பேசிப்பாவாய்ப்பிச்சையெனக்கையகலேந்திக்
கூசிக்கூசிநிற்பர்கொடுத்துண்டறியாதார்"

என்பதையும் நினைக்கின்றார்களில்லை. இன்னும் எங்கள் நான்காவது வேதமாகிய புறுக்கான் என்னும் குறஆன்ஷரீபிலே முப்பத்திரண்டுஇடங்களில் ஈகையாகிய தன்மத்தைச்செய்யும்படி அல்லாஹுத்தாலாஎன்னும் கடவுள் திருவுளம்பற்றியிருக்கின்றார். எமது நபிகள்பிரான்முகம்மதுநபிசல்லல்லாகு அலைகிவசல்லமவர்கள் தங்கள் ஒசியத் என்ற மரணோபதேசத்தில்,

"தாங்குசந்தாக்குத்தாங்கினாலும், தனிய இரவெல்லாம் வணங்கினாலும், பாங்குசொல்லுமுன் ஒலுச்செய்தாலும், பக்கிசொர்க்கம்புகுதமாட்டான்" என வலியுறுத்திக்கூறியுள்ளார்கள். ஆகவே ஒருவன்செய்தற்கரியதவங்களைப் பன்னாட்செய்துமுடிப்பினும், ஈகைக்குணம் ஒன்றெய்தாதிருப்பின் ஒருபோதுஞ்சுவர்க்கம் எய்தான் என்பது துணியாகின்றது.

நபிமூசா அலைஸ்ஸலாம காலத்தில் ஒருவன் தனது செல்வத்தாலும் செல்வாக்காலும் அகங்கரித்துக் கொடுஞ்செய்கை மேலிட்டவனாகித் தன்னகரத்திலுள்ளார் பலரையும் பலவாறு துன்புறுத்திக்கொண்டிருந்தனனாக, அவர்கள் அதைச்சகிக்கலாற்றாது நபிமூசா அலைகிஸ்ஸலாம அவர்களிடம்வந்து முறையிட்டனர். நபியவர்கள் அக்கொடியனை யீடழிக்குமாறு கடவுளிடம் து ஆஇரந்தனர். எல்லாம் வல்லஇறைவனும் அத்து ஆவை கபுல்செய்து அத்தீயனைக்கொல்லுமாறு ஓர்பணிக்குப் பணித்தனன். அப்பணியவனைக் கொல்வான்கருதி யன்னான் கலைப்பொதியில் புக்கிருப்ப அதுபோது ஓர்

மிடியன்போந்து மூன்னாட்பட்டினியுறலான் மிக்க தன்பசிக்கு ஏதே னும் இரைகொடாவிடின் தன்னுயிர்க்கிறுதி சம்பவிக்குமெனக் கூறி யிரப்ப, அதுகேட்ட அவன் கொடியோனாயினுங் கருணைகூர்ந்து தன க்கென்றிருந்கவுணவிற் பாதிகொடுத்துப் பசிநோயைநீக்கினன். பசிதீர் ந்த மிடியன் மனமகிழ்ந்து 'இவர் ஆயுள்மல்குக' எனவாழ்த்திக் கடவு ளைத்துதித்துச் சென்றான். கடவுள் இவ்வேண்டுகோளையும் கபுல் செய்து முன்விடுத்த நாகத்திற்குக் கடிவாளமிட்டடக்கினன். எப் பொழுதும் மாறாத நபியவர்கள் திருவாக்கின்படி பத்தியன் இறப்பா ன் என எதிர்பார்த்தார். பலரும் அறிய அச்சர்ப்பம் நிகழ்ந்தவைய ளைத்துங் கூறிச்சென்றது.

பார்த்தீர்களா! தருமம் தலைக்காக்கும் என்னும் முதுமொழி க்கு வேறுசான்று கூறவும் வேண்டுமோ? இன்னும், ஈகைத்தன்ம த்தைப்பற்றி யெத்தனையோ ஆயிரக்கணக்கான திப்பிய சரித்திரங் கள் எமது மார்க்கநூல்களில் இனிதும எளிதுங்காணலாம.

ஆதலின் நம் நாட்டுச் செல்வர்கள்பலரும் பண்டைத்தருமமாகி ய ஈகையைக் கடைப்பிடித்து வருவார்களானல், மிக்க புகழும் புண் ணியமும் அடைவார்களென்றும், இவ்வாறாகும்படி எல்லாம் வல்ல கடவுளாகிய ஹக்சுபுகானகுத்தாலா கருணைபாலிப்பானாக என்றுங் கூறும் எனது உபந்நியாசத்தை யிம்மட்டில் முடிக்கின்றேன்.

---

உ

# திருக்குறட் பரிமேலழகருரை விளக்கம்.

(முற்றொடர்ச்சி.)

கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவ
னற்றாடொழாஅ ரெனின்.

இ - ள். கற்றதனால்.........தொழாராயின்? எ-று.
எவனென்னும்...............கூறப்பட்டது.

வி - ம். எல்லா நூல்களுமென்றார்; கருவிநூல்களும் சமயநூ ல்களுமென நூல்கள் இருவகையனவாதலின். கருவிநூல்கள் த(

க்கம் வியாகரணம் முதலியன. சமயநூல்கள் வேதம் ஆகமம் முதலியன. இறைவனடி பயக்கும் ஞானத்தை உணர்த்தலின் வேதம் ஆகமம் முதலிய சமயநூல்கள் கற்கப்படத்தக்கனவே; கருவிநூல்களைக்கற்றலாற்பயனென்னையெனின், அவை சமயநூல்களைக்கற்றற்கு இன்றியமையாதனவாய் நின்று இறைவனடி பயப்பித்தலிற் பயனுடையனவேயாம் எங்ஙனமெனின், தருக்கம் * சமயநூற் பொருள்களைத் தருக்கித்துத்தெரிவித்தலானும், வியாகரணம் "எழுத்தறியத்தீருமிழிதகைமைதீர்ந்தான் - மொழித்திறத்தின்முட்டறுப்பானாகு- மொழித்திறத்தின் - முட்டறுத்தநல்லோன் முதனூற்பொருளுணர்ந்து - கட்டறுத்துவீடுபெறும்" என்னுஞ் செய்யுளிற்கூறியவாறு மொழித்திறத்தின் முட்டறுத்துச்சமயநூற்பொருளை உணரவைத்தலானுமென்பது. (முதனூல் என்றது அறம்பொருளின்பம் வீடென்னு முறுதிப்பொருளுணர்த்துவனவாகிய சமயநூல்களை அவை மேற்கூறிய வேதம ஆகமம முதலியன.) இக்கருவிநூல்களைக்கல்லாது சமயநூல்களைக்கற்கப்புகுவோர் "குன்று முட்டியகுரீஇப்போலவும், குறிச்சிபுக்கமான்போலவும்" இடர்ப்படுப என்பது "எண்ணென்பவேனையெழுத்தென்பவிவ்விரண்டுங்- கண்ணென்பவாழுமுயிர்க்கு" என இந்நூலாசிரியரும் பின் (சO-அதி. கல்வி. உ.) இக்கருவிநூல்களின் இன்றியமையாமையைச்சிறப்பித்துக்கூறுதல் காண்க. (எண் தருக்கம் என்பர் ஒரு சாரார்.)

கற்றவர் என்றது மேற்குறித்த நூல்களைக்கற்றவரை. கற்ற நூற்பொருள்களை நல்லாசிரியர்பாற்கேட்டறிதல். கற்றவர்களே இறைவனியல்பும், தமமியல்பும், தொழுமியல்பும், தொழுதற்கு காரணமும பிறவுமுணர்வார்கள். ஏனையோர் உணரார்கள். இ கருத்து நோக்கியே, "கற்றவர் விழுங்குங்கற்பகக்கனியை.......... மற்றவரறியாமாணிக்கமலையை" எனவும், "கற்றல்கேட்டலுடை

---

* பதார்த்த உணவிற்குவீடுபேறேமேலாயஉறுதிப்பயன்.......சிந்தனையைப் பிறப்பிப்பதாய பதார்த்தங்களி னுண்மையைத் தெரித்தலாற் சு தியன்றிச் சாத்திரமு முத்தியைப் பயப்பிப்பதேயாம்......ஆகவே பதார்த் உணர்வானே வீடுபேறாகிய மேலாமுறுதிப்பயன் கிடைத்தல்பெற்ற எனத் தருக்கசங்கிரககாரரும் தம்முரையின்கண் (கூஅ-ம் பக்கம்.) கூறுத காண்க.

யார் பெரியார்கழல் கையாற்றொழுதேத்தப்- பெற்றமூர்ந்தபிரமாபுர மேவிய பெம்மானிவனன்றே" எனவும், "[illegible]" எனவும் பிறருங்கூறுப.

அக்கல்வியறிவென்றது மேற்கூறிய நூல்களினறிவை. அவற்றுள்ளும் விசேடமாக வீட்டியல்புணர்த்தும்பகுதியே கொள்ளப்படும். என்னை? மெய்ப்பொருள் காணுதற்குரியததுவேயாதலினென்பது. அது "கற்றீண்டுமெய்ப்பொருள்கண்டார்..........நெறி" என்பதனானும், "ஞானநூறனையோதலோதுவித்தல்.......ஈனமிலாப்பொருளதனைச்சிந்தித்தல்...........வீடெய்தவறிந்தோரெல்லாம்" என்பதனானும் அறியப்படும்.

யாது என்றது ஈண்டு இன்மைகுறித்துநின்ற வினாவினைக்குறிப்புமுற்று. அஃது இறைவனடியைத்தொழாராயிற் பயனில்லை என்பதை உணர்த்திநின்றது. கற்றதனாற்பயனடைய விரும்புவோர் இறைவனடியைத்தொழுதல்வேண்டும். அன்றேல், அதனாற்பயனில்லை என்பதாம். இக்கருத்து நோக்கியே தாயுமானவரும் "ஆடித்திரிந்துநான் கற்றதுங்கேட்டதுமவலமாய்ப்போதனன்றோ - தனியேயிருப்பதற்கெண்ணினேனெண்ணமிது சாமிநீயறியாததோ" எனக்கூறினார்.

மெய்யுணர்வு என்றது சர்வஞ்ஞதையை. "சர்வஞ்ஞதையாவது புறக்கரணமின்றி நிஷ்களங்க அநுபவவிஷயமாய் சமஸ்த வஸ்துக்களையும் எப்போதும பிரத்தியட்சமாயறிதல்." இவ்வாறு பிரமசூத்திர சிவாத்துவித சைவபாடியத்துட்கூறப்பட்டுள்ளது. (தமிழ்மொழிபெயர்ப்பு.) வாலறிவனென்றமையானே அநாதிபோதமுங் கொள்ளப்படும். என்னை? இயல்பாகவே பாசங்களினீங்கிய அறிவாதலின் என்பது. வாலறிவனென்றதற்கு மெய்யுணர்வினையுடையான் எனப்பரிமேலழகர் பொருள்கூறியது "கற்றதனால்" என்பதை நோக்கியேயாம். என்னை? கற்கப்படும் வேதமுதலிய நூல்களையெல்லாம் மெய்யுணர்வில்லாதொழியின் இறைவனாற்றருதல் கூடாதாதலினென்பது. "சமஸ்தவஸ்துக்களையும் பிரகாசிப்பிக்கும் வேதங்களுக்குச் சிவபெருமானே கர்த்தாவாதலின் அவருக்குச் சர்வஞ்ஞதை உண்டென நிச்சயிக்கப்படுகின்றது. அறியாததொன்

றைக்கூறுதல் கூடாமையின்" எனப்பிரமசூத்திர சிவாத்துவித சைவ பாடியகாரரும் (மொழிபெயர்ப்பு) "இறைவனே வான்ஞானமெல் லாமெல்லாமுதன்மையனுக்கிரகமெல்லாமியல்புடையனியம்பு-மறை யாகமங்களினலறிவெலாந்தோற்றும்" எனச் சிவஞானசித்தியார்கா ரரும் கூறுதலின், இறைவனே வேதம் முதலிய சகல நூல்களுக்கெல் லாம் தலைவனென்பதூஉம், அதனால் அவனுக்குச் சர்வஞ்ஞதை உண்டென்பதூஉம் நிச்சயிக்கப்படும் என்க.

நல்லதாள்கள் தொழுவோருடைய பிறவியை நீக்கும் நன்மை யையுடைய தாள்கள். தாள்களைத்தொழுதார்க்குப் பிறவிநீங்குமெ ன்பது, "பாலூரு.........நாலூர்மயானத்து நம்பான்றனடிநினைந்து- மாலூருஞ்சிந்தையர்பால் வந்தூரா மறுபிறப்பே" என்பதனானும், "சுழலார்துயர்.........நீங்காப்பிறவிக்கெடுத்து.......... அடித்தல மே" என்பதனானும், "பிறவிப்பெருங்கடனீந்துவர்.........ரிறை வனடிசேராதார்" என்பதனானுமறியப்படும்.

தொழாராயின் என்றதனால் தொழுதல்வேண்டுமென்பதூஉம் தொழாதொழியிற்பிறவியறாதென்பதூஉம் பெறப்பட்டன. தொழு தல்வேண்டுமென்பது "தன்னையறிவித்துத்தான்றானச்செய்தானை ..........மானேதொழுகைவலி" என்பதனானும், "எண்ணியகரும முடியினும்முடியா தொழியினுமிறைவனைத்தொழுதல்-புண்ணியம்" என்பதனானும், "தஜ்ஊாநிகிஸாஜ உவாவீஜ" என்பதனானும் அறி யபபடும். தொழாதொழியிற்பிறவியறாதென்பது "பிறவிப்பெருங் கட..........நீந்தாரிறைவனடிசேராதார்" என்பதனாலறியப்படும்.

பிறவிப்பிணி - பிறவிநோய். அதனை நீக்குவது தாளாதலின் தாளைமருந்தென்றார். ஆகமம் - நூல்.

இனி இதன்கண்ணே சைவசித்தாந்த நூல்களுட்கூறிய திரி பதார்த்தலக்கணமும் பிறவுமமைந்து கிடத்தல் காட்டுதும் :—

இதனுள்; 'வாலறிவன்' என்றதினாலே தொழுவோர் மாலறிவுடை யார் என்பதூஉம், அம்மாலறிவு மலத்தானே வந்ததென்பதூஉம், அதனானேமலமொன் றுள தென்பதூஉம்; தொழுவோரென்றதனா லே தொழுதற்குரிய கருவியொன்றுளதென்பதூஉம், அது மாயை

யானே உண்டாயதென்பதூஉம், அதனானே மாயை யொன்றுள தென்பதூஉம், தொழுதற்குரிய கருவியொன்றுளதெனவே அதனை எடுத்தற்குக் காரணமொன்றுள தென்பதூஉம்; அது கன்மமென்ப தூஉம் பெறப்பட்டன. படவே, வாலறிவனென்றதனானே பதியியல்பும், தொழாஅ ரென்றதனானே பசுவியல்பும், மாலறிவு என்றதனானே மலவியல்பும் தொழுதற்குரிய கருவிமாயையானே யுண்டாயதென்றதனானே மாயையினியல்பும் தொழுதற்குரிய கருவியை எடுத்தற்குக்காரணமொன்றுள தென்றதனானே கன்மவியல்பும் பெறப் பட்டுத் திரிபதார்த்தலக்கணமு மமைந்தனவாதல் பெறப்பட்டன. மலமுதலிய மூன்றும பாசமெனப்படும்.

இனி, ஆன்மாக்களுக்கு மாலறிவு மலத்தானே வந்ததென்பது "ஶுத்³தா... ...ஶோத்³ஷவுஷகு⁴யஃ" என்பதனானும், அந்தக்காரணம வற்றி............சகசமலத்துணரா.........நின்றஞ் சவத்தைத்தே" என்பதனானும், தொழுதற்குரிய கருவிமாயை யானே உண்டாயதென்பது "நித்தமாய்...........தநுகரணமுமுயிர்க்காய் வைத்ததோர் மலமாய்..........செய்யுமன்றே" என்பதனானும், தொழுதற்குரிய கருவியை எடுத்தற்குக் காரணம் கன்மமென்பது "இருவினை... ... மாயாவுருகண் மருவியார்த்து...........செலனும்" என்பதனானும் அறியப்படும்.

இன்னும 'நற்றாள்' என்றதனானே அது சத்திவடிவிற் றென்ப தூஉம், அதுவே ஞானமுதிப்பித்து வீடுபயக்கும் என்பதூஉம், இறைவனுக்குச் சகளவடிவுண்டென்பதூஉம, அவ்வடிவெடுத்ததுயிர்களி ன் பொருட்டென்பதூஉம், அவ்வடிவு நம்மனோர்வடிவுபோலாது சத் திவடிவிற்றென்பதூஉம் பெறப்பட்டன.

இனி, அவனடிசத்திவடிவிற் றென்பது "உருவருள்... .... கர சரணாதி சாங்கம் - தருமருள்...........அசிந்தனன்றே" என்பதனானும், அதுவே ஞானமுதிப்பித்து வீடுபயக்குமென்பது "சிவனையவ ன்றி நவடிஞானத்தானேசேர" என்பதனானும், இறைவனுக்குச் சகளவடிவுண்டென்பது "அருவமோருபாரூபமானதோ ....உருவமு மூன்றுஞ்சொன்ன வொருவனுக்குள்ளதாமே" என்பதனானும், அவ் வடிவெடுத்தது உயிர்களின் பொருட்டென்பது "உருமேனிதரித்துக்

கொண்ட... ......நந்தங் கருமேனிகழிக்கவந்த கருணையின் வடிவுகாணே" என்பதனானும், "உருவருள்...... அருளுருவுயிருக்கென்றேயாக்கினனசிந்தனன்றே" என்பதனானும், "தன்னைநேரிலாப்பரம்பொருடனியுருக்கொண்ட - தென்ன காரணமென்றியேலந் தொழிலியற்றி - முன்னையாருயிர்ப் பாசங்கண்முழுவது மகற்றிப் - பின்னைவீடு பேறருளுவானினைந்தபேரருளே" என்பதனானும், அவன்வடிவு நம்மனோர்வடிவுபோலாது சத்திவடிவிற்றென்பது "காயமோமாயையன்று காண்பது சத்திதன்னால்" என்பதனானும், "உருவருள்....... அசிந்தனன்றே" என்பதனானும் அறியப்படும்.

இனிச், சகளவடிவுளதென்பது பெறப்படவே; அதன்காரணமாகிய சகள நிஷ்களமும், அதன் காரணமாகிய நிஷ்களமும் பெறப்பட்டுப் பிருதுவிமுதல் விந்து ஈறுயுள்ள தத்துவங்களும் (சங்கார முறை) தத்துவாதி தெய்வங்களுமுளவாதலும்பெறப்பட்டன.

இங்ஙனமே சைவ சித்தாந்த சாஸ்திரமாகிய சிவஞானபோத நூலுட்கூறிய முதற்சூத்திரப் பொருளொழிய ஏனைய சூத்திரப் பொருள்கள் பெரும்பாலும் அமைந்து கிடத்தல் காண்க. முதற்குறளானே முதற்சூத்திரப் பொருளும், ஐந்தாஞ்சூத்திரப்பொருளும் பெரும்பாலும் அமைத்துக் கூறப்பட்டுள்ளன. அவற்றைச் சமயநேர்ந்துழி விளக்கிக்காட்டுதும்.

சி. கணேசையர்.

---

உ

# கதாசரித் சாகரம்.

## ரு-வது சதுர்த்தாரிகாலம்பகம் க-வது தரங்கம்.

[ஸ்ரீமத்-வீராசாமி ஐயங்காரவர்கள் மொழிபெயர்த்தது]

பார்வதியினது பிருந்த வேண்டுகோளாகிய மந்தரவெற்பின் சுழற்சியால் முற்காலத்தில் பரமேசுவரனது முகமாகிய சமுத்திரத்தினின்றுமுண்டாகிய இக்கதாமிருதத்தைப் பரிவுடன் எவர்கள் பருகுகின்றனரோ, அவர்கள் யாதோரிடையூறுமற்றவர்களாயும் நிறைவுடன் கூடியவர்களாயும் அப்பரமேசுவரனதனுக்கிரகத்தினலிப்பூவுலகிற் புலவர்களாகிறார்கள்.

தனது பிரதாபத்தினால் விக்கினங்களைத் தகிக்கின்றவர்போல, மதத்தினாற் சுழல்கின்ற முகத்தினின்றுதிர்கின்ற சிந்தூரத்தூளிகளால் பூமியைப்பொடிபடச்செய்யும் விநாயகக்கடவுள் காப்பதாக.

உதயனமகாராஜன் தன தேவியுடன்கூடித் தனது அருமைப்புதல்வனாகிய நரவாகனதத்தனென்னுங் குழந்தையைப் பரிபாலித்து வந்தான். அப்பொழுது அவ்வரசனுக்கு இக்குழந்தையை நாமெவ்வண்ணங்காப்பதென்று கவலையுண்டாக அதையறிந்த யௌகந்தராயணனென்ற மந்திரியானவன் அரசன் தனித்திருக்கும்பொழுதுசென்று, அரசனே! நரவாகனதத்தனாகிய அரசிளங்குமாரன் விஷயத்திலொருபொழுதுங்கவலைப்படவேண்டாம். ஏனெனில்,உமதரண்மனையிலுதித்துள்ள இக்குழந்தை,பகவானாகிய பரமேசுவரனால் வித்தியாதரர்கள் யாவர்க்கும் மேலான சக்கிரவர்த்தியாக உண்டுபண்ணப்பட்டிருக்கின்றானென்பதை வித்தியாதரர்களின் தலைவர்கள் தமது வித்தியாப்பிரபாவத்தினாலறிந்து மனத்திற் பொறாமையுற்றவர்களாய்த் தீயவெண்ணத்துடன் கலக்கமுற்றிருக்க, இதனையறிந்து பரமசிவன் இவனைக்காப்பதற்கு ஸ்தம்பகனென்று பிரசித்திபெற்ற தனது கணநாதனை யேற்படுத்தியிருக்கின்றனர்; அந்தக்கணநாதனும் ஒருவர்கண்ணுக்குந்தோன்றாது மறைந்துநின்றுகொண்டு உமது புதல்வனைக்காத்துவருகின்றனன்.

இதைப்பற்றி நாரதமகாமுனிவர் விரைவில்வந்து என்னிடம் சொல்லிப்போந்தனர் என்று யௌகந்தராயணனென்னும் மந்திரி, உதயனனென்னும் வச்சராஜனிடஞ் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுதே, ஆகாயத்தினின்றும் கிரீடகவசகுண்டலங்களுடனும் வாளாயுதத்துடனும் கூடிய ஓர் திவ்ய புருஷன் இறங்கிவந்து வணங்கிநிற்க, வச்சராஜனும் விரைவில் அதிதிகளுக்குச் செய்யவேண்டிய உபசாரங்களைச்செய்தபின், அந்தத்திவ்வியபுருஷனைப்பார்த்துச்சந்தோஷத்துடன் நீயார்?, இவ்விடம் வந்தகாரியமென்னவென்று கேட்டனன். அதற்கு அவன் மகாராஜனே யான்முன்பு மனுஷியனாகவிருந்து வித்தியாதரத்தன்மையையடைந்தவன். எனக்கு விரோதிகளநேகரிருக்கின்றனர்; யான் எனது வித்தியாப்பிரபாவத்தினால் உமது புத்திரனெங்களுக்கரசனாக வரப்போகிறானென்பதையறிந்து அவரைப்பார்

ப்பதற்கு வந்தேன் என்று சொல்லிக்கொண்டு தங்களுக்குச் சக்கிர வர்த்தியாய் வரப்போகின்ற நரவாகனதத்தனுகிய ராஜகுமாரனைப்பார்த்து, திருப்தியுடன்கூடிய அந்த வித்தியாதரனைநோக்கி, வத்சராஜன் சந்தோஷத்துடன் கூடியவனுய் நண்பனே! வித்தியாதரத்தன்மையென்பதெப்படிப்பட்டது, அதை யெவ்வண்ணமடைவது நீயெவ்விதம் அத்தன்மையை யடைந்தனை? இதனை விவரமாகச்சொல்லவேண்டுமென்று மறுபடியும் கேட்டனன். அதற்கு அந்தச் சந்திவேகனென்ற பெயருடைய வித்தியாதரன் வணக்கத்துடன் கூடியவனுக அரசே! இந்த ஜன்மத்திலாவது அல்லது முற்பிறப்பிலாவது சாக்ஷாத் பரமேசுவரனைப்பூஜித்து அவனதனுக்கிரகத்தினுல் அத்தன்மையடையவேண்டுமேயன்றி வேறில்லை; அதுவும் வித்தை, கத்தி, மாலை முதலிய கருவிகளுடைய மகிமையைக் கைக்கொண்டிருத்தலாலநேகவிதமாயிருக்கின்றது. யான் வித்தியாதரனுன தன்மையைச்சொல்லுகிறேன் கேளும் என்றுசொல்லித் தன்விருத்தாந்தத்தை வாசவதத்தையுடன் கூடியிருக்கிற வத்சராஜன்சபையில் சொல்லத்தொடங்கினன்.

பூவுலகத்திற் கணியாய்விளங்கும் வர்த்தமானமென்ற பெயரையுடையதோர் நகரமிருந்தது; அதில்முற்காலத்தில் சத்துருக்களைவாட்டுகின்ற பலத்துடன்கூடிய பரோபகாரியென்னும் பெயரையுடைய ஓர் அரசனிருந்தான். மேன்மைதங்கிய அவ்வரசனுக்கு மேகத்திற் ருேன்றிமறையாது நிலைபெற்றிருக்கும் மின்னலையொத்த கனகப்பிரபையென்ற பெயருடன்கூடிய பட்டமகிஷியிருந்தனள். அந்தப் பரோபகாரியென்ற அரசனுக்குச் சிலகாலஞ்சென்றபின் கனகப்பிரபையென்னுய தனது தேவியாரிடத்தில் ஒரு பெண்குழந்தை ஜனித்தது; அக்குழந்தையானது உருவத்தில் மகாலக்ஷ்மியின்கருவத்தையடக்குவதற்குப் பிரமதேவனுல் சிருஷ்டிக்கப்பட்டதோவென்று நினைக்கும்படியும் உலகத்திலுள்ளவர்களின் கண்களுக்குச் சந்திரிகைபோலானந்தத்தை விளைத்துக்கொண்டும் மெல்லமெல்லவளர்ந்துவந்தது. அக்கன்னிகையின் பிதாவாகிய பரோபகாரியென்ற அரசன் தன் புதல்விக்குத் தாயின்பெயருக்கிணங்கக் கனகரேகையென்று பெயரிட்டனன்.

பின்பு அந்தக்கனகரேகையென்கின்ற ராஜகுமாரியானவள் ஸர்வாங்கசௌந்தரியவதியாய் யௌவன தசையையடைந்திருக்கும்பொழுது, ஒருநாள் அவள்பிதாவான பரோபகாரியென்னு மரசன் தன்மனைவி கனகப்பிரபையென்பவள் தனித்திருக்குந்தருணத்திற் சென்று, ஏ தேவி! நமது கன்னிகை கனகரேகைக்கு இசைந்த விவாகஞ்செய்யவேண்டுமே என்றகவலை நாளுக்குநாள் வளர்பிறைபோல் வளர்ந்துவருகின்ற கனகரேகையானவள் என்மனத்தை வருத்துகின்றனள். ஏனெனில், நற்குலத்திற்பிறந்த கன்னிகையானவள் நல்ல இடத்தைச் சேராவிடில், தனக்குரிய ஸ்தானத்தையடையாதிருக்கும் இசையைப் போலக்கேட்கின்றவர்களின் செவிகட்கும் வருத்தத்தைச்செய்வாள்.

அன்றியும், அறியாமையினால் அயோக்கியனுக்குபதேசித்த கல்வியானது புகழிற்கும் புண்ணியத்திற்குமிடமாகாது மனவருத்தத்திற்கே யேதுவாவதுபோலத் தகாதவனுக்கு மணஞ்செய்துகொடுக்கப்பட்ட பெண்ணும் வருத்தத்திற்கே யிடமாகின்றனள். ஆதலால் நமது கன்னிகைக்கிசைந்த ராஜகுமாரனைத்தேடிப் பார்க்கின்றேன். எவனுக்கவளை மணஞ்செய்துகொடுப்பதென்னுங் கவலையானது பெரிதாயிருக்கின்றது [illegible]

சிரித்துக்கொண்டு ஓ மகாராஜனே! நீரோ [illegible] செய்கின்றீர். நமது கன்னிகையோ விவாகமே வேண்டாமென்ற எண்ணத்துடனிருக்கின்றாள். ஏனெனில், இப்போது அவள் குழந்தைகள்போலச் செய்யப்பட்ட பொம்மைகளைவைத்து விளையாடிக்கொண்டிருக்குந் தருணத்தில் அவளைப்பார்த்து ஏ பெண்ணே! நானுனக்கெப்பொழுது விவாகஞ்செய்துபார்ப்பேனென்று சொன்னேன். இந்தச் சமாசாரத்தைக் கேட்டவுடனே அவள் ஆக்ஷேபத்துடன் ஏ தாயே! உனக்கென்னைவிட்டுப் பிரியவேண்டாமென்றெண்ணமிருந்தால் என்னையொருவருக்கும் மணம்புரியலாகாது. நானழகிய கன்னிகையாகவேயிருத்தல்வேண்டும்.

இவ்வாறின்றி மணம்புரிந்தாலென்னை இறந்துபோயினளென்று நினைத்துக்கொள். இதற்கு ஒருகாரணமுமிருக்கின்றது என்றுசொல்லியதைக்கேட்டு வருத்தமுற்றவளாய் உம்முடைய சமீபத்திற்குவந்தேன். அரசே, ஆதலால் விவாகமே வேண்டாமென்கிற அவளுக்கு

வரனைத்தேடிக் கவலைப்படுவதிலென்ன பிரயோசனமிருக்கின்றது என்று ராஜபத்தினி சொல்லியதைக்கேட்டு, அவ்வரசன் கவலையுற்றவனாகி அக்கன்னிகையின் அரண்மனைக்குச்சென்று தன் புதல்வியை நோக்கி ஏ வத்ஸே! தேவர், அசுரர், இயக்கர், கின்னரர், கிம்புருஷர்முதலிய சகலஜாதியிலுதித்த பெண்களும் அரிய தவமியற்றியும் தத்தமக்குரிய கணவனையேயடைய விரும்புகின்றார்கள். நீயோ விவாகமே வேண்டாமென்று மறுக்கின்றனை; இதற்குக்காரணமென்னவென்றனன்.

இவ்விதஞ்சொல்லிய பிதாவின் மொழிகளைக்கேட்டவுடன் அந்தக்கனகரேகையானவள் தலைகுனிந்து கீழேபார்த்துகொண்டு ஏ தந்தையே! எனக்கோ இப்பொழுது விவாகத்திலிஷ்டமில்லை. தாங்களெதற்காக என்னை நிர்ப்பந்தஞ் செய்கின்றீர்கள் என்றனள். இப்படிச்சொல்லிய ராஜகுமாரியின் மொழிகளைகேட்டதும் புத்திமான்களிற்சிறந்த பரோபகாரியென்ற அரசன், மறுபடியும் தன் கன்னிகையைப்பார்த்துப் பெண்ணே! என்ன இப்படிச்சொல்லுகிறாய். உலகத்திற் பாவங்களைப்போக்கடிப்பதற்குக் கன்னியாதானத்திற் சிறந்ததானம் யாதிருக்கின்றது. அன்றியும், பெண்ணென்பவள் பந்துஜனங்களின் வசப்பட்டிருக்கவேண்டுமேயன்றி அவளுக்குச் சுவதந்திரமென்பது கிடையாது பெண்ணென்று பிறந்ததுமுதல் மற்றொருவருக்கென்றே வளர்த்துவரப்படுகின்றனள்.

(தொடரும்.)

---

உ

திருச்சிற்றம்பலம்.

"தென்புலத்தார்" என்னுந்

# திருக்குறளாராய்ச்சி.

---

செந்தமிழ் எ-ந்தொகுதி ரு-ம பகுதியில் "திருவள்ளுவரைப் பற்றிய சில குறிப்புகள்" என்னுந்தலைப்பின்கீழ், பத்திராசிரியரவர்கள் எழுதிய விஷயங்களையும், அவற்றுட்சிலவற்றைக் கண்டித்துச்சென்ற வைகாசிமாதத்துப்பத்திரிகையில் "திருவள்ளுவர் பரிமேலழகருரை" என்னுந்தலைப்பின்கீழ், ஸ்ரீமத்-அ. குமாரசுவாமிப்

பிள்ளையவர்கள் எழுதியவற்றையும், இவர்களெழுதியவற்றுட்சில வற்றிற்கு மறுப்பாக இப்பகுதியிலேயே "பத்திராசிரியர் குறிப்பு" என்னுந்தலைப்பின்கீழ் மீட்டும் பத்திராசிரியரவர்கள் எழுதியவற் றையுங்கண்ணுற்றேன். இவ்விஷயவகாரங்களாற் பலவுண்மைவெளி ப்பட்டு ஆக்ஷேபத்துக்கிடமின்றியிருப்பினும் 43-வது குறளுரையி ன்மட்டும் இன்னுஞ் சிறிதாக்ஷேபத்துக்கிடமிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. அது வருமாறு.—

பத்திராசிரியரவர்கள் "சஈ - வது குறள் விசேடவுரையிலே 'விருந்தொககுறுனென்றுங்கு' என்பதன்கணுள்ள, 'என்ற என்பது விகாரமாயிற்று' என்பது அச்சுப்பிரதியிற்காணப்படுகிறது. இவ் வாக்கியம் ஏட்டுப்பிரதிகளிலில்லை. உஎ-ம் குறளில் "சுவையொளி யூறோசை நாற்றமென்றைந்தின்" என்புழி 'என்றைந்தின்' என்னு மிடத்தும் இவர் இங்ஙனமெழுதாமைகாண்க" (தொகுதி - எ. பக். உஈக.) எனக்கூறி, இங்ஙனமெழுதாமைக்குக் காரணங்காட் டாது விடுத்தார்கள். இதனை மறுத்து ஸ்ரீமாந் - பிள்ளையவர்கள் (பக்கம் - ஈஎஞ.) எழுதியதைப பத்திராசிரியரவர்கள் அங்கீகரித்து விட்டதாக அவர்கள் எழுதிய குறிப்பினாலே விளங்குகின்றது.

பிள்ளையவர்கள் 'விருந்தொக்கறுனென்றுங்கு' என்பதிலுள்ள 'என்றுங்கு' என்பதனை, 'என்ற+ஆங்கு' எனப்பிரித்து, 'என்ற' என்பது அகரவீற்றுப்பெயரெச்சமெனக்கொண்டு— 'பாலொடுதே ன்கலந்தற்றே' என்பதனுரையிலே, 'கலந்ததற்றென்பது விகாரமா யிற்று' என்றவர், இங்கே 'என்ற' என்பது விகாரமாயிற்று என் றாரோ? இவ்வாக்கியம் நிற்றலால் வரும் குற்றம் யாது? 'அரங் கின்றிவட்டாடியற்றே' என்புழி வாளா சென்றவர் 'இறந்தாரை யெண்ணிகொண்டற்று.' என்புழிக் 'கொண்டால் என்னும் வினை யெச்சங்கொண்டு எனத்திரிந்து நின்றது' என்று கூறவில்லையா? 'வட்டாடியற்று' என்பதும் 'கொண்டற்று' என்பதும் ஒருவகை முடிபுடையனவல்லவா? ஒருவகை முடிபுடையவைகளை வேண்டு ங்கால் தனித்தனிகூறலும் முன்னாக பின்னாக ஒன்றிற்கூறி மற் றைய உய்த்துணரப்படும் என்று வாளாவிடுதலும் இவர்க்கு வழ க்கென்க. சில பிரதிகளிலில்லாமை சில பிரதிகளிலிருத்தலை விலக்

காது பொருந்துமாறு அவசியம். தமிழ்நாட்டிலுள்ள ஏட்டுப்பிரதிகளும் பலவகை. அவையெல்லாம் ஒருவர் பார்வைக்கு அகப்படல் அரிது" என்கிறார்கள்.

'என்றாங்கு' என்பதனை 'என்று+ஆங்கு' எனப்பிரித்து 'என்று' என்பது எண்ணுப்பொருண்மை குறித்துவந்த இடைச்சொல் எனக்கொள்ளின் பொருளும் சந்தியிலக்கணமும் செவ்வனே யமைவு பெறுகின்றன. புணர்ச்சிவிதிகொள்ள இயலா திடர்ப்படுமிடத்து விகாரங்கொள்ளலாமேயன்றி, யாண்டும் விகாரங்கொண்டு விடுதலாகாது. ஆசிரியர் பரிமேலழகர் இதனை விகாரமெனக்கொள்ளின் இதுபோன்று முன்னுள்ள உ௯ம் குறளுரையிலேயே ('புகழ்புரிந் தில்லிலோர்க்கில்லை' என்னும் ருக௬-ம் குறளுரையிலே 'புரிந்தவென்னும் பெயரெச்சத்தகரம் விகாரத்தாற்றொக்கது' என்றெழுதியது போல) என்ற என்னும் பெயரெச்சத்தகரம் விகாரத்தாற்றொக்கது என விளங்க எழுதிவிட்டு இவ்விடத்து 'என்ற என்பது விகாரமாயிற்று' எனச்சுருங்க எழுதுவாரேயன்றி, ஆண்டு வாளாவிடுத்து ஈண்டுச்சுருங்கவெழுதிப்பின் இவைபோன்ற 'வினைபகையென்றிரண்டினெச்சம்' என்னும் ருஎ௪-ம குறளினும் வாளாவிடுத்துச்செல்லார். பிள்ளையவர்கள் 'முன்னாக பின்னாக ஒன்றிற்கூறி மற்றையவும் துணரப்படுமென்று வாளாவிடுதல் இவர்க்கு வழக்கு' என்றார்களேனும் அவர்கள் காட்டியவுதாரணத்தில் அது புலப்படவில்லை. 'வட்டாடியற்று' என்பதும் 'கொண்டற்று' என்பதும் ஒருவகை முடிபுடையனவாயினும் 'இறந்தாரையெண்ணிக்கொண்டற்று' என்புழி 'கொண்டால் என்னும் வினையெச்சம் கொண்டெனத்திரிந்துநின்றது' (குறள் - உ௨.) என்று கூறினவர், பின் 'அரங்கின்றிவட்டாடியற்றே' (குறள் - ௪0௧) என்புழி வாளாசென்றனரேயன்றி 'அரங்கின்றிவட்டாடியற்றே' என்புழி வாளாசென்றவர் 'இறந்தாரையெண்ணிக்கொண்டற்று' என்புழி 'கொண்டால் என்னும்......... திரிந்துநின்றது' என்று கூறவில்லையாதலால் 'பாலொடுதேன்கலந்தற்றே' என்பதனுரையிலே 'கலந்ததற்றென்பது விகாரமாயிற்று' (குறள் - ௧௧௨௧) என்றதும், 'சினத்தைப்பொருளென்று கொண்டவன் கேடு, நிலத்தறைந்தான் கைபிழையாதற்று' (குறள் - ௬0௭.)

என்னுங்குறளுரையில் * 'பிழையாததற்று என்பது குறைந்து நின்றது' என விளங்கவெழுதியிருத்தலை நோக்கிநின்றதாகலின் பிள்ளையவர்கள் சொல்லியவண்ணம் 'ஒருவகை முடிபுடையவைகளை வேண்டுங்கால் தனித்தனிகூற'லும் அதற்குள்ளேயே சிறிதுய்த்துணர வைத்தலுமாமேயன்றி இவ்விடத்திற்குப் பொருந்தாது. ஆகவே அவர்கள் காட்டிய உதாரணங்களும் என்கொள்கையை (எழுதின் உஎ-ங் குறளில் எழுதவேண்டுமென்பது) வலியுறுத்துமேயன்றி சஙட-வது குறள் விசேடவுரையிலே 'என்ற என்பது விகாரமாயிற்று' என்று ஆசிரியர் பரிமேலழகர் கூறியிருப்பார் என்பதற்கு ஆதாரமாகா.

இனி 'என்ருங்கு' என்பதனை 'என்று+ஆங்கு' எனப்பிரித்தாற்செவ்வனே யமைவுபெறுமாறும், இதுவே இலக்கணநூலுரையாசிரியர்களுக்கும், ஆசிரியர் பரிமேலழகருக்குங்கருத்தாமென்பதுங்காட்டுகின்றேன். "என்றுமெனவுமொடுவுந்தோன்றி, யொன்றுவழியுடையவெண்ணினுட் பிரிந்தே" (தொல். சொல். கஉகூஉ.) என்னுஞ் சூத்திரவுரையிலே ஆசிரியர் சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் 'வினைபகையென்றிரண்டினெச்சம்' என்னுங்குறளையே 'என்று' என்னுமிடைச்சொல் ஓரிடத்துநின்று எண்ணினுட்பிறவழியும் பிரிந்து சென்று ஒன்றியதற்கு உதாரணமாகக்காட்டியிருக்கிறார்கள். நன்னூலுரைகாரர்களும் அதற்குதாரணமாக அக்குறளையே காட்டியிருக்கிறார்கள். இதனால் அவர்கள் கருத்தெல்லாம் 'வினைபகையென்றிரண்டின்' என்னுங் குறளிலுள்ள 'என்று' என்பது எண்ணுப்பொருண்மை குறித்துவந்த இடைச்சொல் என்பதேயாம். எனவே இதுபோன்ற உஎ, சஙட-ம் குறள்களிலுள்ள 'என்று' என்பதனையும், எண்ணுப்பொருண்மை குறித்துவந்த இடைச்சொல் எனக்கொள்ளுதலே பொருத்தமுடைத்தாம். இனி, "அவற்றின்

---

* 'பிழையாததற்று' என்பது ஏட்டுப்பிரதிபேதம். 14, 149-ங்குறள்களிலே கொண்டிருத்தல் போல, குறைத்தல் விகாரங்கொள்ள இப்பாடமே பொருத்தமுடைத்தாம். 'பிழையாதவற்று' என்பது 'பிழையாதற்று' என்றாயினதாக ஆசிரியர் பரிமேலழகர் கருதியிருப்பின், ருகூ-ங்குறளுரையிற் கூறியதுபோலத் 'தொகுத்தல் விகார'மென்பர்.

வரூஉம் எண்ணினிறுதியும்" (தொல். சொல். உகூ௦.) என்னுஞ்சூத்திரத்தில், "பெயர்க்குரிமரபிற்செவ்வெண்ணிறுதியும்" "யாவயின் வரினுந்தொகையின்றியலா" என்பதற்கு ஆசிரியர் சேனாவரையர் 'நில நீரெனவிரண்டும்' என்றுதாரணங்காட்டியிருத்தலின் மேலே கண்ட (உ௭, ௪௩, கூ௭௪.) மூன்று குறளினும் வந்துள்ள என்றென்பது 'பெயர்க்குரிமரபிற்செவ்வெண்ணிறுதியிற் பெயர்ப்பொருண்மைகுறித்துநின்ற இடைச்சொல் எனக்கோடலும் ஒன்று. எவ்வாறு கொள்ளினும் இடைச்சொல்லெனத்தடையில்லை. ஆசிரியர் பரிமேலழகரும் இதனை இடைச்சொல் என்றே கொண்டாரென்பது, என வென்னும் இடைச்சொல் வந்துள்ள கசுஅ, க௦உஉ-ம் குறள்களின் உரைகளோடு உ௭, ௪௩, கூ௭௪-ம் குறள்களின் உரைகளை ஒப்பு நோக்குவார்க்கினிது விளங்கும்.

மேற்கண்ட காரணங்களாலும், தமிழ்ச்சங்கத்திலே பல இடங்களினின்றும் வந்துள்ள ஒன்றேடொன்றெவ்வாத வெட்டுப்பிரதி எட்டினுள்ளும் இல்லாமையானும் 'என்ற' என்பது விகாரமாயிற்று' என்பது பரிமேலழகரெழுதிய வாக்கியமன்றெனக்கோடல் பொருந்துமாறு கண்டுகொள்க.

அ. கோபாலையர்.

---

உ

திருச்சிற்றம்பலம்.

# தனிச்செய்யுட்கோவை.

(முற்றொடர்ச்சி.)

சைவ சமயஞ் சமயமெனி லச்சமயத்
தெய்வம் பிறைசூடுந் தேவெனில்—லைவரைவென்
றானந்த வெள்ளத் தழுந்துவதே முத்தியெனில்
வானங்காள் பெய்க மழை.

தருமபுரவாதீனத்திலிருந்த ஒரு சின்னப் பண்டாரச்சந்நிதி தமது வயலுக்குத் தண்ணீரின்மையால் வருத்தமுற்று இவ்வெண்பாவைக்கூற வுடனே மழைபெய்ததென்பர்.

ஈசன் பெலவீன னென்றக்கா லாலயத்தின்
மோசம்வரு மென்று மொழியலா—மீசன்று
ளுக்குவதுஞ் செய்தே யழிப்பதுவுஞ் செய்தக்கா
லேதுக்குவதென் னும்பிறரை நொந்து.

தருமபுரவாதீனத்தில், சமாதியைச் சோழராசன்கண்டு கும்பிட்டடனே கோவிலன்று சமாதியென்றுதெரிந்து இடித்துவிடச் சொல்ல இடிக்கும்போது, இவ்வெண்பாவை அக்காலத்திருந்த தேசிகர் கூற இடித்த இடத்திலிரத்தம் புறப்பட விட்டோடினரென்றும், ஈதறிந்தரசன் வேண்டிக்கொண்டு கிராமங்களைத் தானஞ்செய்தானென்றும் கூறுவர்.

கனக்கும் பொதிக்கு மெருதுக்குந் தன்னிச்சை கண்டதுண்டோ
வெனக்கு முடற்கு மெனதிச்சை யோவிணங் கார்புரத்தைச்
சினக்குங் கமலையுண் ஞானப்பிர காச சிதம்பரவின்
றனக்கிச்சை யெப்படி யப்படி யாக வுரைத்தருளே.

இக்கவி, தருமபுர ஆதீனமுதற் குரவராய ஞானப்பிரகாசதேசிகர், ஞானசம்பந்ததேசிகருக்கு உபதேசித்தருளிய பின்னர், உன்னிச்சைப்படிக்குச் செல்லலாமென விடைகொடுத்தருளியபோது ஞானப்பிரகாசதேசிகர் தம்மாசிரியரை நோக்கிக் கூறியது.

கோதனத்தின் மூலையிலிங்கங் குருவா மேனி
கூறியசங் கமமுகமாங் குலவுஞ் சீரம்
போதமூலை பொழிந்திடுமென் றதற்கன் பாகப்
புல்லளித்தா லருந்திடா வுடலுங் கொள்ளா
நீதியினு லறிந்துமுகத் தளித்தா லெங்கு
நிறைவாகு முத்திசிவ லிங்கத் தேனு
மேதமில்சங் கமத்தைவழி படுவோர்க் கன்றி
யெய்தரிய சிவானுபவ மெய்தொ ணுதே.

இச்செய்யுள், பரமரகசிய சடஸ்தலத் திருவிருத்தம் என்ற நூலிலுள்ளது.

(தொடரும்)

பொ. பாண்டித்துரை.

உ

திருச்சிற்றம்பலம்.

# ஐயநிவிர்த்தி.

---

இது, செந்தமிழ்ச்சந்தாதாரராகிய 112-ஞெ. N. A. S. ஏஜண்டு கண்டனூர், மு. ரா. ம. மகா-ள-ள-ஸ்ரீ சோமசுந்தரஞ்செட்டியாரவர்கள் "செந்தமிழ்" வாயிலாக வெளியிடுமாறு தமிழ்ச்சங்க வித்துவான்களை வேண்டிக்கொண்டபடி எழுதியது:—

திருமருகலில் அரவுதீண்டப்பட்டிறந்து திருஞானசம்பந்த நாயனாராலுய்ந்த வணிகனும் வேறு; திருப்புறம்பயத்தில் அரவுதீண்டப்பட்டிறந்து திருஞானசம்பந்த நாயனாராலுய்ந்த வணிகனும் வேறு. எங்ஙனமெனில்? பெரியபுராணம் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணத்தில் திருமருகலிலரவுதீண்டப்பட்டிறந்த வணிகன் பதிகனெனக்கூறியிருக்கிறது. பதிகன் - வழிச்செல்வோன்.

திருவிளையாடற்புராணம் வன்னியுங்கிணறுமிலிங்கமு மழைத்த படலத்தில், திருப்புறம்பயத்தில் அரவுதீண்டப்பட்டிறந்த வணிகன் மதுரையானெனக்கூறப்பட்டிருக்கிறது. பதிகவணிகனுடைய மாமன் வைப்பூரிலுள்ளவன் தாமன் எனக்கூறியிருக்கிறது. மதுரைவணிகனுடைய மாமன் கடற்கரையிலொருபட்டினத்துள்ளான் ஒரு வணிகனெனக்கூறியிருக்கிறது.

பதிகவணிகனுக்கு மனையாளாக வந்த மாமன் மகளுடன்பிறந்தோரெழுவரெனக்கூறியிருக்கிறது. மதுரை வணிகனுக்கு மனையாளாக வந்த மாமன் மகளுடன்பிறந்தோரில்லையெனக்கூறியிருக்கிறது.

பதிக வணிகனுக்கு மாமனிருக்கின்றான் எனக்கூறியிருக்கின்றது. மதுரை வணிகனுக்கு மாமனிறந்துவிட்டான் எனக்கூறியிருக்கின்றது.

பதிக வணிகனுக்குரிய மாமன் மூத்தபெண்ணை மருகனுக்குக் கொடுப்பதாகச்சொல்லியிருந்தும் பிறனுக்குக் கொடுத்துவிட்டான். ஏனைப்பெண்களையும் பிறருக்குக்கொடுத்துவிட்டான். அதனால் வரு

ந்தும் அப்பதிக வணிகனுக்காதாவுசெய்து பிதாமுதலோரை மறைத்து அவனுடன சார்ந்துவந்தனள் மாது எனமட்டும் கூறியதாகக் கூறியிருக்கிறது. மதுரை வணிகனுக்குரிய மாமன் முன்னதாகவேயிருந்து பெற்றொரு கன்னி முதலனையுமதை மருமகனுக்கே கொடுப்பேனென்று கிளைஞரறியவுரைத்துச் சிலகாலஞ்சென்றிறந்தான். அவன் மனையாளுமுடனிறந்துவிட்டாளெனக் கூறியிருக்கிறது.

பதிக வணிகன் பிதாமுதலோரை மறைத்துவந்த மாதுடன் வேறு துணையின்றி வந்தானெனக்கூறியிருக்கிறது.

மதுரை வணிகன் மாமனிறந்ததற்கு வருந்தியிருந்து மதுரையிற் போய் மணஞ்செய்வேனென்று தனக்கு மணஞ்செய்ய வைத்திருந்த மாதுடன் மாமன்பொருள்களையுமெடுத்துக்கொண்டு பரிசனங்களுடன் பிரயாணஞ்செய்துவந்தான் என்று கூறியிருக்கிறது.

பதிகவணிகன் திருமருகற்கோயிலின் புறத்தேயொருமடத்திலிரவு துயிலும்போது பாம்புகடித்திறந்தான் எனக்கூறியிருக்கிறது. மதுரைவணிகன் புறம்பயத்துக்கோயிலிற் கூவல் நீராடி வன்னிமரத்தின் பக்கத்திலன்னைஞ்சமைத்துண்டு கோயிலின்பக்கத்துப் படியிற்றலைவைத்துத்துயிலும்போது பாம்புகடித்திறந்தான் எனக்கூறியிருக்கிறது.

பதிகவணிகனிறக்க மாது தனியேபுலம்பினாள். மந்திரவாதிகள் வந்து பரிகாரஞ்செய்தார்கள் விட்டுநீங்கவில்லை; அம்மாது மருகற்பிரானை வேண்டிப் புலம்பினாள் என்று கூறியிருக்கிறது. மதுரை வணிகனிறக்க மாதுமயங்கிப் பரிசனங்கள் தேற்றப்பலவாறு புலம்பினாளெனக் கூறியிருக்கிறது.

பதிகவணிகன் மனையாளாகவந்த மாது சிவபிரானைவேண்டிப் புலம்புமோசை ஆலயத்திற் சுவாமியைத் தெரிசிக்கவந்த திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருச்செவியிற்சார அவர் மாதினருகுவந்து வினவி வரலாற்றைத்தெரிந்து மருகற் பெருமானைவேண்டி, "சடையாயெனுமால்" என்னு முதற்குறிப்புடைய திருப்பதிகம்பாடி விடத்தாலிறந்தவனை யுய்வித்து இருவருக்கு மணஞ்செய்வித்து விடைகொ

டுத்தருளி அம்மருகலிற் சிலநாளிருந்தார் எனக்கூறியிருக்கிறது. மதுரைவணிகன் மனையாளாகவந்த மாது பலவாறு புலம்புமோசையை அங்கோர் மடத்திலெழுந்தருளியிருந்த திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் கேட்டு ஈதென்னென ஆள்விட்டுத்தெரிந்து, கோயிற்குவந்து மாதினைவினவி வரலாற்றைத்தெரிந்து இறந்தவன் பக்கத்துவந்து பதிகம் பாடாமல் அவன் சரீரமெல்லாம் அமிர்தவுருவாகும்படி திருக்கண்சாத்தியருளினார். உடனே விடமோடிவிட அவனுய்ந்தெழுந்தான். பின்பு திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அவனை நோக்கி இங்கே மணமுடித்துக்கொண்டுபோவென்றருள, அவன் குலத்தாரியோரின்றிச் சாக்ஷியுமின்றி யெவ்வாறு மணஞ்செய்வதென விண்ணப்பஞ்செய்தான். நாயனார் உன் மாமன் இம்மாதையீன்றபோதே யுனக்கெனக்கூறியது சுற்றத்தாரறிவர். ஈதன்றி, இந்த வன்னியுங்கிணறுமிலிங்கமுஞ்சாக்ஷியாம். ஆதலாலெம்முரை கடவாது மணஞ்செய்யென்றருள, அவனவ்வாறே மணஞ்செய்து விடைபெற்று மதுரையடைந்தான் என்று கூறியிருக்கிறது.

திருமருகலிற்சுவாமி பெயர் மாணிக்கவண்ணமகேசுவரர் என்பர். திருப்புறம்பயத்திற்சுவாமி பெயர் சாக்ஷிநாதர் என்பர்.

மதுரை வணிகனுக்கு முந்திய மனைவியாற்பின்பு விவாதம்நேரிட்டமையால், புறம்பயநாதர் புறம்பயத்திற் சாக்ஷியாயிருந்ததன்றி மதுரையிலுஞ் சாக்ஷியாய் வந்திருந்தனர். அக்காரணத்தாலவர் சாக்ஷிநாதரெனப்பெயர்பெற்றனர். பதிகவணிகனுக்கு அவ்வாறு விவாதம் நேரிடவில்லை. அக்காரணத்தாலே மருகல்நாதரொருபெயர் பெறவுமில்லை.

இங்ஙனம் வரலாறென்றினுக்கொன்று வேறுபாடுமையாயிருப்ப [illegible]

தருளியது கூறவில்லையெனில், அந்நாயனார் காஞ்சிபுரத்திற் கெழுந் தருளியிருந்தபோது திருவேகம்பம திருநெறிக்காரைக்காடுமுதலிய தலங்களை வணங்கித் திருமேற்றளிமுதலான தலங்களையும்வணங்கி னாரென்று கூறியிருக்கின்றதேயன்றித் திருமேற்றளியிற் பதிகம் பாடினதாகவும் ஏதேனுமொருவிஷய நிகழ்ந்ததாகவுங் கூறவில்லை; காஞ்சிப்புராணத்துட்பதிகத்தில், "மாதர்மேற்றளியிற்கௌணியன் பாட்டால் மால்சிவனுருவுபெற்றதுவும்" எனக்கூறிப்பின்பு திருமே ற்றளிப்படலத்தில் அந்நாயனார் திருப்பாடலான் மால் சிவனுருவம் பெற்றதைக் கூறியிருக்கின்றது.

இன்னும் அந்நாயனார் திருவாவடுதுறையடைந்து தெரிசித்து வசித்துப்பொற்கிழி பெற்றிருக்கு நாளிலே, ஒருநாட்கோயிலிற்றெ ரிசிக்க வருங்காற் பலிபீடத்திற்குச் சமீபித்தபோது இங்கே தமிழ் மணங்கமழ்கின்றதேயென்று திருவாய்மலர அங்குள்ளார் பலிபீட த்தைப்பேதிக்குமுறைப்படி பேதித்துவைத்தனர். நாயனார் உற்று நோக்கி அதனடியிலே சேமித்திருந்த திருமந்திரத்தைத் திருக்கர த்தாலெடுத்துச் சிவபிரான்றிருவுளப்படி திருமூலநாயனார் இங்கே மூவாயிரவருடஞ் சிவயோகத்தமர்ந்திருந்து ஒவ்வொருவருடத்திற் கொவ்வொரு திருப்பாடலாகச்சரியை கிரியையோகஞானங்களை வகு த்துத் தமிழ்நாட்டாருக்குபயோகமாகும்படிசெய்து திருமந்திரமெ னத்திருவாய்மலர்ந்த அதனையுலகமெல்லாம் பரவச்செய்தருளின ரென்னுங்கதையுள்ளது. இதனை அந்நாயனார் புராணத்துட்கூறவி ல்லை. இதனைத்தலமுறையாகப்பதிப்பித்திருக்கின்ற தேவாரத்திற்கா ண்க. இவ்வாறெத்தனையோ கதைகள் பெரியபுராணத்திற்கூறவில்லை. சேக்கிழார் ஆயிரக்கான்மண்டபத்திருந்தருளிப் புராணஞ்செய்யுங் காற்றிருவருளைமட்டுத்தோற்றுவித்ததோ அம்மட்டே செய்யுள் புனைந்தியற்றியருளினரன்றி, யோசித்தாவது விசாரித்தாவது செ ய்யுளியற்றிலரெனக்கொள்க. இக்கருத்தைச் சேக்கிழார் நாயனார் பிள்ளைத்தமிழிற் சிறுபறைப்பருவத்தில், "நந்துபுராணமெவ்வளவா யிற்றென" என்னுமுதற்குறிப்புடைக் கவியிற்காண்க.

சே. ரா. சுப்பிரமணியக்கவிராயர்,
சைவநூற்பரிசோதகர்.

உ

திருச்சிற்றம்பலம்.

# பெரியபுராண அரும்பத விளக்கம்.

———:o:———

[பழைய ஏட்டினின்று எடுக்கப்பட்டது.]

(முற்றேடர்ச்சி.)

(௧௦௪௬) ஆண்டெதிரணைந்து - ஆண்டெதிரே அணைதலால்.

(௧௦௪௯) உடனே சமைக்குந்தொழிலையுடைய சிறியசோறு முதலான உணவுகளைப்பயின்று.

(௧௦௫௨) நீரிற்சபதங்கூறினபின். மருப்புநீள்கழக்கோலின் - கொம்பால் நீண்டகழுவில். சாதனம் - விபூதிருத்திராக்ஷங்கள்.

(௧௦௫௫) முல்லையரும்புபோன்ற வெள்ளியபற்களையும், அரும்புபோன்ற முலைகளையுமுடைய பூம்பாவையோடு.

(௧௦௫௭) சிவநேசரன்புபொருந்தும் ஆசையாலளித்தஉரிமையேயன்றி அழகுவிளங்குகின்ற நீர்வளஞ்செறிந்த சீகாழித்தலைவருக்கு இது இயையாதென்பதை உட்கொண்ட பான்மையானது ஒப்பற்ற பற்களையுடைய சர்ப்பக்குட்டியாய் முன்வந்ததுபோல.

(௧௦௫ ) மௌவன்மாதவி - மௌவலாகிய பல்லிகை, முல்லை. கவரும்பொழுதில் மான்போன்ற ஒள்ளியகண்களையும், நறியநுதலையும், செறித்தநெறித்தகூந்தலையும், கொவ்வைக்கனிபோன்ற வாயையுமுடைய அப்பூம்பாவையினது அரும்புபோன்ற விரலில்.

(௧௦௬௧) தொடர்ந்தசெய்வினையில் தனித்தனியே தொழிலையுடையவராய்ச்சூழ்வார்.

(௧௦௬௨) உவமையற்றனவாகிய அளவிறந்த மருந்துகளைச்செய்யவும். வலிந்துபொருந்துகின்ற ஏழுவலியவேகங்களும் முறையே பொங்கிப்பெரிய விலாசித்தகண்களையுடைய பூம்பாவையின் தலைமேற்கொண்டு.

(௧0௬௩) பொருந்திய காருடவித்தகர்கள் இது ஊமென்று ஒழியும்போது.

(௧0௬௫) முரசடித்த மூன்றுநாளெல்லையுள் ஒருசேர இராச வைத்தியருட்பட.

(௧0௬௬) காரின்மல்கிய - முகிலால் நிறைந்த. தழலிடையடக்கி - அக்கினியில் தகனஞ்செய்து.

(௧0௬௭) புடைபெருத்த - பக்கம்பெருத்த.

(௧0௬௮) பொன்னையும், முத்தையும் பிற ஆபரணங்கள் பலவற்றையும், பொலிவாகிய வஸ்திரத்தையுமணிந்து. அறிஞர்மிருதுவாயதென்றுகூறும் அன்னத்தூவிபோன்ற பஞ்சுமெத்தையின் மேல்.

(௧0௬௯) பாலினோர்தருபோனகம் - பாலன்னம்.

(௧0௭௧) நெருங்கிய நெடியபந்தரிட்டு, துகிலால்மேற்கட்டிசெய்து.

(௧0௭௩) குறைவறப்பேவி - குறைவில்லனவற்றை அனுப்பி.

(௧0௭௪) காயல்சூழ் - உப்பளஞ்சூழ்ந்த.

(௧0௮0) உண்டாக்கப்படும் இனிய அருளை.

(௧0௮௧) ஒருப்பட்ட நல்லறிவினையுடைய சிவநேசரே.

(௧0௮௩) மூடப்படும் பலமணிகளழுத்திய சிவிகையினுள்வைத்துத் தாம் முன்னரேசெல்ல.

(௧0௮௪) சிவபிரானுடைய அபிமுகத்திற் பாதகாணிக்கை போல.

(௧0௮௭) உயர்ச்சியையுடைய நல்வழிப்படுத்திட அந்நன்மைத்தன்மை அந்த எனும்போடு தொடர்ச்சியாமென்று கிருபாநோக்கால்.

(௧0௮௮) அவர் என்றது அவ்வடியவரை.

(௧0௯௯) "மட்டிட்ட" என்னும் நல்லபதிகத்தில், "போதியோ" என்னும் அந்த மெய்த்திருவாக்கெனும் அமுதத்தால்.

(கOகூO) அத்தன்மையால் அத்திருப்பாட்டைப்போல ஏனைத் திருப்பாட்டுக்களினும் முறையேகழிந்த ஆயுவும்வடிவும் பொலிவுட னிரம்பி ஒழிந்த அக்குடத்தடங்கி முன்னரே இருந்தெழுதற்குமுன் னர் ஆளுடையபிள்ளையார் பின்னர்ச்சமண்பாட்டை அருளுவார்.

(கOகூக) செங்கை - செங்கையானது.

(கOகூச) விரைகொள் பூவருமாரி எனக்கூட்டுக.

(கOகூரு) பங்கம் - அனுசிதம்.

(கOகூசா) கன்னிகையினழகைக் கண்களான்முடியக்காணாராய் முன்னரே பொருந்தக்கண்டோருக்கெல்லாங் கூட்டமான கரியகூந்த ற்பாரமானது, நிலையானமுகமாகிய தாமரையில் கரியவண்டானது படிந்த ஒழுங்குநெருங்கின சூழலைப்போலிருண்டுதோன்ற

(கOகூஎ) பக்கத்தே அழகியவண்டுமொய்த்த குளிர்ந்தமலர் வைத்துமுடித்த அளகபந்தியையும் தேன்கமழ்கின்ற மாலைசேரும் அழகிய நெற்றியினது விளக்கத்தையும் பார்த்தால் பூங்கொடிபோல் வாளுக்கு அழகாகிய மழையைப்பொழியுமாறு முகிற்கீழிட்ட வளை ந்தவானவில்லினது வளர்கின்ற ஒளியினழகுவாய்க்க.

(கOகூஅ) புருவமாயமென்கொடிகள் முன்னரே சிவனுடைய நெற்றிநாட்டத்தக்கினியில் நீறாய் அருளைப்பெற உண்டாகும் மன்ம தனுடைய போரிலெழும்வில்லொன்றும், சேமவில்லொன்றுமாக வருகின்ற இரண்டுபெரிய விற்களை முன்கொண்டெழுந்தாற்போல, நிகர்க்க - ஒன்றோடொன்று ஒத்திருக்க.

(கOகூகூ) கடைந்த இரத்தினத்தின் செப்பமான வளர்கின்ற ஒளிபொருந்திய மேனியையுடையாளது இரண்டு கண்களினழகைக் காணில், அழகியமுகமாகிய சந்திரனது தண்ணளிபரந்த சோதிவெ ள்ளத்திலே தடுத்தலில்லாத நீளமான அழகியநிறத்தையுடைய கரிய இமையையும் செம்மையையுமுடைய கயலிரண்டை நிகர்த்துலாவ.

(ககOO) படம்போலவளர்கின்ற அல்குலையுடைய பூம்பாவை யின்மூக்கும் பவளம்போலும்வாயும் பொருந்திய பேரொளியிற்றோ ன்றும் அழகைநோக்குவோர்களுக்கு அழகியநிறத்தையுடைய இந்தி

ரகோபத்தைக்கண்டு அதனை வெளவுமாறுதாழ்கின்ற அழகியநிறத்தையுடைய ஓந்தி அணைவதாகும் அழகைக்காட்ட.

(௧௧0௧) இளமையாகிய மயில்போன்ற சாயலையுடைய பெண்ணினது குண்டலம்பொருந்திய காது, வளமிக்கஅழகாலும், வடிந்த தாளை உடைமையாலும், விளங்குமொளியையுடைய மகரகுண்டலம் பொருந்திய தன்மையாலும், அளவில்லாத சிறப்பையுடைய மன்மதனது இரண்டு வெற்றிக்கொடியை அனையவாக. இனிச்சிலேடைவகையால், மன்மதனுடைய வெற்றிக்கொடிக்கியையக்கூறுங்கால், தாள் - காம்பு எனவும், மகரவேறு - தீட்டப்பட்ட மகரவேறு எனவுங் கொள்க.

(௧௧0௨) ஒளிபொலிகின்ற முத்தக்கோவைவிளங்கிய கழுத்தானது நல்லபெரிய சங்கமென்னும் நல்லநிதிபொன்று தன்மீதே அழகமைந்தமுகமாகிய பதுமநிதி பூக்கத்தோன்றும்படி நீலகண்டர் தந்தஅருளுக்கு அடையாளத்தைக்காட்ட.

(௧௧0௩) அக்கினியைப்போல விரிகின்றகாந்தளின் மெல்லியபூவைத் தலையிலே தொடுத்திசையுமாறுவைத்துத் திரட்சிபெறச் சுருக்கும் வெட்சிமாலையோ, வேறு உவமைதெரிந்தால் கரியநெடிய கயல்மற்சம்பொன்ற கண்களையுடைய பூம்பாவையினது கைகளாற் காந்திவெள்ளம் அருகிலிழிந்தனவோஎன்னும் அதிசயம்பொருந்திய வடிவையுடையனவாய்க் (கைகள்) தோன்ற.

(௧௧0௪) அழகுவிளங்கும் மார்பிற்பொங்குகின்ற ஏந்தப்படும் இளமையான ஸ்தனங்கள், சர்ப்பத்தின் கருமைபொருந்திய நஞ்சை நீக்கும் சீகாழித்தலைவருடைய பார்வையால் நிறைந்ததிருவருளில் நிரம்பி அடங்கிய அமுதகும்பத்தினது சீர்வளங்கும் முகிழ்த்தலைக் காட்டும் அழகோடு விளங்கித்தோன்ற.

(௧௧0௫) அழகியமேகலையையணிந்த கொடிபோல்வாளதுமருங்கின் மீதுள்ளரோமரேகையானது மன்மதனென்னும் வேடன் உந்தியில் மறைந்துஸ்தனங்களாகிய சக்கரவாகப்புட்களை அகப்படுத்தநேரிதான வரிசையான நீண்டகண்ணியைச்சேர்த்த சலாகையைத்தூக்கியதுபோலும்.

(கக0ச) முறுக்கவிழ்ந்த மலர்வைத்துமுடித்த மிருதுவான கூந்தலையுடைய பெண்ணமுதனையாளது மாற்றுயர்ந்தபொன்னுபரணம் வளருகின்ற அல்குலானது தங்களுடைய சர்ப்பஞ்செய்தபிழையால் அஞ்சி இரத்தினமவிளங்கும காஞ்சியென்னு மாபரணத்தைச்சூழ்ந்து அழகையுடைய அல்குலாய் நாகலோகத்தை ஆளுகின்ற சேடன்படத்தை விரித்தாடலைக்காட்ட. அரவுசெய்தபிழை - பூம்பாவையைக்கடித்தகுற்றம்.

(கக0எ) வருகின்ற மயிலஞ்சாயலையுடைய பூம்பாவையினது பொன்போன்ற தொடைகளினழகானது யானையினது இளமையான பிடியின்கையைவென்று வாழையின்மிருதுவான தண்டைக்காட்டப் பார்ப்பவர்களுக்கு மேன்மையையுடைய செழுமையான முழந்தாளினழகானது செய்யப்பட்ட பொற்பந்துபோலப்பொலிந்து ஒளிவிளங்கிகிளர.

(கக0அ) விரிந்தபூக்களை வைத்துமுடித்த கூந்தலையுடைய பூம்பாவையின் கணைககால்களானவை, மன்மதனது அம்பறாத்தூணியேபோலும். அழகின்மேன்மையைப் பொருந்தப்பொருந்திய மாற்றுயர்ந்தபொற்றராசுத்தட்டின் அழகைவென்று எந்நாளுஞ்சித்திரகாரர்க்கெழுத இயலாத பரட்டிஞெளியைப்பொருந்தி உயர.

(கக0கூ) கற்பகமீன்ற அழகையுடைய விரும்பத்தரும் பவளச்சோதிபொருந்திய பொற்பிரளானவை வயிரப்பத்தியையுடைய பொலிவான பூங்கொத்துமலர்ந்தபோலும். நல்லபாதங்களானவை; கால், விரல், நகம் என்பனவற்றிற்குக்கொள்க.

(கககஉ) பரமர்முன்பணிந்து - பரமனைமுன்னரேபணிந்து.

(கககஎ) பள்ளத்தில் நீர்செல்லுமாறுபோல.

(தொடரும்.)

ஜி. சதாசிவம் பிள்ளை.



உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-எ.] சௌமிய ௵ ஆடி ௴ [பகுதி-கூ

## திருக்குறளைப்பற்றிய கதைகள்.

(முற்றொடர்ச்சி)



ஓர் காலத்து ஒரு வித்துவான், நீண்டதூரத்துள்ள அயலூர்சென்று தாமியற்றற்பாலதோர் கருமம்பற்றித் தம்மில்லினின்றும் புறப்பட்டனர். தாம் செல்லுமூர், ஓர்வேளை உண்டுசெல்லற்குரிய தூரமாகலின், இடையில் ஒருவேளை தாமுண்ணற்கு வேண்டுமளவுள்ள அன்னத்தைப் பொதிசோறாக்கிக் கைப்பற்றிச்சென்றனர். அவ்வாறு சென்றவர், தாமுணவு கொள்ளற்கு உரிய அமையம் கிட்டியகாலத்து, அதற்குரிய இடத்தைநோக்கிச் செல்லுங்கால், மரத்தினிழலைத் தன் கரையிடத்தேயுடைய ஒரு பொய்கை எதிர்ப்படக்கண்டு, அதுவே தக்கவிடமெனக்கொண்டு, தாம் ஆகாரஞ்செய்தற்குமுன் இயற்ற வேண்டிய கருமங்களாய ஸ்நானமுதலியன செய்துகொண்டிருந்தார். அவ்வாறே அயலூர் செல்வான்கருதிச் செல்லும் வழிச்செல்வோரான மற்றொரு வித்வானும் அப்பொய்கையிடத்தே ஸ்நானமுதலியன முடித்து மிக்கபசியோடிருந்தார்; அவர் தம் பசிப்பிணி நீக்கத் தம்மிடத்துப் பொதிசோறின்மையின், அயலேவந்த வித்துவான் கைக்கொண்டிருந்த பொதிசோற்றைக் கண்ணுற்று அவரிடம் இரந்துண்ணக் கருதியகாலத்துத் தாம் கற்ற—

“ ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.”

என்னுங் குறள் ஞாபகத்திற்கு வந்தமையால், இரத்தற்கு மனந்துணிவுபெறாது, சிந்தித்துக்கொண்டிருந்தனர். அச்சமயம் பொதிசோற்றுடன்வந்த வித்வான் தம் கருமங்களை முடித்துக்கொண்டு ஆகாரங்கொள்ளற்குப் பொதியை அவிழ்த்தனர். அதுசமயம் பசியோடிருந்த வித்வான் நேரே இரத்தற்குத் துணிவுகொண்டிலரேனும், தம்மை மிகவருத்தும் பசிப்பிணியைப் பொறுக்கும் ஆற்றலிலராய் அதனைக் குறிப்பால் அவர்க்குணர்த்தக்கருதித் தாம் கற்ற,

> "விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
> மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று."

என்ற குறளை அவர் செவிகேட்பச் சொல்லினர். பொதிசோறுடைய வித்வான் இதனைக் கேட்டுத் தம்மிடத்துள்ள அன்னம் தம் பசியை ஒருவேளை நீக்கற்கே போதியவளவின்றும் அதிகமின்மையால், அதனைப் பகிர்ந்துகொடுக்கில், இருவரும் பசிநீக்கிக்கொள்ள முடியாமையாயிருத்தல் நோக்கிச் சிறிது கவன்றவராகி எதிருள்ள வித்வான் குறட்படித்தவராகத் தெரிவதால், அக்குறளையே கொண்டு அவரைச் சமாதானிக்கக்கருதித் தம் பொதிசோற்றிலுள்ள ஒரு சோற்றுப்பருக்கையை எடுத்து,

> "தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
> கொள்வர் பயன்றெரி வார்."

என்ற குறளைச்சொல்லி, அவ்வொருசோற்றையும் அப்பசித்திருந்த வித்வான்மீது விழ எறிந்தனர். இதுகண்ட வித்வான், தம்மை விருந்தினராக ஏற்று உபசரிக்கவிதித்த, தாம் கூறிய "விருந்துபுறத்ததா" என்னுங் குறளையொத்த வலியுடையதாகவே பொதிசோற்று வித்வான்கூறிய "தினைத்துணை" என்ற குறளும் இருக்குந்தன்மை நோக்கி, ஒருவர் கல்வியை ஒருவர் புகழ்ந்து நட்புற்றுச்சென்றனர்.

(தொடரும்)

பொ. பாண்டித்துரை.

# மொழிபெயர்ப்பு.

ஒரு பாஷையிலே செய்யப்பட்டிருக்கும் ஒரு நூலை மற்றொரு பாஷையிற் கொணர்ந்து நெறிப்படச் செய்வது மொழிபெயர்ப்பு எனப்படும். மொழி - பாஷை. பெயர்ப்பு - நிலைமாற்றுதல். வழிநூலின் வகைகள் எனப்படும் தொகுத்தல் முதலிய நான்கனுள்ளே மொழிபெயர்ப்பும் ஒன்று. நன்னூலார், "தொகுத்தல் விரித்தறொகைவிரி மொழிபெயர்ப் - பெனத்தகு நூல்யாப் பீரிரண்டென்ப" என்றார். தொல்காப்பியரோ மொழிபெயர்ப்பு என்னாது, "மொழிபெயர்த்ததர்ப்படயாத்தல்" என்பர். உரைகாரர், "அதர்ப்பட என்பது, நெறிப்பட" என்றும், "நெறிப்படுதல் என்பது, அவ்வாறு மொழிபெயர்த்துச் செய்யுங்கால், அது கிடந்தவாற்றானே செய்யப்படும்" என்றும், "மொழிபெயர்த்து எனவே, பொருள்பிறழாமை பெற்றாம்" என்றும், அதற்கு உரை கூறுவர். மொழிபெயர்ப்பு என்னும் நூல்யாப்புடைய வழிநூல்களெல்லாம் முதனூற்பொருளிற்பிறழாதிருத்தல் வேண்டும் என்பதே உரைகாரர் கருத்தாகும்.

நைடதம், பாரதம், இராமாயணம், இரகுவமிசம் முதலிய இதிகாசங்களும், மச்சம், கூர்மம், காந்தம் முதலிய புராணங்களும், சிவஞானபோதம், சிவதருமோத்தரம் முதலிய ஆகமங்களும், வேதாந்த சூடாமணி முதலிய வேதாந்தநூல்களும், தர்க்கசங்கிரகம், தர்க்க பாஷை, தர்க்காமிர்தம் முதலிய நியாயநூல்களும், சோதிடநூல், வைத்தியநூன் முதலிய பிறநூல்களுமாகப் பற்பல நூல்கள் தமிழ்ப் பாஷையிலே மொழிபெயர்ப்பு எனப்படும் யாப்பமைந்த வழிநூல்களாகச் செய்யப்பட்டிருக்கின்றன. வடமொழியிலே செய்யப்பட்டுள்ள நைடதம், பாரதம் முதலியவைகளே இவைகட்கெல்லாம் முதனூல்களாகும்.

மொழிபெயர்ப்பு என்னும் யாப்பிலே வழிநூல் செய்யப்புகுவோர் தாம் செய்யும் வழிநூலினும் முதனூல்போலப் பொருள்பிறழாது விளங்கும்படி அமைத்துக்கொள்ளுதல் ஆவசியகம். நைடதம், இரகுவமிசம் முதலியவைகளை முதனூற்பொருள்களெல்லாம்

பிறழாதமைந்த வழிநூல்கள் என்பர். மொழிபெயர்த்து வழிநூல் செய்வோர், வழிநூல் செய்யப்படும் பாஷையின் நெறிக்கும், செய்யுணெறிக்கும், வழிநூல் வழங்குந் தேசநடைக்கும் இயைந்து சிறந்து பயன்படுமாறு சில பொருள்களை நீக்கிச் சில பொருள்களைச் சேர்ந்தமைத்தலும் வழக்காறேயாம். முதனூற் பொருள்களை முற்றுந் தழுவாது சில பொருள்களை நீக்கியிருத்தலும், வேறு சில பொருள்களைச் சேர்த்திருத்தலும் இராமாயணம், கந்தப்புராணம் முதலிய மொழிபெயர்ப்பு நூல்களிலே ஆங்காங்குக் காணப்படுகின்றன. சுருக்கம் பற்றிச் சிலவற்றை நீக்குதலும் உண்டு. ஆயினும் அவைகள் முக்கியமான பொருணிலைகளிலே முதனூல்களோடு மாறுபடமாட்டா. முழுவதும் செந்தமிழ் நடையினும், செய்யுணடையினும் சிறந்து விளங்குகின்றன. ஆரிய நடைகளும் சொற்களும் சிலசிலவிடங்களிலே அருகிவரினும் அவையெல்லாம் அடிப்பட்டனவாகத் தோன்றலாற் செந்தமிழ் என்றே கொள்ளற் பாலன. "கடிசொல்லில்லைக் காலத்துப்படினே" என்று தொல்காப்பியருங் கூறுவர். கம்பருடைய இராமாயணத்துக்கு வான்மீகிராமாயணமும் பிறவும் முதனூல்கள் என்று சிலர்கூறுவர். கம்பரோ தமது இராமாயணத்துக்கு வான்மீகி ராமாயணமே முதனூல் என்பர்.

இராமாயணம்.

தேவ பாடையி னிக்கதை செய்தவர்
மூவ ரானவர் தம்முளு முந்திய
நாவி னுருரை யின்படி நான்றமிழ்ப்
பாவி னுனி துணர்த்திய பண்பரோ.

தேவபாடை - வடமொழி. செய்தவரானவர் மூவர் தம்முளும் - இயற்றினவராய் நின்றவர் மூவருள்ளும். முந்திய நாவினர் - வான்மீகி. பண்பு - செய்தி. உணர்த்திய பண்பு நாவினருரையின்படி என முடிக்க.

மொழிபெயர்க்குங்கால் முதலிலே முதனூல் வாக்கியங்களைத் தவறாது மொழிபெயர்த்துக்கொண்டு பின்னர்த் தாமியற்றும் வழிநூற்குரிய பாஷைநடையை நோக்கி, வாக்கியங்களெல்லாம் அந்நடையிற்றவராமல் இனிது நின்று பொருள்விளக்குமாறு திருத்தி அமைத்

தல் வேண்டும். வேண்டுங்கால் சொற்களைச் சேர்த்தலும், விலக்குதலும், இவ்வாற்றானும் மிகுந்து செய்தல் கூடாது. இவையெல்லாஞ் செய்து போதல் பாஷையின் நடையழகுக்கு மாறுபாடானவைகள்.

வடமொழியினின்று தமிழ்மொழியிலே மொழிபெயர்க்கப்பட்ட பண்டைச் சான்றோர் நூல்களெல்லாம் வடமொழிக் கின்றவாறே நிற்கச் சொற்களை முழுதும் மொழிபெயர்க்கப்பட்ட நூல்களல்ல. விலக்கல் முதலியன செய்யாது செய்யாமல் முழுவதும் அமைத்தியற்றப் படுமாயின், செந்தமிழ்நடை வழுவும்! பொருளும் மயங்கும்! அழகுங்கெடும்! படிப்போரும் மயங்குவர்! ஆரியத் துபாப்பதீக்கிதருடைய சில நூல்களும், வேறுசில நூல்களும் வடமொழிவாக்கிய நிலையும், அவ்வடமொழிகளும், சொற்களும் அப்படியே மொழிபெயர்க்கப்பட்டுச் செந்தமிழ் நடையெல்லாஞ் சிதைந்தே வேறுபட்டன. குன்றக் கூறல், மிகைபடக்கூறல் முதலிய குற்றங்களுக்கும் இடனாயின.

வடமொழியிலிருந்து தென்மொழியிலே மொழிபெயர்த்து வசன நடையாக இயற்றப்பட்ட நூல்களுள்ளே சிவஞான சுவாமிகளுடைய தர்க்கசங்கிரகமும், அதனுரையும் மொழிபெயர்ப்பு என்னும் யாப்பினால் நூலியற்றுவோர்க்கெல்லாம் தக்கபிரமாணமாய் வழிகாட்டி நிற்கின்றன. மூலத்திலே நின்றதற்கு மொழிபெயர்த்தற்கியையாத வாக்கியங்களெல்லாம் செந்தமிழ்த் திட்ப நெறிப்படவமையுமாறு கொண்டு கூட்டிச் சொற்பொருளும் வழுவாமற் பெயர்த்தமைக்கப்பட்டிருக்கின்றன. வடமொழிச் சம்பந்தமாய் வரும் எடுத்துக்காட்டுக்களுக்குப் பிரதிநிதிகளாகத் தென்மொழிச்சம்பந்தமாயுள்ள எடுத்துக் காட்டுக்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. வடமொழிச்சம்பந்தமாயுள்ள எடுத்துக்காட்டுக்கள் செந்தமிழ் கற்போருக்குப் பயன்படும் செவ்வியனவாகா.

“காதம்பரி முதலியவைகளில்” என்பதற்கு, “நன்னூல் முதலியவைகளில்” என்பதும், “கிரணாவலி முதலியவைகளில்” என்பதற்குத் “தொல்காப்பியம் முதலியவைகளில்” என்பதும், யஃ ஸர்வஜ்ஞஃ ஸர்வவித். என்பதற்கு, “இறைவனாவான் ஞானமெல்லா மெல்லா

முதன்மையநுக்கிரகமேலாமியல்புடையான்" என்ற சித்திப்பாகமும் பிரதிநிதிகளாகச் சேர்க்கப்பட்டன. சம்ஸ்கிருதச் சொற்களுக்கெல்லாஞ் சமமான பொருளுடைய தமிழ்ச்சொற்பிரயோகங்கள் ஈண்டே போல வேறேயாண்டுங் காண்டலரிது. தமிழ்ச்சொற்கள் தெரியாமல் வடசொற்கள் கொண்டு பலநாளாக நாம் வழங்கிவந்த எத்தனையோ பொருள்களுக்குத்தக்க தக்க தமிழ்ச்சொற்கள் இத்தருக்கசங்கிரகவுரையிலும், சிவஞான போத மாபாடியத்திலும், சிவதத்துவவிவேகம் முதலிய நூல்களிலும் சுவாமிகளாற் பிரயோகிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள்ளுஞ் சில காட்டுதும்.

| | |
|---|---|
| க. வியுற்பத்தி - சொற்பொருள். | கூ. அநுமானம் - வழியளவை. |
| உ. பிரவிருத்தி - முயலுந்தொழில். | க0. அருத்தவாதம் - புனைந்துரை. |
| ங. சமுதாயசக்தி - பொதுவாற்றல். | கக. விடயம் - பொருள். |
| ச. வாக்கியம் - தொடர்மொழி. | கஉ. மகாவாக்யம் - பெரும்பெயர். |
| ரு. அந்நுவயம் - கொண்டுகூட்டு. | கங. தாற்பரியம் - சொல்லவிரும்பியது. |
| சு. விருத்தம் - மாறுகொள்வது. | கச. ஆச்சிரயம் - பற்றுக்கோடு. |
| எ. அசித்தம் - பேறில்லது. | கரு. விருத்தி - தொழிற்பாடு. |
| அ. வியபிசாரம் - தவறுதல். | கசு. யுக்தி - பொருந்துமாறு. |

இப்படியே அநேக வடசொற்களுக்குத் தக்க தமிழ்ச்சொற்கள் பெற்றுக்கொள்ளலாம். வடநூல்களைத் தமிழ்மொழியிற் பெயர்ப்பவர் யாவரும் சுவாமிகளுடைய மொழிபெயர்ப்புக்களை அப்பியாசஞ் செய்வது செந்தமிழ்நடையமைத்தற்குக் காரணமாகும்.

தர்க்கபாஷையும் மொழிபெயர்த்து வசனநடையாகச் செய்யப்பட்ட ஒரு நியாயநூல் அது கௌதமருடைய நியாயசூத்திர வழித்தாகச் சிவகேசவ மிசிரர் என்பவர் செய்தது. அதனைத் தமிழ்ப்பாஷையிலே மொழிபெயர்த்தவர் துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமி. மொழிபெயர்ப்பிலோ வடமொழிநடையும், வடசொற்களும் பெரும்பாலுந் தழுவப்பட்டிருக்கின்றன.

"நியாயநூற் பிரவேசஞ் சுருங்கிய கேள்வியினாலடைதலை மடியனும் வாஞ்சிக்கின்ற பாலன் எவன் அவனுக்கு யுக்தியன்வித தர்க்கபாஷையை யான் சுருக்கி விளக்குகின்றேன்."

இது தர்க்கபாஷையிலே மொழிபெயர்ப்பாய் நின்ற முதலாம் வாக்கியம். இவ்வாக்கியச் சொற்களோ நிலைமாறாது முதனூலிலே நின்றவாறு நிற்கின்றன. "பாலன் எவன் அவ்ருக்த" என்பதும் வடமொழிக்குரிய நடை. பிரவேசம், யுக்தியக்விதம் முதலிய சொற்களும் வடசொற்கள். இத்தர்க்கபாஷை மொழிபெயர்ப்போடு தர்க்கசங்கிரக மொழிபெயர்ப்பை நோக்குவோர்க்குப் பற்பல வேறுபாடு தோன்றும்.

இனி, ஆங்கிலேய வாக்கியங்களைத் தமிழ்ப்பாடையிலே மொழிபெயர்ப்பவர்களும் தமிழ்நடை வழுவாது பேணியமைத்தல் ஆவசியகம்.

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

---

உ

திருச்சிற்றம்பலம்.

# சைவாதீனமுந் தமிழும்.

(முற்றொடர்ச்சி)

இங்ஙனமாக வுலகோபகாரம் புரிந்திருந்தருளிய திராவிடமகாபாஷ்யகர்த்தராகிய சிவஞான முனிவரை, ஸ்ரீ-நமசிவாயதேசிகமூர்த்திக்குப் பதினொரும் பட்டத்திலிருந்து பெரும்புகழ் பரப்பிய சுப்பிரமணியதேசிகமூர்த்தி, நமதாதீன குலதெய்வம எனப்பலருக்குமெடுத்துரைப்பதன்றிக், தமது பூஜைமடத்தின் முகப்பிலே சித்திரத்திலே திருவுருவரைந்து அதன்மேல் ஆதீனகுலதெய்வமாகிய சிவஞான முனிவரென எழுதிவைத்திருக்கின்றனராயின் இம்முனிவர் பெருமை பேசத்தக்கார் யாவர்; இவர்செய்தநூல்களை மாத்திரமொருவர் கற்பாராயின் அவர் சிவஞானச்செல்வரே.

பின், இம்முனிவர் மாணாக்கர் பன்னிருவருட் கச்சியப்பமுனிவர் முதலாயினோரும் உலகோபகாரமாகப் பலநூல்களைச் செய்ததன்றிப் பலருக்கும் பலநூல்களைக் கற்பித்துதவினர். அவருட் கச்சியப்பமுனிவரியற்றியருளிய நூல்கள் வருமாறு:—பூவாளூர்ப்புராணம், பேரூர்ப்

புராணம், திருவானைக்காப்புராணம், திருத்தணிகைப்புராணம், விநாயகபுராணம், வேறொருபகுப்பாக மொழிபெயர்த்த காஞ்சிப்புராணம், சென்னைவிநாயகர் பிள்ளைத்தமிழ், யமகவந்தாதி, கச்சியானந்தருத்திரேசர் வண்டுவிடுதூது, பதிற்றுப்பத்தந்தாதி, பஞ்சாக்கரதேசிகரந்தாதி முதலிய நூல்களைச் செய்ததுமன்றித் தம்மாணாக்கரிற் சிறந்த சென்னைக் கந்தப்பையருக்குண்டான குன்மநோய் நீங்கற்பொருட்டுத் தணிகையாற்றுப்படையைச் செய்தருளினர்; பின்பு பேரூரில் வசித்தபோது அரசம்பலவாணர்மீது சில செய்யுளியற்றி மழை வருஷிக்கச்செய்தனர்; அங்ஙனமன்றித் திருப்பட்டீசர்மீது சிலபதிகம்பாடிப் பலருக்குங் குட்டநோய் முதலிய பிணியை நீக்கியருளினர்; இம்முனிவர்செய்த நூல்களெல்லாம் மிகக்கற்பனைகளும், நீதிகளும், மெய்கண்டசாத்திரக் கருத்துகளுமே பெரும்பாலுமுள்ளனவென எல்லா வித்துவான்களும் நன்குபாராட்டத்தக்கன; இம்முனிவர் விநாயகபுராணமியற்றிச் சென்னையிலரங்கேற்றியபோது அங்குள்ள பிரபுக்கள் இரண்டாயிரவராகன் சம்மானஞ்செய்தனர்; அப்பொருளைக்கொண்டுவந்து ஆதீனத்தில் நமசிவாயமூர்த்திசந்நிதியிலே மண்டபங்கட்டியருளினர்; இம்முனிவரைக் கவிச்சக்கிரவர்த்தியென்று பண்டைக்காலந்தொடங்கி வழங்கிவருகின்றனர்; அப்பெயரை அம்மண்டபத்திலெழுதியிருப்பதைப் பார்க்கலாம்.

தொட்டிக்கலைசைச் சுப்பிரமணிய முனிவரியற்றியருளிய நூல்கள் வருமாறு:— துறைசைக்கோவை, கலைசைக்கோவை, கலைசைச்சிலேடைவெண்பா, சிதம்பரேசர்வண்ணம், திருக்குற்றாலச்சித்திரசபைவிருத்தம், பழனிமுருகக்கடவுள் பஞ்சரத்நமாலை, சுப்பிரமணியர் திருவிருத்தம், திருத்தணிகைத் திருவிருத்தம், திருச்சிற்றம்பலதேசிகர் சதகம், பஞ்சரத்நமாலை முதலிய பலநூல்களைச் செய்தருளினர்; சுப்பிரமணியர் திருவிருத்தம் ஒருவர் குட்டநோய் நீங்கச் செய்தது; திருத்தணிகைத்திருவிருத்தம் ஒருவர் கண் குருடு நீங்கச் செய்தது.

இலக்கணச்சிதம்பரநாத முனிவர் திருப்பாதிரிப்புலியூர்ப் புராணமுதலிய நூல்களைச்செய்தருளினர்; இவர்களன்றோ மானிடரிற்சிறந்தவர்; இவர்களன்றோ தபோதனர்; இவர்களன்றோ சிவஞானச்

செல்வர்; இவர்களன்றோ உலகோபகார வள்ளல்கள்; இவர்கள் மகிமையை யெவ்வாறறிந்து கூறத்தகும்.

இம்மட்டோ! மாசிலாமணி தேசிகமூர்த்தி, தஞ்சைமன்னருடன் திருவெண்காட்டுக் கெழுந்தருளியிருந்தகாலத்தில் பிராமணபோஜனம், மகேசுரபூஜையெனுமிரண்டின் மகிமையைப்பற்றி வாது நிகழ்ந்தபோது மகேசுரபூஜையே மிகச்சிறந்தது என்று திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும் எனுமைப் பெண்ணுக்கும்படி, 'மட்டிட்ட' வென்னு முதற்குறிப்புற்ற திருப்பதிகத்திலெடுத் துரைத்தருளினர்.

அப்பதிகத்தின் கருத்தைச சேக்கிழார்நாயனாருப் பெரியபுராணத்தில், "மண்ணினிற்பிறந்தார்பெறும்பயன்"என்னுஞ்செய்யுளில், விளக்கியருளினர். அதனை விளக்கிக்காட்டலாகுமெனக்கூறி அவ்வரசரால் ஒருமண்டலம் பிராமணபோஜனஞ்செய்வித்து அவ்வுச்சிட்டத்தை யுவர்க்கிணற்றிலேயிடும்படி கட்டளையிட்டருளினர். முடிவிலே தூர்வையெடுத்துப் பார்க்குமபோது அக்கிணற்றிற் புழுக்களும் உவருநீங்காமலிருந்தன. பின்பு அவ்வரசராலொருமண்டலம் மகேசுரபூஜை செய்வித்து, அவ்வடியார் பரிகலசேடத்தை அக்கிணற்றிலேயிடும்படி செய்வித்தருளினர்; முடிவிலே தூர்வையெடுத்துப் பார்க்கும்போது புழுக்களின்றி யுவர்நீங்கிப் பரிமளத்துடன் கங்காஜலம்போல நறுநீர்சுரந்து பெருகியது; இவற்றையறிந்த மன்னர் அக்கிணற்றுக்குப் பரிகலக்கிணறு என்று நாமமிட்டு முற்றூட்டாகப் பலநிலங்களைத் தானஞ்செய்தனர். இன்னும் அக்கிணற்றுக்கு அந்நாமமே வழங்கிவருகின்றது.

இம்மட்டோ! பின்வேலப்பதேசிகமூர்த்திபாற் சைவசித்தாந்த சாத்திரவுபதேச முதலியனபெற்று வடமொழிப்பயிற்சியினும் வல்லவராய்ச் சிவாகமங்களிலே இரண்டுலக்ஷக்கிரந்தம்வரை யுணர்ந்தவராயிருந்த வுத்தமோத்தம குரவராகிய திருச்சிற்றம்பலதேசிகமூர்த்தி சிவக்ஷேத்திரயாத்திரையாகத் திருக்கூட்டத்துடனெழுந்தருளும்போது மார்க்கத்துள்ள இராமநாதபுரத்தில் வசித்தருளினர்; அந்நகரத்தில் அக்காலத்திருந்த சேதுபதிமன்னர்க்கு மந்திரிமுதலாயினோர் தெரிவித்தார். உடனே அம்மன்னர் இப்போது மழையில்

லாது வருந்துங்காலமாயிருக்கின்றதே? மழைபெய்யும்படி செய்வி ப்பீர்களா என்று வினவினர். அதைக்கேட்ட மந்திரிமுதலானோர் அவ்வண்ணமே செய்தருள்வார்களென்று தெரிவித்து மன்னரையு மழைத்துக்கொண்டுவந்து தெரிசிப்பித்து மன்னர்கருத்தையும் விண் ணப்பஞ்செய்தனர். அத்தேசிகமூர்த்தி அவ்வண்ணமே ஞானநடரா சர் திருவருள்செய்வார், என்று திருவாய்மலர்ந்து அந்நடேசர்பூஜை யை மிகச்சிறப்புறச்செய்துமுடித்து, அவர் சந்நிதியிலே திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரருளிச்செய்த மேகராகக்குறிஞ்சியென்னும் பண்ணையுடைய திருமுதுகுன்றப்பதிக முதலாகிய பதிகங்களையெ டுத்துத் தாளத்துடனோதும்படிக்கு ஓதுவாமூர்த்திகளை நியமித்துத் தாமும ஸ்ரீ: பஞ்சாக்கரத்தைத்தியானித்து நிட்டையில் வீற்றிருந்த ருளினர். உடனே மேகங்கள் குமுறிமழைபொழிந்தன; இவற்றை க்கண்ட அச்சேதுபதி மன்னர் அற்புதமகிழ்ச்சியெய்தி அடியுறை வைத்து வணங்கித்தேசமுய்யவந்த செழுந்தவத்தோராகிய இவ்வா தீனகுருமூர்த்திகளின் திருவுதரத்திலும், அவரடியார்களின் திருவு தரத்திலுமன்றோ நமது அன்னஞ்சாரவேண்டுமென்று திருப்பொற் கோட்டையென்னுமொரு பெரியகிராமத்தைத் தானஞ்செய்து அக் காலவழக்கப்படி ஒரு செப்புப்பட்டையத்தி லெழுதிக்கொடுத்து, நமசிவாயதேசிகமூர்த்திக்கு வருடந்தோறுநடத்துகிற குருபூஜைச் செலவைச் சேதுசமஸ்தானத்திலிருந்து கொடுக்கும்படி மகமையொ ன்றுமேற்படுத்தித் தம்மூரிலே, திருமடமுஞ்சிறப்புறக்கட்டுவித் துத் தாமுமவ்வாதீனத்திற்கே யடிமையாயினர்; அம்மன்னர் செப்புட் பட்டையத்தின்கீழ்,

“நதியாம் விரிசிலை நன்னகர் பொற்கோட்டை
பதியாந் துறைசைப் பதிக்கு—விதியாகத்
தானமிட்டான் சேதுபதி தாரணிதா னுள்ளளவு
மீனமில்லை யென்றெந்நா ளும்.”

என்னும் வெண்பாவை வரைந்திருக்கின்றனர்; அப்பட்டையமின்னு மவ்வாதீனத்திலிருக்கின்றதைப் பார்க்கலாம். இத் திருச்சிற்றம்பல த்தேசிகமூர்த்தியின்மீது மயூரகிரிக்கோவைசெய்த சாந்துப்புலவர் கலம்பகஞ்செய்திருக்கின்றார்.

நமசிவாயதேசிகமூர்த்திக்குப் பதினொன்காவது பட்டத்திலிருந்த சுப்பிரமணியதேசிகமூர்த்தி நாகப்பட்டினத்துச் சிவாலயத்திற் னத்துத்தேசிகமூர்த்திகளு மெழுந்தருளியிருந்தனர்; கும்பாபிஷேகம் முடிந்தவுடன் இவர்களையெல்லாம் வரவழைத்துச் சிறப்புச்செய்து வைத்திருந்த செட்டியார் எந்தத்தேசிகமூர்த்திக்கு முந்திச்சிறப்புச் செய்கிறது என்று ஆலோசனையுற்றிருந்தபொழுது எல்லாவாதீனத்துத்தேசிகமூர்த்திகளுஞ் செட்டியாரைநோக்கித் திருவிளையாடற்புராண நகரப்படலத்தில், "அழிவிலானுரையாகமமிலக்கமாய்ந்து" எனக்கூறியபடி சிவாகமத்தில் இலக்ஷங்கிரந்தந்தெரிந்தவரே உத்தமகுருவாகச்சொல்லத்தகும், அவ்வாறு தெரிந்தமூர்த்தி இத்திருவாவடுதுறையாதீனத்துக் குருமூர்த்தியேயெனக்கூறினர்; உடனே செட்டியார் இலக்ஷங்கிரந்தம் பார்வையிட்டு மனனஞ்செய்வதோ? மனனஞ்செய்யாது பார்வையிடுவதோ? என்றையுற்றுரைத்தனர்; உடனே சுப்பிரமணியதேசிகமூர்த்தி நாம் பார்வையிட்டு மனனஞ்செய்தது இலக்ஷங்கிரந்தமும, மனனஞ்செய்யாது பார்வையிட்டிருப்பது இலக்ஷங்கிரந்தமுமாமென்று திருவாய்மலர்ந்தருளினர். உடனே மிக்கவாச்சரியமெய்தி இம்மகானே உத்தமோத்தமகுருவென்று எல்லார்க்குமுதலிலே செய்யவேண்டுஞ்சிறப்புக்கள்செய்து, அம்முறையே ஏனையவாதீன தேசிகமூர்த்திகட்குஞ் செய்தனர்; இவற்றையுடனிருந்துகண்ட சுப்போதுவாமூர்த்தியே கூறியிருக்கின்றார்; இத்தேசிகமூர்த்தியின பரிகலசேடப்பிரசாதத்தைப் பெற்றருந்துவோர் தங்கள் பிணிநீங்கிச் சுகமடைவார்.

பதினைந்தாம்பட்டத்திலிருந்த அம்பலவாணதேசிகமூர்த்தி திருமந்திரமுதலிய திருமுறைகளுக்கு நுட்பமான அருத்தங்களை நாவலரலலா நன்குமெச்சும்படி [illegible].

(இன்னும் வரும்.)

எம். எஸ். பூரணலிங்கம்பிள்ளை, பி. ஏ

சிவமயம்.

# இராமாவதாரச் செய்யுட் பாடாந்தரம்.

(முற்றொடர்ச்சி.)

## உருக்காட்டுப்படலம்.

இப்படலத்து ௨௧-ம் செய்யுளின் பின்னர்,

சுற்றிய கொடியொன்றைத் துணித்துத் தூயளோர்
பொற்றடங் கொம்பினிற் பூட்டிப் பூமியே
நற்றவ முடையன்யா னாகி னாயகன்
வெற்றிசேர் திருவடி மேவு வேனென்றாள்.

எனவும்,

என்றருந் ததிமனத் தெம்மை யாளுடைத்
துன்றருங் கற்பினாள் சுருதி நாயகன்
பொன்றரு மலர்ப்பதம் வழுத்திப் பூங்கொடி
தன்றனிக் கழுத்திடைத் தரிக்கு மேல்வையில்.

எனவும், இருசெய்யுட்கள்காணப்படுகின்றன. "கண்டனனனுமனும்'
என்னும் ௨௨-ம் செய்யுளில் "கொண்டனன்றுணுக்க மெய்திண்ட
கூசுவான்...........தொழுதுதோன்றினான்" எனக்கூறிய கருத்
முடையன என்பது நினைக்கப்படும். அன்றியும், இச்செய்யுட்கள்
ரண்டு மில்வழிமுற்பிற் செய்யுட்களுக்கு இயைபின்மையானுமிவை
பொருத்தமாதல் நன்கு தெளியப்படும்.

மேற்கூறிய ௨௨-ம் செய்யுளின் பின்னர்,

தோன்றினன் றனதுருக் காணத் தூயவன்
மூன்றுல கினுக்குமோ ரன்னை மொய்ம்மலர்த்
தேன்றிகழ் திருவடி சென்னியாற் றொழு
தேன்றபே ரன்புகொண் டறைதன் மேயினான்.

என ஒருசெய்யுளும், ௨௩-ம் செய்யுளின் பின்னர்,

நோக்கின னரக்கியர் நுனிப்பில் கோடியர்
நீக்கினர் துயிலினை நின்னைக் காணுதற்
காக்கிய காலம்பார்த் தயல மர்ந்துபின்
ருக்கணங் கவர்துயில் கண்டு சார்ந்துளேன்.

என ஒரு செய்யுளும் காணப்படுகின்றன. இவையுமீண்டுப் பொரு த்தமுடையவாதல் உற்று நோக்கியுணர்க.

௬௩

என்றவ னிறைஞ்ச நோக்கி யிரக்கமு முனிவு மெய்தி
நின்றவ னிருத னல்ல னெறிநின்று பொறிக ளைந்தும்
வென்றவ னல்ல னாகின் விண்ணவ னாக வேண்டு
நன்றுணர் வுரையன் றூய னவையிலன் போலு மென்னா.

என்னும் உ௬-ம் செய்யுளில், "நன்றுணர்வுரையன் றூய னவையி லன் போலுமென்னா" என்பது "நன்றுணர்வுரையுநதூய னவையி லன் போலுமென்றாள்" எனக்காணப்படுகின்றது. 'நவையிலன்' என்பதே 'தூயன்' என்பதன் பொருளை யுணர்த்தலின் 'உரையுந் தூயன்' என்பதே பொருத்தமாதல் காண்க.

௬௩

ஆயவன் றன்மை நிற்க வங்கதன் வாலி மைந்த
னேயவன் றென்பால் வெள்ள மிரண்டினோ டெழுந்து சேனை
மேயின படர்ந்து தீர வினையவன் விடுத்தா னென்னைப்
பாய்புன லிலங்கை மூதூர்க் கென்றனன் பழியை வென்றான்.

என்னும் ௬௬-ம் செய்யுள்,

ஆயவன் றன்மை நிற்க வருக்கன்சேய் வாலி சேயை
யேயினன் றென்பால் வெள்ள மிரண்டினோ டெழுந்த சேனை
மேயினன் புணரிதீரத் திருந்தவன் விடுத்தா னென்னைப்
பாய்புன லிலங்கை மூதூர்க் கென்றனன் பழிப்பி லாதான்.

எனக்காணப்படுகின்றது. "அருக்கன்சேய்வாலிசேயை" என்பதும், "புணரிதீரத்து" என்பதும் பொருட்கியைபும், சிறப்புமுடைமை யிற் பின்னையதே பொருத்தமும் சிறப்புமுடைத்து.

ஷை

பொருந்திய நிலனொடு போந்து கானிடை
வருந்தின வெனினது நூலை மாறுகொண்
டிருந்தது நின்றது புவனம் யாவையு
மொருங்குடன் புணர்வஃ துரைக்கற்பாலதோ.

என்னும் சஅ-ம் செய்யுள்,

பொருந்திய நிலமிசைப் போந்து கானிடை
வருந்தியு மிலக்கண நூலை மாறுகொண்
டிருந்தன வவன்பதம் புவனம் யாவையு
மொருங்குட னொளிப்பதை யொளிக்கற் பாலதோ.

எனக்காணப்படுகின்றது. 'எனின்' என்பதும், 'நின்றது' என்பதும் "புணர்வஃதுரைக்கற்பாலதோ" என்பதும் பொருத்தமில்லன வாதலிற் பின்னையதே பொருத்தமுடைத்து. காட்டின்கண் நிலமிசைப்போந்து வருந்தியும் அவன்பாதங்கள் இலக்கணநூலை மாறுகொண்டிருந்தன. புவனம்முழுவதையும் தன்னுண்மறைத்த அப்பாதத்தை (அப்புவனத்துள்ள உவமைப்பொருள்கள்) மறைக்கும் பகுதியதோ, என்பது இதன்கருத்து. இலக்கணநூல் என்றது, இலக்கணநூலிற்கூறிய உவமைப்பொருள்களை. ஆகுபெயர். இனிநூல் என்பதற்குப் புத்தகமெனப்பொருள்கொண்டு புறவடிக்குவமையாக்கிப் பொருள்கூறுவாருமுளர். "கானிடைவருந்தியும்" என்றதனானும், "புவனம்யாவையுமொருங்குடனொளிப்பதை" என்றதனானும் புறவடிக்குக்கொள்ளுதல் பொருந்தாது. ஈண்டுப்பொதுவாகக் காலினியல்பையே வியந்துகூறினார் பின்னையமறைத்தல் என்பதற்கு அதனியல்பைக் கீழ்ப்படுத்தித் தான்மேற்படுதல் எனப்பொருள்கொள்க

ஷை

தாங்கணைப் பணிலமும் வளையுந் தாங்கரா
வீங்கணைப் பள்ளியா னெனினும் வேறினிப்
பூங்கணைக் காற்கொரு பரிசு தான்பொரு
மாங்கணைக் காவமோ வாவ தன்னையே,

என்னும் சங-ம் செய்யுளில், "தாங்கரா - வீங்கணைப்பள்ளியானெனினும் வேறினி" என்பது "தாங்குநீர் - வீங்கணைப்பணிமிசை மேகம

ன்னவன்" எனக்காணப்படுகின்றது. "எனினும் வேறினி" என்பது பொருத்தமின்மையிற் பின்னையதேபொருத்தமுடைத்து.

௯௪

அறங்கிளர் பறவையி னரச னுடெழிற்
பிறங்கெருத் தனையன பெயரும் பெற்றுடை
மறங்கிளர் மதகரிக் கரமு நாணின
குறங்கினுக் குவமையிவ் வுலகிற் கூடுமோ.

என்னும் சச-ம் செய்யுளில், "பிறங்கெருததனையன பெயரும்பெறறுடை" என்பது "பிறங்கெருத்தமுமிளங் கதலிப்பெற்றியும்" எனக் காணப்படுகின்றது. 'கரமும்' என்பதிலுள்ள உம்மைக்கும் 'நாணின' என்னும் பன்மைமுடிபிற்கு மியையவருதலிற் பின்னையதேபொருத்தமுடைத்து. கதலிப்பெற்றி - வாளைத்தண்டினியல்பு. பெற்றியை ஏனையவற்றிற்குங்கொள்க.

௯௫

வலஞ்சுழித் தொழுகுநீர் வழங்கு கங்கையின்
பொலஞ்சுழி யென்றலும் புன்மை பூவொடு
நிலஞ்சுழித் தெழுமணி யுந்தி நேரினி
யிலஞ்சியம் போலும்வே றுவமை யுண்டரோ.

என்னும் சடு-ம் செய்யுளில், "இலஞ்சியம்போலும்" என்பது "இலஞ்சியம்போது" எனக்காணப்படுகின்றது. முன்னையதிற்பின்னையது பொருத்தமுடையதாதல் காண்க.

௯௬

பொருவரு மரகதப் பொலன்கொண் மால்வரை
வெருவுற விரிந்துயர் விலங்க லாகத்தைப்
பிரிவுற னோற்றில னென்னிற் பின்னையத்
திருவினிற் றிருவுளர் யாவர் தெய்வமே.

என்னும் சசு-ம் செய்யுளில், "என்னில்" என்பது "நின்னில்" எனக் காணப்படுகின்றது. ஸ்ரீராமன்மார்பை நீ இப்பொழுது பிரிவுற்றிருத்தலாற் பிரியாதிருக்குமத்திருப்போன்ற தவமுடையை யல்லை என்பான் இங்ஙனம் கூறினானாதலிற் பின்னையதே பொருத்தமுடைத்து.

௯௨

௫௪-ம் செய்யுளின் பின்னர்,

எள்ளற்கரிய நிலையுளதா யிசைந்துதம்மி லிணையொத்துத்
தள்ளப்படாத நிலையாகிச் சார்கத்தரிகை வகையொழுகி
யள்ளற்பள்ளத் தகன்புனலி னமைந்தவாவி யுள்வளரும்
வள்ளைத்தண்டின் வனப்பழித்த மகாக்குழையின குழையம்மா.

என ஒரு செய்யுள் காணப்படுகின்றது. இதுவுமீண்டுப் பொருத்த முடைத்தாதல் காண்க. இதின் இரண்டாமடி, "தெள்ளத்தெளிந்து செயல்வல்லோர் சேர்த்து நூலின் வழியொழுகி" எனவும்பாடம இதனினும் முந்தியதே சிறப்புடைத்து.

சி. கணேசையர்.

---

௨

# கதாசரித் சாகரம்.

## ௫-வது சதுர்த்தாரிகாலம்பகம் க-வது தரங்கம்.

[ஸ்ரீமத்-வீராசாமி ஐயங்காரவர்கள் மொழிபெயர்த்தது.]

(முற்றொடர்ச்சி.)

---

அன்றியும், கன்னிகையானவள் பாலப்பருவத்தைத்தவிர மற்றைப்பருவங்களில் தன்கணவனை விட்டுநீங்கிப் பிதாவின் கிரகமித்தன்மைத்தென்று அறியாதவளாயிருத்தல்வேண்டும். ஒரு கன்னிகையை ருதுவாகும்வரை விவாகஞ்செய்யாதிருந்தால் அதனால் தமது பந்துக்களும் தாழ்ந்தகெதியையடைகின்றனர்; அப்படிக் கலியாணமாகாது ருதுவானபெண்ணுக்கு விருஷளி என்றும், அவளை மணந்துகொள்பவனுக்கு விருஷளீபதி என்றமிழிவான பெயருமேற்படுகின்றன. ஆதலாலுன்மனத்திற்கிசைந்த கணவனை மணந்துகொண்டு நாங்கள் யாவரும் சந்தோஷிக்கும்படி வாழ்தல் வேண்டுமென்றனன்.

இப்படிச்சொல்லிய தன்பிதாவின் வசனத்தைக்கேட்ட ராஜகுமாரியான கனகரேகையென்பவள் அரசனைப்பார்த்துப் பிதாவே! உமக்கு நான்விவாகம் செய்துகொள்ளவேண்டிய தவசியமென்றுதோன்றி

னுல் நான்சொல்கின்றபடி செய்யவேண்டும்; அஃதாவது, பிராமணன் க்ஷத்திரியனென்ற இரண்டு ஜாதியார்களுக்குள் எவனொருவன் கனக புரியென்னும் நகரத்தைப் பார்த்திருக்கின்றானோ அப்படிப்பட்ட புண்ணியசாலிக்கே யென்னை மணம்புரிதல்வேண்டும்; அவனே யென் பர்த்தாவாகின்றான்; இதற்கு மாருகவொன்றுஞ் செய்யக்கூடாது என்று தன்மனத்திலுள்ளவெண்ணத்தை வெளியிட்டனள். இதைக் கேள்வியுற்றவரசன் நமது புத்திரி யேதோதெய்வகதியால் விவாக மென்பதையங்கீகரித்தனள். ஆனாலிவள் தெய்வஸ்திரீ யென்பது நிச்சயம். நமது கிரகத்திலேதோவொரு காரணவசத்தினாலுற்பவித் திருக்கின்றனள். இல்லாவிடில் இவளிவ்வளவிளமைப்பருவத்திலே இவ்விஷயத்தை யெப்படியறியக்கூடுமென்று மனத்திலாலோசித்துக் கொண்டு அப்பொழுது தன் புதல்வியைப்பார்த்து உன்மனத்தின்படி யே செய்கின்றேனென்று சொல்லிவிட்டெழுந்து அவ்வரசன் அன்று தினம செய்யவேண்டிய காரியத்தைச் செய்தனன்.

பின்பு மறுநாள் சபையில் தன் புடைசூழ்ந்திருக்கின்றவர்களை ப்பார்த்து உங்களில் யாராவது கனகபுரியென்ற நகரத்தைப்பார்த்தி ருப்பவர்களுண்டா? பிராமணன் க்ஷத்திரியன் இவ்விருவர்களில் எவ னொருவன் அந்நகரத்தைப் பார்த்திருக்கின்றானோ, அவனுக்கு என் புதகிரி கனகரேகையை விவாகஞ்செய்துகொடுப்பதோடு அவனையுவ ராஜனாகவுஞ்செய்கின்றேன் என்றனன். இதைக்கேள்வியுற்றதும், அரசன் சமீபத்திலிருந்த யாவரும் ஆச்சரியத்துடன் ஒருவர்முகத் தையொருவர் பார்த்துக்கொண்டு மகாராஜனே, கனகபுரியென்ற ஒரு நகரமிருப்பதாக நாங்கள் கேட்டதேயில்லை. அப்படியிருக்க அந்ந கரத்தை யார் பார்த்திருக்கப்போகின்றனர் என்றார்கள். உடனே அரசனுனைவன் வாயில் காபபவனையழைத்து நமது நகரத்தில் யாரா வது பிராமணன் க்ஷத்திரியனென்ற இருதிறத்தவர்களில் கனகபுரி யைப் பார்த்தவர்களிருந்தால் அவனுக்கு நமது கன்னிகையை மண ஞ்செய்து கொடுப்பதோடு யுவராஜபட்டாபிஷேகமும் செய்விக்கின் றேனென்று பறையறையும்படி உத்தரவளித்தனன்.

உடனே, வாயில்காவலன்சென்று வேலைக்காரரிடஞ்சொல்லிய அரசனுத்தரவின்படியே முரசறைவித்தனன். அவ்வண்ணம் வீதிகள்

தோறும் முரசடித்துக்கொண்டு சொல்கின்றவார்த்தையை அந்நகரத்திலுள்ளார்கேட்டு இதென்ன ஆச்சரியம்! நாமெத்தனையோ முதிர்ந்த வயதுடையவர்களாயிருந்து மிதுவரையில் கனகபுரியென்ற நகரத்தைக்கண்டதுமில்லை கேட்டதுமில்லையே என்றொருவரோடொருவர் பேசிக்கொண்டனர். ஒருவனுவது கனகபுரியைப் பார்த்தேனென்று சொல்லவில்லை. அத்தருணத்தில் அந்நகரத்தில் வசிக்கின்ற பெல தேவனென்பவன்மகன் சக்திதேவனென்னும் பெயரையுடைய பார்ப்பாநொருவன் அம்முரசொலியைக்கேட்டு இதென்ன கனகபுரியென்றொரு நகரமிருப்பதாயும அதைப்பார்த்தவனுக்கு ராஜகன்னியை மணம்புரிவதாயும் பறையறைகின்றனர். நாமோ யௌவன வயதுடன் கூடியிருக்கின்றோம். நமது செல்வமோ முழுவதுஞ் சூதாட்டத்திஞற்றொலைந்துவிட்டது. கிரகத்திற்குச்சென்றால் பிதாவின் கோபத்திற்காளாகவேண்டும். வேசையர்களோ சற்றும் நம்மைக கண்ணெடுத்துப்பாரார்கள். ஆகையால் யாதொரு கெதியுமில்லாதிருக்கின்ற நாம் கனகபுரியைப் பார்த்ததாக, முரசடிப்பவர்களிடம் பொய்ம்மொழிகூறுவோம்; நாம் பார்க்கவில்லையென்பதை எவனறியப்போகிறுன். அந்த நகரத்தை எக்காலத்திலெவன் பார்த்திருக்கின்றான். ஆதலாலொருவாறு ராஜபுத்திரியுடன் கூட்டரவுநேரிடினும் நேரிடுமென்று ஆலோசித்து, முரசடித்துச்சொல்லிக்கொண்டு செல்கின்றவர்களிடம் சென்று சக்திதேவனென்பவன், கனகபுரியை யான் பார்த்திருக்கின்றேனென்று பொய்ம்மொழி கூறினன்.

அவர்களதைக்கேட்டவுடன் தெய்வாதீனந்தானென்று வாயில் காப்பவனிடம் அவனையழைத்துச்சென்றனர். அவ்வண்ணமே வாயில்காவலனிடத்திலும கனகபுரியைப்பார்த்திருக்கின்றேன் யானென்றுசொல்ல, அவனுமுபசாரத்துடன் அரசன்பக்கலிலழைத்துச் செல்ல அவ்விடத்திலும் மாறுதலின்றி முன்கூறியபடியே பொய்மொழிந்தனன். ஆனல் சூதாடிக்கெட்டலைந்தவனுக்கு உலகிற்செய்யத்தகாதகாரியம் யாதிருக்கின்றது. அப்பொழுதரசன் இதனுண்மையை அறியும்பொருட்டு அவ்வந்தணனைத் தன்புதல்வி கனகரேகையிடமனுப்பினன்; அந்தக்கனகரேகையும் வாயில்காவலன்மூலமறிந்து தன்சமீபத்தில் வந்துநிற்கின்ற சக்திதேவனை நோக்கி, நீ கன

கபுரியைப் பார்த்திருக்கின்றாயாவென்று வினவினள். அவனுமந்தக் கனகரேகையினிடத்தில் யான் கல்விகற்பதற்காக அநேக தேசங்கள் சென்றுவருங்கால் அக்கனகபுரிநகரத்தைப் பார்த்திருக்கின்றேனிது நிச்சயந்தானென்று பதிலுரைத்தனன்; அதற்கவள் நீ எவ்வழியா லவ்விடஞ்சென்றாய் அந்நகரமெவ்வண்ணமாக விருக்கின்றதென்று கேட்க, அவனும் யானிங்கிருந்து ஹரபுரமென்ற பிரசித்திபெற்ற தோர் நகரஞ்சென்றேன்; அங்கிருந்தும் முறையாக வாராணசிநகரஞ் சென்றேன்; அதினின்று பலநாட்களில் பௌண்டரவர்த்தனமென் னும் நகரத்தையடைந்தேன்; அதினின்றும் கனகபுரிநகரத்திற்கேகி னேன்; அந்நகரமானது புண்ணியாத்துமாக்களின் போகபூமியாய்க் காணப்பட்டது. அது இமையாநாட்டத்தவர்களா லனுபவிக்கப்ப டும் அழகிய இந்திரனுலகம்போலுமிருந்தது; அவ்விடத்திற் கற்க வேண்டுங்கலைகளைக் கற்றுக்கொண்டுவந்து சேர்ந்தேனென்றனன்.

இவ்வாறுகூறிய அச்சூதாடிப்பார்ப்பான் சொற்களைச்செவியு ற்ற அந்த ராஜகுமாரியானவள் சிரித்துக்கொண்டு ஓகோ மகாப்பிரா மணரே, நீரந்தக் கனகபுரியைப்பார்த்தது உண்மைதான். இன்னுஞ் சொல்லுஞ்சொல்லும் எந்தமார்க்கத்திறை் சென்றீரென்றனள். மறுபடியும் அவனதேபிரகாரமாக உறுதியுடன்கூறலும், உடனேய வள் பக்கலிலிருந்த வேலைக்காரனைநோக்கி இவனை வெளியேகொண்டு தள்ளுங்களென்று உத்தரவுகொடுத்து அவனை வெளியிற்றுரத்திவி ட்டுத் தன் பிதாவினிடஞ்சென்றாள். உடனே அரசன் தன் புதல்வி யிடம் அப்பார்ப்பான்மொழிந்ததுண்மைதானோவென்று கேட்டலும், அந்த ராஜபுத்திரி தன்பிதாவினிடத்தில் ஐயனே! நீர் அரசனாகவிரு ந்து மேன்விசாரியாமலே செய்கின்றீர். உலகத்திற் சூதாடிப்பயல் கள் உண்மை மார்க்கத்திலிருக்கின்றவர்களை வஞ்சிக்கின்றார்களென்ப தை நீரறியவில்லையோ? அப்பார்ப்பான் பொய்யுரைகூறி என்னை ஏமாற்றமுயல்கின்றான்; பொய்வார்த்தை சொல்லுகின்ற அப்பார்ப் பான் அந்த நகரத்தைப்பார்க்கவில்லை. சூதாடிகளோ பற்பலவிதமா ன வஞ்சனைசெய்கின்றார்கள். அதற்கு திருஷ்டாந்தமாக ஒருகதை சொல்கின்றேனென்று பின்வருமாறு ஒருகதை சொல்லினள்.

(தொடரும்.)

கடவுள் துணை.

# உபாத்தியாயனியல்பு.

உலகத்துச் செயற்பாலனவாய பற்பல கருமங்களிலுஞ் செய்பவனுக்குஞ் செயப்படுஞ்செயலுககும் உள்ள பாஸ்பரசம்பந்தத்தை உற்றுநோக்குங்கால் செய்யப்படுங்கருமத்தின் தன்மையும் பயனுஞ் செய்பவனின் குணங்களை அனுசரித்தனவாகக் காணப்படும். நிலம் உழுதல் மரம் வெட்டல்போன்ற சடப்பொருள்களோடடுத்த சாமானிய வேலைகளைச்செய்தற்கு வேண்டப்படுவன செய்பவனின் சரீரபலமும் வினையாண்மையுமே அன்றி அவன் மனநோக்கமும் நல்லொழுக்கத்தால் வருந்தகுதியும் அன்று. உபாத்தியாயன் குருமுதலாயினோர் தொழிலோ மிகப்பாரம் உடைத்து; அவர் திருத்திநடத்துவது ஆறறிவுடை மக்கட்பொருளாதலின். ஆராயின், ஒருவரிடத்து நல்லொழுக்கம் வரச்செய்வதில் நல்லொழுக்கம்போன்றது பிறிதொன்றில்லை. நல்லொழுக்கம் உடையாரைச் சேர்ந்தோர்பலருந் தாமும் நல்லொழுக்கம் உடையராதல் உண்மை. உபாத்தியாயன் தன் மாணாக்கரைப்பயிற்றல் தான் சொல்வன செய்வனவற்றால் மாத்திரம் அன்று தன் குணகுணங்களாலுமாம். மனிதனாற் செய்யப்படும் மற்றெம்முயற்சியிலும் இவ்வுபாத்தியாயத்தொழிலிற் செய்வோன் தன்மைக்குஞ் செய்யப்படும்பொருளின் தன்மைக்கும் உள்ளசம்பந்தம் மிகவுநெருங்கியது. ஆதலின் இத்தொழிலிற்பிரவேசிக்கும் ஆண்பெண் என்னும் இருபாலாரும் இன்னஇன்ன இலக்கணம் உடையராயிருத்தல்வேண்டுமென முதலில் ஆராய்தல்தக்கது.

1. ஒரு விஷயத்தைப் போதிக்கப்புகும் ஒருவன் அவ்விஷயத்தை நன்கு அறிந்திருத்தல்வேண்டும் என்பது சாமானியமாய் எல்லோரும் அறிந்ததெனினும் அதனுண்மையை மனத்திற்றாங்கி அதன்வழி நடப்பவர் மிகச்சிலர். படிப்பிப்பவரினறிவு படிப்பவரறிவிற் சிறிது மேற்பட்டிருத்தல்போதும் என்பது சிலர்கொள்கை. அது பொருந்தாது. ஒருவன் தானறிந்ததை இன்னொருவனுக்கு அறிவிக்குங்கால் கேட்பவன் மனத்திற்பதியாமற் சிதைந்துபோரும் பாகங்

களோ பலவாதலின், எவருந்தாமறிந்தது முழுமையையுமாதல் பாதியையாதல் மற்றவருக்கு அறிவிப்பது அசாத்தியம். சாதாரணமாக நாம் அநுபவத்திற் காணக்கூடியதொன்றுண்டு. ஒருவன் ஓர் கதையை யாதல் ஓர் காரியத்தின் விவரத்தை யாதல் நமக்குச்சொன்னால் அப்பொழுது அதுமுழுதும் நமக்கு விளங்கியதுபோலத்தோற்றும். பின்பு அதனை யாம் இன்னொருவருக்குச் சொல்லத்தொடங்கின் காத்திரப்பிரகாரம நம ஞாபகத்திற்சில குறைவுகள் காணப்படும். கதையைக்கேட்கும்பொழுது ஆவசியகமாய்த்தோற்றாத சில அதனைமறுபடியுஞ் சொல்லும்பொழுது வேண்டியதாகின்றன. அவை எடுத்த விஷயத்துக்கு வேறாய் அதனோடு தொடர்ச்சியுடைய சில அமிசங்களாம. ஒருவன் படிப்பிக்கும் பாடத்தில் தனது அறிவு சுருக்கமாயிருப்பின் ஆதல் அப்பாடத்தை அச்சமயத்திற்காகமாத்திரம் ஆயத்தஞ்செய்திருப்பின் ஆதல் படிப்பிக்கும்பொழுது மாணக்கர் நிகழ்த்தும் வினக்கள் தனது அறிவினெல்லையைக் கடக்குமோ என்னும் அச்சம் அவன் மனத்தைவிட்டு நீங்காதிருக்கும். இருக்கவே அவனது பேச்சில் தடதடத்தல் உறுதியின்மை முதலியன உண்டாகும். அதுமட்டோ! உபாத்தியாயன் கற்பிப்பது தன் மனத்துள்ள நிறைந்த அறிவினலன்று என மாணக்கருட் சிலரேனுங்காண்பரேல் உபாத்தியாயனுக்கு அதனல் மதிப்புக்குறைதான் மாத்திரமன்றி அவன் கற்பிக்கும்பாடமும் வியர்த்தமாம். கற்பிப்பவர் எவருந் தாங்கற்பிககப்புகும் விஷயத்தை நன்முக அறிந்திருத்தல் அவசியம். நாம் அறியவேண்டிய விஷயங்களோ பல. ஒருவன் எல்லாவிஷயத்தைப்பற்றி முழுமையும் அறிந்திருத்தல் முடியாது. ஆதலின் உபாத்தியாயராவார் ஒவ்வொரு விஷயத்தையும் பற்றிப் பொதுவாய் அறிதலோடு ஒருவிஷயத்தையே முழுதுமறிந்து அதில் விசேட திறமை உடையராதல்வேண்டும்.

2. கற்பிக்கப்படும் பாடம் எத்துணை இலகுவாய் இருப்பினு அன்றி, உபாத்தியாயன் எத்துணைத்திறமைவாய்ந்தவராக இருப்பினும் படிப்பிக்கவேண்டிய ஒவ்வொரு பாடத்தையும் முன்னதாகவே நாடோறும், ஆயத்தஞ்செய்தல் அத்தியாவசியகம். ஒருவகுப்பு பிள்ளைகளை வாசகப்பாடம் வாசிக்கச்செய்தல்போன்ற அத்துணை

இலக்குவான பாடத்திலும் வாசிக்கப்படும் பாகத்தை முன்னதாகவே ஒருமுறை பார்த்து அதில் நன்றாக விளக்கவேண்டியன இன்ன பதங்களை இன்னவாக்கியங்கள் எனவும், அதற்காக எடுத்துக் காட்டப்படுந் திருட்டாந்தங்கள் இன்னவென்றும் ஆராய்ந்து நிச்சயித்துக் கொள்ளல் மிக வேண்டற்பாலது. பலமுறை கற்பித்துப்பழகிய பாடங்களை ஆயத்தஞ்செய்வதற்கு வெகுநேரம் வேண்டியதில்லை. பெரும்பான்மையும் அவ்விதமான ஒவ்வொருபாடத்திற்கும் நாலு ஐந்து நிமிஷங்கள் போதுமானவை. விசேஷபாடங்களை யாதல் புதிதாக ஒரு பாடத்தை யாதல் கற்பிக்கவேண்டின் அதனை முன்னதாக ஆராய்ந்து பாடக்குறிப்புக்கள் எழுதிக்கொள்ளல் சாலவும நன்று. அங்ஙனஞ் செய்தலாற்றான் குறித்தநேரத்துள் இவ்வளவு செய்துமுடித்தல் கூடுமெனவும், பாடத்தின் பற்பலபாகங்களும் இன்னமுறையில் தொடரவேண்டுமெனவும் அறிதல் கூடும்.

3. படிக்கவேண்டிய பாடங்களை முன்னதாக ஆயத்தஞ்செய்தல் தஞ்சாமர்த்தியத்துக்கு இழுக்காகுமென எண்ணுவார் கொள்கை விபரீதமாம். "உரைக்கப்படும்பொருள் உள்ளத்தமைந்து" என்றார் நன்னூலாரும். உரைக்கும் முறையை முன்னதாக ஆலோசியாது மாணுக்கருக்கு முன்னின்றுகொண்டு "இதனை முன்னர்க்கூறுவேமோ அதனை முன்னர்க்கூறுவேமோ;" என்ன திருட்டாந்தத்தை இப்போது காட்டுவோம் என்றிப்படிச் சிந்திக்கும் உபாத்தியாயன் பிள்ளைகள் ஒவ்வொருவரையும் நன்கு கவனிக்கவும் அவர்களுள் விசேட குறைவுடையவர்களை ஊக்கப்படுத்தித் திருத்தவுமுடியாதவனாகின்றான். அதுவுமன்றிப் பாடமும் இடை இடையே தடைப்படும். சரித்திரம் முதலிய பாடங்களைப் புத்தகத்தைப்பார்த்துப் படிப்பிக்கலாம் என எண்ணுதல் சரியன்று. என்னை? புத்தகத்திற் பரக்கக் கூறப்பட்டுச் சிதறிக்கிடக்கும் விஷயங்களின் முக்கியாமிசங்களைத் தெரிந்தெடுத்து வற்புறுத்தல் கூடாதாகலின்.

4. மேலும் ஒருவன் உபாத்தியாயனாக வந்தவுடன் தனக்குத் தெரிந்த அறிவு போதுமெனத் திருப்தியடைந்து இராமல் மேன்மேலுங் கல்விப்பயிற்சி செய்துவரல் வேண்டும். பரீக்ஷையில் தேறினல் மாத்திரம்போதும் எனச்சிலர் எண்ணி அதனாற் கருவமடைந்து படி

த்தையு மறந்துபோகிறார்கள். தானறிந்தது போதும் என்றெண்ணாது நாடோறுந் தன்னறிவை விருத்திசெய்து வருபவனே உபாத்தியாயத்தொழிற் குரியனெனப்படுவன்; என்னை? புதிதுபுதிதாய் அறிவைத்தேடும் பயிற்சியில்லையேல் சிறுவர் மனம் புது அறிவைக் கொள்ளும்வழி அறிந்து கற்பிக்கும் வன்மையுங் குறையுமாதலின். ஆயினும் பள்ளிக்கூடத்திற் படிப்பிக்கும் பாடங்களையேதான் அதற்கடுத்த விஷயங்களையேதான் உபாத்தியாயன் மென்மேலுங் கற்றல் வேண்டும் என்பது இதனாற் பெறப்படுவதன்று. ஒருவருக்கு எவ்விஷயத்தில் மனச்சார்புண்டோ அதனையே கற்கலாம். ஒருவன் தன் ஜீவியகாலமுழுதுங் கற்பவனாகவே இருத்தல்வேண்டும். போதனாசிரிய வித்தியாசாலையிற் படித்தாதல் வேறுவிதத்தானாதல் கற்பிக்குந் திறமை படைத்தோரும் அம்மட்டில் நின்றுவிடாது காலாந்தரங்களிற் புதியனவாய்ப் புகும்வழிகளையும் உபாயங்களையும் சுவ ஆராய்ச்சியாலும், புத்தகம் பத்திரிகை முதலியனவற்றாலும் அறிந்துவரல் வேண்டும். அதுவுமன்றி ஒரு மாகாணத்திலாதல் ஒரு பிரிவிலாதல் (District) இருக்கும் உபாத்தியாயர்கள் எல்லாரும் ஆண்டுக்கு ஒரு தரமேனுங்கூடி அவருள் மேலானோர் தாந்தாம் எவ்விஷயத்திற் பாண்டித்தியம் பெற்றிருக்கின்றனரோ அவ்விஷயத்தில் வியாசம் எழுதிவாசித்தல் பிரசாரணஞ்செய்தல் முதலியன மிகவேண்டற்பாலன. கிராமப்பாடசாலை உபாத்தியாயர்கள் தம்மினும் உயர்ந்த திறத்தினரைக் கண்டுபழகல் அரிதாதலின் அவர் திருத்தமுறுதற்கும ஏற்றவழி இதுவே. என்னை? "அரசனை அடைந்திடாரெனில், எவரெவர் ஆக்கமும இனிதுபோலுமால்" என்றாராதலின்.

5. கற்பவன் தன்மையை அறிந்து அவன் மனங்கொள்ளுமாறு கற்பித்தல் உபாத்தியாயனுக்கு இன்றியமையாக்குணமாகும். "கொள்வோன் கொள்வகையறிந்தவன் மனங்கொள நூல்கொடுத்தல்" என்றார் பிறரும். அனேகர் வித்துவான்களாய் இருந்தும் போதனாசத்தி இன்மையால் கற்பித்தற்றொழிலில் அனுகூலப்படாது போகின்றார்கள். போதனாசத்தி இயற்கையிலமையப்பெறாதவர் போதனாசிரிய வித்தியாசாலையிற்பயின்று போதிக்குஞ்சத்தி சிறிதாவது சம்பாதித்துக்கொள்ளல் அவசியம். உபாத்தியாயராக வருபவரெல்லாம் போத

னுசிரிய வித்தியாசாலேயிற் படித்துத்தேறியவராயிருத்தல் மிகவும் நன்று. நீராவியந்திரம் முதலிய சடப்பொருட் கருவிகளை இயக்கு வதற்கு ஒருவன் அவற்றில் விசேஷ பயிற்சியுடையவனுயிருத்தல் அவசியமாயின், மானுடமனமென்னும் அதிநுட்பவிசித்திர இயந்திரத்தை நடத்துபவன் அதன் இயற்கைமுதலியவற்றை நன்ருய் அறிந்திருத்தல் எத்துணை அவசியம்! அதிலும் மனேதத்துவங்கள்பல புதிதாய்த்தோற்றுங்காலமாகிய பாலப்பருவம் உடையாரைப் பயிற்றுபவர் மனேதத்துவசாத்திரஞ் செவ்வனேகற்றுத் தேறியவராதல்வேண்டும் என்பது அதனை உரைக்கவே அடங்கும்.

6. தொழில்களெல்லாவற்றுள்ளும் உபாத்தியாயர் தொழிற்கே பொறுமை என்னுங்குணம் இன்றியமையாததாயின் அதற்கே மனமகிழ்ச்சி முகமலர்ச்சிமுதலியனவும் இன்றியமையாதன. எண்ணுதுபேசுதல், வெடுவெடுத்தல், ஆலோசனையின்றி அநீதிசெய்தல் ஆதிக்குணங்கள் யாவரிடத்து முண்டெனினும் உபாத்தியாயரிடத்து அதிகமாகக்காணப்படின் அதனுல் வரும் அநர்த்தங்களோ மிகப்பல. தமமிடத்து இக்குறைவுகள் இருப்பின் இயன்றவரை தம்மனத்தை அடக்கித் தாஞ்செய்வன சொல்வன ஒவ்வொன்றையும் ஆராய்ந்து செய்தலுஞ் சொல்லுதலும் உபாத்தியாயராவார் மேற்பொறுத்தகடனும். அது செய்யத்தவறுவோர் உபாத்தியாயர் ஆதற்கு ஒரு சிறிதும் அருகராகார். உபாத்தியாயனது குணம் அற்பமேனும் பழிப்புக்கிடனுகாதிருத்தல்வேண்டும்; அவனேப்பார்த்து அதுபோல நடப்பவர் அனேகராதலின். ஒரு பிள்ளை ஒவ்வொருநாளும் ஐந்து ஆறு மணிநேரங்களுக்குத் தண்ணளியற்றவனுங் கோபியுங் கடுகடுப்பவனுமான ஒருபாத்தியாயன் முகத்தைப் பார்த்துக்கொண்டும் அவன் தொனியைக் கேட்டுக்கொண்டும் இருக்கவரின், அவன் துன்மார்க்கங்கள் பயிற்றுய் பாடசாலையொன்றிற் சேர்ந்திருப்பதாக உணரத்தக்கது.

7. பிள்ளைகளின் சுபாவத்தை உற்றுநோக்கின் உபாத்தியாயன் சதாமுகமலர்ச்சியுடையனுதல்வேண்டும் என்பதுஇனிதுபுலப்படும். கம்பீரமுகத்துடன் விளங்கவேண்டிய தொழிலாளரும் உண்டு. அவர்தாம் நோயாளனருகிலிருக்கும் வைத்தியனும், குருவும் முதலாயி

னோர். அவரிடத்து விலாசங்கேலி முதலியன காணப்படல் தாழ்ச்சி அல்லது சௌரியமாகாது தம் தொழிற் சௌரியத்திற்கு ஏற்புடைத் தென எண்ணின் சில உபாத்தியாயர் பாடசாலையிற் புகுந்தது முதல் முகத்தில் நகையொளிசிறிதுமின்றிச் சுளித்த கோபகுணராய் இருப்பர். அது அவர் மதியீனம். என்னை? மனக்கவலை சிறிதுமின்றிச் சந்தோஷமும் உற்சாகமுமே நிறைந்துள்ளவர்களாய சிறுவர்களின் மனமகிழ்ச்சியை விருத்திசெய்து படிப்பில் ஊக்கப்படுத்தல், உபாத்தியாயனும் மலர்ந்தமுகமும் களிகூர்ந்த சிந்தையும் உடைய னுயவழியன்றி முடியாதாகலின். அதுவன்றியும் பாடசாலையானது பிள்ளைகளுக்குச் சந்தோஷகரமாயிருத்தல், அவர்கள் பாடசாலைக்குத் தவறாது வருதற்கும் பாடசாலை விஷயத்தில் சிரத்தைகொள்ளுதற்குங் காரணமாகும்.

8. தம உபாத்தியாயரைக் கல்விக்கெல்லாம பெரிய களஞ்சியமாகவும் தாமும் அக்கல்வியையே கற்கவேண்டியதாகவும் எண்ணும் பிள்ளைகள் கல்வி கற்றதனால் தம் உபாத்தியாயர் சந்தோஷமற்றவராய் எப்போதும் மனக்கோட்டமும் முகவாட்டமும் உடையராயினரௌனக் காணின் அவர்களுக் கல்விகற்றலில் அதிக ஆவலில்லாது போதலும் ஓய்வோவிடத்து வெறுப்புத்தோன்றுதலும் இயல்பாம். படிப்பித்தற்றொழிலில் சித்திபெறுபவர் யாவரென ஆராயின் அவர் பிள்ளைகளுடன் எப்பொழுதுங் கடுகடுப்பாயிராமல் வேண்டிய நேரங்களில் அவர்கள் விளையாட்டில் மகிழ்ந்தும் எப்பொழுதும் உற்சாகமுடையவராயும் இருப்பவரே. உபாத்தியாயர் தாந்தொடங்குங் காரியங்களில் முயற்சியும் ஆவலுங்கொள்ளுதலில்லையாயின் மாணுக்கரும் அங்ஙனமே மந்தகுணமுடையராவர். அதனாலன்றே உபாத்தியாயர் முயற்சியுடையராதலோடு காரியநிர்வாகத்தில் துரிதமுடையராதலும் இன்றியமையாதாயிற்று. முயற்சியுடைமை என்றால் பள்ளிக் கூடத்தில் ஓயாது சத்தமிடுதலுங் காரணமின்றி அங்கும் இங்குந் திரிதலும் அன்று.

9. உபாத்தியாயனிடத்து இருத்தற்பாலதாய முக்கிய குணங்களில் தயாளமும் ஒன்று. அஃதில்லாவழி மற்றைய குணங்கள் பிரகாசித்தலும் அதிக பயன்படலும் இன்று. பிள்ளைகளின் றன்மையை

அறிந்து அவர்கள் செய்கைகளிலும் வழிகளிலும், அவர்கள் சுகத்திலுந்துக்கத்திலுங் கலந்து பரிவுகூர்பவரே பிள்ளைகளைத் தம் கைவசப்படுத்துங் கற்பித்தலில் மேலாநதரம் அடைபவர். அப்பரிவும், படிப்பித்தலில் தமக்கு இயல்பாயுள்ள விருப்பங்காரணமாக அத்தொழிலைப்பூண்ட உபாத்தியாயரிடத்தே இயல்பானமையும். வேறு தொழிலொன்றும் இயற்றமுடியாமையினாலாதல் வேறுதொழிலிற் பிரவேசித்தற்கு வழியாக ஆதல் உபாத்தியாயராக வருபவர்க்கு அத்தொழிலில் ஒருபொழுதும் பிரீதி உண்டாகாது. ஆகவே அவர் கற்பிக்கும் முறைகளில் தேர்ச்சியடைதலும் பிள்ளைகளிடத்துத் தயை உடையராதலும் அரிதாம். பள்ளிக்கூடமல்லாத இடங்களிற் பிள்ளைகளைச்சந்தித்தால் முகத்தைத்திருப்பிக்கொள்ளலும், மௌனமாய் இருத்தலும், மரியாதையின்றி அழைத்தலவசனித்தலும் உபாத்தியாயர் செலவாக்கைக்குறைப்பன. வேண்டியநேரங்களிற் பிள்ளைகளுடன் நேசத்தோடு கலந்துபேசல் தமக்கு இழிவு என்று எண்ணுபவர் நல்லாசிரியராகார். ஆனால், பிள்ளைகள் தமக்குச்சிறிதும் அஞ்சாது மிகநெருங்கித் தோழமை கொண்டாடும்படி மறைப்பின்றி அவர்களுடன் குழைந்து நடத்தல் முற்றும் நீக்கற்பாலது; அதனால் உபாத்தியாயர் கௌரவமும் அதிகாரமுங் கெடுதலின், மாணாக்கன் தன்னை "அழலினீங்கான் அணுகான் அஞ்சி" ஒழுகுமாறு அவனை நடத்துதலுந்; தானும்,

> "புரைசெறியும் பெருஞ்சீலப் பொலிவினகலவுந் திறலால்
> உரைசெறியவணுகவுமோர்ப்படானாகி......................"

இருத்தலும் உபாத்தியாயனுக்கு இன்றியமையா.

(இன்னும் வரும்.)

தி. சதாசிவ ஐயர்.

## *ஆசாபாசங்களும் அவைகளையொறுத்துத்தற்கடிதலும்.

ஆமினிழப்பு மகன்றதிளமையுந்
தாமினிநோயுந் தலைவரும்—யாமினி
மெய்யைந்து மீதூர வைகாது மேல்வந்த
வையைந்து மாய்வ தறிவு.--புறப்பொருள் வெண்பாமாலை.

தவந்தனின் மிக்கதொன் றில்லை தாவில்சீர்த்
தவந்தனை நேர்வது தானு மில்லையாற்
றவந்தனி னரியதொன் றில்லை சாற்றிடிற்
றவந்தனக் கொப்பது தவமதாகுமே.—கந்தபுராணம்.

எவ்வகைப் பொருள்களு மீய வல்லது
செவ்விய தவமதே தெரியின் வேறிலை
யிவ்வுல கத்திலஃ தியற்று கின்றதே
யுவ்வுட லெடுத்தபே ருறுதி யென்பவே.—திருக்கூவப்புராணம்.

பிறந்தனர் பிறந்து சாலப் பெருகினர் பெருகிப் பின்னை
யிறந்தன ரென்ப தல்லா லியாவரு மின்று காறு
மறைந்துயிர் வாழா நின்ற ரில்லையால் நெஞ்சே வாழி
சிறந்தது தவத்தின் மிக்க தின்மையே சிந்தி கண்டாய்.—சூளாமணி

உடம்புங் கிளையும் பொருளும் பிறவுந்
தொடர்ந்துபின் செல்லாமை கண்டு—மடங்கித்
தவத்தொடு தானம் புரியாது வாழ்வா
ரவத்தங் கழிக்கின்ற நாள்.—அறநெறிச்சாரம்.

நீலவிதானம்போற்கவிந்த சேணின் உச்சிமுகட்டெழுந்த செங்கதிரோன் கடலாடை சூழ்ந்த காசினியிற் கவிந்து நிறைந்த காரிருணீக்கிக் கட்புலனுக்கு விடயமாயுள்ள எப்பொருளையும் கடிதுவிளக்கி அதிற்காணப்படும பறப்பன, இருப்பன, ஊர்வனவாதி கணக்கற்ற ஜீவகோடிகளின் கண்ணொளிக்கும் ஒளியேயாகி உணவு சீதோஷ்ணம் காலவேற்றுமை முதலிய உயிர்வாழ்வதற்கு இன்றி

* இவ்வியாசம் மதுரைத் தமிழ்ச் சங்கத்து எட்டாம்வருஷோற்சவ தினங்களுளொன்றாகிய 1909-ஹு மேஸ்ரீ 25உ கூடிய வித்துவச்சபையில் கீழக்கரை, ஸ்ரீமத்-M. ஜோஸப்டையாஸ் அவர்களாற் படிக்கப்பட்டது.

யமையாச் சாதனங்களனைத்திற்கும் காரணமாவதேபோல், சத்திய சூரியனாகிய கடவுள் எமது இருதயகமலத்துதித்து அகவிருணீக்கி, ஞானப்பொருளை விளக்கிக்காட்டி, யாம் ஞான உயிர்பெற்று முத்தி உலகத்தில் அவரோடு முடிவில்லாத நித்தியகாலம் வாழ்வான்வேண்டி, எமது ஞானக்கண்ணின் ஒளிக்கும் ஒளியாகி, ஞானப்போஜன முதலிய ஆத்ம உயிர்பிழைப்பதற்கு அவசியமான சாதனங்களனைத்தையும்பெற, அவரொருவரே ஏதுவாகின்றாரென்பது வெள்ளிடை மலைபோல் தெற்றெனவுய்த்துணர்தற்பாலது. அண்டகோள சராசரமாதி அவரியற்றிய சிருட்டிப்பொருள்களனைத்தும் அவரையே பிரசங்கிக்கும் உபகரணங்களாகின்றன. இவ்வுலகின்கண் அவரொருவரையே யாம் எல்லாவற்றினுமேலாகப் பொதுவறத் தனிநின்று சிநேகித்து வணங்கி வழிபட்டு அவரியற்றிய சிருட்டிப்பொருள்களை அவர்தந்த ஞான ஒளியால் உற்றுநோக்கியுள்ளவாறுய்த்துணர்ந்து, அப்பொருள்களின்மேல் நமக்குள்ள பற்றொழித்துத், தற்பற்றும் அறச் சுயபரித்தியாகம் பண்ணி ஆசாபாசங்களை யறுத்துத் தன்னையொறுத்தல் ஆவசியகம் ஆதலின், ஆசாபாசங்கள் எவை? அவைகளை யொறுத்துத் தற்கடிவதற்கான வழிவகைகள் இவ்வியாசத்தால் ஈண்டு ஆராயத்தக்கன.

மனிதனுடைய ஆத்துமா மேலமிசம், கீழமிசமென, இரு பகுதியுடைத்து. இவைகளில் மேலமிசத்தை நீதிநியாய மென்றும் கீழமிசத்தை இந்திரிய இச்சை என்றும் வேதசாஸ்திரிகள் கூறுப. கடவுள் ஆதிமனிதனைப் பரிசுத்தமும் ஜென்மநீதியுமுள்ள பாக்கியமான நிலைமையில் உண்டாக்கினார். மேற்குலத்தானுக்குக் கீழ்க்குலத்தானும், யஜமானுக்கு ஏவலாளனும் கீழ்ப்பட்டிருக்கிறதுபோல், அப்போது அவனிடத்தில் மேலமிசத்துக்குக், கீழமிசம கீழ்ப்பட்டிருந்தது. இதனாலன்றோ, வேதாகமத்தில் கடவுள் மனிதனை ஒழுங்குள்ளவனாகப் படைத்தாரென்று கூறப்பட்டுள்ளது. நாமிப்போது ஆசாபாசங்களுக்கு அடிமையாயிருப்பதுபோல அவனை ஒழுங்கற்றவனாக அப்போது அவர் சிருட்டிக்கவில்லை. இந்திரிய இச்சை வருத்தமும் விரோதமுமில்லாமல் நீதிநியாயத்துக்குப் பணிந்திருந்தது. மனிதன் தன்சிருட்டிகர்த்தாவை மனவுருக்க

மாய்ச் சிநேகித்து, உற்சாகத்தோடு ஊழியம் பண்ணிக்கொண்டுவந் தான். அவ்வாறியற்றுவதை, ஊறுபண்ண அவனிடத்தில் ஓர் ஆசா பாசமுமில்லை. இவ்வாறு இந்திரிய இச்சை நீதிநியாயத்துக்கு முற்றுங் கீழ்ப்படிந்திருந்ததினால் மனிதனிடத்தில் அக்காலத்தில் ஒழுங்கற் றபற்றுதலொன்றும் உதிக்கவே கூடாதிருந்தது. அவன்வேண்டு மென்று விரும்பி வரவழைத்தாலொழிய, அவனிடத்தில் சோதனை யொன்றும் வருதல் இயையாது. அந்நிலையில் காமக்குரோதமாதிய உட்பகைகளாலும் மற்றெவ்வித கெட்டபற்றுதலும் அவனிடத் தில் வரவே கூடாது. ஆயினும் மனிதனுடைய ஜென்ம நீதிநியாயம் கடவுளுக்கு விரோதமாயெழுந்து அவருடைய கற்பனையை மீறிப் பாவஞ்செய்தது. அந்நாள் தொடர்ந்து நமது நாட்டமின்றியே வெறுக்கத்தக்க தீயமனப்பற்றுதலும் குழப்பஞ்செய்யும் வஞ்சக மான பாவச்சோதனையும் நமது இந்திரிய இச்சையில் உண்டாகி நம்மைவருத்துவதாயுணர்கின்றோம்.

இதனாலே, அர்ச் - சின்னப்பர் (St. Paul) "நான்விரும்புகிற நன்மையைச் செய்கிறதில்லை; விரும்பாததீமையைச் செய்கிறே" னென்று இரக்கமுற்றுச்சொன்னார். ஆதிமனிதன் தேவகட்டளை யைமீறிப் பாவஞ்செய்யாதிருந்தால் ஆத்மா வேண்டுமென்று விரும்புவனவெல்லாவற்றையும் சரீரம் வருத்தமும் விரோதமுமி ன்றி எஞ்ஞான்றும் செய்துவர இயல்புடைத்தாகும். ஆனால் மேற்சொன்ன தன்மைகெட்டுப்போனசரீரம், அல்லது இந்திரிய விச்சை, இப்போது ஆன்மாவின்மேலேறி அதை அமிழ்த்தப் பார்க்கின்றது. ஆன்மா செய்துமுடிக்கக் கருதும் அநேக அருங் காரியங்களை முடிவுறுவண்ணம், சரீரம் தடைபண்ண எத்தனிக்கின் றது. சரீரமென்னும் முரட்டுப்பாய்மாவூர்ந்து ஆன்மா நெடுநெ றிச் செல்லவேண்டிய விடத்தே அது பன்முறை செல்லமாட்டாது களைத்துக் காலிடறித் தத்தியும் சிலசமயத்துச் சிறிதும் அடங் காமல் அற்பக்காரியத்தின் பொருட்டு அயர்ந்து நின்றும் பொள் ளென விழுந்து போகாதுபடுத்துக்கொள்ளும். மனிதன் தன் சிருட் டிகருத்தாவுக்கு அமைந்து பணிந்தொழுகாக் காரணத்தாலே நீதிச் சுரனாகிய நிர்மலகடவுள் அவன் சரீரம் அவனுக்கடங்காமல் இந்தி

ரிய இச்சை இடைவிடாதவனோடு போராடல், பொருந்துமென்று, விடுத்தனர்போலும். "பாவத்தினால் மனிதன் ஞானவரங்களையுமிழந்து சுபாவவரங்களும் குன்றப்பெற்றான்" என்று வேதசாஸ்திரிகள் கூறுப.

ஏனெனில், அவன் செம்மதியையும் அதற்குரிய ஞானவரங்களையும் இழந்துபோனதுமன்றி சுபாவவரங்களும் மிகுதியாய் அவனிடத்தில் மாறிப்போயின. எங்ஙனமெனின், அவன் புத்திகுன்றினது; மனது பலவீனப்பட்டது; நன்மையின்மேல் அவனுக்குள்ள ஆசை தளர்ந்தது; தீமையின்மேல் அவனுக்குள்ள சார்புபலன் கொண்டெழுந்தது; அவனுடைய ஞாபகம் குறைந்துபோயிற்று. உருபிகரம் கலக்கமுற்றுச் சிதறிப்போய் எப்பக்கத்திலுஞ் சுற்றித்திரிகின்றது. இதனைப்பராமுகமில்லாமற் கவனத்தோடு அற்பஜெபமுஞ்செய்வதற்குக் கூடாமற் போகின்றது. அவன் ஐம்புலன்களில், நன்மையாயிருந்தனவெல்லாம் நீங்கிப்போயின; அவன் சரீரத்திற் கெட்ட ஆசாபாசங்களும் துர்க்குணங்களும் நிறைந்திருக்கின்றன. முடிவாக அவன் சுபாவமுழுதும் மாறிக்கெட்டுப்போனதால், பாவஞ்செய்தற்கு முன் எளிதாயிருந்தது; பாவத்துக்குப்பின் கூடாதகாரியமாயிற்று.

ஆதிமனிதன் பாவத்துக்குமுன் அவன் தன்னைப்பார்க்கிலும், கடவுளை அதிகமாய்ச் சிநேகித்தான். பாவத்துக்குப்பின், அவனைக்கொண்டு நாமெல்லாரும், கடவுளைப்பார்க்கிலும் நம்மை நாமே, அதிகமாய்ச் சிநேகிக்கின்றோம். சரியாகச்சொல்லவேண்டுமாகில் நம்மைமாத்திரம் சிநேகிக்கின்றோமென்று கூறற்பாலது. நமது மனம்போலநடந்து நம்மிச்சையை நிறைவேற்றி நமது ஆசாபாசம் நீதிநியாயத்துக்கும் தேவகற்பனைகளுக்கும் எவ்வளவு விரோதமாயிருந்தாலும் அதன்படி கேட்டுநடப்பதே நமக்குப் பிரியமாயிருக்கின்றது. இந்தக்குழப்பங்களுக்கெல்லாம் காரணமாயிருக்கிற சென்மபாவம் கடவுளை வழிபட ஞானப்பிறப்பின் வழியாய் நீங்கிப்போயினும், நீதிநியாயத்திற்கும் கடவுளுக்கும்விரோதமாய் இந்திரிய இச்சையில் உண்டாகிற விரோதம் நம்மைவிட்டு அகலுவதில்லை.

(இன்னும் வரும்.)

திருச்சிற்றம்பலம்.

கலைசைப்பெருந்தேவித் தாயாரென்னும்

# ஸ்ரீலக்ஷுமி தோத்திரப்பதிகம்.

இது

தொட்டிக்கலைசைக் கேசவமுதலியாரவர்கள் வேண்டுகோளின்படி
திருவாவடுதுறை யாதீனத்துத் தொட்டிக்கலைசைச்
சுப்பிரமணியசுவாமிகள் அருளிச்செய்தது.

---

திருமருவு கார்முகிற பின்னலஞ்செறி கூந்தலுஞ் சிந்தூரப் பி
றைநு ணுதலுஞ், செல்விழியு மொண்பவள முத்தமுங் காந்தளஞ்
செங்கையுஞ் சங்கமிடறுங்,—குரும்பணிக்கியபுரிக குஞ்சரக் கோடனைய
கொங்கையுங் கொடிநு ணிடையுங், கோகநக பாதமும்யான் கண்
டுதெரிசித்துலக கொண்டாட வருள்புரிகுவா,—யரமகளி ரிந்த்ரா
ணி கலைவாணி யயிராணி யனைவரும புகழ்கல் யாணி, யாரணியக
ண்டபரி பூரணி புராதநி யனந்தகுண நாராயணி,—வரியளிக ளிசை
பாட மயிலாடு சோலைநட வாவிசூழ் கலைசை நகர்வாழ், வாதர்நங்
கேசவர்த மிதையசெந் தாமரையின் வளர்பெருந் தேவியனையே. (க)

சொல்லாரும் வேதாகம சித்தாந்த மெனவோங்கு சோதியரு
வுருவமாதாய்ச், சுகசித் தானந்த சத்துவ குணத்துடன் றேன
றுமால மனைவியாகிப்,—பல்லாயிரங்கோடி யண்டமோ வொன்றினிற்
பதினாலு லோகமதனுட், பானுமதி முதலான கடவுளுயிர் யாவையு
ம் படைக்கால ரயனை யீன்று,—மெல்லா மணந்தின்ப முற்றுயிர்கள்
பல்கவே யெழில்வசந் தனையளித்தா, யெவ்வுயிரை யும்புரந் தாயுன
து மகிமையை யாவரோ யுணரவல்லார்,—மலலார் மதிற்கொடிகள் செ
ங்கதிர்ப் பைம்புரவி வருமினைப் பாற்றுகலைசை, வாதர்நங் கேசவர்த
மிதையசெந் தாமரையின் வளர்பெருந் தேவியனையே. (உ)

எழுவகைத் தோற்றத்தி னெண்பத்து நான்குநூ றாயிரய பேத
வுடல்பெற், றிளமைபிணி மூப்பல்ல லுற்றரிவை யர்க்குநித மேவ
ல்செய் தார்வமுங்கீர்,—முழுகி வஞ்சனைகளவு கொலையாதி செய்த
ன்பின் முறைமுறை பணிந்துநின்றேன், முன்னுத நாயனேன் றன்

னைநின் னடியருடன் மூனியாது வைத்தாளுவாய்,—பழைய * கொல் லாபுரக் கமலையிற் றிரைவியலை பதுமைகோ ககைமெனவே, பணிபா க வதர்மனத் திட்டகா மியநல்கு பரஞான மோனவடிவே,—மழலையங் கிளிசுருதி வசனங்கள் பயில்காவின் மதிதவழ் வளக்கலைசைவாழ், வரதர்நங் கேசவர்த மிதையசெந் தாமரையின் வளர்பெருந் தேவிய னையே. (ந)

புலிகரடி கண்டூர வம்பாந்தள் பேய்திரி பொருப்படவி நீபுகுந் தாற், புதியவள நாடுநக ரங்களா யிணையிலாப் புத்தேளி ருலகமாகு,— மலிகுருடு செவிடூமை முடவர்மூக் கறைகயவ ரதிகபிணி யாளரேனு, மம்மநின் னருள்பெறுவ ரேனுலக மூன்றிற்கு மரசாகி யினிதுவாழ் வா,—ரொலிகடற் புவியினடு வணெதய்தி னிருதலையு மோங்குநின் பொருளிலார்க்கிவ், வுலகமிலை யென்றறிஞ ரோதலாற் கண்காட்சி யுற்றமெய்த் தெய்வநீகாண்,—மலிபலா வாழைதே மாங்கனித் தேன் பெருகி வயறூறும் பாய்கலைசைவாழ், வரதர்நங் கேசவர்த மிதைய செந் தாமரையின் வளர்பெருந் தேவியனையே. (சு)

உருவென்று மருவென்று மொளியென்று மிருளென்று மொன் றிரண் டாயதென்று, முளதென்று மிலதென்று முயிர்விந்து நாதயா யோங்கார மானதென்றும்,—பருதிமதி கனலியைம் பூதமென்றுங் கதிகள் பலவென்றும் வேதாகமம், பகருநின் வடிவம்யான் கண்டு தெரிசிப்பதெப் படியென்று மிகவுமுள்ள,—முருகிநைந் தலம்வந்து தடுமாறு சிறியனேற் குண்மையறி வித்துநிதமு, முனதுஞா னாநந் தவெள்ளந் தனிற்றிளைத் தோங்கநின் கிருபைபுரிவாய்,—மருவுசந் திரகாந்த மணிமாட நிலவுலவ மழைசொரி திருக்கலைசைவாழ், வரதர் நங் கேசவர்க மிதையசெந் தாமரையின் வளர்பெருந் தேவியனையே.

பரமகுண் டினபுரப் பூசுரச் சாரமதி பாவையா வணிமதியினிற், பகர்பூ ரணைக்குமுன் வருசுக்ர வாரமிகு பரிவாக வரலக்குமி,—விரத ம்பு ரிந்திந்த்ர செல்வமுற் றுளென்ன வெள்ளிமலை வாழுமலனோர், மெய்ப்பாதி குடிகொளுமை யாட்குமுன் னுரைசெய் மேதகு புகழ்

* கொல்லாபுரம் - விந்தகிரியிலுள்ளது; காசிகாண்டம், அகத்தியர் விந் தவரையடைந்த அத்தியாயம் உசு-வது கவியிற்காண்க.

# கதாசரித் சாகரம்.

## ௩-வது சதுர்த்தாரிகாலம்பகம் க-வது தரங்கம்.

[ஸ்ரீமத்-வீராசாமி ஐயங்காரவர்கள் மொழிபெயர்த்தது.]

(முற்றொடர்ச்சி.)

அப்போது பிறரையுபசரித்தே ஜீவித்துவருகின்றபுரோகிதன், பொருளாசையால் மாதவனைத்தனதுகிரகத்திலேயே வசிக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ள அவன் றன்னைச்சேர்ந்தவேஷதாரிகளுடன், விநாசத்திற்கு ஹேதுவான நீர்க்கோழி, வசிப்பதற்கு மரக்கிளையையடைவதுபோலப் புரோகிதன் வீட்டையடைந்தான். அங்ஙனம் வசிக்கின்றமாதவன், கிருத்திரிமமான மாணிக்கக்கற்களாற் பற்பல விதமாகச் செய்யப்பட்டுள்ள ஆபரணங்கள் நிறைந்தவொரு பெட்டியை அவன்வீட்டறையில் வைத்துக்கொண்டு இடையிடையேசிற்சில சமயங்களில் தனித்துப் புரோகிதனை அழைத்துச்சென்று அதனைத் திறந்து கபடமாய்க்காண்பித்து அதிலுள்ள ஆபரணங்களினலவன் மனதைப்பசும்புற்களாற் பசுவின் மனதைக்கவர்வதுபோற் கவர்ந்தனன். பின்பு அப்புரோகிதன் அந்த ஆபரணங்களை யுயர்ந்த விலைமதிப்புள்ளனவென்று நம்பியிருக்கின்றனென்பதை யறிந்த மாதவனிதுதான் சமயமென்று கருதி ஆஹாரத்தைக்குறைத்துத்தின்று தன் தேகத்தை மெலியச் செய்துகொண்டு மிகுந்த ரோகமுற்றவன்போலப் படுத்தபடுக்கையுடனிருந்தான்.

அத்தருணத்திற் புரோகிதனிவனைப்பார்ப்பதற்காக வந்துபடுக்கையருகிலுட்காரவும் சூதாடிகட்கரசனாகிய மாதவன் புரோகிதனையுற்றுப்பார்த்து ஓ பிராமணோத்தமரே, இப்பொழுதென் சரீரத்தின் நிலைமை முற்றிலும் மாறுபட்டிருக்கின்றது. ஆதலாலிஹபராசாதகமாகும்படி எனது பொருள்களனைத்தையும் தானஞ்செய்யப்போகின்றேன; அதற்காக வொருபிராமணசிரேஷ்டரை யழைத்துவரவேணும். தெளிந்தமனதுடையவனுக்கு நிலையில்லாத உயிர்வாழ்க்கையிலாவது தனங்களிலாவது பற்றென்பதெப்படி யுண்டாகுமென்றனன்,

இதனைக்கேட்டதும், தானம்வாங்கி ஜீவித்தலையே தன்றொழிலாக வுடைய புரோகிதனும்மதெண்ணத்தின வண்ணமே செய்கின்றேனெ ன்றுசொல்ல உடனேமாதவன் அவன் கால்களில்வீழ்ந்து நமஸ்கரித் தனன். பின்புபுரோகிதன் சென்றழைத்துவந்த வொவ்வொருபிரா மணனையும் மாதவன் கவனியாது தானம்வாங்குகின்றவர் இன்னும் விசேஷ யோக்கியதையுள்ளவராக இருத்தல்வேண்டுமென்ற எண் ணத்தினாற் சிரத்தையில்லாதிருக்கின்றவன் போலபிநயித்தான். இத னைப்பார்த்ததும அவனுடைய பக்கத்திலிருக்கின்ற சூதாடுவோனொ ருவன், எங்களரசர்க்கு ஸாமான்யபிராமணர்களிடத்தில் மனம்பற் றாது. ஆதலால் சிப்ராநதிக்கரையிற் சிவனென்று பிரசித்திபெற்ற ஒரு பெருந்தவத்தினரிருக்கின்றார். இப்பொழுது அவர் இவர்மனத் திற் கிசைந்தவராயில்லையாவென்று கேட்கவேண்டுமென்றனன்.

அப்படியவன்சொல்லியதைக்கேட்டதும் மாதவன் வியாதியி னால் துன்புறுகின்றவன்போலப் பாசாங்குடன்புரோகிதனைப் பார் த்து ஓகோ! அனுக்ரஹிக்கவேணும். அவரையொத்தபிராமணர் உல கத்திலொருவருமில்லை; அழைத்துவரவேண்டுமென்றான். உடனே புரோகிதன் அப்படியேசெய்கிறேனென்று சிவனுடைய சமீபத்திற் செல்ல அச்சமயத்திலவன் கண்களைமூடிக்கொண்டு தியானஞ்செய்ப வன்போலசையாதிருக்க அவனைப்பிரதக்ஷிணஞ்செய்துவிட்டுக் கைக ளைக்கட்டிக்கொண்டு எதிரிலுட்கார்ந்திருந்தான். அப்போதந்தச்சூ தாடிச்சிவன் மெல்லமெல்லக்கண்களைவிழிக்கவும் புரோகிதன் அவனை நமஸ்கரித்துவணக்கத்துடன் நின்றவண்ணமே, ஹேபிரபுவே, தாங் கள் கோபங்கொள்ளாதிருந்தாலொருகாரியம் தெரிவித்துக்கொள்ளு கிறேனென்றான்; அதனைச்செவியுற்றசிவன் வாய்திறந்துபேசாமலே சாடையினால் தெரிவித்துக்கொள்ளும்படி யனுமதிசெய்யப், புரோ கிதன்சிவனைநோக்கி ஸ்வாமீ, தெக்ஷிணதேசத்தினின்றும் பெருஞ் செல்வரான மாதவனென்றபெயருடையவொருராஜகுமாரரிங்கு வந் திருக்கின்றார். அவர்தேகஸௌக்கியமில்லாமையால் தன் பொருள் கள் யாவற்றையுந்தானஞ்செய்துவிடுவதாயுத்தேசிக்கின்றார். இவ்வி ஷயத்திலதங்கட்கபிப்ராயமிருந்தால் விலைமதிப்பற்றபற்பலவிதமான இரத்தினங்களாலியற்றிய ஆபரணங்களுடன் பிரகாசிக்கின்ற பெரு

ள்களனைத்தையும் கிரகித்துக்கொள்ளலாமென்று சொல்ல அதனைக் கேட்ட சிவன் மெல்லமௌனத்தைவிட்டு ஓ பிராமணரே! பிக்ஷையெடுத்துண்கின்ற பிரமசாரியாகிய எனக்குத்திரவியங்களினாலென்ன பிரயோஜனமிருக்கின்றது என்றனன்.

அதற்குப்புரோகிதன் ஹே! பெருந்தவம்புரியும் பிராமணோத்தமா! இவ்விதஞ்சொல்லலாகாது. ஆச்சிரமங்களின்கிரமத்தைத்தாங்கள் அறியாதவர்களல்லர். விவாகஞ் செய்துகொண்டு வீட்டிலிருந்தே தென்புலத்தார் தெய்வம் விருந்தினர் முதலானோர்களை யோம்புகின்றவர் மெய்வருந்தாது தமது பொருள்களால் தருமார்த்த காமமென்கிற மூன்றுபுருஷார்த்தங்களையு மடைகின்றார்கள். ஆதலாலில்லறத்திலிருக்கின்றவர்களே! யேனைய ஆச்சிரமிகளினுஞ் சிறந்தவர்களாகின்றார்கள். அன்றியும் தங்களைப்போன்ற மகான்களாயுள்ளவர்கள் முறைபாக இல்லறம் பூண்டு அதற்குரிய நல்லறங்களின் வழுவாதொழுகி யுலகத்திலுள்ளவர்களை நல்வழிப்படுத்தாவிடின் அவ்வறத்திற்குந்தான என்ன சிறப்பிருக்கின்றது. எல்லா முணர்ந்த தங்கட்கு யானின்னும விசேஷமாய்த் தெரிவித்துக்கொள்வது யாதிருக்கின்றதென்றனன். இதைகேட்டதும் சிவன்; ஓ பிராமணா! சொல்லுகிறேன் கேளும். இல்லறமென்பது, நற்குலத்திற் பிறந்து நற்குணங்களுமமைந்துள்ள மனதிற்கிசைந்த வொரு கன்னிகையையொருவன் மணந்தா லொருவாறு சரியாய் நடைபெறும். அதுவுமெளிதன்று; ஆகையாலெனக்கு விவாகமெதற்காக, யானோ வேதேனும் சாமானியமானதொரு குலத்தில் ஜனித்த கன்னிகையை மணந்து கொள்ளேனென்று சொல்ல, அப்பேராசையுள்ள புரோகிதன், மாதவன்பொருள்களை யொருவாறு சுகமாயனுபவிக்கலாமென்ற வெண்ணத்துடனிது தான்சமயமென்றுகருதிச் சிவனைநோக்கிச் சுவாமீ! தாங்களெவற்றிற்கும் யோசிக்கவேண்டியதில்லை அதிரூபவதியாய் நற்குணங்களமைந்துள்ள வினயஸ்வாமினி யென்னும் பெயரையுடைய வொருகன்னிகை எனக்கிருக்கின்றாள்; அவளைத்தங்களுக்கோணஞ் செய்துகொடுக்கின்றேன். அன்றியும் மாதவப்பிரபுவிடத்தில் தாங்கள் தானம்வாங்கும் தனம்முழுவதும் யானே காப்பாற்றித் தருகின்றேன்; ஆதலாலில்லறத்தைக் கைப்பற்றவேண்டுமென்றனன.

இதனைக்கேட்டதும் சிவன் நமதெண்ணத்தின்படி நிறைவேறிற்றென்று கருதிப்புரோகிதனைப்பார்த்து ஓ பிராமணரே! இப்படித்தான் செய்யவேண்டுமென்றுமக்கு ஒருதலையான அபிப்பிராயமிருந்தாலுமது சொற்படி செய்கின்றேன். ஆனால் யானோ தபஸ்வீ. இரத்தினம் சுவர்ணமிவற்றின் ஸ்வரூபமின்னதென்று யாதொன்றுமறிந்திலேன். உமது சொற்களைநம்பித்தான் இதிற்பிரவிருத்திக்கின்றேன். உம்முடைய அறிவிற்குத்தக்கபடி யோசித்துக்கொண்டு செய்யுமென்றனன். இவ்விதம் சிவன் கூறியதைக்கேட்டு மூடனான புரோகிதன் சந்தோஷத்துடனப்படியே செய்கிறேனென்று சிவனென்னும் மங்களப்பெயருடன் கூடி அமங்களத்தைப்புரிகின்ற அவனைத்தன்வீட்டிற் கழைத்துச்சென்று ஓரிடத்திலிருக்கச்செய்துவிட்டு மாதவனிடம்வந்து தான்சிவனையழைத்துவந்திருக்கும் விவரத்தைத்தெரிவிக்க அவனுஞ்சந்தோஷித்தான். உடனே புரோகிதன் தன்வருத்தத்தினால் விருத்திசெய்யப்பட்டும் மூடத்தன்மையால் பறிகொடுக்கப்படும் சம்பத்தைப்போலவே தனது புதல்வியைச் சிவனுக்குக்கொடுத்தனன். பின்பு விவாகமானதும் மூன்றுவது தினம் மணக்கோலத்துடனிருக்கின்ற சிவனைத்தானம்வாங்குவதற்காகப் புரோகிதன், கபடத்தால் நோயுற்றிருக்கும் மாதவன் சமீபத்திற்கழைத்துச்செல்லவும் படுத்திருந்த மாதவன் சிவனைக்கண்டவுடன் விரைவிலெழுந்து கைகளைக்குவித்துத் தலைமீது வைத்துக்கொண்டு, எண்ணுதற்கரிய தவத்தினையுடைய வுண்மைப்பொருளே! நமஸ்கரிக்கின்றேனும்மையென்றுசொல்லிச் சிவனுடைய கால்களில் வீழ்ந்தனன். அச்சமயத்தில் கிருத்திரிமமான மாணிக்கக்கற்களாற்செய்த மிகுந்த ஆபரணங்களடங்கியபெட்டியைப் பொக்கிஷத்தினின்றுமொருவன் கொண்டுவர அதனைவிதிப்படி மாதவன் சிவனுக்குத்தானஞ்செய்தான்.

(இன்னும் வரும்.)

---

## பிழை திருத்தம்.

“செந்தமிழ்” எ-ம் தொகுதி, கூ-ம் பகுதி, சகஎக-ம் பக்கத்தில் கக-ம் வரியில், ‘வேலைக்காரனை’ என்பதை ‘வேலைக்காரிகளை’ என்வும் ௬-ஆ தொகுதி க0-ட பகுதி ருகஙு-ம் பக்கத்தில் ங-ம் வரியில், ‘அன்னத்தில்’ என்பதை ‘அன்னத்தினால்’ எனவுந் திருத்திக்கொள்க.

உ

கடவுள் துணை.

# ஒரு வேண்டுகோள்.



ஈண்டுபல் வளனும் வேண்டுத லொரீஇ
வேண்டினர்க் குதவு மாண்டநன் னலத்துப்
பாண்டிய நாட்டிற் காண்டகு சிறப்பி
னீண்டுவிண் ணவரூர் தாண்டி மேற்புகும்
பூமலர்ப் பொழிலும் பொய்கையும் பண்ணையுந்
தேமுறப் பொழிதலிற் றெருவெலாம் வழுக்கும்
பாலவ நத்தப் பதிக்கர சாகிச்
சீலமும் புகழுந் தினந்தொறும் வளர்ப்போ
யிருநிதி யொருவடி வெய்தியிங் குற்றெனை
மருவுபே ராளன் வருந்தமிழ்ப் புலவர்
கரந்தலைக் கூப்புங் கல்விக் களஞ்சிய
நிரந்தர மொழிவின்று நீணிலத் துள்ளோன்
பொன்னுச் சாமிப் பூபதி தவத்தா
லிந்நிலத் துதித்த மன்னவர் திலக !
வந்தண ராசா னாதியர்க் கன்றி
முந்துற வணங்கா முடியுடைக் கொற்றவ !
வளியெலாங் குடிகொள வம்போருகம் போற்
களிமிக விளக்குங் கருணைக் கண்ண !
தென்னவர் வளர்க்க மன்னிய தென்றமி
ழுங்கிய ராசாற் றன்னலங் குறைஇ
யொழியுமென் றுலகோ ருறுங்கவ லொழித்துக்
கழிபெருஞ் சிறப்புக் கண்டுளங் களிப்பத்
தண்டமிழ்ச் சங்கந் தன்னைமுன் னிறீஇ
மண்டுபல் புலவரை வம்மென வேற்றுக்
கொண்டுநன் றாற்றுங் குணப்பெருங் குன்றே
வேண்டிற் றெவர்க்கும் விரைந்தினி துதவும்
பாண்டித் துரையெனும் பாவலர் கோவே !
தவலரும் புலவர்சொற் றழைக்குநின் செவிக்கண்
ணவிலுமென் மாற்றமு நயந்து கேண்மதி
நந்தமிழ்ச் சங்க நாவிரண் டாண்டு

## வாழ்த்துக்கவி.

*வந்தழி யான்புகல் வாழ்த்துப் பாலை*
*யுரையுடன் நீட்டி யுதனுட னுய்த்தனன்*
*வரைவதற் குரியதா மற்றிதென் றெள்ளா*
*தெந்த நாவலரு மேற்றுளங் களிக்குஞ்*
*செந்தமி ழகத்துச் சேர்த்திட லொன்று*
*மற்றவ் வலைக்கண்யான் வந்தாங் கேற்றப்*
*பெற்றதா மீகையிற் பேசிய வனைத்துங்*
*குற்றமின் றாகக் குவலயங் கொள்ளக்*
*கற்றவர் தொழுநின் கருத்தினுக் கேற்ப*
*வுற்றதோர் முகவுரை யுவப்புடன் பொறித்துத்*
*தந்திட லொன்றெனத் தகுவா மிரண்டு*
*மிந்தநாள் விரும்பினே னெவர்க்குமேற் றாங்கே*
*யெல்லா முதவ வல்லா ருன்னை*
*யல்லா தெவரு மில்லா ராதலிற்*
*றண்ணளி புரிந்து தமியே*
*னுண்ணிறை யுவகை யுறப்புரி வாயே.*

இங்ஙனம்,

எம். கே. எம். அப்துல்காதிறு ராவுத்தர்.

---

## *வாழ்த்துக்கவி.

*கேளாரு மகிழ்ந்துபுகழ் சொல்வலியன் பீகைமுதற் கெழுமக் கொண்ட*
*வேளாக வருபாண்டித் துரையேநின் சொல்வலியின் வியன்மாண் பைப்பன்*
*னாளாகக் கருதினன்பாண் டிருத்துமொழி யத்தாலிந் நாமம் பெற்றாய்*
*வாளாசொற் றிடுவதென்னே தமிழ்ச்சங்கத் துடனூழி வாழி வாழி.*

(இதன்பொருள்.) கேளாரும் - பகைவரும், மகிழ்ந்துபுகழ் - வியந்து துதிக்கின்ற, சொல்வலி அன்பு ஈகை முதற்கெழுமக் கொண்ட - சொல்லாற்றல் அன்புடைமை கொடை முதலிய நற்

---

* மதுரைத் தமிழ்ச்சங்க எட்டாம் வருடோற்சவத்தன்று, சோதுகுடி எம். கே. எம். அப்துல் காதிறு ராவுத்தரவர்களால் சங்க அக்கிராசனாதிபதியவர்கள் மீது கூறப்பெற்ற வாழ்த்துக்கவி.

குணங்கள் பலவற்றையும் விளக்கமுற அடைந்த; வேளாகவரு-- மதனையொப்பத் தோன்றிய, பாண்டித்துரையே—, நின்சொல்வலி யின் - நினது சொல்லாற்றலின், வியன்மாண்பை - பெரியமாட்சியை, பன்னாளாகக் கருதினன் - பல தினங்களாக (யான்) சிந்தித்தேன், பாண் திருத்து மொழி நயத்தால் - பண்ணினையும் திருந்தப்புரிகின்ற சொல் லின்பமுற்றிருத்தலால், இ நாமம் பெற்றாய் - (பாண்டித் துரை)யென்னும் அப்பெயரினைப் பெற்றனை. வாளா சொற்றிடுவ தென்னே - இங்ஙனம் நின் பெயரே நின் சொல்வலியை விளக்கி நிற் பதாகவும் யான் வீணாக (ப் பலபடக்) கூறிடுவதி லென்னபயன்? தமிழ்ச்சங்கத்துடன்.— ஊழி வாழி வாழி - ஊழிக்காலத்தளவும் வாழ்வாயாக வாழ்வாயாக. (எ - று.)

குறிப்பு:—உம்மை உயர்வு சிறப்பு. ஏகாரம் முன்னது விளிப் பொருளது. பின்னது அசைநிலை. பாண் - உம்மை விகாரத்தாற் றொக்கது. அடுக்கு, உவகைப் பொருளது. திருத்து என்பதுதித்து என மருவியதாகக் கொள்ளப்பட்டது.

விசேடவுரை:—"கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளா ரும்-வேட்ப மொழிவதாஞ்சொல்" என்பவாகலின் கேளாரு மகிழ்ந்து புகழ்சொல், எனவும் "சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச் சொல்லை - வெல்லுஞ்சொ லின்மை யறிந்து" என்பவாகலின் சொல் வலி எனவும் உண்ணிறைந்த பேரன்புடையார் மாட்டன்றி இன் சொற் பிறவாமையும், இன்சொலா னன்றி யிருநீர் வியனுலகம் வன்சொலால் மகிழாமையும், சிறந்த சொல்லேயாயினும் உலகமகி ழ்ந்து கோடற்கியையாத வழிப்பயனற்றதாகு மென்பதையும் நோ க்கிச் சொல்வலியையடுக்க அன்பு என்பதை வைத்தும், பேசுந்திறனு ம் அன்பும் பெற்றக்காலும் இவறன்மையுடையார்க்குப் புகழிலதா தலும் அன்பின்பயனே ஈதலாதலும் நோக்கி அன்பு என்பதையடுக்க ஈகை என்பதை வைத்தும், இன்னோரன்ன நலம்பல நிரம்பப் பெறு தலை விளக்குவான் முதற்கேழுமக்கோண்ட என்ற சொற்களைத் தந் தும், இவ்வெல்லா நலங்களையும் பெற்றவழியும் முகவசீகரமான வடி வழகு வாய்ப்பப் பெறுவிடில் காட்சியின்பம் பயவாமையும் அழகின் அளவுக்கேற்பவே குணனும் அமையுமெனக் கொண்டு "நல்லெழில்

பகருமுன் னூலோர் - இலங்கெழி லளவு குணமென விசைப்பர்" எனவும், "உருவின மிக்கதோ ருடம்பது பெறுதலு மரிதே" எனவும் முன்னோர் கூறுதலால் வடிவழகும் அவசியம் வேண்டப்படுவ தொன்றாதலும் நோக்கி வேளாக வருபாண்டித் துரையே என விசேடித்தும் கூறியவாறும்.

பிறன் கூற்றைத் தன் கூற்றாகத் தோற்றுவித்துப் பொய்ப்புகழ் பூணும் கள்ளக்கவிகள்போலாகி அடிப்பட்ட சான்றோரியற்றியருளிய முறைப்பட்ட நூல்கள் பலவற்றையும் நல்லாசிரியன்பாற்கற்று நுண்மாணுழைபுலம் பெற்றுவிளங்கும் தன்னியற்கை மதிநுட்பத்தாலறிந்தவிடயங்களை யவையஞ்சாது கூறுதற்சிறப்பை விளக்குவான் நின்சொல் வலியின் எனவும்,

உலகநூல்களைக் கற்றுப்பாராட்டிக் கலகல கூஉந்துணையான வெற்றுரை பரப்பும் போலிப புலவர்களது பயனில் சொற்போலாதிய குற்றமொழித்துச் சுருங்கச் சொல்லலாதிய அணிநலஞ் சிறப்ப உயிர்க்குறுதி யுதவும் அறத்தின் வழியமையக் கூறும் பொருட்சிறப்பின் பெருமைமிகச் சிறந்தொன்றும், என்பதை விளக்குவான் வியன்மாண்பை எனக் கூறியவாறும்.

எடுத்த விடயத்திற்கு ஏற்றமொழிகளைப் பன்னாட்டேடிப் பலகாற்சிந்தித்து வைத்த முயற்சி வலியானே குறுநட்டுப்பூவை விட்டத்திற் பாய்ந்துற்ற தொப்ப ஓர் கால் ஒருவிடயத்தை யெடுத்து நன்கு பேசிமுடித்து மகிழும் பாலப்புலவர் போலாது அரியபெரிய விடயங்கள் பலவும் அவ்வவற்றின் பாகுபாடுகளுடன் உள்ளத்தின் கண்ணே நிறைவுற்றிருப்பக்கொண்டு எச்சமையத்தினும் எவ்விடயத்தைப்பற்றிப் பேசவேண்டினும் அவ்வப்போது சொற்சுவையும் பொருட்சுவையும் வரவரப்பெருகிப் பரவப் பலகாலத்தில் பல விடயங்களைப் பலகாற் பிரசங்கிக்கும் சீறைபெரும் புலமைத் திறத்தை விளக்குவான் பன்னாளாகக் கருதினன் எனக்கூறியவாறும். இவனங் கோடலன்றியும் உற்றுநோக்கி யாராயாது விரைந்து கூறு

கருத்துக்கள் பின்னர் மாறுபடுதல் கூடுமாதலின் யான் அவ்வாறு கூறுகிற்றிலன். நெடிது சூழ்ந்து திறப்படுத்திய கருத்து இதுவாம் எனத் தேற்றுவிப்பான் பன்னாளாகக் கருதினன் எனக்கூறியதாகக் கொள்ளலும் பொருந்தும்.

"விரைந்து தொழில்கேட்கு ஞாலநிரந் தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்."

என்பவாகலின் யார்யார் எவ்வெவற்றைக் கூறினும் இனிய மொழிகளாற் சொல்லினன்றிப் பயன்படாமையால் செவிக்கின்பந் தந்து மனத்தைக் குளிர்விக்குந் தன்மையுற்றுப் பண்டிதபாமரர்க்கு சிதமாக விளங்கும் சொற்களாதலின் அத்தகையபண்ணிணையும் செவ்விதாக்கும் சொல் நயம் எனப்பொருள் தரக்கருதி பாண்டிருத்து மொழிநயம் எனக்கூறியவாறும். பாண்டித்துறை எனற்கு வேறு பொருளிருப்பவும் பாண்தித்து (திருத்து) உரை எனப்பொருள் கொண்ட தன் குறிப்பையேற்றிக் கூறுதலை விளக்குவான் இந்நாமம் பெற்றாய் எனக்கூறியவாறும். இத்தகைய இன்சொல்லாற்றல் மிக்க நினது அவைக்கண்யான் எனது புன்மொழிகளால் வீண்படக்கூறுதலிற் பயனில்லையே யெனவும், நின்பெயர்க்கு இங்ஙனம் சிறந்த பொருளிருப்ப இதனையுற்றறியாது வாளா கூறுத வியையாதெனவும், ஒன்றைச்சொல்லப் புகுவார் நின்னைப் போலிவ்வாறு சிறப்பக் கூறாது வாளாகூறுதலால் யாதுபயனோஎனவும் விளக்குவான் வாளா சொற்றிடுவதேன்னே எனக்கூறியவாறும். இப் பாட்டுடைத்தலைவர் தமதுடல் பொருளாவிகளினும் இம் மதுரைத் தமிழ்ச்சங்கத்தையே மிக்குமதித்துப் போற்றிவருதலானும், கவியின் கருத்துக்கும் அஃது ஒப்பமுடிந்த தொன்றாகலானும் தமிழ்ச்சங்கத்துடன் எனவும், மானுடப்பிறவிக்குரியது சில்வாழ் நாளாதலின் இறைவனதருளால் பல்லூழிகாலம் வாழ்ந்திருக்கவேண்டு மென்பதைப் புலப்படுத்துவான் ஊழி வாழி வாழி எனவும் கூறியவாறும்.

இனி கேளாரும்என்பதை கேள்வி+ஆரும் எனக்கண்ணழித்துக் கேள்வியுற்ற யாவரும் எனக்கொண்டு கூட்டியுரைப்பினுமமையும். கேள் - வினைத்தொகை. உம் - முற்றுப்பொருளது. அன்றியும்,

கேளாருமகிழ்ந்து புகழ்சொல்வலியன்பீகை - என்பதில் சொல்வலியன் பீகை என்பதை சொல் வலி அன்பு ஈகை எனப்பிரித்து, கேளாருமகிழ்ந்து புகழ் என்பதைச் சொல் முதலிய நான்குடனுங்கூட்டி, கேளாருமகிழ்ந்து புகழ்சொல், கேளாருமகிழ்ந்து புகழ்வலி, கேளாருமகிழ்ந்து புகழ் அன்பு, கேளாருமகிழ்ந்து புகழீகை எனக்கொண்டு கூட்டி நேரிற்கேள்வியுறுதவரும வியந்து துதிக்குஞ்சொல் எனவும பகைவரும் வியந்து துதிக்கும வலி எனவும, (கேளார்—பகைவர்) சுற்றத்தாரும வியந்து புகழ் அனபு எனவும், ஒனறையிரந்த கேளாரும் வியந்து புகழீகை எனவும முறையே பொருள்கூறுதலும் ஒன்று. மேல், கேளாருமகிழ்ந்துபுகழ்வலி எனற்குப்பகைவரும் வியந்து துதிக்கும் வலியென்றதில், பகைவர் துதிக்கும் வலியாவது இராமன் வலியை இராவணன் வியந்து கூறியாங்குக் கூறப்பெறுவதோர் வலிமை. அதனை,

"வரிசிலை நாணிற் கோத்து வாங்கினன் விடுதலொன்றுந்
தெரிகில தமர்த ஞற்றல் யாரவன் செய்கை தேர்வார்
பொரிசினத் தரக்க ராவி போகிய போகமென்று
கருதிய வுலக மெல்லாஞ் சரங்களாய்க் காட்டு மன்றே."

என்னும் கல்வியிற்பெரியோர் கூறிய இராமாயணச் செய்யுளானும் பிறகவிகளானும் நன்கு தேறலாம. இன்னும் விரிப்பின வரம்பின்றிப் பெருகுமாதலின் இவ்வளவிற் சுருக்கிமுடித்தாம்.

இங்ஙனம்,

சோதுகுடி,

எம். கே. எம். அப்துல்காதிறுராவுத்தர்,

யூனியன் சேர்மென்,

இளையான்குடி.

---

## பிழைதிருத்தம்.

சென்ற ஆவணிமாதச் "செந்தமிழிலே" (தொகுதி எ. பகுதி ௧௦)த் தோற்றிய "ஆங்கிலமொழிக்கலப்பு" என்னும் விஷயத்திலே, பின்வரு திருத்தங்களைச்செய்து வாசிக்க.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௪௧௦ | ௨௧ | கண்காட்டல் | ——— |
| ௪௧௪ | ௧௧ | கண்முதலியவற்றால் | கண்முதலியவற்று |
| ௪௧௫ | ௧ | பிழையாக | சொற்கள் பிழையா |

திருச்சிற்றம்பலம்.



# குதிரையைப்பற்றிய ஆராய்ச்சி.

இது பிரமாவின் நாவிலும், அவன் விழிநீரிலும், இந்திரன்முதலிய அட்டதிக்குப் பாலர்களிடத்திலுங், கடலமிர்தத்திலும், அக்கினியிலுங், கருப்பையிலுங், கோட்டான்முட்டையிலும், ஆகிய இவ்வேழிடத்திலுந் தோன்றுமென்பர். திருவாதவூரடிகள் புராணம், குதிரையிட்ட சருக்கத்தில், "மிககசெழுமறைநாவிற் கமலநாதன்விழிப்புனலில் விண்ணோர்களெண்மர்தம்பால், மைக்கடன் மேலமிர்தத்தினங்கி மீதின்மல்குகருப்பையிலுலூகவண்டந்தன்னிற், றொக்கவெழு பேதமெனு மிவற்றிற்றோன்றும்" எனக்கூறிய, ௪௰-ஆஞ்செய்யுளிற் காண்க. இச்செய்யுளுரையில், மறைநா என்பதற்குப் பிரமன் சாமவேதங்கூறுநா வென்றும், விழிப்புனல் என்பதற்கு யாகஞ்செய்யும்போது அப்பிரமன் கண்ணினின்றுமொழுகிய நீரென்றும், அங்கி என்பதற்கு அவன்செய்யும யாகாக்கினி என்றும், உலூகவண்டமென்பதற்கு இலக்குமிசாபத்தாற்கோட்டான் வடிவமைந்த பிரமனிட்ட முட்டையென்றுங் கூறினர். இக்கருத்துப்பற்றிக் கல்லாடம், ௪௪-ஆவது அகவலில், * "ஏழிடந்தோன்றியினனூற்கியைந்து" எனக் கூறினர்.

* இதனுரையில், எழிடந்தோன்றியென்பதற்கு எழிடமுயர்ந்தெனப் பொருளுரைத்தார். அவ்வேழிடத்தின் வகையுமுரைத்திலர்.

இது, சுற்றும் நீளமும் உயரமுமொத்திருப்பதாய், உயர்ந்தசுழியுடையதாய், உயர்ந்த நிறமுடையதாய், அழகுடைய அவயவத்ததாய், முரசு சங்கமென்னுங் குரலுடையதாய், ஐங்கதியுடையதாய்ப், பாகர் மனத்தாற்குறிப்பதையும் வார்த்தையாற் குறிப்பதையுங் கையாற்குறிப்பதையும் ஆசனத்திருப்பாற்குறிப்பதையுங் காலாற்குறிப்பதையும் அறிந்துகொள்வதாய், இலக்கணங்களிற் குறைவில்லாததாய், யாளி யானை முதலியவற்றின் கதியுடையதாயிருப்பதென்பர். மகாபாரதம்; சூதுபோர்ச்சருக்கத்தில்,—

"சுற்று நீளமு முயரமு நிகர்ப்பன சுழியின் மிக் கணநீமை
யற்று மேதகு நிறத்தன கவினுடை யவயவத் தனவாகி
யெற்று மாமணி முரசமுஞ் சங்கமு மெனுங்குரன் மிகுத்திப்பார்
முற்று மாதிரத் தளவுமைங் கதியினுன் முடிப்பன விமைப்போதில்."

"ஆளி னெஞ்சமும் வார்த்தையுஞ் செங்கையு மாசனத் தொடுதாளுங்
கோளி லின்புறக் குறிப்பன வெவற்றினுங் குறைகளற் றனவாகி
யாளி குஞ்சரம் வானர முதலிய வியக்கினுல் விசும்பெங்குந்
தூளி கொண்டிட மிடைந்துவந் தனநெடுந் துரகதம் பலகோடி."

எனக்கூறிய அக, அஉ-ஆஞ் செய்யுளிற்காண்க. முற்கவியிற்கூறிய ஐங்கதியாவன:—மல்லகதி, மயூரகதி, வானரகதி, வியாக்கிரகதி, இடபகதியென்பன; சூடாமணிநிகண்டு, பன்னிரண்டாவதில்,—

"மல்லொடு மயூர மற்றை வானரம் வல்லி யங்கள்
சொல்லுமால் விடைக ளென்ப துரகத கதிக ளைந்தாம்."

எனக்கூறிய, சக-ஆஞ்செய்யுளிற்காண்க. இவ்வைங்கதியிற்சிலவேறுபடவுங் கூறுவர். காஞ்சிப்புராணம், நகரப்படலத்தில்,—

"மல்லலை மயில்களை வான ரங்களைப்
புல்லிய முயல்களைப் பொருசு ரங்களை
வல்லவா புறக்கொடை கண்ட வான்கதிப்
பல்லியற் புரவியின் பந்தி யாயிரம்."

எனக்கூறிய கஅ-ஆஞ் செய்யுளிற்காண்க. சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகத்தில்,

"விக்கிதம் வற்கிதம் வெல்லு முபகண்ட
மத்திமஞ் சாரியோ டைந்து."

எனக்கூறிய உகூஉ-ஆங் கவியுரையிற்காண்க. இவ்வைந்திற்கும் பொருளுரைத்திலர். பிற்கவியில், யாளி குஞ்சரம் வானர முதலியகதியைக் கூறலால் நவகதியுமுண்டென்பதனைக் குறித்தாரெனக் கொள்ளல்வேண்டும். மகாபாரதம்; பதினென்காம்போர்ச்சருக்கத்தில்,—"நவகதிக்குரகதக்குலம் யாவும்" எனக்கூறிய, ௬எ-ஆவது கவியிற் காண்க. நவகதியாவன; பின்னர்க்காண்க.

நல்லிலக்கணமுள்ள குதிரை ஒருவனிடத்திலிருந்தால் அவனிடத்தில் இலக்குமிதங்குவள், செல்வமுங்கீர்த்தியும் வளரும் என்பர்

"பொருவில்சீ ரிலக்கணப் புரவி யொன்றுதா
னொருவன திடைவதிந் துறையி னெல்லென
மருவுறுந் திருமகண் மல்லற் செல்வமும்
பெருகுறுங் கீர்த்திகள் பல்கும் பெற்றியால்."

எனக்கூறிய திருவிளையாடற்புராணம், நரிபரியாக்கியபடலம் அஎ-ஆவது செய்யுளிற் காண்க.

மாந்தளிர் நிறமுள்ள நாவினதாய்க், குளம்புயர்ந்ததாய், நீண்டு தம்முளொத்த பற்களையுடையதாய், மார்புங்கண்டமும் பாம்பின் படம்போலுள்ளதாய்;

அகன்றநெற்றியையுடையதாய்த், தலைமயிரைப்போலக்கொய்த, பிடர்மயிரும் ஒரே நிறமுள்ளதாய், மூக்கோணமுள்ள அழகுமிகுந்த முகத்தையுடையதாய்;

போரிலே முகத்தில்வாளினால் வெட்டினாலு மெதிர்ப்பதாய்க், குரங்கு, புலி, யானை, நாய், ஆடு, நரி, சிங்கம், சரபபக்ஷி, முயல் ஆகிய இவ்வொன்பதின் கதியையுடையதாய்;

உயரத்தளவுநீளமுடையதாய்ச்,சங்கைப்போலவும் வெண்கரும்பைப்போலவும்நிறமுள்ள நுரையைக்கக்குவதாய்த், தனித்தனி ஒவ்வொரு நிறமுமுள்ளதாய், ஐவகை நிறமுங்கலந்துள்ளதாய்;

கழுத்திற்*றெய்வமணியுள்ளதாய்,†அட்டமங்கலத்தையுடைய தாய்ப், ‡பஞ்சகல்யாணமுள்ளதாய்;

குங்குமங்கருப்பூரம்அகில்கஸ்தூரிபோலப்பரிமளமுள்ளதாய்ச், சங்கமும் மேகமுஞ் சரபமுஞ் சிங்கமும்போல ஒலிப்பதாய்;

கடைந்தெடுத்துச்சேர்த்ததுபோலநாலுகால்களுமுடையதாய்க் கொள்ளிவட்டத்தைப்போலச் சுழன்றுவருவதாய், மேலிருந் தசேவகன் காலினுளடங்குவதாயிருப்பதென்பர்; திருவிளையாடற்புராணம் நரிபரியாக்கிய படலத்தில்,—

"நெய்த்திடு மாந்தளிர் நிறத்தநாவின
வைத்திடு குளம்புக ளுயர்ந்த வார்ந்துநே
ரொத்திடு மெயிற்றின வுரமுங் கண்டமும்
பைத்திடு மராப்படம் போன்ற பாடலம்"
"அகலிய நுதலின வாய்ந்த குஞ்சிபோ
னிகரறு கொய்யுளை நிறமொன் றாயின
புகரறு கோணமூன் றாகிப் பொற்புறு
முகமுடை யனவய மொய்கொள் கோடகம்."
"முட்டிய சமரிடை முகத்தில் வாளினால்
வெட்டினு மெதிர்ப்பதாய்க் குரக்கு வேங்கைதோல்
*பட்டிமை நரியரி சரபம் பாய்முய
லெட்டிய கதியின விவுளி யென்பவே."

"உன்னத நீளமுண் டாகிச் சங்குவெண்
கன்னலின் வாலிய விலாழி கால்வதாய்ப்
பின்னமா கியதனி வன்னம் பெற்றுமை
வன்னமு முடையது வன்னி யாவதே."

---

* தெய்வமணி, † அட்டமங்கலம், ‡ பஞ்சகல்யாணம் இம்மூன்றையு பின்னர்க்காண்க.

* பட்டிமை என்பதற்கு, உரைப்பிரதியில் வஞ்சமெனப்பொருள் க ணப்படுகின்றது; அங்ஙனம் பொருள் கொள்ளில், ஒன்பது கதிக்கு இரண் கதியில்லை. அக்கவியில் ஒன்பதுகதியுங்கூறியதாகவே ஆன்றோருரைக்கின் றார். பட்டியென்பதற்குப் பிங்கலநிகண்டு பத்தாவதில் நாயெனப்பொரு கூறுதல் காண்க. மலையாளத்திலும் பட்டி நாயென்பது பெருவழக்கம்.

தோல் - யானை. மை - ஆடு.

"இணிதரு கழுத்தினிற் சிறந்த தெய்வத
மணியுள தாகியேண் மங்க லத்தகா
யணிதரு பஞ்சகல் யாண மூள்ளதாய்க்
குணிதரு நீரது குதிரை யாவதே."
"குங்குமங் கருப்புரங் கொழுந்திண் காரகிற்
பங்கமான் மதமெனக் கமழும் பாலதாய்ச்
சங்கமு மேகமுஞ் சரப முங்கொடுஞ்
சிங்கமும் போலொலி செய்வ தாம்பரி."
"நாலுகால் களுங்கடைந் தெடுத்து நாட்டினாற்
போல்வதாய்க் கொட்புறும் போது சுற்றுநீக்
கோலயொப் பாகிமேற் கொண்ட சேவகன்
காலினு ளடங்குவ தாகுங் கந்துகம்."

எனக்கூறிய, அஅ-ஆவது செய்யுண்முதல், கூச-ஆவதுசெய்யுள் வரையுங் காண்க. இவை பொதுவிலக்கணமென்பர். இனிச்சிறப்பிலக்கணம் வருமாறு:—

வெள்ளியையும் முத்தையும் பாலையுஞ் சந்திரனையுஞ் சங்கையும் பனியையும்போல நிறம்வாய்ந்த குதிரை வெள்ளைக்குதிரை, மாதுளம் பூவையுஞ் செம்பஞ்சுக்குளம்பையும் போலச் செந்நிறத்தையுடைய குதிரை செங்குதிரை, கருமையுந் குயிலும் வண்டும் கார்மேகமும் போலக் கருநிறத்தையுடைய குதிரை கருங்குதிரை, நெருப்புங் கோரோசனையும் போல நிறம்வாய்ந்த குதிரை பொன்னிறக்குதிரை என்றும்;

மேற்கூறிய வெண்மை முதலிய நான்கு நிறமுங் கலந்த குதிரைக்கு மிச்சிரமென்றுபெயர், முகமும் மார்பும் உச்சியும் வாலும் நான்கு காலுமாகிய எட்டுறுப்பினும் வெண்ணிறமுள்ள குதிரைக்கு அட்டமங்கலமென்றுபெயர், உச்சியும் நான்குகால்களுமாகிய ஐந்துறுப்புக்களிலும் வெண்மையுள்ள குதிரைக்குப்பஞ்சகல்யாணியென்று பெயர் என்றும்;

கண்டத்தில் வலமாகச்சுழித்திருந்தால் அந்தச்சுழிக்குத் தெய்வமணி யென்றுபெயர், முகம் தலை நாசி மார்பு என்னும் நான்குறுப்புக்களிலும் இரண்டிரண்டாகச்சொல்லப்பட்ட சுழிகளும் நெற்றி நடு

லிலும் பின்பக்கத்திலும் ஒவ்வொரு சுழியும் உடைய குதிரை இலக்கணங்களையுடைய குதிரை இச்சுழிகளில்லாத குதிரை இலக்கண வழுவுடைய குதிரையென்றும்;

மார்பில் ஒன்றோடொன்று கலவாமல் ஐந்து சுழிகளையுடைய குதிரைக்கு சிரீவற்சமென்றும் பெயர். நெற்றியில் இரண்டு சுழியாயினும் மூன்றுசுழியாயினும இருந்தால் நல்லது, அன்றேல்நான்கு சுழி வலம்புரியாய் உள்ளதுநல்லது, அன்றி முன்னங்கால்களினும், மூலத்திலும் இரண்டு சுழிகளிருந்தாலும் நல்லது என்றும;

கண்டத்தின் நடுவில் இரண்டுசுழியுடைய குதிரை தன் எஜமானுக்கு மிக்கவறுமையையும் மிக்க துன்பத்தையும் உண்டாக்கும், அவ்விரட்டைச்சுழிகள் கணைக்காலிலுள்ளனவாகிய குதிரை பயத்தையும் துன்பத்தையும் விலங்குபூணுதலையு முண்டாக்கும், மேலுதடு முன்னங்காலடி கபோலம் மூளந்தாளாகிய விந்நான்குறுப்புக்களிலுஞ் சுழிகளிருந்தால் எஜமானனைக்கொல்லும் என்றும்;

மேற்கூறிய சுழிகளையுடைய குதிரையைக் குதிரைப்பந்தியிற் கட்டியிருப்பினுங் குற்றமாம். இவை நிற்க. குதிரைக்குவயது முப்பத்திரண்டாம், அவத்தைபத்தாம், ஒவ்வோரவத்தைக்கும் மூன்று வருடமும், இரண்டுமாதமும் பன்னிருநாளும் நிச்சயித்து அளவிட்டார் என்றும்;

எந்த நிறத்தின் பேதங்கள் மிகுந்திருந்தாலும், வெள்ளைகலந்திருக்குமாளுல் அக்குதிரை நன்மையைத் தரும். கருங்குதிரைக்கு வயிற்றிலாயினும் மார்பிலாயினுஞ் செந்நிறமிருந்தால் அது வெற்றியுள்ளது. அவ்விரண்டுறுப்பினும் வெண்ணிறமிருந்தால் அக்கருங்குதிரைக்கு வாருணமென்று பெயர். அது போரில் வெற்றியைத் தரும் என்றும்;

பிடரின் வெளுப்புப் புத்திரப்பேறு தரும், மார்பின் வெளுப்பு மகிழ்ச்சியைத்தரும், கண்டத்தின் வெளுப்புப் பொருளைத் தரும், முகத்தின் வெளுப்பு வெற்றியைத் தரும, பின்பக்கத்தின் வெளுப்புச் சுகத்தைத்தரும், இடப்பால் வெளுப்புச் சந்ததி தழையச்செய்

யுஞ் செல்வத்தை வளர்க்கும், வலப்பால் வெளுப்புத் தனத்தையும் பலதானியங்களையுந் தரும் என்றும்;

முதுகு வால் முகம் ஆகிய மூன்றுறுப்புக்களும் வெளுப்புள்ள குதிரை வெற்றியைக் கொடுக்கும், உந்திதொடங்கி முன்பக்கமெல்லாஞ் சூரியனைப்போலச் செந்நிறம் வாய்ந்து பின்பக்கமெல்லாஞ் சந்திரனைப் போல வெளுத்திருக்கும் குதிரைக்குப் பகற்காலம் விசயம் பெருகச் செய்யும். முன்பக்கமெல்லாஞ் சந்திரனைப்போல வெண்ணிறம் வாய்ந்து, பின்பக்கமெல்லாஞ் சூரியனைப்போல செந்நிறம் வாய்ந்த குதிரைக்கு இராக்காலம் விசயம் பெருகச்செய்யும், என்றும்;

அடியெடுத்து வைத்தாற் பந்தைப் போலவும், நின்றால் மலையைப் போலவும, முழக்கஞ் செய்தாற் சிங்கத்தைப் போலவும், வேகத்தாற் காற்றைப்போலவும், மிதிக்கு நடனத்தால் நாட்டியப் புலவனைப்போலவும்,நடந்தாற்சிங்கத்தையும் யானையையும் போலவுந் தன்மையுடையதாகி; குலமாதர்போலக் கவிழ்ந்த முகமும், கருநெய்தற் பூவையொத்த கண்களும், மேகத்தைப்போலக் கருநிறமும், கருநெய்தற்பூவின் மணம்போல மணமும் பெற்று, மலர்மாலையையும் அகிற் குழம்பையுஞ் சந்தனகுழம்பையும் மணியாபரணங்களையும், அலங்கரித்தால் மகிழ்ச்சியிருந்து விளங்குவது உத்தமவாசியென்று பெயர் என்றும்;

உத்தமசாதிக் குதிரைக்கு உயரம் நூறுவிரலளவாம், மத்திமசாதிக் குதிரைக்கு உயரம் எண்பத்துநான்கு விரலளவாம், அதமசாதிக்குதிரைக்கு உயரம் அறுபத்தொருவிரலளவாம், இக்குதிரைகளை அரசர்பூசித்துக் கயிறுமாறுவார் என்றுங்கூறுவர்.

திருவிளையாடற்புராணம், நரிபரியாக்கிய படலத்தில்,

"வெள்ளிநித் திலம்பால் சந்திரன் சங்கு வெண்பனி போல்வது வெள்ளைத்
துள்ளிய புரவி மாதுளம் போது சுகிர்ந்தசெம் பஞ்சியின் குழம்பிற்
றெள்ளிய நிறத்த செம்பரி மாமை சிறைக்குயில் வண்டுகார் முகில்போ
லொள்ளிய கரிய பரியெரி யழலா னுரோசனை நிறத்தபொற் பரியே."

(இன்னும் வரும்.)

சே. ரா. சுப்பிரமணியக்கவிராயர்,
சைவநூற்பரிசோதகர், மதுரைத்தமிழ்ச்சங்கம்.

திருச்சிற்றம்பலம்.

# பெரியபுராண அரும்பத விளக்கம்.

———:o:———

[பழைய ஏட்டினின்று எடுக்கப்பட்டது.]

(முற்றொடர்ச்சி.)

(கசுடு) நீத்தாருந்தொடர்பரிய நெறிநின்றார் - முனிவராலுந் தொடர்தற்கரிய நெறியில் நின்றார்.

(கசு எ) பூமிவியப்பெய்தவருா் நல்லபொன்னில் எடுத்து, மூல மென்றுகொடுபோந்த ஆணியின்முன்னே உரைப்பிக்க.

(கசாடு) பொன் புறக்கென்றிட - பொன்னும் ஒளிமழுங்க.

(கசஅ) சங்கநிரையோடு பவளக்கொடியையும் மணிக்குவை யையும் முத்தையுங் கடற்றிரை கொண்டு.

(கசுடு) பருகாவின்னமுதத்தை - வாயாற்பருகுதலரிய இனி ய அமுதத்தை.

(கசுஎ) கல்லாற்செய்யப்பட்ட மதில் பக்கத்தே சூழ்ந்த.

(கஎக) ஆவியினுமடைவுடையார் - ஆன்மாவினுஞ்சிறப்புடை யார்.

(கஎடு) சுத்தமாகியநதிகளில் வண்டொலிக்கும்பொலிவாகிய முல்லை, குறிஞ்சி வளஞ்செறிந்தமருதம் ஆகிய இவை பலவற்றைக் கடந்து.

(கஎச) பாஙாடும் - பாக்களுள் ஆராயப்படும்.

(கஎசு) குறுகாமையால் மிகுந்தபசிவருத்தத்தால்.

(கஎஎ) மலையின்மேல்மருந்தானார் - திருக்கழுக்குன்றத்தினி ருக்கின்ற அருமருந்துபோல்வார்.

(௧எ௬) கடம்பகற்போதிடும்பலிக்கு - மத்தியானத்திலிடும்ப லிக்காக.

(௧அ௨) வன்றொண்டர் சிவயோகியார்மறைய.

(௧அ௯) தெற்றியாடன்முழவதிர - சித்திரகூடங்களில் நடன முழவொலிக்க.

(௧அ௬) சிவனுக்கு மோசம்வருமோ என்று பயந்து.

(௧௯௨) காணமோடுபொன்வேண்டி - பொற்காசோடு பொன் னைவேண்டி. நெய்யும்பா லும் கலைவிளங்கும்-நெய்யும்பாலுமெனக்கலை நூலில்விளங்கும்.

(௧௯௯) வடதிசையிலுள்ள ஸ்ரீபருப்பதமும் திருக்கேதாரம லையும் முதலாக இடமாகச்சிவபெருமான் மகிழ்ந்தஸ்தலங்களையெல் லாம்.

(௨0௧) ஆதிபுரி - திருவொற்றியூர்.

(௨0௫) ஏட்டுவரியில் - "திருவொற்றியூர் நீங்கலாக" என்று எழுதஅறியும் கண்மலரும் அழகியநெற்றியையுடைய சிவபிரானது வாசனைபொருந்திய தாமரைமலர்போன்ற சிவந்தபாதங்களில்.

(௨0அ) பழைய அதிந்திதையானவர் வேளாளகுலத்தில் மிகு ந்த நன்மையுடையோர் வாழுகின்ற ஞாயிறு என்னுமூரில் மேலாங் கொள்கையையுடைய வேளாண்டொழிலில் மிக்கஅழகிய ஞாயிறு கிழவரிடத்தே.

(௨0௯) இமயமலையரசன் மகளுடைய தாமரைமலர்போன்ற பாதங்களைமறவாத அன்பினாலே வந்தவழிதலையாம் அறிவு வந்தடை யத் தாமாகவே அவ்வுணர்வைஅறிந்த சங்கிலியாரானவர் கொலைத் தொழில்பொருந்திய வேல்போன்றகண்களையுடைய சிறியபெண்கள் கூட்டத்தோடும்.

(௨௧0) கச்சும்அழகிய ஆபரணங்களும் அவாவும்வளர்கின்ற மென்மையானமுலைகள்.

(உகக) படிவம் - தன்மை. நிகழுங்காலமென்ன - நிகழுங்காலத்திலென்றுகூறு.

(உகரு) தைவந்துநீங்க - தடவுதலாவதுநீங்க.

(உகரு) பந்தம் - தொடர்பு.

(உகசு) தீதங்கிழைத்தேயிறந்தான்போற்செல்ல, விடுத்தாருடன்சென்றார் - தீமையைச்செய்திறந்தான்போல இறக்கவிடுக்கப்பட்டோரும் உடனே இறந்தார்.

(உகஎ) செய்தவிதியைப்போ லதுநிகழ மேலோர்க்குள்ளபடி கூறி.

(உகஅ) வணங்கிச்சிவன்மாட்டுள்ள தன்மையேயன்றி வார்த்தை வேறொன்றறியாள்.

(உகக) அந்நகரில் தண்ணார் தடஞ்சூழ் கன்னிமாடத்துத்தங்கிப்புரிவீர் தவமென்று.

(உஉசு) கடிசேர்முறைமைக் காப்பியற்றி -- காவல்சேர்ந்த முறைமையையுடைய மதிலையுண்டாக்கி.

(உஉஎ) அன்பாகியநாரிற் சிவனுடையபஞ்சாக்கரத்தை நெஞ்சுதொடுக்கப்பூவைத்தொடுத்து.

(உஉஅ) துளையாதமுத்தையும் வண்டுகள்வீழாத செழித்தமிருதுவாகிய அரும்பையும்நிகர்த்த புதியவராகிய (கன்னிகை) சங்கிலியாரைச் சிவனடியார்கண்டபோது மனமானது நிறையாற்காவாது அவரிடத்தேபோய்விழ.

(உஉக) பொன்னும் மணியும் மலர்ந்த ஒளியை அமுதிலளாவிப் பாலசந்திரனிடத்துள்ள நீர்மையினாற் குழைத்து.

(உருக) மின்போன்ற சடையை யுடையார்க்கு அடிமையாம் விதிபோடு வாழும், என்னைவருத்திச் சிவனுடைய அருளால் வரும் பேற்றைத்தவத்தா லணையாதபடி தடுத்து என்னுடைய அரிய உயிரையும் அழகிய பூவையும் ஒருசேரப்பிணைக்கும் இவளை.

(உ௩உ) இளைத்தல் - அகழ்தல்.

(உ௩௩) உமையை ஒருபால் மகிழ்ந்ததுமன்றி அழகிய நெடிய முடியில்கங்கையைமறைத்தருளும்விருப்புடையீரே! அடியேனுக்கும் இங்கே திருமாலையைத்தொடுத்து மனக்கட்டுப்பாட்டை அவிழ்த்த.

(உ௩௫) இளம்பிறை வாழ்கின்ற சடைமுடியையுடையசிவன் மகிழ்கின்ற கோயிலின் புறத்தே ஒரு பக்கத்தே வந்திருப்பச் சூரியன் அஸ்தமிக்க மாலையாகிய கடலைக்கண்டயர்வாராய்க் கன்னிகையாகிய சங்கிலியை மணம்புணர்க்கவேண்டிச் சிவன் தமக்கருளும் நண்பால் நினைந்து நினைந்து மனமழிய.

(உ௪உ) தகுந்த விதியையுடைய மணத்தால்.

(உ௪௩) பின்னல் முடியார்முன் - சடைமுடியையுடைய சிவனுககு முன்னரே. குன்றுதநீபம் போல்வார் மிகநாணி வணங்கிக் கூறுவார், நிலையான திருவாரூரின்கண் அலர்மிகவும் மகிழ்ந்திருப்பது என்னுந்தன்மையை எம்பெருமானே அறிந்தருளும்.

(உ௪௪) ஒருசபதம் அற்ற முறுநிலைமையினால்—ஒருசத்தியத்தை (உன்மாட்டாசை பொருந்தலால் வந்த) சோர்வு பொருந்தும் நிலையால்.

(உ௪௭) சென்று கிடைத்து - சென்றடைந்து.

(உ௪௯) கோயில்விட - கோயில்விட்டு.

(உ௫௧) வழிபடிமைப் பெருமையை நினைத்தோ.

(உ௫௩) அற்றம் - சோர்வு. ஈண்டுச்சோர்வென்றது "அங்கு நமக்கெதிர்செய்யுமிதற்கு நீயிசையாதே." என்றதை.

(உ௫௫) நீங்கினதுயிலையுடைய தோழியர்க்கு "ஒற்றியூர்ப்புற நீங்கல்" என்ற எழுத்தை அறியுமவர்.

(உ௫௬) சுத்தமான பணிக்குரிய பொழுதாகத் தொண்டுசெய்வோருடன்போகக் கோயிலின் முன்காலமதுவேயாகக் குறித்தடைந்தார்.

(௨௬௦) இவர் சொன்னபடியை மறுத்தால் இது அலராகினு மாகும். அவர் - பலரறிந்து புறங்கூறல்.

(௨௬௧) மூவாத - அழியாத.

(௨௬௫) ஆதிபுரியை ஒற்றிக்கொண்ட சிவனுட்கொண்ட-ஆதி புரிதிருவொற்றியூரென்பது முன்னுங்காட்டப்பட்டது.

(௨௬௯) விழுகின்ற அவருக்கிடையே தோன்றியிருக்கின்றபுல வியும் புணர்ச்சியுமாகிய இவற்றின்கண் ஒரு கணம் ஊழியாம். அந்த ஊழி ஒரு கணமாம்.

(௨௭௧) பொலிந்த தமிழையுடைய பொதியமலையிற் பிறந்து, பொலிவாகிய சந்தனவாசனையில் அளாவி, (அருவியிடையறுதுசொ ரிதலால்) குளிர்ந்த சாரலில் வளர்ந்த செழித்த தென்றலானது அங் கேவர, திருவாரூர் வீதிவிடங்கப்பெருமானனவர் உற்சவகாலத்தில் வசந்தோச்சவத்தை எதிர்கொண்டருளும் வகையை நம்பியாரூரர் நினைந்தார்.

(௨௭௨) வீதிவிடங்கப் பெருமானுடைய அழகிய நெற்றியை யுடைய பெண்கள் பக்கத்தே பரந்த கொலுமண்டபத்தில்.

(௨௭௩) பிரியாதவிருப்பால் நினைந்த அன்பரை நினைவோரை. வசறவு - வருத்தம்.

(௨௭௫) முன்னரே கால் செல்லும் வழிகள் தோன்றாது.

(௨௭௬) சூளுறவு - சத்தியம்.

(௨௭௯) காய்தல் - கோபித்தல்.

(தொடரும்.)

ஜி. சதாசிவம் பிள்ளை.



ஸ்ரீ:

# நுண்பொருண்மாலை.

(முற்றொடர்ச்சி.)

௬௮௮. "தூய்மை.............பண்பு"

நு - லை:—இம்மூன்றொடு கூடிய மெய்ம்மையு மெனவிவையே இலக்கணமென்றதனு லின் னொடுவின்பொருட்கண் வந்தது. புற நடைச் சூத்திரவிதியா லமையுமென்க.

௬௯௪. "செவிச்சொல்லுஞ்...........ரகத்து."

நு - லை:—அவித்தொழுகல் பயனிலை.

௬௯௮. "இளைய...........படும்."

நு - லை:—பல்லோர் படர்க்கையென்னும் விலக்குப்பற்றியொ ழுகப்படுமென்பதனை யொழுகுதல் செய்யப்படுமென வொழுகுதலை யெழுவாயாக்கிச் செயப்படுமென்பதனைப்பயனிலையாக்கினதுகாண்க. "வஞ்சரையஞ்சப்படு" (௮௨௪) மென்பதுமது. "செழுங்கார் முழ வதிர்" என்னுங் கோவையாருள், (௧௬௭) "வழுங்கா வதரின் வழங் கென்றுமோ வின்றெம் வள்ளலையே." யென்பதுமது.

௭௧௧. "அவையறிந்...........யவர்."

நு - லை:—செஞ்சொல் இலக்கணச்சொல் குறிப்புச்சொல் லென மூன்றுமடங்குதற்குச் சொல்லின்றொகையென்றார். "நோயு மின்பமு மிருவகை நிலையி" லென்னுஞ் சூத்திரவிதிபெற்றன இலக்க ணச்சொல். வாராமரபினவாகக் கூறுதலுமென்பன குறிப்புச்சொல். இவ்விரண்டு மல்லாதன செஞ்சொல். இலக்கணக் குறிப்பென்ப திவ் விரண்டுங் கூடிநிற்பது. இலக்கணமரு இலக்கணவழக்கு என்பன போலவென்க. இவையெல்லாங் காமத்துப்பாலுட் காண்க.

௭௨௦. " அங்கணத்து...........கொளல்."

ந - லை:—கொளல் - கொள்ளற்க; கொள்ளென்னு முதனிலைத் தொழிற்பெயர் விதிமேனின்று பின்னெதிர்மறைவிகுதியோடுகூடி "மகனெனல்போல" நின்றது, "அரங்கின்றி வட்டாடியற்றே"யென் பதுபோல வாராமையாலென்க. இவ்வுரையாசிரிய ருடம்பாட்டினை விதி யென்பர்; இதனுள் அற்றென்பது பெயரடுத்துநின்றதா லீண் டிவ்வாறுரைத்தார்; " வையத்திறந்தாரை யெண்ணிக்கொண்டற்று" என்பது முதலியவற்றெல்லாம் வினையையடுத்து வருதலின் இவ்வா றுரையாதொழிந்தாரென்க.

௭௨௩. "பகையகத்துச்.........தவர்."

ந - லை:—அஞ்சாதுசாவா ரென்றுரைத்ததனு லஞ்சாது சொல்லவல்லாரென் றுரைத்ததனு லஞ்சாமை சாவாரென்பதனே டுங் கூடி அதனாற் சொல்லுவாரென்பது வருவிக்கப்பட்டதென்றார். அதனுலென்று சுட்டியது சாவாரென்றதனை.

௭௨௪. " கற்றார்முற் .......கொளல்."

ந - லை:—அவற்றினெனச் சுட்டியுரைத்தது தாங்கற்ற வென் பதனை.

௭௨௫. "வாளொடென்............பவர்க்கு."

ந - லை:—நுண்ணவை இருந்தாரது நுண்மை அவைமேலேற் றப்பட்டது. நல்லவை புல்லவை யென்பவுமாம். அல்லாக்கால் நல் லாரவையஞ்சுவா ரென்பது போலவரும்.

௭௨௭. பகையகத்துப்........ நூல்."

ந - லை:—பேடியைப் பிடித்தவள் குற்றத்தாலெனப் பெண்பா லாயுரைத்தது, "ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி, யாண்மை யறி சொற் காகிட னின்றே" என்ற விதிபற்றியென்க. "பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ" (தொல், சொல் - ௬௨)என்பதுமது.

எஙக. "தள்ளா .........நாடு."

நு - லை:—மற்றை உயர்திணைப்பொருள்களோடுஞ் சேர்தற்றொழிலோடு மியையாமையின் வினையுள் வினையுளைச்செய்வோரென உழவர்மேனின்றது.

எஙஉ. "பெரும்பொருளாற்......நாடு"

நு - லை:—பெட்டக்கது - விரும்பத்தககது. "செய்தக்க" என்பதுபோலப் பெள்ளென்னும் முதனிலைத்தொழிற்பெயர் செயவெனெச்சமானது காண்க. மிக்கபெயல், பெயலின்மை, யெலி, விட்டில், கிளி, பன்றி, புல்வாய், யானை, அரசண்மை, வேற்றரசெனக் கேடு; இவற்றை வடநூலார் ஈதிவாதை யென்பர்.

எஙசு. "கேடறியாக்.........றலை."

நு - லை:—அறியாது குன்றுதவென்னும் வினையெச்சம் பெயரெச்சங்களினிறுதிநிலை விகாரமென்க.

எசங. "உயர்வகலந்.........நூல்."

நு - லை:—"வரிவிற்பொறியுங்...............கருவிரற் கூகையு" மென்பன பாட்டுக்குறை.

எசஅ. "முற்றாற்றி.........தரண்"

நு - லை:—பற்றின்கண்ணே யெனவிரியும். வெல்வதென்பதுடையார் தொழிலின் மேனின்றது.

எருசு. "உறுபொருளு............பொருள்."

நு - லை:—உறுபொருள்-நெடுங்கால நிலத்திற்கிடந்து பின் கண்டெடுத்ததுந் தாயத்தார்பெறுதது மென்க. உல்குபொருள்-சுங்கப்பொருள். தெறுபொருள்-பகைவரைவென்றதிறை.

எசுO. "ஒண்பொருள்.........மொருங்கு"

நு - லை:—காழ்த்தல்—முதிர்தல்.

(தொடரும்.)

பத்திராசிரியர்.

உ
கடவுள் துணை.
# செந்தமிழ்.
தொகுதி-எ.] சௌமிய ஹூ ஐப்பசிமீ [பகுதி-கஉ.

## குண்டலகேசி வரலாறு.

இப்பெயர்பெற்ற நூல் தமிழில்வழங்கும் "பஞ்சகாவியங்"களில் ஒன்றென்பது பலரும் அறிவர். இந்தக்காவியம் இப்போது அகப்பட்டிலதாயினும், வேறு நூல்களில் இதைப்பற்றி வழங்கும் கதைகள் பாடல்கள் முதலியவிஷயங்களைச் சேதுஸம்ஸ்தானவித்வான் ஸ்ரீ: ரா. இராகவையங்காரவர்கள் இப்பத்திரிகையின் முதற்றொகுதி ௩-ம் பகுதியில் "குண்டலகேசி" என்றதலைப்பின்கீழ் நன்கு எழுதியிருக்கிறார்கள். அவற்றையெல்லாம் இங்கே குறிப்பிப்பது மிகையாதலால் அவற்றைவிடுத்து, குண்டலகேசியின் சரித்திரசம்பந்தமான ஒருவிஷயத்தை மட்டும் ஈண்டுக்குறிப்பிடுவாம். "நீலகேசி" என்றபழைய நூலினுரையில் இக்குண்டலகேசி வரலாறாக எழுதப்பட்டவை, ஐயங்காரவர்கள் காட்டியபடி, அடியில் வருமாறு:—

"குண்டலகேசியென்பாள் ஒருவைசிய கன்னிகை; இவள் ஒருநாள் பிராஸாதஸ்தலத்து (மாளிகைமேடை) விளையாடுகின்றாளாக, ஒரு கிதவ (தூர்த்தனாகிய) வைசியபுத்திரன் காளன் என்பான்: இவன் புத்ததரிசனங்கொண்டு பல்வழியும் சோரவிருத்தி பண்ணிச் செல்வானை அரசன் 'வதிக்க' என்றேவச் சிறைப்பட்டுப் போகின்றானை முன்சொன்ன குண்டலகேசி கண்டு காமபரவசையாக, அதனையறிந்து அவளுடையபிதா ராஜாவைக்கண்டு யாதானுமோருபாயத்தால் மீட்டு இவனுக்குக் குண்டலகேசியென்னும் கன்னிகையினை விவாகவிதியாற்கொடுத்து இனிது செல்கின்ற காலத்து ஒருநாள், பிரணயகலகத்து நர்மோக்திமுகத்தால் (பரிகாச வார்த்தையால்) 'நீ கள்வனன்றே' என்று குண்டலகேசி சொல்லக் காளனுந் தன்னுள்

ளத்தே சினங்கொண்டு, பின்பு ஒருநாள் வித்யாஸாதன வியாஜத்தால் இவளைத் தனிக்கொண்டு ஒரு பர்வதத்தேறி "நீ இவ்வாறு என்னைச் சொல்லுதலில் யானுன்னைக் கொல்லத்துணிந்தேன்" என்ன, குண்டலகேசியும் 'தற்கொல்லியை முற்கொல்லுக' என்பதன்றே? இவனை யான் கொல்வேன் எனநினைந்து, "யான்சாகிறேனாகில் உம்மை வலங்கொண்டு சாவல்" என அதற்கியைந்த காளனை வலங்கொள்கின்றாள் வரையினின்றும்(அவனை)வீழ நூக்கினாள்; நூக்க, காளனும் புத்தஸ் மரணத்தினால் மோக்ஷித்தனன். குண்டலகேசியும் பர்த்ருவிரக துக்கிதையாகித் துறப்பனென நினைந்து பரசமயங்களெல்லாம் நாவல் நட்டு ஜயித்துப் பௌத்ததரிசனங்கொண்டு முத்திபெற்றனள்(மொக்கலவாதச்சருக்கம்-உ0) எனக்காண்க.

இவ்வாலாறு குண்டலகேசிகாவியத்திற் கூறப்படும் கதைச்சுருக்கமென்று கொள்ளப்படுகிறது. இச்சரித்திரத்தினுண்மை, மற்றொரு வழியாலும் நமக்கிப்போது தெரியவந்து றுதிப்படுதல் அறிந்து மகிழத்தக்கது. 1900-ம வருஷம் ஸப்டம்பர் அக்டோபர் மாதங்களில் வெளிவந்த மகாபோதிசங்கத்துப் பத்திரிகையில், (Journal of the Mahabodhi Society) குண்டலகேசி என்பாளைப்பற்றியசரிதம் அடியில் வருமாறு காணப்படுகின்றது.

"பெரிய தனவைசியனொருவனுடைய புத்திரியாகிய பத்தய-குண்டலகேசி யென்பாள் சகல சௌகரியங்களுடனும் தந்தையால் வளர்க்கப்பட்டுவந்தாள். அவள் தன்தந்தை மாளிகையின் மேன்மாடத்தில் வாசம் செய்துவரலானாள். ஒருநாள், அவள் வெளியில் நடந்துவரும் விசேடங்களைச் சாளரவழியே உற்றுநோக்கிக் கொண்டிருந்தபோது, வாலிபனொருவன் நகரக்காவலரால் கொலைக்குற்ற விசாரணையின்பொருட்டு நியாயசபைக்குக் கொண்டுபோகப்படுவதைக் கண்டாள். அவ்வாலிபன், அரசனமைச்சரிலே ஒருவரது குமாரனாயிருந்தான். அவனது பேரெழிலைக்கண்டு இவள் அதிமோகங்கொண்டு அவனே தன் கொழுநனாகவேண்டுமென்பதைத் தன்தந்தையிடம் தெரிவித்துக் கொண்டாள். தகப்பன் இவளெண்ணத்திற்குமாறுகப் பல ஆக்ஷேபங்களைக்கூறித் தடுத்தும் ஒன்றும் பயன்படவில்லை. அதனால், அவ்வாலிபனைச்சிறைமீட்பதற்கு, பெருந்தொ

கையான பொருள்களைக் காவலாளர்க்கு அவன் 'லஞ்சம்' கொடுத்தே ஆகவேண்டியதாயிற்று. இங்ஙனமாகச் சிலகாலம் அவளுக்கு அவன் கணவனாக வாழ்ந்துவந்தான். ஆனால், அவன் நெடுங்காலம் பழகிவந்த கொடுந்தொழில்களில் மறுபடியும் அவன் மனங்கவிந்தது. அதனால், தன் மனைவியையே ஒரு தனித்தவிடத்திற்கு அழைத்துச் சென்று அவளாபரணங்களையெல்லாம் அபகரித்து அவளைக் கொன்றுவிட நினைத்தான். உடனே அவன் தன்மனைவியிடம் "காவலர் தன்னைச் சிறைப்படுத்தியகாலத்தில் தான் விடுவிக்கப்பட்டால் தெய்வத்துக்குப் "பலிகாம" வேள்வியை நிறைவேற்றுவதாகப் பிரார்த்தனை செய்திருந்ததைச்சொல்லி, அதற்கு அவளைச் சகலஆபரணங்களையும் உடைகளையும் தரித்துக்கொண்டு உடன்வரச்செய்து, ஒரு மலைச்சிகரத்திற்கு அழைத்துச் சென்றான். சென்றதும், மனைவியை நோக்கி, அவளை மலையுச்சியினின்றும் கீழே தள்ளிக் கொன்றுவிட்டு ஆபரணங்களையெல்லாம் அபகரிப்பதற்காகவே தானழைத்துவந்ததாகத் தன்னுள்ளக்கருத்தை அவட்கு அறிவிக்கலானான். உடனே குண்டலகேசியும், அதற்குத் தான் சித்தமாகவிருப்பதாய்க் கூறி, ஒரு சமயோசிதமான யுக்தியால் வஞ்சகமொன்று செய்து, அம்மலையுச்சியினின்றும் தன்புருஷனையே கீழே தள்ளிவிட்டாள். இங்ஙனமாக அவனிறந்துவிட்டானென்பதுதெரிந்து உலகவாழ்க்கையை வெறுத்து "நிகந்தர்" என்ற முனிவரிருப்பிடம் அடைந்து அவருடன் கலந்து காலங்கழிக்கக் கருதினாள். ஆனால் அக்கூட்டத்தாரின் விதிமுறைப்படி தன் அழகான தலைமயிரைப் பிடுங்கிக் கொள்ள வேண்டியிருந்ததால் சிலகாலத்திற்குள் அதிருப்தி மேலிட்டு, அவர்களைவிட்டு விலகி, சிராவஸ்திநகரஞ்சென்று, அங்கு மகாத்மாவின் (புத்தர்) சிஷ்யர்களைக்கண்டு அவர்களுடன்வாதஞ்செய்து முடிவில் பிக்ஷுணிவாழ்க்கையை யேற்றுப் பரிசுத்தமான அருகத்பதத்தையடைந்தாள்" எனக் காண்க.

இவ்வரலாற்றுக்கும், நீலகேசியிற்கண்டதும் முற்காட்டியதுமான வரலாற்றுக்கும் சிலபேதங்களே உள்ளனவாயினும், பெரிதும் ஒற்றுமையிருத்தல் கண்டுகொள்க. இதனால், வைசியபுராணம் என்னும் புத்தகத்தில் ௩௪-ம் அத்யாயத்துக்கண்ட குண்டலகேசி வரலாறுமுழுதும் அதற்கு சம்பந்தமில்லாதகதையேயன்றி உண்மை சிறிது முடையதன்றெனத் தெரிந்துகொள்க. **பத்திராசிரியர்.**

# சாங்கிய கதோபதேசம்.

சாங்கியம் என்றது வேதசம்பந்தமான தரிசன சாத்திரங்கள் ஆறனுள்ளே ஒன்று. பிரகிருதி முதலிய பதார்த்தங்களின் சங்கியை அறிவித்தலாற் சாங்கியம் எனப்பட்டது. சங்கியை - எண். தரிசன சாத்திரங்களாவன:— மீமாஞ்சை, நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், வேதாந்தம் என்பன. தரிசனம் - பிரமஞானோபாயங் கூறும் நூல். சாங்கியநூல் செய்தவர் கபிலமுனிவர்; இந்தச் சாங்கிய நூலிலே கடவுள் இல்லையென்பதும், மூலப்பிரகிருதியே யாவற்றிற்குங் காரணம் என்பதும், மூலப்பிரகிருதியிலிருந்து மகத்தத்துவம் முதலியன பரம்பரையாய்த் தோன்றும் என்பதும், புருடன் முத்துக்கங்களினும் நீங்கித் தன்னையும், மூலப்பிரகிருதியையும் பகுத்துணரும் விவேகம் பெறுதலே வீடுபேறு என்பதும், பிறவும் தடைவிடைகளோடு சொல்லப்படும்.

மூலப்பிரகிருதியாவது சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் முக்குணங்களும் சமத்தன்மையுடையனவாய் நிற்கும் நிலை. மூலம் - காரணம். பிரகிருதி - பிரதானம், இயற்கை. இது பிறிதொன்றினின்றும் தோன்றாமையால் அவிகிருதி எனவும் படும். மகத்து மனம் எனவும், புத்தியெனவும் கூறப்படும். புத்தியினின்று தோன்றுவது நானென அபிமானிக்கும் அகங்கார தத்துவம். அகங்காரத்தினின்று தோன்றுவன, தன்மாத்திரைகளும், ஞானேந்திரியங்களும், கன்மேந்திரியங்களுமாம். தன்மாத்திரையிலிருந்து தோன்றுவன, பிருதிவி முதலியனவாம். இவை மனத்தோடு சேர்த்துக்கணிக்குங்கால் இருபத்தைந்தாகும். புருடன் - ஆன்மா. இவை "சுவையொளி" என்னுங் குறளுரையிலே பரிமேலழகராலுங் கூறப்பட்டுள. முத்துக்கங்களாவன:—காமம், வெகுளி, மயக்கம் என்பன. முத்துக்கங்களினின்றும் நீங்குதலே புருடார்த்தம் என்று முதற்சூத்திரத்திலும் கூறினர்.

## சூத்திரம்.

𑌅𑌥 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌦𑍁𑌃𑌖𑌾𑌤𑍍𑌯𑌨𑍍𑌤 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑌃॥

(இதன் மொழிபெயர்ப்பு.)

(காமம், வெகுளி, மயக்கம் என்னும்) மூவகைத் துக்கங்களினின்றும் பூரணமாக நீங்குதலே பூரணமான ஆன்மப் பிரயோசனமாகும்.

முத் துக்கங்களையும் தவிர்ந்திருத்தலே முத்தியுபாயம் என்பது இதன் கருத்து. அத என்பது வடமொழியிலே வழங்கப்படும் ஒரு மங்கலமொழி. திரிவிதம் - மூவகை. அத்தியந்தம் - மிகுதி. நிவிர்த்தி - நீக்கம். புருடார்த்தம் - ஆன்மப்பிரயோசனம். இந்தச்சூத்திரமும் "காமம் வெகுளி" என்னும் திருக்குறளும் பொருளால் ஒற்றுமையுடையன.

திருக்குறள்.

காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன்
நாமங் கெடக்கெடு நோய்.

சாங்கிய மதத்தவருள்ளே சிலர் பிரகிருதியே பொருள் என்றும், சிலர் விகிர்தியே பொருள்என்றும், சிலர் பிரகிருதியும் விகிர்தியும் பொருள் என்றும், சிலர் அவையிரண்டும் பொருளல்ல என்றும் கூறுவர் என்று சாயணமாதவாசாரியர் கூறுவர். சிவசாங்கியர் என்றும விஷ்ணுசாங்கியர்என்றும் வகையுளவென்று வேறுசிலர்கூறுவர். அவை நிற்க; இந்தச் சாங்கியநூலிலே நாலாம்பாகத்திலே உபதேசம் முதலிய சில விடயங்கள் கதைவாயிலாக உணர்த்தப்படுகின்றன. அவற்றுள்ளே சிலசில செந்தமிழ் படிப்பார்க்கு விநோதமாயிருக்குமென்று இங்கே எழுதப்படுகின்றன.

## சூத்திரம.

𑌰𑌾𑌜𑌪𑍁𑌤𑍍𑌰𑌵𑌤𑍍 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍋𑌪𑌦𑍇𑌶𑌾𑌤𑍍॥

(இதன் மொழிபெயர்ப்பு.)

(இளம்பருவத்திலே வேடரோடுகூடி வளர்ந்த) ஓர் இராசபுத்திரன் மெய்யுபதேசத்தினால் இராச்சியநிலைமை அடைந்ததுபோல

(ஆன்மாவும் மெய்யுபதேசத்தினால் உண்மையுணர்ந்து தன்னிலையை அடையும்.)

மெய்யுபதேசத்தினாலே பொய்யுணர்வு நீங்கி மெய்ந்நிலை கைகூடும் என்பது கருத்து. தத்துவோபதேசம் - மெய்யுபதேசம். சூத்திரமாதல்பற்றி வேண்டுஞ்சொற்கள்வருவித்துப் பொருள்முடிக்கப்பட்டது. உபதேசத்தினால் ஆத்துமா மெய்ந்நிலை அடைதற்குத் திருட்டாந்தம் இராசகுமாரன் கதை.

## இராசகுமாரன்கதை.

இராசகுமாரனொருவன் இழிந்தநாளிற் பிறந்தகுற்றங் காரணமாகத் தந்தையாகிய இராசாவையும், பிறரையும், தனது நாடுநகரங்களையும் இளம்பருவத்தில் விட்டுநீங்கி, மற்றொரு தேசத்தை அடைந்தான். அவனை அத்தேசவாசியாகிய வேடனொருவன் கண்டு தழுவியணைத்து வேடசேரியிற் கொண்டுபோய்த் தன் பிள்ளைபோல அன்புடன் வளர்த்தான். வளருங்கால் அவ்விராசகுமாரனும் வேடரோடு கூடிப்பயின்றும், வேடர்க்குரிய உண்டிகளை உண்டும், உடைகளைத் தரித்தும், தொழில்களைச்செய்தும், மொழிகளைப்பேசியும் ஒரு வேடனாகவே விளங்கினன். தானும் ஒரு வேடன் என்றே கருதியிருந்தான். இராசகுமாரன் என்பதை எட்டுணையும் அறிந்திலன்.

இப்படியிருக்கும் நாள்களில் தந்தையுடைய மந்திரிமார்களுள்ளே ஒருவன் அந்த வேடசேரியிற்போய் அவனைநோக்கி "மைந்தனே! நீ வேடரோடுகூடிவளர்ந்து நின்னிலையையும் இழந்து மயங்கி இடர்ப்பட்டு வருந்தினாய்; நின் செயலிருந்தவாறென்னை? வேடர் கூட்டத்தை விட்டுவிடு! நீ வேடனல்லை! ஓர் இராசகுமாரன் என்பதை உணர்ந்துகொள்!" என்று உண்மையை உபதேசித்தான். இந்த உபதேசத்தைக்கேட்ட இராஜகுமாரனும் அதிசயித்து, "அந்தோ! இழிந்த வேடரோடு கூடி இதுவரையும் உண்மைதெரியாமல் மயங்கி இடர்ப்பட்டேன்! யானோ வேடனல்லேன்! இராசகுமாரனாகிய எனக்கு வேடர்சேரி இயையுமா? என்றுசொல்லி உண்மையுணர்ந்து வேடரையும் வேடர்சேரியையும் விட்டு நீங்கி அந்த மந்திரியோடு சென்று தன்பதவியை அடைந்தான்.

இந்தச் சூத்திரமும் சிவஞானபோதத்தில் வரும் "ஐம்புலவேடரின்" என்னும் எட்டாஞ்சூத்திரமும், சித்தியாரில் வரும் "மன்னவன்றன் மகன்வேடர்" எனனும்செய்யுளும் பொருளால் வேறுபாடுடையனவல்ல.

சிவஞானசித்தியார்.

மன்னவன்றன் மகன்வேட ரிடத்தே தங்கி
    வளர்ந்தவனை யறியாது மயங்கிநிற்பப்
பின்னவனு மென்மகனீ யென்றவரிற் பிரித்துப்
    பெருமையொடுந் தானாகப் பேணு மாபோற்
றுன்னியவைம் புலவேடர் சுழலிற் பட்டுத்
    துணைவனையு மறியாது துயருறுந்தொல் லுயிரை
மன்னுமருட் குருவாகி வந்தவரி னீக்கி
    மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்.

## சூத்திரம்.

𑌪𑌿𑌶𑌾𑌚𑌵𑌦𑌨𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑍋𑌪𑌦𑍇𑌶𑍇𑌽𑌪𑌿 ॥

(இதன மொழிபெயர்ப்பு.)

பிறனுக்குச்செய்யும் உபதேசத்தின் கண்ணும் பிசாசம் ஒன்றுக்குப் பயனுண்டாயவாறு போலப் பக்கத்தினின்று கேட்போருக்கும் பயனுண்டாகும்.

உபதேசிக்கும்போது பக்கத்தினின்று கேட்போரும் பயன் பெறுவர் என்பது இதன் கருத்து. பிசாசம் - பேய். அந்நியார்த்தம் - பிறன்பொருட்டு.

## பிசாசின் கதை

துரியோதனன் முதலியோரும், தருமன் முதலியோரும் யுத்தஞ்செய்யும்படி குருக்ஷேத்திரத்திலே போய்நின்றார்கள். அவருள்ளே அருச்சுனன் போர்புரிய நிற்பவர்கள் யாவர்யாவர் என்று பார்த்தான். பார்த்தபோது நிற்பவர்களெல்லாஞ் சுற்றத்தவர்களாய்த் தோன்றக்கண்டு கண்ணபிரானை நோக்கி "இருடீகேசா! இங்கேநிற்கும் என் சுற்றத்தவர்களைநோக்கி என்னவயவங்கள் சோர்

கின்றன! வாயும் புலர்கின்றது! உடம்பும் நடுங்குகின்றது! உரோமமுஞ் சிலிர்க்கின்றது! காண்டீபமும் கையினின்றும் வழுவுகின்றது! மனமும் மயங்குகின்றது! இருத்தற்கும் இயலவில்லை! அபசகுனங்களையுங் காண்கின்றேன்! என்சுற்றத்தவர்களை யான் கொல்லமாட்டேன்!" என்றுசொல்லிப் போர்புரிதலை மறுத்தான். அப்போது கண்ணபிரான் அவனைக்கொண்டு போர்செய்விக்க எண்ணி ஆத்மதத்துவோபதேசத்தைக் கீதைவாயிலாக உபதேசித்தார். அதனைப் பக்கத்திற் கேட்டுநின்ற ஒருபிசாசும் பிரகிருதிக்கும் ஆத்மாவுக்குமுள்ள பேதத்தை உள்ளவாறே உணர்ந்துகொண்டது.

## சூத்திரம்.

நிராஸ: ஸுகீ பிங்களாவத் ।

(இதன் மொழிபெயர்ப்பு.)

ஆசையில்லாதவன் பிங்கலை என்பவளைப்போலச் சுகமுடையவனாவன்.

ஆசையே துக்கமுறுதற்குக் காரணம் என்பது இதன் கருத்து.

## பிங்கலை கதை.

ஓரூரிலே பிங்கலை என்னும் பெயரையுடைய கணிகை ஒருத்தி இருந்தாள். அவள் ஒரு நாயகனைப்பெறவேண்டும் என்று பலநாள் ஆசைகொண்டு பரிவுற்றலைந்தாள். அந்த நாயகனோ அவளுக்கு வாய்த்திலன். அவளுடைய ஆசையும பயனற்றதாயிற்று. பின்னர் அவள் மனம் வருந்தி அந்தோ! இந்த ஆசை என்னை எவ்வளவோ வருத்திற்று. இந்த ஆசையினாலே யாதொரு பயனும் இல்லை என்று சொல்லி ஆசையை முற்றக்களைந்தாள். ஆசையற்றபோதே துக்கமுமற்றுச் சுகமுடையவளானாள்.

பொருள்களிற் பற்றுவைத்தலே துயருறுதற்குக் காரணம், "இச்சையாம் விறகுமாண்டா லிடுக்கணும் வெந்நீறாகும" என்று பிறருங் கூறுவர். இந்தச்சூத்திரமும், "அவாவில்லார்" என்னுந் திருக்குறளும் பொருளால் ஒற்றுமையுடையன.

திருக்குறள்.

அவாவில்லார்க் கில்லாகுந் துன்ப மஃதுண்டேற்
றவா அது மென்மேல் வரும்.

இவையன்றிச் செந்தமிழ்நூற் பொருட்சம்பந்தமுடையனவாய் இன்னும் பல வருகின்றன. இந்தச் சாங்கிய மதம் இக்காலத்திலே அநுசரிக்கப்படுவதொன்றன்று.

இங்ஙனம்,

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

---

உ

# திருக்குறட் பரிமேலழகருரை விளக்கம்.

(முற்றொடர்ச்சி.)

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்.

இ - ள். மலர்மிசை.................வாழ்வார். எ-று.

அன்பானினைவாரது...... .........நினைத்தல்.

வி - ம். மலரின்கண்ணே என்றது இதயகமலத்தின்கண்ணே என்றவாறு. மலர் — தாமரைமலர்; அஃது ஈண்டு இதயகமலத்தைக் குறிப்பானே உணர்த்திநின்றது. இவ்வாறே பிறரும் "பூதம் யாவையி னுள்ளலர் போதென" திருத்தொண்டர் புராணம், எனவும் "வானவன்காண்...........கருதுவாரிதய கமலத்தூறு - தேனவன் காண்" (தேவாரம்) எனவும், "செங்கமலப்போதிற் றிகழ்செல்வன் ............தமருள்ளத் - தங்கமலத் தோடேத் திடவண்டத் தமரர் வாரே" (தேவாரம்) எனவும், "ஹ்ருத்புண்டரீகம் விரஜம் விஶுத்தம் விசிந்த்யமத்யே விஶதம் விஶோகம் । அசிந்த்யமவ்யக்தமநந்தரூபம் ஶிவம் ப்ரஶாந்தமம்ருதம் ப்ரஹ்மயோநிம்"(கைவல்லியோபநிடதம்) எனவும், "தஹரம் விபாப்மம் பரவேஶ்மபூதம் யத்புண்டரீகம் புரமத்யஸம்ஸ்தம்"

(மகாநாராயணோபநிடதம்) எனவும், "அத யதிதமஸ்மிந் ப்ரஹ்மபுரே தஹரம் புண்டரீகம் வேஸ்ம தஹரோऽஸ்மிந்நந்தராகாஸஸ்தஸ்மிந் யதந்தஸ்ததந்வேஷ்டவ்யம் தத்வாவ விஜிஜ்ஞாஸிதவ்யம்" (சாந்தோக்கியோபநிடதம்) எனவும், இதயகமலம் ஒன்றுளதாகக் கூறுதல் காண்க. "அண்டபிண்டமவை சமமாதலால்" அண்டத்திலுள்ளனவெல்லாம் பிண்டத்துள்ளுஞ் சூக்கும ரூபமாயுண்மையின் அண்டவடிவாகிய முப்பத்தாறு தத்துவங்களும் இதயத்திற் கமலரூபமாய் விளங்கும் என்க. எங்ஙனமெனின்; நிலமுதலிய இருபத்துநான்கு தத்துவங்களும் நாபியினின்றுந்தோன்றும் எண்விரலளவைத்தாகிய நாளவடிவாகவும், வித்தியாதத்துவமேழும் சுத்தவித்தையுமாகிய எட்டும் எட்டிதழ் வடிவாகவும், அவற்றின்மேற்கருதப்பட்ட ஈசுரதத்துவமும் சதாசிவதத்துவமும் அறுபதுநான்கு கேசரவடிவாகவும், சத்திதத்துவம் அக்கேசரங்களுக்குள்ளாகிய பொகுட்டுவடிவாகவும், சிவதத்துவம் அப்பொகுட்டினுட் காணப்படும் ஐம்பத்தொரு பீசவடிவாகவும் அமைந்து விளங்கும் என்க. இதன் வடிவைப் பிறவாறு கூறுவாருமுளர். இதன் விரிவையெல்லாம் சிவஞானபோத மாபாடியம் உ0உ-ம், உ0௩-ம் பக்கங்களிற்காண்க.

சென்றவனது என்றார், அடிசேர்ந்தாரது உள்ளக்கமலத்தின் கண் சோதிக்குட் சோதியாய் வெளிப்பட்டுத் தானே தோன்றுவனாதலின். இதனை; "நிர்க்குணனாய்..........ஆனுவறிவா யளவிறந்து தோன்றானே - வானே முதல்களையின் வநது" (சிவஞானபோதம்) எனவும், "இந்தனத்தினெரிபாலினெய்...........சிந்தனைசெய்தர்ச்சிக்கச் சிவனுளத்தே தோன்றித்தீ யிரும்பைச் செய்வதுபோற் சீவன் றன்னைப் - பந்தனையை யறுத்துத்தானாக்கித் தன்னுருவப் பரப்பெல்லாங் கொடுபோந்து பதிப்பனிவன பாலே" (சிவஞானசித்தியார்) எனவும், "வானவன்காண்...............கருதுவாரிதய கமலத்தூறுந்தேனவன் காண்" (தேவாரம்) எனவும், "பாவிப்பார்மனம்பாவிக்கொண்டான்றனை" (தேவாரம்) எனவும் கூறியவாற்றானே அறிக.

மாட்சிமைப்பட்ட அடியென்றார் சேர்ந்தாருடைய பாசத்தை நீக்கிச் சர்வஞ்ஞாதி குணங்களைக்கொடுத்துப் பதித்துவமாக்கலின். அது; "சுழலார் துயர்வெயிற் சுட்டிடும் போதடித் தொண்டர்

துன்னு - நிழலாவன வென்று நீங்காப் பிறவிநிலைகெடுத்துக் - கழ லா வினைகள் கழற்றுவ கால வனங் கடந்த - வழலா ரொளியன காண் கவை யாற னடித்தலமே" (தேவாரம்) என்பதனாலும், "மதிக்குந் ...........திருவடியென் றலைமேல் வீற்றிருப்பக் - கதிக்கும் பசுபாச மொன் றுமிலோம்....................கொண்டன்றே" (திருவாசகம்) என்பதனாலும், "ஆவா........பூவா ரடிச்சுவடென் றலைமேற் பொறித்தலுமே - தேவானவா பாடித்தெள்ளேணங்கொட்டாமோ" (திருவாசகம்) என்பதினானு மறியப்படும். (தே - கடவுட்டன்மை.)

சேர்ந்தார் என்றது ஞானக்கண்ணினாலே மெய்ப்பொருளை யறிந்து அதனோடொற்றுமைப்பட நின்று அத்துவிதமாகப் பாவனை செய்தோர் என்றவாறு. ௩௫௮-வது குறளின் விசேடவுரையில், "அதனைக் காண்கையாவது உயிர் தன்னவிச்சை கெட்டு அதனோடொற்றுமையுற இடைவிடாது பாவித்தல்" எனப்பரிமேலழகரும் கூறுதல் காண்க. "சேர்தல் இடைவிடாது நினைத்தல்" என அவர் கூறியதூஉம் இக்கருத்து நோக்கியே. இதுவே அத்தியாசிரமபாவனை எனவும், சிவோகம்பாவனை எனவும் கூறப்படும். மெய்ப்பொருள் ஞானக்கண்ணினாலேயே அறியப்படும் என்பதை, "ஊனக்கண் பாசமுணராப் பதியை - ஞானக்கண்ணினிற் சிந்தைநாடி" (சிவஞானபோதம்) எனவும், "பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே - நேசமொடு முள்ளத்தே நாடி" (சிவஞானசித்தியார்) எனவும், ஶிவாக³மஸித்³தீ⁴யித்³ரு ஸத³ஸீ³க்ஷா தம்ஶ்ரா । ஶிவாக³ஸ்ருஷ்டிமிஸ்லாஸ்ஸ⁴ம் ஸ்ருத்³ரு தூ³ரமதாவ்ருதி: । (சிவாகமம்) எனவும், "மைப்படிந்த..............அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே கண்ணாகக் காணினல்லா - லிப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே" எனவுங் கூறுமாற்றானே அறிக. அதனோடொற்றுமைப்படநின்று அத்துவிதமாகப் பாவித்தலாவது அதுவேறு தான்வேறு என்னுந் துவித பாவனையை யொழித்து அதுவே நானென்று அத்துவிதமாகப் பாவித்தல். ஏகத்வேநைவ ஸம்பஶ்யேத் ஸ்வாத்மாநம் ஶிவம் ஸதா³ ஸம்விதா³த்மகம் । யஸ்ஸிவஸ்ஸோஹமேவேதி ஸ்வதே³ஹம் ஶிவத்³ருஷ்டயே" (சர்வஞானோத்தரம்) எனவும், "கண்டவிவை யல்லேனானென் றகன்று

காணுக் கழிபரமு நானல்லே னெனக்கருதிக் கசிந்த - தொண்டினெடு முளத்தவன்று னின்றகலப் பாலே சோகமெனப்பாவிக்கத் தோன்று வன்வே றின்றி..................பண்டை மறைகளுமதுநா னென்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே" (சிவஞானசித்தியார்) எனவும் கூறியவற்றுனே பெறப்படும். நாயனூர் "பிறப்பென்னும் பேதைமைநீங்கச் சிறப்பென்னுஞ்-செம்பொருள்காண்பதறிவு" எனக் கூறியதூஉம் இப்பாவனையையே.

எல்லாவுலகிற்கு மேலாய வீட்டிலென்றது "பிருதுவிசலிலவாயு அந்தரிக்ஷலோக தேவலோக சந்திரலோக பிராஜாபதிலோக மென்னும் லோகமெல்லாங்கடந்த பிரமலோக" மென்றவாறு, (இதனைப் பிரமருத்திர சைவபாடியம் உபநிடதஉபக்கிரமணிகையிற் காண்க.) "[illegible] ..." என்னும், (வாயுசங்கிதை) சுலோகத்தானும், "[illegible]" என்னும் (சாந்தோக்கியோபநிடதம்) சுலோகத்தானும், "மெய்யருளே யுடையானை விண்டவரேறுவர் மேலுலகே" என்னும் (தேவாரம்) செய்யுளானும், "துஞ்சலிலாவுலகம்" என்னும் (தேவாரம்) செய்யுளானும் கூறப்பட்டனவும் இப்பிரமலோக (சிவலோக) மே.

அழிவின்றிவாழ்வார் என்றது மீளப்பிறவியை நோக்காது நிரதிசய பிரமானந்தத்தோடு மற்றைய வேட்டபோகங்களையு மனுபவித்து வாழ்வார் என்றவாறு. பிரமலோக மெய்தினோர் மீளப்பிறவியை நோக்கா ரென்பது "[illegible]" (சாந்தோக்கியோபநிடதம்) என்பதனானும், "[illegible]" (வேதாந்த சூத்திரம்) என்பதனானும், "[illegible]" (வாயுசங்கிதை) என்பதனானும், பிரமானந்தத்தோடு மற்றைய வேட்ட போகங்களையு மனுபவித்து வாழ்வாரென்பது "[illegible]" (தைத்திரியோபநிடதம்) என்பதனானும், "நிலையுடைய பெருஞ்செல்வ நீடுலகிற் பெறலாமே" (தேவாரம்) என்பதனானும் அறியப்படும்.

